# அவையடக்கம்.

மக்களுமாக்களுஞ்சென்று நீருண்ணுந் துறைபோல் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதற்கு இடமாமாதலின் துறையடுத்தவிருத்தமெனக்கூறினார்.

வசந்தகாலத்துப் பர்வதினத்தில் பூரணசந்திரோதயமா யிருக்கும்போது ஒரு தடாகத்தின் கரையிலிருக்கும் நந்தனவனத்திலிருந்துகொண்டு யாழ்வாசித்தால் அசுணப்புட்கள் அவ்விடத்திலிறங்கி யாழ்நாதத்தைக் கேட்டுக்கொண்டு இன்புற்றிருக்குமென்றும், அப்போதொரு புறத்தில பறையடித்தால அவ்வோசையைக்கேட்டவளவில் அப்புட்கள்மூர்ச்சிக்குமென்றும் முன்னோர்களாற்சொல்லப்படுகின்றது.

முத்தமிழ்த்துறையின்முறைபோகிய ... ... *
வுத்தமக்கவிகட்கொன் றுணர்த்துவன் ... ... ... *
பித்தர்சொன்னவும்பேதையர் சொன்னவும் .. .. *
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ .. ... ...*

(இ-ள்) முத்தமிழ்த்துறையில்- இயலிசைநாடகமென்னு முத்தமிழ்ப்பனுவலிற்றில் — முறைபோகிய - முறையாக அறிவைச்செலுத்திக் கற்றுவல்ல — உத்தமம்- நன்மையினையுடைய — கவிகட்கு - புலவர்கட்கு — ஒன்று உணர்த்துவன் ஒன்றுசொல்லுகின்றேன் — (அதுயாதெனில்) பித்தர் சொன்னவும்- பித்தர்களாற் சொல்லப்படுவனவும் — பேதையர்சொன்னவும் - பேதைமைத் தன்மையுடையோராற்சொல்லப்படுவனவும் — பத்தர்சொன்னவும் பத்தர்களாற் சொல்லப்படுவனவும் — பன்னப்பெறுபவோ - சொற்குற்றம்பொருட்குற்றம் முதலியனவென்று — இலக்கணவகையால் - ஆராய்ச்சிசெய்யப்படுவனவோ — எ-று. [சொற்கள்-எழுவாய். பன்னப்பெறுபவோ பயனிலை] (௬)

பன்னப்பெறுபவோ என்பதின் ஈற்றிலிருக்கும் ஓகாரம் பன்னப்படுவன வல்லவென எதிர்மறையைக்காட்டி நின்றது. புலனெறிவழக்கினையுணர்ந்தோர்-இம்மை-மறுமை-வழுவாமல் செம்மைநெறியால் துறைபோயவர் என்றார் நச்சினார்க்கினியார். இதனைத் தொல்காப்பியப் பொருளதிகாரச்சூத்திரவுரையிற்காண்க.

முத்தமிழ்த்துறையின் முறைபோகிய வெனப்பாடமோதுவாருமுளர். முத்தமிழ்த் துறையின் முறையுணர்ந்து அதற்குத்தக்கநல்லொழுக்கத்தினிற்பவராதலின் உத்தமக்கவிகளென்றார்.

அறையுமாடரங்கும்மடப்பிள்ளைகள்... ... ... *
தறையிற்கீறிடிற்றச்சருங்காய்வரோ....... ... *
இறையுஞானமிலாதவென்புன்கவி ... ... ... *
முறையினூலுணர்ந்தாருமுனிவரோ... ... ... *

(இ-ள்.) மடப்பிள்ளைகள் - சிறுபெண்கள் — தறையில் - நிலத்தின்கண் — அறையும்-அறைகளும் — அரங்கும் - நாடகசாலைகளும்போல — கீறிடில்-கீறித்துவிளையாடினால் — தச்சரும் சிற்பரும்(அவற்றிற்குள்ள இலக்கணமின்மையைநோக்கிக்காய்வரோ கோபிப்பார்களோ — (அதுபோல) இறையும் சிறிதும் — ஞானமிலாத - அறிவில்லாத — என்புன்கவி - என்புன்கவியினது குற்றத்தைநோக்கி — முறையின் - முறைமையினால் — நூலுணர்ந்தாரும்- வேதமுதலாய நூற்பொருளை யுணர்ந்த பெரியோரும் — முனிவரோ-சீறுவார்களோ — எ-று ஓகாரம்இரண்டும்கோபியார் என்னும் எதிர்மறைக்கண்வந்தன [நூலுணர்ந்தோர்-எழுவாய். முனியார்-பயனிலை. (௭)

தரையென்பது-தறையென மருவிநின்றது. உம்மைகளிரண்டும் எச்சவும்மை.

முறையினுணர்தல் ஆசிரியனை வழிபடுமுறைமையறிந்து வழிபட்டுணர்தல் ஆதலால் இவர்கள் குணங்களைப் பாராட்டுவாரல்லது குற்றங்களைநாடாரென்பது கருத்து.

நடையினின் றுயர்நாயகன் றோற்றத்தி ... ... *
னிடைநிகழ்ந்த விராமாவதாரப்பேர்த் ... ... *
தொடைநிரம்பிய தோமறு மாக்கதை ... ... ...*
சடையன்வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே. ... *

(இ-ள்.) நடையில்நின்று-ஒழுக்கத்தினின்றும்—உயர்-உயர்ந்த—நாயகன்-காத்தற்றொழிற் றலைவனது—தோற்றத்தின்-திருவவதாரப்பகுதியுள்—இடைநிகழ்ந்த- இடையில்நடந்ததாகிய—இராமாவதாரம்-இராமஅவதாரத்தினுடைய—பெயர்த்தொடை-பெயர்களாகியமாலையானது—நிரம்பிய-நிறைந்த—தோம்அறு-குற்றம்நீங்கிய—மா-பெருமை தங்கிய—கதை-கதையானது—சடையன்- சடையப்பமுதலியாருடைய—வெண்ணெய்நல் லூர்வயின்-திருவெண்ணெய்நல்லூரிடத்திலிருந்து—தந்தது-செய்யப்பட்டது—எ-று. ஏகாரம்-ஈற்றசை. [கதை-எழுவாய். தந்தது-பயனிலை.] (அ)

இராசத தாமதகுணத்தால் செய்யப்படும் -படைத்தல்- அழித்தலாகிய இரண்டொழுக்கத்திலுஞ்சாத்துவிககுணத்தால்செய்யுங்காத்தலாகிய ஒழுக்கம் உயர்ந்ததென்பார் நடையினின்றுயரென்றார்.

பரசிராமன் - தசரதராமன்- பலபத்திரராமன் -என்று மூவகை இராமாவதாரத்துள் இவ்வவதாரம் இடைநிகழ்ந்ததாதலின் இடை நிகழ்ந்த இராமாவதாரமென்றுரைப்பினுமமையும். நாயகன்றோற்றத்தினிடைநிகழ்ந்த நடையினின்றுயர் இராமாவதாரப் பேர்த்தொடை எனப்பதங்கூட்டி ஒழுக்கத்தினின்றுயர்ந்த இராமாவதாரப் பெயர்த்தொடை எனப் பொருள்கூறினுமமையும். இராமப்பெயரிந்நூல்முழுவதும் விரவியிருத்தலின் பெயர்த்தொடையென்றார்.

இக்காப்பியம் நின்றுவிளங்குவதுபோலச் சடையப்பமுதலியார் பெயரும் நின்றுவிளங்க வேண்டுமென்னுங்கருத்தால் சடையன்வெண்ணெய்நல்லூர்வயிற்றந்ததென்றார். எனவே களமுமிடமுங்கூறியதாயிற்று.

---

அவையடக்கம்-முற்றிற்று.

ஸ்ரீராமசயம்.

# ஆற்றுப்படலம்.



பாட்டுடைத்தலைவனது நாடும் நகரமுங் காப்பியத்தின் முதற்கட் கூறவேண்டுதலின் அந்நாட்டுவளப்பத்திற் கேதுவாகிய ஆற்றினொழுக்கங் கூறுகின்றார்.

ஆசலம்புரி யைம்பொறி வாளியுங்... ... ... *
காசலம்பு முலையவர் கண்ணெனும் ... ... .. *
பூசலம்பு நெறியின் புறஞ்செலாக்... ... ... *
கோசலம்புனை யாற்றணி கூறுவாம்... ... ... *

(இ-ள்) ஆசு-குற்றங்களின் — அலம்புரி - அமைவினைச் செய்கின்ற — ஐம்பொறி ஐந்தென்னும் அடையாளத்தையுடைய — வாளியும் - மன்மதபாணங்களையும் — காசு-மணிவடம் — அலம்பும்-அசைகின்ற — முலையவர்- தனங்களையுடைய குலமாதர்களின் — கண்ணெனும் -கண்களாகிய — பூசல்-போர்க்குரிய — அம்பும்-பாணங்களையும் — நெறியின் - தமக்குரியவழியின் — புறஞ்செலா-புறத்திற் செல்லவொட்டாத — (நீதியுள்ள) கோசலம்-கோசலநாட்டினை — புனை-சூழ்ந்த — ஆற்றின் அணி - நதிவருவாயின் அழகினை — கூறுவாம்- யாம் சொல்வாம் — எ-று. [யாம்-தோன்றா எழுவாய். சொல்வாம்-பயனிலை. ஆற்றணியை-செயப்படுபொருள்.] (க)

ஐம்பொறிவாளியும் ஐம்பொறிகளின்மேற் செலுத்தத்தக்க வாளியெனக்கூறினுமமையும்.

ஐம்பொறியாவன-மெய்-வாய்-கண்-மூக்கு-செவி-என்பவை. ஐந்துபாணமாவன, தாமரைமலர்- அசோகமலர்- மாமலர்- முல்லைமலர்- குவளைமலர்- என்பவை.

ஐந்தென்னு மடையாளமுள்ள வாளியென்றதினால் மன்மதபாணமெனக்கொள்ளப்பட்டது. மற்றையர்பாணங்களுக்கு இத்தனையென்னுந்தொகை யின்று-மன்மதபாணமும் குலமுதலியனவற்றுக்கொத்த ஆடவர்க்கும், மாதர்க்கும், ஆசையையுண்டாக்குவதன்றி முறைமைதிறியுண்டாக்குவதில்லை. ஆதலால், மாதர்கண்கள் தத்தமக்குரிய கணவர்களிடத்தன்றி பிறரிடத்துச் செல்வனவன்று இவற்றிற்குக்காரணம் ராசநீதி.

ஆறு-அணி-என்பது ஒற்றிரட்டித்து ஆற்றணியெனநின்றது வேற்றுமைச் சந்தியாதலின் நெடிலோடுயிர்த்தொடர் குற்றுகரங்களுட் டறவொற்றிரட்டும் வேற்றுமைமிகவே என்னுஞ் சூத்திரத்தாலுணர்க.

நீறணிந்த கடவுணிறத்தவான்... ... ... ... *
ஆறணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற் ... *
சேறணிந்த முலைத்திருமங்கைதன்... ... ...*
வீறணிந்தவன் மேனியின் மீண்டவே... ... *

(இ-ள்.) நீறு-விபூதியினை — அணிந்த - திருமேனிமுழுவதுந்தரித்த — கடவுள்-கடவுள்போல் — நிறத்த- வெண்மைநிறமுள்ள — வான் - மேகங்கள் — ஆறு-ஆகாயமார்க்கத்தை — அணிந்து-பொருந்தி — சென்று-போய் — ஆர்கலி சமுத்திரநீரை — மேய்ந்து-உண்டு — அகிற்சேறு- அகிற்குழம்பினை — அணிந்த-பூசிய — முலை-தனமுள்ள — திருமங்கைதன் - திருமகளது — வீறு- இன்பத்

தை—அணிந்தவன் - பொருந்தின திருமாலுடைய—மேனியின்-திருமேனி போல நீலநிறங்கொண்டு—மீண்ட- திரும்பிவந்தன—எ-று. ஏகாரம்-ஈற்றசை [வான்-எழுவாய். மீண்ட-பயனிலை.] (உ)

அரிச்சேறு-சந்தனமுதலிய கலவைச்சேறெனக்கொள்க.

மேகங்கள் மீண்டனவெனக்கூட்டுக. மின்னலுடனும், காற்றுடனும், இடியுடனும், கூடி நிற்றலின் மேகங்களெனப் பன்மையாகக் கூறினார். ரத கஜ துரக பதாதிகள் கூடிய கூட்டத்தைச் சேனையென்பதுபோல- ஒரோர்கால மேகமென ஒருமையாகக்கூறவும்படும். திருமங்கைநல்வீறணிந்தவன்-என்பதற்கு திருமகளைத் தனக்கு மேன்மையாக மார்பில் அணிந்தவன் எனக் கூறினுமமையும்.

பம்பி மேகம்பரந்தது பானுவால் ... ... *
நம்பன்மாதுலன் வெம்மையை நண்ணினன் ... *
அம்பினாற்றுதுமென்றகன் குன்றின்மேல் ... *
இம்பர்வாரியெழுந்தது போன்றதே ... ... *

(இ-ள்) மேகம்-மேற்கூறிய மேகங்கள்—பம்பி- இமயமலையினிடத்தில் நெருங்கியிருக்கிறவனைக்கும்படி நிருந்து—(பின்பு)பரந்தது-ஆகாயத்தில்பரவிய தோற்றமானது—நம்பன்-சிவனுடைய—மாதுலன்-மாமனாகிய மலையரையன்—பானுவால்- சூரியனால்—வெம்மையை - வெப்பத்தை—நண்ணினன்- பொருந்தினன்— (ஆதலால்) அம்பின்-சலத்தினால் ஆற்றுதுமென்று—அவ்வெப்பத்தை-நாம்தணிக்கக் கடவோமென்று—அகல் - விசாலமுள்ள—குன்றின்மேல்- அவ்விமயவரையின்மேல்—இம்பர் - இவ்விடத்திருக்கும்—வாரி- சமுத்திரமானது—எழுந்தது-போன்றது எழுந்த தோற்றத்தை ஒத்தது — எ-று ஏகாரம்-ஈற்றசை. [மேகம்பரந்தது-எழுவாய். போன்றது -பயனிலை. எழுந்ததோற்றம்-செயப்படுபொருள்.] (௩)

மேகம்பரந்தது வாரியெழுந்தது போன்றதெனக்கூட்டுக

அம்பினாற்றுதுமெனப்பாடமாயின் நீரினால் ஸ்நானஞ் செய்விக்கிறேமெனப் பொருள் கொள்க. உவர்க்கடலானது முன்னிருப்பதாதலின் இம்பர்வாரியென்றார்.

புள்ளிமால்வரை பொன்னென நோக்கிவான் ... *
வெள்ளிவீழிடைவீழ்வன தாரைகள் ... ... *
உள்ளியுள்ளவெலாமுவந்தீயுமவ் ... ... *
வள்ளியோரின் வழங்கின மேகமே ... ... ... *

(இ-ள்) மால்-பெரிய—வரை- அவ்விமயமலை—பொன்னெனல் - பொன்னென்பதனை—நோக்கி-கருதி—வான்-வானவர்—இடை - அப்பொன்னினிடத்தில்—வெள்ளிவீழ்- வெள்ளிக்கம்பிகளை—புள்ளி - அடையாளமாக—வீழ்த்தென-வீழ்த்ததுபோல—தாரை-மழைத்தாரைகளை—உள்ளி- மறுமைப்பயனைக்கருதி—உள்ளவெலாம்-தங்களிடத்துள்ள பொருள்களையெல்லாம்—உவந்து-வெறுப்பின்றி—ஈயும் - வரையாதுகொடுக்கா நின்ற—அவ்வள்ளியோரின்-அவ்வள்ளல்களைப்போல—மேகம்-மேகங்கள்—வழங்கின-பொழிந்தன- எ-று ஏகாரம்-ஈற்றசை. [மேகம்-எழுவாய். வழங்கின- பயனிலை. தாரை-செயப்படுபொருள்.] (௪)

புள்ளி-கனம்பொருந்திய, மால்வரை- பெரிய இமயமலையை, பொன்னென-பொன்னென்று, நோக்கி-கருதி, வான்-வானமானது, வெள்ளிவீழ-வெள்ளிவிழுதினை வீழ்த்தனைக்கூறுவது மொன்று-வரையாது கொடுப்போர் வள்ளியோர்கள்- வரையாது கொடுத்தலாவது- இன்னார்க்குக்கொடுக்கலாம் இன்னார்க்குக் [illegible]டுக்கலாகாதென வெண்ணுமற் கொடுத்தல-வள்ளலானவர்கள் இரவலர்க்குக்கொடுக்கும்போது அவ்விரவலர் சந்தோஷிப்பதைக்கண்டுதாமுஞ்சந்தோஷிப்பாராதலின்உவந்தியுமென்றார்.

## பாடபேதம்

புள்ளிமால்வரைபொன்னென,மாறுயர்ந்தபொன்மலையைநோக்கி விரைவாக ஆகாயத்திலிருந்துவிழுகிற விழுதினைப்போல எனக்கூறுதலுமொன்று.

மானம்நேர்ந்தறநோக்கிமனுநெறி ... ... ... *
போனதண்குடைவேந்தன்புகழென... ... *
ஞானமுன்னியநான்மறையாளர்கைத் ... ...*
தானமென்னத்தழைத்ததுநீத்தமே... ......*

(இ-ள்) மானம்-மானத்தை—நேர்ந்து- பொருந்தி—அறன்- தருமத்தை—நோக்கி-கருதி—மனுமுறை-மனுவிக்கியா னேஸ்வரமென்னும் சாஸ்திரமுறைமைப்படி—போன-நீதிசென்ற—தண் - உலகத்துயிர்களுக்குக்குளிர்ச்சியுண்டாக்குவதற்கேதுவான—குடை-வெள்ளைக்குடையினையுடைய—வேந்தன்-தயரதமகாராசாவின்—புகழென-புகழைப்போலவும்—ஞானம் - ஞானநெறியை—முன்னிய- கருதிய—நான்மறையாளர் - நான்குவேதங்களுமுணர்ந்த அந்தணர்களுடைய— கையில்-கையினிடத்திற்கொடுக்கும் — தானமென்ன-தானத்தைப்போலவும்—நீத்தம்-வெள்ளமானது—தழைத்தது -பரந்தது—எ-று ஏகாரம்-ஈற்றசை. [நீத்தம்-எழுவாய் தழைத்தது-பயனிலை.]

மன்னுயிரைத் தன்னுயிர்போலநினைத்து இராசாங்கம்செலுத்தும் அரசனுக்குண்டாகும்புகழ் எங்கும்பரவுதல்போலமலையின்மேல் பெய்யப்பட்டமழைநீர் எங்கும் பரவுதலால் வேந்தன்புகழென்றும்,அந்தணர்கையிற்கொடுக்குந்தானம் சிறிதாயிருந்தாலும் அதனால் வரும்பலன் அதிகரிப்பதுபோல வெள்ளம் அதிகரித்தலால்நான்மறையாளர்கைத்தானமென்னவுங்கூறினார்.

மானமாவது-அரசன் தன்னுடைய வீரமுதலிய நிலைமைகளைத் தவறுவராமல் காத்துக்கொள்வது-அரசனுக்கு அறமாவது. ஓதல்-வேட்டல் ஈதல்-என்னும் பொதுத்தொழிலினும் படைக்கலம்-பயிற்றல்-பல்லுயிரோம்பல்-பகைத்திறந்தெறுதல் என்னுஞ்சிறப்புத்தொழிலினும் வழுவாது நிற்றல்

இவ்வாறு அராய்ச்சிசெய்த மனுமுறைபோதலாவது மனுவிக்கியானேஸ்வரமுதலியதர்மசாஸ்திரங்களில்கூறிய முறைமைப்படி நீதிசெலுத்துதலாம.

உயிர்களுக்குக் குளிர்ச்சிசெய்தலாவது- நன்மையைச்செய்தல்-அறம்-அறனெனப்போலியாய்நின்றது.

தலைபுமாகமுந்தாளுந்தழீஇயதன் ... ... .. *
நிலைதிரியாநிறைநின்றதுபோலவே ... ... *
மலையிளுள்ளவெலாங்கொண்டுமண்டலால் ...*
விலையின்மாதரையொத்ததவ்வெள்ளமே ... *

(இ-ள்.) தலையும்-தன்னை விரும்பிவந்த காமுகருடைய தலையினையும்—ஆகமும் - மார்பினையும்—தாளும் - பாதத்தையும்—தழீஇய - தழுவிய—

டப்பொருந்தியும்—மென்தாதுபொருந்தியும்- மென்மைத்தன்மையுள்ளமகரந்தப்பொடிகளைப்பொருந்தியும்—தேன்வளாவியும் - தேன்கலந்தும்—செம்பொன்விராவியும்-செம்பொன்னினைப்பொருந்தியும்—ஆனை-யானைகளின்—மாமதம்-மிகுந்தமதநீராகிய—ஆற்றொடு- பிரவாகத்துடன்—அளாவியும்பொருந்தியும் (பலநிறங்கொண்டிருப்பதினாலே)—வானம் - மேகத்தினிடத்தில்தோன்றுகிற—வில்லை-இந்திரதனுவை—நிகர்த்தது-ஒத்தது எ-று ஏகாரம்-ஈற்றசை. [வாரி-எழுவாய். நிகர்த்தது-பயனிலை. வானவில்-செயப்படுபொருள்.] (அ)

மலையெடுத்துமரங்கள்பறித்துமா... ... ...*
டிலைமுதற்பொருள்யாவையுமேந்தலான்... *
அலைகடற்றலையன்றணைவேண்டிய... ... .. *
நிலையுடைக்கவிநீத்தமந்நீத்தமே ... ... *

(இ-ள்.) அந்நீத்தம்- அவ்வெள்ளமானது—மலையெடுத்து - மலைகளையெடுத்தும்—மரங்கள்-விருக்ஷங்களை—முறித்தும்- ஒடித்தும்—மாடு- பக்கங்களிலிருக்கும்---இலைமுதற்பொருள் - இலைமுதலாகிய பொருள்களையும்—ஏந்தலால்-ஏந்திக்கொண்டுசெல்லுதலினால்—அலை- அலையும்நீரையுடைய—கடல்தலை-சமுத்திரத்தினிடத்தில்—அன்று-முன்னாள்—அணைவேண்டிய -அணைகட்டவிரும்பிய—நிலையுடை - மனநிலைமையினையுடைய—கவிநீத்தம் - வானரவெள்ளத்தையொத்தது—எ-று. ஏகாரம்-ஈற்றசை. நீத்தம்-எழுவாய். ஒத்தது-பயனிலை.கவிநீத்தம்-செயப்படுபொருள்.[பயனிலை-எஞ்சிநின்றது.] (௯)

வெள்ளம்-மலையெடுத்தலாவது-குன்றுகளைப்புரட்டுதல்-இலைமுதற்பொருள் என்றதினால் காய்கனிகளுங்கொள்க. அந்நாளில் அறுபத்தெட்டுவானரவெள்ளம் மலையெடுத்தமரங்கள்முறித்து அணைகட்ட மற்றையிரண்டு வெள்ளமாகிய வானரங்கள் ஆகாரத்துக்காக இலைமுதற்பொருள்களைக்கொண்டுசென்றன.

ஈக்கள்வண்டொடுமொய்ப்பவரம்பிகந்... ...*
தூக்கமேமிகுந்துட்டெளிவின்றியே ... ...*
தேக்கெறிந்துவருதலிற்றீம்புனல் ... ... *
வாக்குதேனுகர்மாக்களைமானுமே... ... *

(இ-ள்.) ஈக்கள்-ஈக்களும்—வண்டொடு- வண்டுகளும்—மொய்ப்ப- மொய்க்கும்படி—வரம்பு-அணையை—இகந்து- கடந்தும்—ஊக்கம்- வலி—மிகுந்து-அதிகரித்தும்—உள்-உள்ளே—தெளிவுஇன்றி-தெளிவில்லாமலும்—தேக்கு- தேக்கமரங்களை—எறிந்து-இருகரையிலும் அலைகளால்எறிந்தும்—வருதலின்-வருதலினால்—தீம்புனல்- மதுரமுள்ள வெள்ளமானது—வாக்கு-வார்க்கும்படியான—தேன்- மதுவினை—நுகர் - உண்ணுகின்ற—மாக்களை-மாந்தர்களை—மானும் - ஒப்பாகும்—எ-று. ஏ-ஈற்றசை. [புனல்-எழுவாய். மானும்-பயனிலை.மாக்கள்-செயப்படுபொருள்.இதுசெம்மொழிச்சிலேடை

மதுபானிகளைக்குறித்துச் சொல்லுமிடத்து வரம்பிகந்து தங்குலத்துக்குமொழுக்கத்துக்குமுரிய வரம்பினைக்கடந்தும் ஊக்கமேமிகுந்து உச்சாகமிகுந்தும் உட்டெளிவின்றிமனந்தெளிவில்லாமல் தேக்கெறிந்து ஏப்பமிட்டுக்கொண்டும் வருதலினெனப் பொருள்கொள்க.

பணைமுகக்களியானைபன்மாக்களோ ... .... *
டணிவகுத்தெனவீர்த்திரைத்தார்த்தலின் ... *
மணியுடைக்கொடிதோன்றவூன்றலாற் ... *
புணரிமேற்பொரப்போவதுபோன்றதே ... *

(இ-ள்.) பணை-பருத்த—முகம்-முகத்தையும்—களி-மயக்கத்தையுமுடைய—யானை-யானைகளையும்—பல்-பலவாகிய—மாக்களோடு-மிருகங்களையும்—அணிவகுத்தென-வியூகம்வகுத்ததுபோல—ஈர்த்து-பந்திபந்தியாக இழுத்துக்கொண்டு—இரைத்து ஆர்த்தலின்-ஆரவாரித்தலாலும்—மணியுடை-அழகினையுடைய—கொடி-காட்டுக்கொடிகள்—தோன்ற-காணும்படி—வந்து ஊன்றலின்-வந்து பொருந்துதலினாலும்—புணரிமேல்-சமுத்திரத்தின்மேல்—பொர-யுத்தஞ்செய்ய—போவது-செல்லுந்தன்மையினை—போன்றது ஒத்தது—எ-று. ஏகாரம்-ஈற்றசை. [வெள்ளம்-எழுவாய். போன்றது-பயனிலை. போவது-செயப்படுபொருள்] (௰௧)

போர்செய்யச்செல்லுந் தன்மையைக்குறிக்குமிடத்து-பன்மாக்கள்-பலகுதிரைகள், மணியுடைக்கொடி-மணிகளுள்ளதுவசங்கள், யானைக்கூட்டமும் மிருகக்கூட்டமும் ஒன்றோடொன்றுகலவாமல் வருகின்றமையின் அணிவகுத்தெனவென்று கூறப்பட்டது. இரைத்தார்த்தல்-ஒருமொழியாகக்கொள்க. ஊன்றுதல்-நாட்டுதல். இதுவும் சிலேடையணி.

இரவிதன்குலத்தெண்ணில்பல்வேந்தர்தம் .... *
பரவுநல்லொழுக்கின்படிபூண்டது... ... *
சரயுவென்பதுதாய்முலையன்னதிவ்... ... ... *
வுரவுநீர்நிலத்தோங்குமுயிர்க்கெலாம் ... ... *

(இ-ள்.) இரவிதன்-சூரியனுடைய—குலத்து-குலத்தில்வந்த—எண் இல்-அளவில்லாத—பல்-பலராகிய—வேந்தர்தம்-அரசர்களுடைய—பரவு-பரவிய—நல-நன்மையான—ஒழுக்கின்படி-ஒழுக்கத்தினைப்போல—பூண்டது ஒழுக்கத்தைப்பொருந்தியது—சரயுவென்பது-சரயுநதியென்றுபெயர் சொல்லப்படுவது—உரவுநீர்-சமுத்திரத்தினாற் சூழப்பட்ட—இந்நிலத்து-இந்தஉலகத்தில்—ஓங்கும்-மிகுந்த—உயிர்க்கெலாம்-உயிர்களுக்கெல்லாம்—தாய்முலையன்னது-ஈன்றதாயினுடைய தனபாரத்தையொத்தது—எ-று.

வெள்ளம்-எழுவாய். பூண்டது-என்பது-அன்னது-இம்மூன்றும் பயனிலை. பூண்டது-என்னும்பயனிலைக்கு ஒழுக்கு செயப்படுபொருள். அன்னது-என்னும் பயனிலைக்குத்தாய்முலை செயப்படுபொருள். ரவியென்னும்வடசொல்-ரலக்கிகரமுமென்னும் சூத்திரவிதியால் முதலில் இகரம்பெற்றது. தன்-தம்- இவ்விரண்டும் இடைச்சொல் ஒழுக்கம்மீண்டும் வருவித்துரைக்கப்பட்டது.

தாய்முலைமக்களை வளர்ப்பதுபோல இது உயிர்களைவளர்க்குந்தன்மையை யுடையதாதலின் தாய்முலையன்னதென்றார்.

வேந்தரது ஒழுக்கம் ஆசாரம்-அது எந்நாளும் மாறாததன்மைபோல் இது மாறாமல் ஓடிக்கொண்டேயிருத்தல்,

[வேறு.]

கொடிச்சியரிடித்தசுண்ணங்குங்குமங்கோட்டமேலம்... *
நடுக்குறுசந்தஞ்சிந்தூரத்தொடுநரந்தநாகம்... .. .. *

கடுக்கைபார்வேங்கைகோங்குபச்சிலைகண்டில்வெண்ணை *
அடுக்கலினடுத்ததீந்தேனகிலொடுநாறுமன்றே . ......*

(இ-ள்.) கொடிச்சியர்-குறத்தியர்கள் — இடித்த வெறியாட்டின்பொருட்டு இடித்த-சுண்ணம்-வாசனைப்பொடியும் — குங்குமம்-குங்குமமரமும் — கோட்டம்-கோஷ்டமரமும் — ஏலம்-ஏலச்செடியும் — நடுக்குஉறு-அசைகின்ற — சுந்தம்-சந்தனவிருக்ஷமும் — சிந்தூரம்-வெட்சிமரமும் — அடுக்கலின்-அந்தமலையில் — அடுத்த-பொருந்திய — நரந்தம்-கஸ்தூரியம் — நாகம்-சுரபுன்னைமரமும் — கடுக்கை - கொன்றைமரமும் — ஆர் - ஆத்திமரமும் — வேங்கை வேங்கைமரமும் — கோங்கு-கோங்குமரமும் — பசிலை பச்சிலைமரமும் — கண்டில்வெண்ணை-கண்டில்வெண்ணை என்கிற ஒருவகைமரமும் — தீம்தேன்-மதுரமுள்ளதேனும் — அகில்-அகில்மரமுமாகிய இவை — நாறும்-கமழும் எ-று. அன்று-அசை. ஏ-ஈற்றசை. [வெள்ளம்-தோன்றாஎழுவாய். நாறும்-பயனிலை.] (௰௩)

நரந்தம்-நாரத்தையென்றுகூறினும், நடுக்குறு சந்தம் என்பதற்கு-நடு-நடுவில் குறுகுறிக்கப்பட்ட, சந்தனம்-சந்தனக்கட்டை என்று கூறினுமமையும்.

பதார்த்தகுணசிந்தாமணி— வெண்பா.

கண்டில்வெண்ணெய்மாதேகேள்காந்திப்பிரதாபமோமா ந்
தொண்டைவிலுண்ணீர்க்கட்டுந்தூரிருமல் — மிண்டிவரு ம்
நீர்க்கடுப்புமலந்துணீர்க்கிருத்தலும்போக்கு ம்
பார்க்குளறியப்பக ர்

எயினர்வாழ்சிறூரப்புமாரியினிரியல்போக்கி .. ... ...*
வயின்வயினெயிற்றிமாதர்வயிறலைத்தோடவோடி... ...*
அயின்முகக்கணையும்வில்லும்வாரிக்கொண்டலைக்குநீராற் *
செயிர்தருங்கொற்றமன்னர்சேனையைமானுமன்றே ....*

(இ-ள்.) எயினர்-வேடர்கள் — வாழ்- வாழ்கின்ற — சிறூர் - சிற்றூர்களை — அப்புமாரியின்-அம்புவருஷித்தினால் — இரியல்போக்கி - பிரித்தோடச்செய்து — வயின்வயின் - அங்கங்குள்ள — எயிற்றிமாதர்- வேடப்பெண்கள் — வயிறு-வயிற்றினை — அலைத்து-கைகளால்வருத்திப்பிசைந்துகொண்டு — ஓட-ஓடும்படி — ஓடி-சென்று — அயில்முகம்- கூர்மையாகியமுகமுள்ள — கணை பட்-பாணங்களையும் — வில்லும்-விற்களையும் — வாரிக்கொண்டு-அடித்துக்கொண்டு — அலைக்கும்- அலையச்செய்கின்ற — நீரால்-நீரினால் — செயிர்தரும்- குற்றம்பொருந்திய — கொற்றம்-வெற்றியுள்ள — மன்னர்- கொடுங்கோல்மன்னர்களுடைய — சேனையை - படையினை — மானும்- ஒப்பாகும் — எ-று அன்று-அசை. ஏ-ஈற்றசை. [வெள்ளம்-எழுவாய். மானும்-பயனிலை. சேனையை-செயப்படுபொருள்.] (௰௪)

சிறுமையென்னும் பண்புச்சொல் ஈறுபோதலிடையுகரமிய்யாதலாதி நீடல் என்னுஞ் சூத்திரவிதியால் இறுதியிலிருக்கும்-மை-விகுதிகுன்றி முதலெழுத்துநீண்டு சீறு என்றாய் வருமொழிமுதலிலுயிர்வந்தவிடத்து ஈற்றுக்குற்றியலுகரம் நீங்கநின்ற வல்லினமெய்யின்மேல் வருமொழிமுதலினின்ற ஊகாரமேறச் சீறூர் என்றாயிற்று.

அம்பு எனற்பாலது விகாரவகையால் அப்பு என்றாயிற்று. அம்பு என்பது நீர்-பாணம் என்னும் பலபொருளொருசொல்லாதலின் வெள்ளத்தைக் குறிக்கும்போது நீரும் சேனையைக் குறிக்கும்போது பாணமுமாகப்பொருள்கொள்க. கணை-அலகு.

அலைக்கும் நீரால் என்பதற்குச் சேனையைக்குறிக்குமிடத்து அலைக்குந் தன்மையாலென்ப் பொருள்கொள்க. நீரென்பது-பலபொருளொருசொல்.

குடிகள் அலையச்செய்கின்றமையால் கொடுங்கோல்மன்னர் சேனையை யொப்பாகுமென்பது இதற்கருத்து. இதுவும்-சிலேடை-குறிஞ்சிப்பெருக்கங்கூறியது.

செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயுஞ் சேர்ந்த நெய்யும் *
உறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருத முந்தி ... ... .. *
மறியுடை யாயர் மாதர் வளைதுகில் வாரு நீரால் .. ... ... *
பொறிவரி யரவி னாடும் புனிதனும் போலு மன்றே... ... *

(இ-ள்.) செறி-செறிந்த—நறும்-மணமுள்ள—தயிரும்-தயிரும்—பாலும்-க்ஷீரமும்—வெண்ணெயும்-நவநீதமும்—சேர்ந்தநெய்யும்-திரண்டோறுஞ்சேர்ந்தநெய்யும்—உறியொடு-உறிகளுடன்—வாரியுண்டு-வாரியுண்டும்—குருந்தொடு-குருந்தமரத்துடன்—மருதம்-மருதமரத்தை—உந்தி-தள்ளியும்—மறியுடை-ஆடுகளையுடைய—ஆயர்மாதர்-இடைச்சியர்கள்—வளை-தரித்துக்கொள்ளுந்—துகில்-புடைவைகளை—வாரும்நீரால்-வாரிக்கொண்டு செல்லுந்தன்மையினால்—பொறி-புள்ளியும்—வரி-வரியும்பொருந்திய—அரவின்-காளிங்கனென்னும் பாம்பின்மேல்—ஆடும்-ஆடிய—புனிதனும் போலும்-கிருஷ்ணமூர்த்தியையும் ஒத்தது—எ-று. அன்று-அசை-ஏ-ஈற்றசை [வெள்ளம்-எழுவாய் போன்றது-பயனிலை. புனிதன்-செயப்படுபொருள் முல்லைநிலப்பெருக்கங்கூறியது. உம்மை-உயர்வுசிறப்பும்மை-அல்லது இறந்ததுதழீஇஇ எச்சவும்மை] (௰௫)

கதவினை முட்டி மள்ளர் கையெடுத் தார்ப்ப வெய்தி ... ... *
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத் ... ... *
ததைமணி சிந்த வுந்தித் தறியிறத் தடக்கை சாய்த்து .. ... *
மதமழை யானை யென்ன மருதஞ் சென்றடைந்த தன்றே. *

(இ-ள்.) கதவினை-அந்தவெள்ளமானது மதகுகடோறுமுள்ளகதவுகளை—முட்டி-சென்றுமுட்டி—மள்ளர்-உழவர்கள்—கையெடுத்து-மகிழ்ச்சியால் கைகளைமேலேயெடுத்து—ஆர்ப்ப-ஆரவாரிக்க—எய்தி-சென்று—நுதலணி-நெற்றிக்கு அணியாகவிளங்கும்—ஓடைபொங்க-ஓடைகள்பெருகவும்—நுகர்-அவற்றின்கணுள்ளமலர்களில் தேனைநுகரும்—வரிவண்டு-இசைபாடும்வண்டுகள்—கிண்ட-குடையவும்—ததை-நெருங்கிய—மணிசிந்த-முத்துமுதலியமணிகள்சிந்த—உந்தி-தள்ளியும்—தறியிற-ஆற்றிடைக்குறையிற்றறிகள்முறியவும்—தடக்கை-தடாகத்தினதுகரைகளை—சாய்த்து-தள்ளியும்—மதமழை-மதமாகியமழையையுடைய—யானையென்ன-யானைபோல்—மருதஞ்சென்று-மருதநிலத்திற்சென்று—அடைந்தது-சேர்ந்தது—எ-று. அன்று-அசை-ஏ-ஈற்றசை. [வெள்ளம்-எழுவாய். அடைந்தது-பயனிலை.] (௰௬)

இது சிலேடை உவமையாதலால் யானையைக்குறிக்குமிடத்து-கதவு-கோட்டாரத்தின் கதவு மள்ளர் யானைப்பாகர் நுதல் அணி ஓடைநெற்றியில் அணிந்த பொற்பட்டம் நுகர் வரிவண்டு மதநீரை யுண்ணும் வரிவண்டு ததைமணி பக்கத்துமணி-தறி-கட்டுந்தறி தடக்கை பெரியதுதிக்கை எனப்பதம்பிரித்துப்பொருள்கொள்க. இது மருதநிலப்பெருக்கங்கூறியது.

முல்லையைக்குறிஞ்சியாக்கிமருதத்தைமுல்லையாக்கிப் ...*
புல்லியநெய்தறன்னைப்பொருவருமருதமாக்கி ... ... *
யெல்லையிற்பொருள்களெல்லாமிடைதடுமாறுநீரால் ... *
செல்லுறுகதியிற்செல்லும்வினையெனச்சென்றதன்றே. *

(இ-ள்.) முல்லையை- முல்லைநிலத்தை—குறிஞ்சியாக்கி- குறிஞ்சிநிலமாக்கியும்—மருதத்தை- மருதநிலத்தை—முல்லையாக்கி - முல்லைநிலமாக்கியும்—புல்லிய- சொற்பப்பயனைத் தருவதாகிய—நெய்தல்தன்னை - நெய்தனிலத்தை பொருவரும்-ஒப்புசொல்லுதற்கரிய—மருதமாக்கி - மருதநிலமாக்கியு—(இவ்வகையினால்) எல்லையில்-அளவில்லாத—பொருள்களெல்லாம்- திரவியங்களெல்லாம்—இடைதடுமாறுநீரால்- இடம்விட்டு இடமாறின தன்மையினால்—செல்லுறு- உயிர்கள்செல்லுதல்பொருந்திய—கதியில்- நால்வகைக்கதிகளில்—செல்லும்-செல்லுகின்ற—வினையென - நல்வினைதீவினை போல—சென்றது-போயிற்று—எ-று அன்று - அசை. ஏ-ஈற்றசை. [வெள்ளப்- எழுவாய். சென்றது-பயனிலை.]
(யஎ)

புல்லிய என்பதற்குப் பொருந்திய வென்று கூறினு மமையும், பொருவரும் என்பதனை பொருவுதல் அரும் எனப்பதம்பிரிக்க உகரச்சாரியையும், தல்விகுதியுங்குன்றிநின்றது.

குறிஞ்சிநிலப்பொருளை முல்லைநிலத்திற்கொண்டுவந்து சேர்த்தமையால் முல்லையைக்குறிஞ்சியாக்கியென்றும், முல்லைநிலப்பொருளை மருதநிலத்திற்கொண்டுவந்து சேர்த்தமையால்மருதத்தை முல்லையாக்கியென்றும், மருதநிலப்பொருளை நெய்தனிலத்திற்கொண்டுவந்து சேர்த்தமையால் நெய்தலை மருதமாக்கியென்றுங்கூறினார். நாற்கதி-தேவர் - மக்கள் - விலங்கு-நரகர்.

காத்தகான்மள்ளர்வெள்ளக்கலிப்பறைகறங்கக் கைபோய்ச்
சேர்த்தநீர்த்திவலைபொன்னுமுத்தொடுதிரையின்வீசி....*
நீத்தமாத்தலையதாகிநிமிர்ந்துபார்கிழியநீண்டு ... ...*
கோத்தகாலொன்றிலொன்றுகுலமெனப்பிரிந்ததன்றே...*

(இ-ள்) கால்-நீர்க்கால்களை—காத்த - காத்துக்கொண்டிருந்த—மள்ளர்-மள்ளர்கள்—வெள்ளம்-வெள்ளம்வருகின்ற குறிப்பினைத்தெரிவிக்கும்—கலி-ஓசையினையுடைய—பறை-பறைகள்—கறங்க-முழங்குதலினாலுணர்ந்து—கைபோய்- ஒழுங்காகப்போய்—சேர்த்த-ஏரிகுளங்களிற்சேர்த்த—நீர் - நீரினிடமாக—திவலை- துளிகளையும்—பொன்னும்-பொன்னினையும்—முத்தொடு-முத்துகளுடன்—திரையின்வீசி- அலைகளால்வீசியும்—நீத்தம் - ஆற்றில்சென்றவெள்ளமானது—மாந்து - உண்ணும்படியான—அலையதாகி - அலைகளையுடையதாய்—நிமிர்ந்து- உயர்ந்தும்—பார்கிழிய- பூமிகிழியும்படி—நீண்டு -நீட்சியைப்பொருந்தியும்—ஒன்றிலொன்று கோத்தகால்-ஒன்றுடனொன்றுபொருத்தமாயிருக்குங்கால்களில்—குலமென - முன்னேயொன்றேயாயிருந்து பிற்படப்பலவாறாகக்கிளைத்துள்ளகுலம்போல—பிரிந்தது பிரிவுற்றது எ-று. அன்று-அசை. ஏ-ஈற்றசை. [நீத்தம்-எழுவாய். பிரிந்தது-பயனிலை]

பாடம்பகம்.

மான்றலையதாகி -குதிரைத்தலைபோல்வதாகி-எனப்பொருள்கூறுவதுமன்றி ஆன்றுமிகுந்து-அலையதாகி- அலையையுடையதாகியெனவுங்கூறுவர்,

மருதநிலத்தின்கண் பலகால்களாகப் பிரிந்ததன்மை இவ்வாறென்பது இதன்கருத்து.

கல்லிடைப்பிறந்துபோந்துகடலிடைக்கலந்தநீத்தம் ...*
எல்லையின்மறைகளாலுமியம்பரும்பொருளீதென்னத் *
தொல்லையிலொன்றேயாகித்துறைதொறும்பரந்தசூழ்ச்சிப்
பல்பெருஞ்சமயஞ்சொல்லும்பொருளும்போற்பரந்ததன்றே

(இ-ள்) கல்இடை-இமயமலையினிடத்தில்—பிறந்து-உற்பத்தியாகி—போந்து சென்று—கடல்இடை-சமுத்திரத்தினிடத்தில்—கலந்த-சேர்ந்த—நீத்தம்-வெள்ளமானது—எல்லையில்-அளவில்லாத—மறைகளாலும்-நான்குவேதங்களாலும்—இயம்புஅரும்-இத்தன்மைத்தெனச்சொல்லுதற்கரிய—பொருள்-பிரமம்—ஈதுஎன்ன-இதுவென்றுசொல்லும்படி—தொல்லையில்-பழமையில்—ஒன்றேயாகி-ஏகமாகியேஇருந்து-பின்பு—துறைதொறும்-இடந்தோறும்—பரந்த-வெவ்வேறுகடவுளாகப்பரவிய—சூழ்ச்சி-சூழ்ச்சியினையுடைய—பல்-பலவகைப்பட்ட—பெருஞ்சமயம்-பெரியசமயத்தாரால்—சொல்லும்-சொல்லப்படுகிற—பொருளும்போல்பரந்தது-அந்தப்பிரமம்போலவும் பரவியது—எ-று. அன்று-அசை. ஏ-ஈற்றசை. [நீத்தம்-எழுவாய். பரந்தது-பயனிலை] (௰௯)

கல்லிடைப்பிறந்தநீத்தம்-துறைதொறும் பரந்தது எனக்கூட்டுக. தொல்லையி னொன்றாகியபொருள் பலவகைச்சமயத்தார் தொழும்படி வெவ்வேறு திருநாமங்கொண்டு அனுக்கிரகிக்குமாயினும் மு[illegible]முடிவில்சமயாதீதப்பட்டு ஏகமாயே இருப்பதுபோல-நீத்தமும்தொல்லையிலொன்றாகித் துறைதோறும்பரந்து கடலிடைச்சேரும்போதும் ஒன்றாயேநின்றது.

இயம்பரும் என்பது தல்விகுதிகுன்றிநின்றது. பொருளும்போல என்பதிலிருக்கும் உம்மை-உயர்வுசிறப்பும்மை.

தாதுகுசோலைதோறுஞ்சண்பகக்காடுதோறும்... ......*
போதவிழ்பொய்கைதோறும்புதுமணற்றடங்கடோறும் *
மாதவிவேலிப்பூகவனந்தொறும்வயல்கடோறும் ... *
ஓதியவுடம்புதோறுமுயிரெனவுலாயதன்றே... ... *

(இ-ள்.) தாது-மகரந்தம்—உகு-சிந்துகின்ற—சோலைதோறும்-சோலைகள்தோறும்—சண்பகக்காடுதோறும்-சண்பகவனந்தோறும்—போது-மலர்கள்—அவிழ்-அலருகின்ற—பொய்கைதோறும்-பொய்கைகள்தோறும்—புதுமணல்-புதுமணலையுள்ள—தடங்கள்தோறும்-தடாகங்கள்தோறும்—மாதவி-குருக்கத்திமரங்களாகிய—வேலி-வேலியையுடைய—பூகம்-கமுகமரங்கள்நிறைந்துள்ளவனந்தோறும் சோலைகள்தோறும்—வயல்கள்தோறும்-கழனிகள்தோறும்—ஓதிய-சொல்லிய—உடம்புதோறும்-சரீரங்கள்தோறுமிருக்கும்—உயிரென உயிர்போல—உலாயது-சென்றுநிறைந்தது—எ-று. அன்று-அசை. ஏ-ஈற்றசை. [வெள்ளம்-எழுவாய். உலாயது-பயனிலை.] (௨௰)

சம்பகம் என்பது -சண்பகமென மருவிவழங்குகின்றது.

---

ஆற்றுப்படலமுற்றிற்று.

ஸ்ரீராமஜயம்.

# நாட்டுப்படலம்.



உடற்கு உயிர்போன்ற ஆற்றினீரா லுண்டாகிய நாட்டுவளப்பத்தைக் கூறத்தொடங்கினார்.

அவ்வளமாவன - அரசனாற்றலாலும் கடவுள்பூசை அறங்களென்னும் இவைகண்மூன்றனும் பெருகுவது.

அவ்வளத்தின் வகைகள் குழிசனிற்பயம் பொன்னும் மணிகளும் வயலினுந் தண்டலையினும் விளையப்படும்பொருளுமாம்.

நாடாவது- குன்றாப்பயிர்செய்விப்பவர்களும் பெரியோருஞ் செல்வமுடையோரும் வாழ்வதும் பொருளுடைமையால் பிறதேயத்தாராலும் விரும்பத்தக்கதும் நீங்காமற்றாயும் புறத்துநின்று அழிவுசெய்யும்பகையுமின்றியிருப்பதும் சங்கேதவசத்தால் மாறுபட்டுக்கூடும்பலகூட்டமும் - உடன்கூடியிருந்து பாழாகச்செய்யும் உட்பகையும் வேந்தனை அலைக்குங்கொல் விளைகுறும்பு மில்லாமையுமாகிய இவைநாட்டினியல்பு.

மழையிறப்பினும் வளந்தருவதற்கேதுவான -ஊரவு-கிணறு-எரி-ஆறு என்னும் இந்நான்கு ஆதாரமாகிய அவயவமுடையதும், நோயின்மை-செல்வம்விளைதல் - இன்பம்-என்னு மிவ்வைந்து அழகினை யுடையதுமாம்.

வாங்கரும்பாதநான்கும்வகுத்தவான்மீகியென்பான் ... ... *
தீங்கவிசெவிகளாரத்தேவரும்பருகச்செய்தா ... ... ... ...*
ஆங்கவன்புகழ்ந்தநாட்டையன்பெனுநறவமாந்தி... .... ... *
மூங்கையான்பேசலுற்றானென்னயான்மொழியலுற்றேன்... *

(இ-ள். வாங்கு அரும்- நீக்குதல் அருமையாகிய—பாதம்நான்கும்-நான்குபாதங்களும்—வகுத்த - சுலோகங்களுக்கேற்படுத்திய—வான்மீகியென்பான்-வான்மீகியென்று சொல்லப்படுகிற முனிவர்—தீம்-மதுரமுள்ள—கவி-கவிகளாகிய அமுதத்தை—தேவரும்-தேவர்களும்—செவிகள்-காதுகளாகியவாய்களில்—ஆர-நிறைய—பருக உண்ணும்படி—செய்தான்- இயற்றினான்—ஆங்கவன்-அம்முனிவரால்—புகழ்ந்த-புகழப்பட்ட—நாட்டை- கோசலநாட்டை—மூங்கையான்-ஊமையானவன்—மொழியல்-சொல்லுதலை—உற்றான்என்ன-பொருந்தினான்போல—அன்பெனும்- ஆசையென்கிற—நறவம்-மதுவை—மாந்தி-உண்டு—யான்-நான்—மொழியல்-சொல்லுதலை—உற்றேன்-பொருந்தினேன்—எ-று. [யான்-எழுவாய். மொழியலுற்றேன் பயனிலை. நாடு-செயப்படுபொருள் ] (க)

தேவரும் என்னும் உம்மை உயர்வுசிறப்பும்மை முற்றுமுணர்ந்த தபோநிதியாகிய வான்மீகரால் புகழப்பட்ட நாட்டின்சிறப்பினைக்கற்றுணராச சிற்றறிவினேன்புகழ ஆசைகொள்வது ஊமன்பேச ஆசைகொள்வது போலுமாமென்பார். ஊமன் பேசலுற்றானென்றும், அம்முனிவராற் புகழப்பட்டதென்பது தெரிந்துஞ் சொல்லலுற்றது அறியாமையென்பார். அன்பெனுநறவமாந்தியென்றுங்கூறினார். தீங்கவியென்றதனால் அமுதமென்றும், பருகவென்றதனால் செவிவாயென்றும் சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன.

ஆங்கு அசைநிலை. யாங்கணுந்தல் விகுதிகுன்றிநின்றது.

நானிலத்துள்ளுஞ்சிறந்தது மருதநிலமாதலால் அதன்சிறப்பினை மூதறிகட் பதினான்குவிருத்தங்களாற்கூறுகின்றார்.

வரம்பெலாமுத்தந்தத்துமடையெலாம்பணிலமாநீர்க் ... ...*
குரம்பெலாஞ்செம்பொன்மேதிக்குழியெலாங்கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம்பவளஞ்சாலிப்பரப்பெலாமன்னம்பாங்கர்க்... *
கரம்பெலாஞ்செந்தேன்சந்தக்காவெலாங்களிவண்டீட்டம் ...*

(இ-ள்.) வரம்புஎலாம்- வரம்புகள்எங்கும்—முத்தம் - முத்துகளும் —தத்தும்-தடுத்திருக்கும்--மடையெலாம்-மடைகளெங்கும்—பணிலம்- சங்குகளும்—மா-மிகுந்த—நீர்- நீரினது— குரம்புஎலாம் - ஓரமெங்கும்—செம்பொன்-மாற்றுயர்ந்தபொன்னும்—மேதி - எருமைகள்படியும்—குழியெலாம்-பள்ளங்களெங்கும்—கழுநீர்க்கொள்ளை - செங்கழுநீர்மிகுதியும்— பரம்புஎலாம்-பரம்படித்தவிடமெங்கும்—பவளம்-பவளங்களும்—சாலி-நெற்பயிர்களையுடைய—பரப்புஎலாம்-வயல்களெங்கும்—அன்னம் - அன்னப்பட்சிகளும்--பாங்கர்-அவைகளினருகிலிருக்கும்—கரம்புஎலாம்-கரம்புநிலமெங்கும்--செந்தேன்-செவ்விதானநறவமும்—சந்தம்- அழகுள்ள—காஎலாம்-சோலைஎங்கும்—களி-களிப்புள்ள—வண்டு - வண்டுகளின்—ஈட்டம்- கூட்டமும் இருக்கின்றன—எ-று. (உ)

மேற்கூறப்பட்டமுத்துகள்முதல் வண்டீட்டம் இறுதியாகின்ற பொருள்களெலாந் தனித்தனி எழுவாய்-இருக்குமென்பது எச்சப்பயனிலை. எல்லாமென்னுஞ்சொல்லே பின்னுமபன் முறைவருதலாற் சொற்பின்வருநிலை.

ஆறுபாயரவமள்ளராலைபாயமலையாலைச் ... ... ... ...*
சாறுபாயோதைவேலைச்சங்குவாய்பொங்குமோதை ... ... *
ஏறுபாய்தமரநீரிலெருமைபாய்துழனியின்ன ... *
மாறுமாறாகித்தம்மின்மயங்குமாமருதவேலி ... ... *

(இ-ள். ஆறுபாய்-நதிகள்பாய்கின்ற—அரவம்-ஓசையும்—மள்ளர்-பள்ளர்கள்—ஆலைபாய்-ஆலையாடுகிற—அமலை-ஓசையும்—ஆலை - அவ்வாலையினின்றும்—சாறுபாய்- கருப்பஞ்சாறுபாய்கின்ற—ஓதை - சத்தமும்—வேலை-நீர்க்கரைகளில்—சங்கு-சங்குகளின்—வாய்-வாயினின்றும்—பொங்கும்-ஆர்ப்பரிக்கும்—ஓதை-சப்தமும்—ஏறு- எருதுகள்—பாய்- ஒன்றையொன்று முட்டுகிற—தமரம்- சப்தமும்—நீரின் - சலத்தினிடத்தில்—எருமைபாய்- எருமைகள்விழுகின்ற—துழனி - ஓசையுமாகிய—இன்ன- இவ்வோசைகள்—மாறுமாறாகி - ஒன்றுடனொன்றுமாறுபடுகின்றவைகளாய்—மருதவேலி-மருதநிலத்தில்—மயங்கும் - விளங்கிக்கொண்டிருக்கும்— எ - று. [ஓசைகள்-எழுவாய். மயங்கும்-பயனிலை. ஆம்-அசைமொழி ] (௩)

வேலைச்சங்கு என்பதற்குச் சமுத்திரத்திலுண்டாகுஞ் சங்கெனினுமமையும்.

தண்டலைமயில்களாடத்தாமரைவிளக்கந்தாங்கக் ... ... ... *
கொண்டல்கண்முழவினேங்கக்குவளைகண்விழித்துநோக்கத்...*

தெண்டிரையெழினிகாட்டத்தேம்பிழிமகரயாழின்... .... *
வண்டுகளினிதுபாடமருதம்வீற்றிருக்குமாதோ... ... ...*

(இ-ள்.) தண்டலை- சோலையினிடத்தில்—மயில்கள் ஆட - மயில்களானவை கூத்தாடவும்—தாமரை-செந்தாமரை—விளக்கந்தாங்க-மலர்களாகிய தீபங்களேந்தவும்—கொண்டல்கள்-மேகங்கள்—முழவின் - மத்தளங்களைப்போல—ஏங்க-ஒலிக்கவும்—குவளைகண் - நீலோற்பலமலர்களாகியகண்கள்—விழித்து- இமைகூட்டாமல்—நோக்க- பார்க்கவும்—தெண்திரை- தெளிவான அலைகளாகிய—எழினி-திரையை—காட்ட - வாவிகள்காட்டவும்—தேம்பிழி-மதுரமுள்ளதேனொழுக்காகிய—மகரயாழின்-மகரவீணையிற்சேர்ந்து—வண்டு- வண்டுகளானவை—இனிது-இனிமையாக— பாட- இசைபாடவும்—மருதம்-மருதநிலமானது—வீற்றிருக்கும்- ஒல்க்கமாயிருக்கும்—எ-று. [மருதம்-எழுவாய். வீற்றிருக்கும் - பயனிலை ] (௪)

சோலையாகிய அரங்கினிடத்துத்திரைகாட்டவும், தீபமேந்தவும், இசைபாடவும், முழவுகளொலிக்கவும், மயில்களாடுகின்றதை மருதநிலமாகிய அரசுபார்த்துக்கொண்டிருக்குமென்க

தாமரைப்படுவவண்டுந்தகைவருந்திருவுந்தண்டார்க்... .... ...*
காமுகர்ப்படுவமாதர்கண்களுங்காமனம்பு ... ... ... *
மாமுகிற்படுவவாரிப்பவளமும்வயங்குமுத்து ... ... ... *
நாமுதற்படுவமெய்யுநாமநூற்பொருளுமன்றே... ... ... *

(இ-ள்.) வண்டும்-வண்டுகளும்—தகைவரும்- அழகுபொருந்திய—திருவும்-இலக்குமியும்—தாமரை-தாமரைமலர்களில்—படுவ-படுவன— மாதர்-மடவார்களுடைய—கண்களும்-பார்வைகளும்—காமன்- மன்மதன் எவுகின்ற—அம்பும்-பாணங்களும்—தண்- குளிர்ச்சிபொருந்திய—தார்- பூமாலையணிந்திருக்கும்—காமுகர்ப்படுவ- காமுகர்களிடத்துப்படுவன—வாரி- சமுத்திரத்தினிடத்திலுண்டாகும்—பவளமும்- பவளங்களும்—வயங்கும்- விளங்குகின்ற—முத்தும்-முத்துகளும்—மா- பெருமையுள்ள—முகில்-மேகத்தினிடத்தில்—படுவ- படுவன—மெய்யும் - உண்மையும்—நாமம்- பிரசித்தமாகிய—நூற்பொருளும்-சாஸ்திரத்திற்சொல்லப்படுகிறபொருள்களும்—நாமுதல் -அந்நாட்டிலுள் இருப்பவர்கள் நாவினிடத்தில்—படுவ-படுவன-எ-று. மன்-ஓ-ஈற்றசை. [வண்டுகளும்- இலக்குமியும்- எழுவாய். படுவ-பயனிலை. கண்களும்- அம்பும்- எழுவாய். படுவ-பயனிலை. பவளமும் - முத்தும்- எழுவாய். படுவ- பயனிலை. மெய்யும்-பொருளும்- எழுவாய். படுவ - பயனிலை.] (ரு)

படும் என்னுஞ்சொல் ஈண்டுக்காட்டிய பொருள்களிடத்துள்ளவைகளேயன்றிமற்றஎல்லாப்பொருள்களினிடத்துமில்லையென ஒழித்துக்கூறினமையின்-இது ஒழித்துக்காட்டணி-படுவ என்னுஞ்சொற்களுக்கு-தங்குவன-உள்ளன-தோன்றுவன-இருப்பன எனப்பொருள்கொள்க.

நீரிடையுறங்குஞ்சங்கநிழலிடையுறங்குமேதி .. ... ... *
தாரிடையுறங்கும்வண்டுதாமரையுறங்குஞ்செய்யா ... ... *
போரிடையுறங்குமாமைதுறையிடையுறங்குமிப்பி ... ... *
போரிடையுறங்குமன்னம்பொழிலிடையுறங்குந்தோகை ... *

(இ-ள்.) சங்கம்-சங்குகள்—நீர் இடை-நீரினிடத்தில்—உறங்கும்-உறங்குவன—மேதி-எருமைகள்—நிழல் இடை-மரநிழலினிடத்து—உறங்கும்-உறங்குவன—வண்டு-வண்டுகளானவை—தார் இடை-பூமாலையினிடத்தில்—உறங்கும்-உறங்குவன—செய்யாள்-திருமகள்—தாமரை-தாமரைமலரினிடத்து—உறங்கும்-உறங்குவள்—ஆமை-ஆமைகள்—தூர் இடை-தாமரைவேர்களிடத்து—உறங்கும்-உறங்குவன—இப்பி-சிப்பிகள்—துறையிடை-நீர்த்துறையிடத்து—உறங்கும்-உறங்குவன—அன்னம்-அன்னப்பட்சி—போர் இடை-நெற்போர்களிடத்தில்—உறங்கும்-உறங்குவன—தோகை-மயில்களானவை—பொழில் இடை-சோலைகளிடத்தில்—உறங்கும்-உறங்குவன-எ-று. (சு)

இதுவும் ஒழிந்துக்காட்டணி-உறங்குமென்பதற்குத் தங்குமெனப்பொருள்கொள்க.

படையுழவெழுந்தபொன்னும்பணிலங்களுயிர்த்தமுத்தும் ... *
இடறியபரம்பிற்காந்துமிணமணித்தொகையுநெல்லும் ... ... *
மிடைபசுங்கதிருமீனுமென்றழைக்கரும்பும்வண்டும் ... ... *
கடைசியர்முகமும்போதுங்கண்மலர்ந்தொளிருமாதோ ... .. *

(இ-ள்.) படையுழ-கலப்பைகளுழுதலால்—எழுந்த-மேலெழுந்த—பொன்னும்-சுவர்ணமும்—பணிலங்கள்-சங்குகள்—உயிர்த்த-ஈன்ற—முத்தும்-நரளங்களும்—இடறியபரம்பில்-பரம்படித்தஇடங்களில்—காந்தும்-பிரகாசியாநின்ற—இனமணித்தொகையும்-இனமாகிய மணிக்கூட்டமும்—நெல்லுமிடை-நெற்கள்நெருங்கிய—பசுங்கதிரும்-பசியகதிர்களும்—மீனும்-மச்சங்களும்—மென்தழை-மெல்லியதழைகளுள்ள—கரும்பும்-கரும்புகளும்—வண்டும்-வண்டுகளும்—கடைசியர்-உழத்தியருடைய—முகமும்-வதனங்களும்—போதும்-மலர்களும்—கண்மலர்ந்தொளிரும்-கண்மலர்ந்தொளிரும்—எ-று. மாது-அசை-ஓ ஈற்றசை. பொன்முதல் போதுவரையிலுமாகிய ஒன்பதும்-எழுவாய்.மலர்ந்தொளிரும்-பயனிலை] (எ)

பொன்னும் முத்தும் மணித்தொகையும் கண்மலர்ந்தொளிருமென்றால் அவைதோன்றிய இடங்களிலேயே விளங்கிக்கொண்டிருக்குமென்றும், நெல்லும்-மீனும்-கரும்பும் கண்மலர்ந்தொளிருமென்றால். நெல்-போர்க்களத்திலும், மீன்-விலைக்களத்திலும், கரும்பு-ஆலைக்களத்திலும் விளங்குமென்றும், வண்டு-மாதர்கண்போலவிளங்குமென்றும். முகத்தினிடத்து கரவடம்விளங்குமென்றும்,போதினிடத்தில் தேன்விளங்குமென்றும்,மும்மூன்றாகப் பிரித்துப்பொருளுரைத்துக்கொள்க.

அந்நாட்டிலுள்ளார் தங்கள் செல்வ மிகுதியால் படையுழ எழுந்த பொன்முத்த-மணி இவைகளைவிரும்பி யெடுக்காமையினால் தோன்றினவிடத்தே மலருமென்றார். கோவையற்றுதிர்ந்தன கொள்ளுநீரரினமையின் என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளானுமுணர்க.

முதலிற்கூறிய முப்பொருளுக்கும் கண்இடம். இரண்டாவதுகூறிய முப்பொருளுக்கும் கள்-எனப்பதம்பிரிக்குக, களமென்பது- விகாரவகையால்- கள்-என நின்றது. மூன்றாவதுகூறியமுப்பொருளுக்கும்-கண்-விழி-கள்-கரவடம்-கள் - தேன்-எனப்பதம்பிரித்துச் சிலேடையாகக்கொள்க. கள்ளம்-என்பது-கள்-என விகாரமாயிற்று.

தெள்விளிசிறியாழ்ப்பாணர்தேம்பிழிநறவமாந்தி ... ... *
வள்விசிகருவிபம்பவயின்வயின்வழங்குபாடல் ... ... ... *
வெள்ளிவெண்மாடத்தும்பர்வெயில்விரிபசும்பொற்பள்ளி ... *
வள்ளருங்கருங்கட்டோகையின்றுயிலெழுப்புமன்றே ... ... *

(இ-ள்) தென்விளி-இசைபாடுதற்குரிய—சிறியாழ்ப்பாணர்-சிறியயாழ்ப் பாணர்கள்—தீம்-மதுரமுள்ள—மிழற்றவம்- மதுலை—மாற்றி-உண்டு—வள்வீசி- வாரீட்டிய—கருவி- மத்தளம்வாசையானது—பம்ப - யாழிசை யோசைக்கு ஒத்தொலிக்கும்படி—வயின்வயின்- இடந்தோறும்—வழக்கு- பாடு கின்ற—பாடல்-இசைப்பாட்டானது—வெள்ளி- வெள்ளியாலாகிய—வெண் மாடத்து- வெண்மைநிறமுள்ளமாடத்து—உம்பர்-மாளிகையின் மேலிடங்க ளிலிருக்கும்—வெயிலவிரி - ஒளியார்ந்த—பசும்பொன் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட—பள்ளி- மஞ்சத்திற் சயனித்துக்கொண்டிருக்கும்—எள்ளரு ம் - இகழவொண்ணாத—கருங்கண்தோகை - கருமணியுள்ள நேத்திரங்களை யுடையமாதர்களை—இன்துயில் - இனியநித்திரையினின்றும்—எழுப்பும் - எழுப்பிவிடும்-எ-று. அன்று-அசை. எ-ஈற்றசை. [பாடல்-எழுவாய். எழுப் பும் - பயனிலை. மாதர்களை - செயப்படுபொருள்.] (அ)

பாடலோசையினால் மாதர்கள் நித்திரைநீங்கி எழுந்திருக்கிறார்களென்பது கருத்து.

சிறிய என்பதின் ஈற்றிருக்கும்பெயரெச்சவீறு-குன்றி சிறியெனநின்றது. மிழற்றலம்ஒரு பொருட்பன்மொழி. கருங்கட்டோகை- உவமைத்தொகை யிடத்துப்பிறந்த அன்மொழித் தொகை. இமைவிரிக்குமிடத்துக்கருங்கண்ணையுடைய மயில்போன்ற சாயலையுடைய மாத ரென்றுதலகாண்க.

ஆலைவாய்க்கரும்பின்றேனுமரிதலைப்பாளைத்தேனுஞ் ... ...*
சோலைவாய்க்கனியின்றேனுந்தொடையிழியிறாலின்றேனும் ...*
மாலைவாயுகுத்ததேனும்வரம்பிகந்தோடிவங்க ... ... ... *
வேலைவாய்மடுப்பவுண்டுமீனெலாங்களிக்குமாதோ ... ... *

(இ-ள்,) ஆலைவாய்- ஆலைகளினின்றும் கூனைகளிற்பாய்கின்ற—கரும்பின் றேனும்- கருப்பஞ்சாறும்— அரிதலை - சிவுகின்றதலையையுடைய—பாளைத் தேனும்-பாளைகளிலிருந்துவிழுகின்றமதுவும்—சோலை - பொழில்களில்— வீழ்ந் வீழ்கின்ற—கனியின்-முப்பழங்களின்—தேனும்-ரசமும்—தொடை ஒழுங்காக—இழி-ஒழுகாநின்ற—இறாலின்தேனும்-இறால்களின்தேனும்— மாலைவாய்-பூமாலைகளினிடத்திருந்து—உகுத்த-சிந்திய—தேனும்-தேனும். —வரம்பஇகந்து-அளவுநீங்கி -ஓடி-சென்று—வங்கம்-கப்பல்கள்செலலும் படியான—வேலைவாய்-சமுத்திரத்தினிடத்து—மடுப்ப-பொருந்த—உண்டு அவைகளைஅருந்தி —மீனெலாம்- மீன்களெல்லாம்—களிக்கும்-களிப்படை யும்-எ-று மாது-அசை ஓ-ஈற்றசை. [மீன்-எழுவாய். களிக்கும்-பயனிலை]()

முப்பழம்-வாழை பலா-மா இறால்-தேன்கூடு-எனவறிக.

பண்கள்வாய்மிழற்றுமின்சொற்கடைசியர்பரந்துநீண்ட... ..*
கண்கைகான்முகம்வாயொக்குங்களைகளையலாற்களையிலாமை ... *
உண்கள்வார்கடைவாய்மள்ளர்களைகலாதலாவிநிற்பார் ... ...*
பெண்கள்பால்வைத்தநேயம்பிழைப்பரோசிறியோர்பெற்றால்*

(இ-ள்.) பண்கள்- இராகங்கள்போல—வாய்மிழற்றும் - வாயினால்வசனிக் கும்—இன்சொல்- இனியசொற்களையுடைய—கடைசியர்-உழத்திகளுடைய —பரந்துநீண்ட-அகன்றுநீண்ட—கண் - நேத்திரங்களையும்—கை- உள்ளங்

கைகளையும்—கால்- பாதங்களையும்—முகம்-முகங்களையும்—வாய்- வாய்களையும்—ஒக்கும் ஒப்பாகிய—களையலால்-களைகளையல்லாமல்—களையிலாமை-புல்முதலியகளைகளில்லாமையினால்—உண்-அருந்துகின்ற—கள்வார் - மது ஒழுகும்படியான—கடைவாய்- கடைவாயினையுடைய—மள்ளர்- பள்ளர்கள்—களைகலாது - களைகளைப்பறிக்காமல்—உலாவிநிற்பார்- உலாவிக்கொண்டிருக்கிறார்கள்—சிறியோர் - அறிவாற்சிறியோராயினமேயர்—பெற்றால்-பெரியபயனையடைவதாயிருந்தாலும்—பெண்கள்பால் -மாதர்களிடத்தில்—வைத்த நேயம் - தாங்கள் வைத்த ஆசையினின்றும்—பிழைப்பரோ - நீங்குவார்களோ—எ-று [மள்ளர்-எழுவாய். உலாவிநிற்பார்- பயனிலை.] (௰)

பிழைப்பரோ என்னும் ஒகாரம்-பிழையாரென்னும்பொருள்தந்துநிற்றலின் எதிர்மறைக்கண்வந்தது. சிறியோர் பெற்றால் எனப்பாடமோதி வேறொரு ஊதியம் பெற்றாலும் பிழையாரெனப்பொருளுரைப்பினுமமையும். கண்முதலியனபோன்ற களைகளென்றமையால்நீலோற்பலம்-செந்தாமரை-செவ்வல்லி-இவற்றின்மலர்களெனக்கொள்க. பெரியபயனை ஒருசொல்லுருவிற்றுணைக்கப்பட்டது.

புறப்புனல்குடையமாதர்பூவொடுநாவிபூத்த... ... ... *
கறுப்புறுவெறியேநாறுங்கருங்கடற்றரங்கமென்றால்... ... *
மறுப்பொறிமழலைச்செவ்வாய்வாட்கடைக்கலுணிமைந்தர் . *
விறுப்புறநோக்குமன்னார்மிகுதியைவிளம்பலாமோ .... ... *

(இ-ள்) புறம் புறமாகவந்த—புனல்- நீரினிடத்து—குடையம்- ஆடுகின்ற—மாதர்- மடவாருடைய—பூ- மலர்களும்—நாவி - கஸ்தூரியும்—பூத்த-பொருந்திய—கறுப்பு- அளகபாரத்தில—உறும் - பொருந்திய—வெறியே-வாசனையே—கருங்கடல்- கருமையாகியசமுத்திரநீர்—நாறும் என்றால்- மணமென்றால்—மறு-தேனிம்பால்—பொறி - மறுப்பொருந்திய—மழலை-மழலைச்சொல்லினையம்—செவ்வாய்- செய்யவாயினையுமுடையவர்களாய்—வாள்-வாளாயுதம்போன்ற—கடைக்கண்ணின்- கடைக்கண்களால்—மைந்தர்-ஆடவர்—விறுப்பு-நடுக்கத்தை—உற-பொருந்த—நோக்கும்- பார்க்கா நின்ற—அன்னார்- அந்தமடவார்களுடைய—மிகுதியை- கூட்டத்தை—மொழியலாமோ- அளவிட்டுச்சொலலுதல் கூடுமோ—எ-று. [சொல்லுதல்-எழுவாய் கூடுமோ-பயனிலை.] (௰௧)

பூ ஒடு - இதிலிருக்கும் ஒடுவென்னும் இடைச்சொல் எண்ணின்கண் வந்தது. புறம்-என்பதற்குச்சரியானபொருள் உண்டாதல் அய்ஙனமிருக்க எண்டுப்பொருந்தியவெனப்பொருள்கூறியது. தாற்பரியார்த்தம்-வெறியே இதிலிருக்கும் ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது.

மாதர்கள் ஸ்நானஞ்செய்யும் புனலானது அவர்கள் அளகபாரத்துண்டாயிருக்கும் வாசனையைக்கலந்து சமுத்திரத்தில் பாய்தலினால் அந்தச்சமுத்திரத்தினது புலால்நாற்றம் நீங்கிப்பரிமளித்துக்கொண்டிருக்குமாயின் மாதர்கூட்டமிவ்வளவென்று அளவிட்டுக்கூறுதல் அரிதென்பது இதன்கருத்து.

வெண்டளக்கலவைச்சேறுநீநந்துாவிளைமென்சாந்தும்... ...*
குண்டலக்கோலமைந்தர்குடைந்தநீர்க்கொள்ளைச்சாற்றிற் ...*
றண்டலைப்பரப்புஞ்சாலிவேலியுந்தழீஇயவைப்பும் ... ... *
உண்டவிட்டோடுமன்னுமதுவையொய்க்குமாதோ. ... .... *

(இ-ள்) தளம்-அழுத்தமாகிய—வெண்கலவைச்சேறும்- பச்சைக்கருப்பூரஞ்சேர்த்த சந்தனக்குழம்பும்—குங்குமம்விரை - குங்குமப்பூசேர்த்தவாசனையுள்ள—மென்-மென்மையாகிய—சாந்தும்-சந்தனக்குழம்பும்பூசிக்கொண்டிராநின்ற—குல்லடலம்- காதணிபூண்ட—மைந்தர்- ஆடவர்—குடைந்த-ஸ்நானஞ்செய்த—நீர்க்கொள்ளேச்சாற்றில் - மிகுந்த நீர்க்குழம்பினுல்—தண்டலைப்பரப்பும்- சோலையிடங்களிலும்—சாலிவேலியும் - நெற்பயிருள்ள நிலங்களிலும்—தழீஇயவைப்பும்- இவைசார்ந்தசாம்பு நிலங்களிலும்—வண்டல் இட்டுஓடும்-அந்நீர்வண்டலிட்டுக்கொண்டு ஓடும்படியான—மன்னும்-மண்ணினிடத்தும்—மதுகரம்- வண்டுகள்—மொய்க்கும்- மொய்த்துக்கொண்டிருக்கும்-எ-று. மா அ-அசை ஓ-ஈற்றசை. [மதுகரம்-எழுவாய். மொய்க்கும்-பயனிலை] (௰௭)

மைந்தர்குடைந்த கலவைச்சேறும் சாந்தும் கலந்த நீர்க்கொள்ளைச் சாற்றினால் எனப்பொருள்கூறினு மமையும்.

தழுவிய என்னுஞ்சொல் விகாரவகையால் தழீஇயவென நீண்டு அளபெடுத்தது.

மன்னும் இதனிற்றிவிருக்கும் உம்மை இழிவு சிறப்பும்மை. இதனால் ஆடவர் பூசிக்கொண்டிருந்த மெய்ப்பூச்சினது சிறப்புகூறப்பட்டது.

சேலுண்டவொண்கணாரிற்றிரிகின்றசெங்காலன்ன... ... *
மாலுண்டநளினப்பள்ளிவளர்த்தியமழலைப்பிள்ளை ... ... *
காலுண்டசேற்றுமேதிகன்றுள்ளிக்கனைப்பச்சோர்ந்த ... ... *
பாலுண்டுதுயிலப்பச்சைத்தேரைதாராட்டும்பண்ணை ... ... *

(இ-ள்) சேல்- சேல்மீன்போன்ற—உண்ட- மையுண்ட—ஒண் - விளக்கமாகிய—கணாரில்- கண்களையுடைய மாதர்கள்போல—திரிகின்ற-சஞ்சரிக்கும்—செங்கால- செய்மைநிறம்பொருந்திய கால்களையுடைய—அன்னம்-அன்னப்பட்சிகள்—மால்உண்ட-பெருமைபொருந்திய—நளினம் - தாமரைமலர்களாகிய—பள்ளி - மெத்தையில்—வளர்த்திய - வளர்த்திருக்கும்—மழலைப்பிள்ளை - இளம்பார்ப்புகள்—கால்உண்ட - காலினிடத்துப்பொருந்திய—சேற்றின் - சேற்றினையுடைய—மேதி- எருமைகள்—கன்று - கன்றுகளை—உள்ளி-நினைத்துக்கொண்டு—கனைப்ப - கனைக்க—சோர்ந்த- சொரிந்த—பால்-பாலினை—உண்டு- நீரிற்பிரித்துண்டு—துயில - நித்திரைசெய்யும்படி—பண்ணை- வயல்களினிடத்து—பச்சைத்தேரை - பச்சைத்தவளைகள்—தாராட்டும்- தாலாட்டும்-எ-று. [தேரை-எழுவாய். தாராட்டும்-பயனிலை.] (௰௮)

புதுநீர்ப்பெருக்கத்தால் தவளைகள் இரைச்சலிடுவது இயல்பாதலின் எருமைக்குமாங்கன்றுகளைக்கருதிக் கனைப்பதால் சோர்ந்தபாலின் பெருக்கம் நீர்ப்பெருக்கம்போல ஓடுதலால்களித்துத்தாராட்டுமென்றார்.

அன்னங்களுக்குக் கால்களும் மூக்கும் செம்மைநிறமுள்ளவை - உடல் வெண்மைநிறமுள்ளது- அன்றியுங் காலானது தோலடியாயிருப்பது - மாதர்போல திரியுமென்றது நடையொன்றனைப்பற்றியே-சேலு என்னுங்குற்றுகரவீறு தன்னொற்றிரட்டித்துச்சேற்று எனநின்றது. முலைநிலத்துக்குப் பசுவானது உரியதாயிருப்பதுபோல் மருதநிலத்துக்கு எருமையுரியது.

குயிலினம்வதுவைசெய்யக்கொம்பிடைக்குனிக்குமஞ்ஞை ...*
அயில்விழிமகளிராடுமரங்கினுக்கழகுசெய்யப் ... ... ... *

பயில்சிறையரசவன்னம்பன்மலர்ப்பள்ளிநின்றுந் ... ... ... *
துயிலெழத்தும்பிகாலைச்செவ்வழிமுரல்வசோலை ... ... *

(இ-ள்.) சோலை-சோலையினொருபுறத்தில்—குயில்இனம் - குயிற்கூட்டம் —கொம்புஇடை - மரக்கிளைகளினிடத்தில்—வதுவைசெய்ய - மணஞ்செய்யவும்—குனிக்கும்-தோகையைவிரித்துக்கொண்டாடுகின்ற—மஞ்ஞை-மயில்கள்—அயில்-வேல்போன்ற—விழி-கண்களையுடைய—மகளிர்-மாதர்கள்—ஆடும்-நடிக்கின்ற—அரங்கினுக்கு-நாடகசாலைக்கு—அழகுசெய்ய-அழகினையுண்டாக்கவும்—பயில்-நெருங்கிய—சிறை-சிறையினையுடைய—அரசஅன்னம்-அரசவன்னங்கள்—பன்மலர்-பலதாமரைமலர்களாகிய—பள்ளிநின்றும்-சேக்கையினின்றும்—துயில்எழ-நித்திரைநீங்கவும்—தும்பி-வண்டுகள்—காலைச்செவ்வழிமுரல்வ உதயராகத்தைப்பாடுவன-எ-று. [தும்பி - ஈமூவாய். முரல்வ-பயனிலை. காலைச்செவ்வழி- செயப்படுபொருள். காலை-காலைப்பொழுதில்-செவ்வழிமுரல்வ எனப்பொருள்கூறினுமமையும்.] (௰௪)

அரங்கினுக் கழகுசெய்தலாவது-மயிலாடுவதைநோக்கினபேர் மகளிர் நடிப்பதேஅழகாயிருக்கின்றதென்று சொல்லுவதற் கேதுவாயிருப்பது-மலர்ப்பள்ளிசோலையினிடத்துள்ள தடாகத்துமலரெனக்கொள்க.

பொருந்தியமகளிரோடுவதுவையிற்பொருந்துவாரும் ... ... *
பருந்தொடுநிழல்சென்றன்னவியலிசைப்பயன்றுய்ப்பாரும் ... *
மருந்தினுமினியகேள்விசெவியுறமாந்துவாரும் ... ... ... *
விருந்தினர்முகங்கண்டன்னவிழாவணிவிரும்புவாரும் ... ... *

(இ-ள்.) பொருந்தியமகளிரோடு- வதுவையில்-விவாகச்சடங்கில்—பொருந்துவாரும்-பொருந்தியிருப்பவர்களும்—பருந்தொடுநிழல்- பருந்தும் அதனிழலும்—சென்றுஅன்ன - செல்வதுபோன்ற—இயல - கிரமத்தையுடைய—இசைப்பயன்-இராகமாகியபயனை—துய்ப்பாரும்-உண்பவர்களும் —மருந்தினும்-அமுதத்தைப்பார்க்கிலும்—இனிய- இனிமையுள்ளவைகளாகிய—கேள்வி-நூற்கேள்விகளை—செவியுற - காதாகியவாயிலிடத்துப்பொருந்த—மாந்துவாரும்- உண்பவர்களும்—விருந்தினர்-புதியவர்களுடைய—முகங்கண்டு-வதனங்களைநோக்கி—அன்னப்-சோறுக்குதலாகிய—விழா அணி -விழாச்சிறப்பினை— விரும்புவாரும்- இச்சிக்கின்றவர்களும்-எ-று. குளகம்.

சென்ற அன்ன என்பது விகாரவகையால் சென்று என நின்றது. சிந்தாமணியில்பருந்தும் அதனிழலும் பாட்டும் என்னுஞ்செய்யுளுக்கு நச்சினார்க்கினியார் பருந்து பறக்கின்றவிடத்து முறையே உயர்ந்து தன்னிலத்தின்கணின்றுய்ந்து பின்னு மம்முறையே மேன்மேலுயர்கின்றுற்போலப் பாடவேண்டுதலினதுவமையாயிற்று என்றனர்.

கறுப்புறுமனமுங்கண்ணிற்சிவப்புறக்கூட்டுங்காட்டி ... ... *
உறுப்புறுபடையிற்றுக்கியுறுபகையின்றிச்சீறி ... ... *
வெறுப்பிலகளிப்பின்வெம்போர்மதுகையவீரவாழ்க்கை. ...*
மறுப்படவாவிபேறுவாரணம்பொருத்துவாரும் ... ... *

(இ-ள்.) கறுப்புறு-வயிரம்பொருந்திய—மனமும்- மனத்தினையும்—கண்ணில்-கண்களைப்போல—சிவப்பு-செம்மைநிறமானது—உற- பொருந்திய

—கூட்டும் - கூட்டிணையும்—காட்டி - தெரிவித்து—உறுப்பு - அவயவமாகி யகாலினிடத்து—உறு - பொருந்திய—படையின் - சிறகத்தியிறால்—தாக்கி-ஒன்றினையொன்றுமோதி—உறு - மூன்பொருந்திய—பகையின்றி-பகையில்லாமல்—சீறி-கோபித்து--வெறுப்புஇல்- பொருதற்கண்ணெக்காலத்தும்வெறுப்பிலவாகி—களிப்பின் - செருக்கினால்—வெம் - வெவ்விதாகிய—போர்-போர்செய்தற்கண்—வெற்றி - வெற்றியையுடையனவாய்—வீரவாழ்க்கை-வீரவாழ்க்கைக்கு—மறுப்பட- ஒருகுற்றம்பொருந்துமானால்—ஆவிபேணு-உயிரைவிரும்பாத--வாரணம்-சேவற்கோழிகளை—பொருத்துவாரும்- போர்செய்யவிடுகின்றவர்களும்-எ-று (௰௬)

எருமைநாகின்றசெங்கணேற்றையோடேற்றைசீற்றத் ... *
துருமிவையென்னத்தாக்கிமுறைநெருக்கியொன்றாய் ... ...*
விரியிருளிரண்டுகூறாய்வெகுண்டனவனைய நோக்கி... ... ...*
அரியினங்குஞ்சியார்ப்பமஞ்சுறவார்க்கின்றாரும்... ... ...*

(இ-ள்.) எருமை-நாகு—ஈன்ற-முதலீற்றெருமைகள்பெற்ற—செங்கண்-செம்மைநிறமுள்ள கண்களையுடைய—ஏற்றொடேறு - கடாக்கள் ஒன்றொடொன்று—உருமு இவைஎன்ன-இரண்டிடிகள் என்றுசொல்லும்படி—தாக்கி-முட்டி—உறழ்உற-முறைமையாகப் பொருந்த—நெருக்கி - தலைகளைநெருக்கி—ஒன்றாய்- எங்கும் ஒன்றாய்—விரியிருள் - பரந்தஇருள்—இரண்டுகூறாய்-இரண்டுவடிவாகி—வெகுண்டு அன - கோபித்தலைப்பொருந்த—அனைய-அத்தன்மையானசண்டைகளை—நோக்கி-பார்த்து—அரியினம்-வண்டினங்கள்—குஞ்சியார்ப்ப - தங்கள் கொண்டையாலயில் ஒலிக்கும்படி—மஞ்சுஉற-மேகமண்டலவரைக்கும்பொருந்தும்படி—ஆர்க்கின்றாரும்-முழங்குகின்றாரும்-எ-று (௰௭)

வன்மையும் வீரமுமுள்ளவாகலின் எருமை நாகீன்றசெங்கண் ஏறென்றார்- ஏறு என்னுஞ்சொல் ஐகாரச்சாரியைபெற்று.ஒற்றையெனநின்றது. மஞ்சுஉற-என்பதற்கு மேகத்தின் முழக்கத்தோடு பொருந்துவெனினுமமையும்.

முள்ளரைமுளரிவெள்ளிமுளையிறமுத்தும்பொன்னும்... ...*
தள்ளுறமணிகள்சிந்தச்சலஞ்சலம்புலம்பச்சாலிற்.... ......*
றுள்ளிமீன்றுடிப்பவாமைதலைபுடைசுரிப்பத்தூம்பி... ...... *
னுள்வராலொளிப்பமள்ளருழுபகடுரப்புவாரும்... ... ... ...*

(இ-ள்.) முள்அரை-முட்கள்பொருந்திய கொடிகளையுடைய—முளரி-தாமரைகளின்—வெள்ளி-வெண்மைநிறமுள்ள—முளை இற-முளைகளொடியவும்—முத்தும்பொன்னும்-இவ்விரண்டும்—தள்உற - தள்ளுதலைப்பொருந்தவும்—மணிகள்-மற்றைமணிகள்—சிந்த- எறிபடவும்—சலஞ்சலம்-சலஞ்சலமென்னும்சங்குகள்—புலம்ப - அலறவும்—சாலில் - படைச்சால்களில்—துள்ளிமீன் துடிப்ப- மீன்களானவை துள்ளித்துடிக்கவும்--ஆமை-ஆமைகள்--தலைபுடைசுரிப்ப-தலையையுள்ளேசுரித்துக்கொள்ளவும்—தூம்பில்உள்- மதகுகளுக்குள்—வரால்-வரால்மீன்கள்—ஒளிப்ப - ஒளித்துக்கொள்ளவும்—மள்ளர்-பள்ளர்கள்—உழு-உழுகின்ற—பகடு-கடாக்களை—உரப்புவாரும்- அதட்டுகின்றவர்களும் (ஆயினர்) -எ-று. (௰௮)

கொழுமுகத்தினால் முளையிறுமெனவும் முத்தும்பொன்னுந்தள்ளுறுமெனவும் மணிகள் சிந்துமெனவும் கொண்டு-மற்றவற்றின் செய்கையெல்லாம் அச்சத்தினாலெனவுங் கொள்க. சலஞ்சலம்-வலம்புரிச்சங்கினுஞ்சிறந்தது.

முந்துமுக்கனியினானா முதிரையின் முழுத்த நெய்யிற் ... ... *
செந்தயிர்க்கண்டங் கண்டமிடையிடை செறிந்த சோற்றிற் ... *
றந்தமில்லிருந்து தாமும் விருந்தொடுந் தமரினோடும் ... ... ... *
அந்தணர முதவுண்டி யயில்வுறு மமலைத் தெங்கும் ... ... ... *

(இ-ள்.) முந்து-முதன்மையாகிய—முக்கனியின்- மூன்றுவகைப்பழங்களினாலும்—நானா-பலவிதமான—முதிரையின்-காய்த்தானியங்களினாலும்—முழுத்த (பருப்பை)-முழுக்கவிடுகின்ற—நெய்யில்-நெய்யினாலும்—செந்தயிர்க்கண்டம்-செந்தயிர்க்கட்டியினாலும்—கண்டம்-வெல்லக்கட்டியினாலும்—இடை இடை-இடந்தோறும்—செறிந்த-பொருந்தப்பட்ட—சோற்றின்-அன்னத்தினை—தந்தம்-தங்கள் தங்களுடைய—இல்-வீட்டில்—இருந்து-இருந்துகொண்டு—விருந்தொடும்-புதியவர்களுடனும்—தமரினோடும்-சுற்றத்தாருடனும்—தாமும்-தாங்களும்—அந்தணர்-பிராமணர்கள்—அமரர்-தேவர்களுடைய—உண்டி-உணவாகிய அமிர்தம்போலினிமைத்தாக—அயில்வு-உண்ணுகை—உறும்-பொருந்திய—அமலைத்து-ஓசையையுடையது—எங்கும்-எவ்விடமும்-எ-று. [எவ்விடமும்-எழுவாய். உடையது - பயனிலை. ஓசையை- செயப்படுபொருள்.] (௰௯)

முறையறிந்தவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகு ... *
மிறையறிந் துயிர்க்கு நல்கு மிசைகெழு வேந்தன் காக்கப் ... ... *
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப் பூதலந் தன்னிற் பொன்னி *
னிறைபரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்று நெய்தல் ... ... *

(இ-ள்.) முறை-மனுநீதியினை—அறிந்து- உணர்ந்து—அவாவை - ஆசையை—நீக்கி - தவிர்ந்து—முனிவுழி - கோபிக்குமிடத்தில்—முனிந்து-கோபித்து—வெஃகும்-விரும்பத்தக்க—இறை-வரியை—அறிந்து - இவ்வளவென்று அறிந்து—உயிர்க்கு- உயிர்களுக்கு—நல்கும்- கொடுக்கும்படியான—இசை-புகழ்—கெழு-பொருந்திய—வேந்தன்- அரசன்—காக்க-காக்கப்படுவதினால்—பொறை-(பாபமாகிய) பாரத்தை—தவிர்ந்து உயிர்க்கும்- நீங்கியிளைப்பாறுகின்ற—தெய்வம்- தெய்வத்தன்மையுடைய—பூதலந்தன்னில் - பூமியைப்போல்—வங்கம்- கப்பல்கள்—பொன்னின்-பொன்னினால்—நிறை-நிறையப்பட்ட—பரம் - பாரத்தை—நெய்தல்- நெய்தனிலத்தில்—சொரிந்து-சொரிந்துவிட்டு—நெடுமுதுகு-நெடுமையான முதுகினை—ஆற்றும்-ஆற்றிக்கொள்ளும்-எ-று. [வங்கம்-எழுவாய். ஆற்றும்-பயனிலை. முதுகு-செயப்படுபொருள்.] (௨௰)

தசரதனாற் காக்கப்படுகிற நாட்டில் எனப் பொருள்கூறுவாருமுளர்; ஈண்டையிலொன்று குடிகளை.

எறிதருமரியின்சும்மையெடுத்துவானிட்டபோரிற் ... ... *
குறிகளும்போற்றிக்கொள்வார்கொன்றநெற்குலைகள்செய்வார்.
வறியவர்க்குதவிமிக்கவிருந்துணமனையினுய்ப்பா ... ... *
னெறிகளும்புதையப்பண்டிநிரைத்துமண்ணெளியவூர்வார்... *

(இ-ள்.) எறிதரும்-அரியப்பட்ட—அரியின்சும்மை-நெல்அரிகளாலாகிய சுமைகளை—எடுத்து - எடுத்துக்கொண்டுபோய்—வான்இட்ட- ஆகாயத்தை அளாவும்படிஇட்ட—போரில்- போர்களில்—குறிகளும்- அடையாளங்களும்—போற்றிக்கொள்வார்- வைத்துக்கொள்வார்கள்—கொன்ற-(அப்போர்களைச்சரித்துக் கடாக்களால்) மிதிப்பித்த—நெல் - நெற்களை—குலைகள்செய்வார்-அம்பாரஞ்செய்வார்கள்—வறியவர்க்கு உதவி-(அந்நெற்களை)ஏழைகளுக்குக்கொடுக்குங் கிரமப்படிகொடுத்து—மிக்க - மிகுந்தநெற்களை—விருந்து- விருந்தினர்முதலாயினோர்—உண-உண்பதற்காக—மனையின்- தங்கள்வீடுகளில—உய்ப்பான்-சேர்க்க—நெறிகளும்-மார்க்கங்களும்—புதைய-புதையும்படி—பண்டி - பண்டிகளில்—நிரைத்து - நிரப்பி—மண் - பூமியானது—நெளிய - முதுகுநெளியும்படி—ஊர்வார் - செலுத்துவார்கள்-எ-று [அந்நாட்டிலுள்ளோர்-தோன்றா எழுவாய். உய்ப்பான்-பயனிலை. பண்டி-செயப்படுபொருள்.] (௨௧)

கொன்ற-இசையெச்சம்- சுற்றத்தார்- பிறரல்லாமையின் விருந்து சிறப்புடைத்தென்பார் விருந்துண என்றார்,

தென்புலத்தார்முதலியனவைந்தனுண் முன்னையவிரண்டுங்கட்புலனாகாதாரைநினைந்து செய்வனவாகலானும் பின்னையவிரண்டும் பிறர்க்கீதலன்மையானும் இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தா யில்லறங்கட்கு முதலாயிற்று என்னும் பரிமேலழகருரையானுமுணர்க. விருந்தினராவார்-ஞானவொழுக்கங்களா லுயர்ந்தோரென அறிக.

கதிர்படுவயலினுள்ளகடிகமழ்பொழிலினுள்ள... ... ... *
முதிர்பலமரத்தினுள்ளமுதிரைகள்புறவினுள்ள ... ... *
பதிபடுகொடியினுள்ளபடிவளர்குழியினுள்ள... ... ... *
மதுவனமலரிற்கொள்ளும்வண்டெனமள்ளர்கொள்வார்... ...*

(இ-ள்.) கதிர்படு-கதிர்களையுடைய (நெற்பயிருள்ள)—வயலின் - கழனிகளிடத்து—உள்ள- உள்ளபொருள்களையும்—கடி- வாசனையானது—கமழ்-பரிமளிக்காநின்ற—பொழிலின்- சோலைகளினிடத்தில்—உள்ள-உள்ளனவாகிய—முதிர்-முதிர்ந்த--பல-பலவாகிய—மரத்தின் -விருட்சங்களினிடத்து—உள்ள- உள்ளபொருள்களையும்—முதிரைகள் - காய்த்தானியங்களையும்—புறவின்-முல்லைநிலத்தில்—உள்ள-உள்ளபொருள்களாகிய—பதிபடு- பதிகள்பதிக்கப்பட்ட— கொடியின்-கொடிகளினிடத்து--உள்ள-உள்ளபொருள்களையும்—படிவளர்- பூமியிற்பொருந்திய—குழியின்-குழிகளிடத்து—உள்ள-உள்ளனவாகியபொருள்களையும்—வனம்-வனங்களிலுள்ள—மலரில் -மலர்களினிடத்து—மது கொள்ளும்-தேனைக்கொள்ளுகிற—வண்டென-வண்டுகள்போல—மள்ளர்- உழவர்கள்—கொள்வார்-காலமறிந்துபெற்றுக்கொள்வார்கள்-எ-று-[உழவர்-எழுவாய். கொள்வார்-பயனிலை. பொருள்கள்-செயப்படுபொருள்.] (௨௨)

கதிர் சினையாகுபெயர் வண்டுகள் மலர்களில்தேனை அந்தந்தக்காலங்களிற் கொள்வது போல மேற்கூறியபொருள்களை மன்னர்கள் கொள்வார்களெனக்கூறுக. கழனிப்பொருள்நெற்கள் மரப்பொருள் கனிவகை குழிப்பொருள் பூசனிமுதலியவை. பிஞ்சின்மேல் பூ [illegible]யிருக்குங் காரணத்தினுல் பூசனியெனப் பெயர்பெற்றது-கனிக்குதல்-உண்டாகுதல்.

[வேறு.]

பருவமங்கையர்பங்கயவாண்முகத் ... ... ...*
துருவவுண்கணையொண்பெடையாமெனக்... ... *
கருதியன்பொடுகாமுற்றுவைகனு ... ... ... *
மருதவேலியின்வைகினவண்டரோ... ... ... *

(இ-ள்.) பருவம்-மங்கைப்பருவமுள்ள—மங்கையர்-மாதர்களுடைய—பங்கயம்- தாமரைமலர்போன்ற—வாள்- ஒளியுள்ள—முகத்து - முகத்தினிடத்திலிருக்கும்—உருவம்-நிறமுள்ள—உண்-மைபொருந்திய—கணை- நேத்திரங்களை—ஒண்-அழகுபொருந்திய—பெடையாமென- பெண்வண்டாமென்று—கருதி-நினைத்து—அன்பொடு-அன்புடன்—காமுற்று-காமங்கொண்டு—வைகலும்-நாள்தோறும்—வண்டு-ஆண்வண்டுகள்—மருதவேலியின்-மருதநிலத்தினிடத்தில்—வைகின- வாசமாயிருந்தன-எ-று. அரோ-அசைநிலை. [வண்டு-எழுவாய். வைகின-பயனிலை] (உ௬)

பருவங்களேழினும் மங்கைப்பருவஞ் சிறந்ததாதலின் அஃது எடுத்துக் கூறப்பட்டது- கண்ணை-யெனற்பாலது-கணையெனநின்றது. காமம் என்பது - விகாரவகையால் காம் எனநின்றது.

வேளைவென்றமுகத்தியர்வெம்முலை ... ... *
ஆளைநின்றமுனிந்திடுங்கொர்பால் ... ... *
பாளைதந்தமதுப்பருகிட்பரு... ... ... ...*
வாளைநின்றமதர்க்குமருங்கெலாம்... ... ...*

(இ-ள்) வேளை- மன்மதனை—வென்ற-செயித்த—முகத்தியர் முகமுள்ள மாதர்களுடைய—வெம்முலை - விரும்பப்படும்தனங்கள்—ஆளை - ஆடவர்களை—நின்று-ஒழியாமல்—முனிந்திடும்- கோபிக்கும்—அங்கொர்பால்-அங்கொருபக்கத்தில—பாளைதந்த- தென்னம்பாளைகள்சொரிந்த—மது-கள்ளை—பருகி-உண்டு—பருவாளை-பெரியவாளைமீன்கள்—மருங்குஎலாம்-ஒருபுறமெங்கும்—மதர்க்கும்-களிப்புற்றிருக்கும்-எ-று [முலை-எழுவாய். முனிந்திடும்-பயனிலை. ஆளை-செயப்படுபொருள். வாளை-எழுவாய். மதர்க்கும்-பயனிலை

மங்கையர் தங்கள் பார்வையினால் மன்மதனை மோகங்கொள்ளச் செய்கின்றவர்களென்பதுதோன்ற வேளைவென்ற முகத்தியரென்றார்,

சண்டுமுலைமுனிதல் மோகத்தையுண்டாக்குதல்- காமுகர் ஐயுணர்வுடையவர்களே யன்றிப் பகுத்துணர்வில்லாதவர்களாதலால் ஆளையென இழிவுபடக்கூறினர்- இச்செய்யுள்கைக்கிளைப்பொருள்படக்கிடந்தது.

நாதீர்படிந்திந்நிலத்தேசில... ... ... ... *
கார்களென்னவருங்கருமேதிகள்... ... ... *
ஊறினின்றகன்றுள்ளிடவுண்முலை .. ... ... *
தாரைகொள்ளத்தழைப்பனசாலியே ... ...*

(இ-ள்) ஈரம்-குளிர்ச்சிபொருந்திய—நீர்-சலத்தில்—படிந்து-விழுந்திருந்து—இந்நிலத்து- இத்தவிடத்தில்—சிலகார்களென்ன - சிலமேகங்கள்வருதல்போல—வரும்-வருகின்ற—கருமேதிகள்-கருமைநிறமுள்ள எருமைகள் ஊரில்-ஊரினிடத்து—நின்ற-இருக்கின்ற—கன்று - கன்றுகளை—உள்ளிட-நினைப்பதினால்—உண்-அவைகளுண்ணத்தக்கமுலைகள்—தாரைகொள்ள-பால்தாரைபொழிதலைப்பொருந்த (அந்தத்தாரைகளால்)—சாலி-சம்பாப்பயிர்கள்—தழைப்பன - தழையாநின்றன-எ-று. ஏ-ஈற்றசை. [சாலி - எழுவாய். தழைப்பன-பயனிலை ] (௨௫)

உள்ளிடவென்னும் செயவெனெச்சம் கொள்ளவென்னும் செய்வெனச்சத்திற்கேதுவாகவும் இவ்வெச்சம் தழைப்பனவெனும் முற்றிற்கு ஏதுவாகவும் நின்றமைகாண்க-உள்ளிட என்பதனை யொருமொழியாகக்கொள்க-நின்ற என்பதுகாலமயக்கு-தாரை மீட்டும் வருவித்துச்சொல்லப்பட்டது.

முட்டிலட்டின்முழங்குறவாக்கிய... ... ... *
நெட்டுலைக்கழுநீர்நெடுநீத்தந்தான்... ... ... *
பட்டமென்கமுகோங்குபடப்பைபோய்... ...*
நட்டசெந்நெலினாறுவளர்க்குமே ... ... *

(இ-ள்) முட்டுஇல்-குறைவுஇல்லாத—அட்டில்-சமையல்வீட்டில்—முழங்கு-ஒலித்தல் --உற-பொருந்த—ஆக்கிய-உண்டாக்கிய—நெட்டுஉலை-நெடியஉலைப்பாண்டங்களை—கழு- கழுவப்படுகிற—நீர்நெடுநீத்தம்-நீராகியநெடியவெள்ளமானது—பட்ட - உண்டாகிய—மென்- மிருதுவாகிய—கமுகு-கமுகமரங்கள் — ஓங்கு - உயர்ந்திருக்கும்—படப்பை -சோலைகளில்—போய்-சென்று—நட்ட-நட்டிராநின்ற—செந்நெலின் - சம்பாப்பயிர்களின்—நாறு-நாறுகளை—வளர்க்கும்-வளரச்செய்யும்-எ-று. ஏ-ஈற்றசை. [நீத்தம்-எழுவாய். வளர்க்கும்பயனிலை. நாறு-செயப்படுபொருள் ] (௨௬)

அடு-இல், என்னும்பதம் அட்டில் என நின்றது. நெட்டுலை-எ-து-நெடுமை-உலை எனப்பசம்பிரிக்கப்படும். உலை-ஆகுபெயர் உலைப்பாண்டங்களைக்கழுவு நீரானது வளர்க்குமென்க. முழங்குதல் எனற்பாலது முழங்கு என முதனிலைமாத்திரையாய்நின்றது. தான் இடைச்சொல் இது அன்னச்சாலையின் மிகுதிகூறியது,

சூட்டுடைத்துணைத்தூநிறவாரணந்... ... .. *
தாட்டுணைக்குடையுந்தகைசால்மணி... ... ... *
மேட்டிமைப்பனமின்மினியாமெனக்... ... ... *
கூட்டினுய்க்குங்குருவிக்குழாமரோ... ... ... *

(இ-ள்.) சூட்டுஉடை-சூட்டினையுடைய—துணை-பெட்டையுடன்கூடிய—தூநிறம்-பரிசுத்தமானநிறத்தையுடைய—வாரணம்- சேவற்கோழிகளின்—தாள்துணை-இரண்டுகால்களினாலும்—குடையும் - சீய்க்கப்படுகிற—தகைசால்-பெருமைமிகுந்த—மணி-மாணிக்கங்கள்—மேடு - மேட்டினிடத்தில்—இமைப்பன-பிரகாசிப்பன—(அம்மணிகளை) மின்மினியாமென- மின்மினிப்பூச்சியாகுமென்றுகருதி—குருவிக்குழாம்- தூக்கணங்குருவிக்கூட்டங்கள்—கூட்டின்- கூட்டினிடத்தில்—உய்க்கும்- கொண்டுபோய்வைத்துக்கொள்

ரும்-எ-று. அரோ-ஈற்றசை. [குருவிக்குழாம்-எழுவாய். உய்க்கும்-பயனிலை. யணி- செயப்படுபொருள்] (உஎ)

உடைய என்றபாலது உடையெனப் பெயரெச்ச அகரவீறு குறைந்துநின்றது. தூநிறம்-வெள்ளைநிறம். மணிநீட்டும் வருவிக்கப்பட்டது.

கோயும்வெண்டயிர்மத்தொலிதுள்ளவும்... ... *
ஆயவெள்வளைவாய்விட்டரற்றவுந்... ... ... ... *
தேயநுண்ணிடைசென்றுவணங்கவும்.. ... ... *
ஆயமங்கையரங்கைவருந்துவார்... ... ... ... *

(இ-ள்.) தோயும்-தோய்ந்த—வெண்-வெண்மைநிறமுள்ள—தயிர்- தயிரினைக்கடையப்படுகிற—மத்து- மத்துகளின்—ஒலி- ஓசையானது—துள்ளவும்-ஒலிக்கவும்—ஆய-அழகுள்ளவையாகிய—வெள் - வெண்மைநிறமுள்ள—வளை-சங்குவளையல்கள்—வாய்விட்டு அரற்றவும்- வாய்திறந்து ஒலிக்கவும்—தேயும்-மெலிந்த—நுண்- நுண்ணிய—இடை- தங்களிடையானது—சென்றுவணங்கவும்-ஒசிந்துவளையவும்—ஆயமங்கையர்-இடையர்மாதர்கள்—அங்கைவருந்துவார்-அழகியகைகள்வருந்துவார்கள்-எ-று. [மங்கையர்-எழுவாய். வருந்துவார்-பயனிலை] (உஅ)

தோயும்வெண்டயிர் மத்தொடுதுள்ளவும் எனப்பாடங்கூறி- தயிர் -மத்தொடு துள்ளவுமெனப்பொருள்கூறுவாருமுளர். வாய்திறந்து என்பதனைக் கேட்குநபோலவும் என்னுஞ்சூத்திரவிதியாலகொள்க. இருபுறமும் ஒசிதலினால் இடைசென்று வணங்கவும் என்றார். அங்கை- உள்ளங்கையெனினு மமையும். இது முல்லைநிலவண்மையைக்குறித்தது.

குற்றபாகுகொழிப்பவர்கோனெறி... ... ... *
கற்றிலாதகருங்கணுளைச்சியர்... ... ... ... *
முற்றிலாமுகந்துதம்முன்றிலிற்... ... ... *
சிற்றில்கோலிச்சிதறியமுத்தமே... ... ... *

(இ-ள்.) குற்ற-பறித்த—பாகு-பாக்குகளை—கொழிப்பவர்-கொழிப்பவர்களால் கொழிக்கப்படுகின்றவை—கோள்- குற்றமாகிய—நெறி -முறைமையை—கற்றுஇலாத- அறிந்திலாத—கருங்கண் - கருமைநிறமுள்ளகண்களையுடைய—நுளைச்சியர்- நெய்தனிலப்பெண்கள்—முற்றில் -முச்சிலில்—ஆரநிறைய—முகந்து - வாரி—தம்முன்றிலில்- தங்கள்முற்றத்தில்—சிற்றில்கோலி-சிறுவீடுகட்டி—சிதறிய-சிதறிவிடப்பட்ட—முத்தம் - முத்துகளேயாம்-எ-று ஏ-ஈற்றசை [முத்தம்-எழுவாய். கொழிக்கப்படுவன-பயனிலை.] (உக)

கொழிக்கப்படுவன என்னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. இல்-முன்- என்பது வீதியின்றி முன்றிலெனநின்றது.

சிறுமையில்-மை விகுதிகெட்டுத் தன்னொற்றிரட்டித்துநின்றது. குற்றபாகுக் கொழிப்பவரெனப் பாடமோதி பாக்குக்கு ஒழிப்பவரெனப் பதம்பிரித்துப் பாக்குக்காகமாறுகின்றவர்கள் முத்துகளை மாறுகின்றார்களெனக் கூறுவாருமுளர். முத்து அம்சாரியையைபெற்றுநின்றது. இது மருதமும் நெய்தலும் அணித்தென்பது கூறப்பட்டது.

துருவைமென்பிணையீன்றதுளக்கிலா... ... ... *
வரிமருப்பினவன்றலையேற்றைவான்... ... ... *

உருமிடித்தெனத் தாக்குறு மொல்லொலி ... ... *
வெருவிமால்வரைச் சூன்மழை மின்னுமே ... ... *

(இ-ள்) திருவை - செம்மறியென்னு மொருசாதியாடுகளின் — மென்பிணை - மெல்லிய பெண்ணாடுகள் — ஈன்ற - பெற்ற — துளக்கு - அசைவு — இலா - இல்லாத — வரி - வரிகள் பொருந்திய — மருப்பின - கொம்புகளையுடையனவாகிய — வன் - வலிய — தலை - தலைகளுள்ள — ஏறு - ஆட்டுக்கடாக்கள் — வான் - மேகத்தின் — உருமு - இடியானது — இடித்தென - இடித்ததுபோல — தாக்குறும் - ஒன்றையொன்று இடித்தலால் உண்டாகும் — ஒல்லொலி - ஒல்லென்கிற ஓசைக்கு — வெருவி - பயந்து — மால் - பெரிய — வரை - மலையினிடத்துப் படிந்திருக்கின்ற — சூல் - கருப்பங்கொண்ட — மழை - மேகங்கள் — மின்னும் - மின்னலைச் செய்யாநிற்கும் - எ-று. எ-ஈற்றசை [மழை - எழுவாய். மின்னும் - பயனிலை]

துளக்கம் என்பது அம்மீறுகெட்டுத் துளக்கென்றும் இலாத என்பது பெயரெச்சவீறு திரிந்தும் நின்றன, வன்மை என்னும் பண்புச்சொல் மை விகுதிகுன்றி வன் எனநின்றது. ஏறு என்னுமொழி ஐகாரச்சாரியைபெற்று ஏற்றையென நின்றது.

இடித்தது என்றபாலது இடித்து என விகாரமாயிற்று. தாக்குறும் என்றதனை தாக்குதலால் உறும் பொருந்தும் எனப் பதம்பிரித்துரைத்துக்கொள்க. தாக்கு முதனிலைத்தொழிற்பெயராய்நின்றது. ஒல் என்பது ஓசைக்குறி - ஒலி - வெருவி - என்பதனை ஒலியால் வெருவ்வென்க்கூறினுமமையும்.

நீருண்டுவருமேகம் சூல் முதிருகிறவரையில் மலையின்மேற்படிந்திருந்து முதிர்ந்தபின் வானிலேறிமழைபெய்தலைநோக்கி மால்வரைச்சூன் மழையென்றார். ஒலியினால்மழை வெருவுமென்றதனால் அவ்வொலியினது மிகுதிகூறியதாயிற்று. இது மருதமுங் குறிஞ்சியும் அணிதலெனக் கூறியதுமன்றி அவ்விருநிலத்தின் வண்மையுங் குறிப்பாற்கூறியது.

தினைச்சிலம்புவ தீஞ்சொலிளங்கிளி ... ... ... *
நனைச்சிலம்புவ நாகிள வண்டுபூம் ... ... ... *
புனற்சிலம்புவ புள்ளினம் வள்ளியோர் ... ... ... *
மனைச்சிலம்புவ மங்கல வள்ளையே ... ... ... *

(இ-ள்) தினை - தினைப்புனங்களில் — தீம் - மதுரமான — சொல் - சொல்லையுடைய — இளங்கிளி - இளங்கிளிகள் — சிலம்புவ - ஒலிப்பன — நனை - அரும்புகளிடத்து — நாகு இளம் - இளமையாகிய — வண்டு - வண்டுகள் — சிலம்புவ - ஒலிப்பன — பூம்புனல் - மலர்களையுடைய நீருள்ள தடாகத்தினிடத்து — புள்ளினம் - அன்னங்கள் முதலிய பறவைக்கூட்டங்கள் — சிலம்புவ - ஒலிப்பன — வள்ளியோர் - வள்ளற்றன்மையையுடையவர்கள் — மனை - வீடுகளினிடத்து — மங்கலம் - நன்மையான — வள்ளை - உலக்கைப்பாட்டுகள் — சிலம்புவ - ஒலிப்பன — எ-று. ஏ-ஈற்றசை. (௩௧)

கிளி வண்டு புள்ளினம் வள்ளை இவைகளைத் தனித்தனி எழுவாயாகக் கொண்டு சிலம்புவ என்பவற்றை ஆங்காங்குப் பயனிலையாக ஒட்டிக்கொள்க.

நாகு இளம் என்பது ஒருபொருட் பன்மொழி உலக்கைப்பாட்டு நெற்குற்றும்போது பாடும்பாடல். (மனையளகுவள்ளைக்குறங்கும்வளநாட.) என்பதனானுமறிக.

இக்காலத்து அச்சிட்டவர் புனல் என்பது புனையென்றானதாகக்கூறிப் புனைச்சிலம்புவ எனமாற்றினர் அது பாடமன்றென்க இன்னுஞ் சில இடங்களில்மாற்றியிருக்கின்றனர் அவைகளை யாங்காங்குக் காட்டுதும்.

கன்றுடைப்பிடி நீக்கிக்களிற்றினம் ... ... ... *
வன்றொடர்ப்படுக்கும்வனவாரிசூழ் ... ... ... *
குன்றுடைக்குலமள்ளர்குழூஉக்குரல் ... ... ... *
இன்றுணைக்களியன்னமிரிக்குமே ... ... ... *

(இ-ள்) கன்று-கன்றுகளை—உடை-உடைய—பிடி-பெண்யானைகளை—நீக்கி-நீக்கிவிட்டு—களிறுஇனம்-ஆண்யானைக்கூட்டங்களை—வன்-வன்மையுள்ள—தொடர்-சங்கிலிகளால்—படுக்கும்-கட்டுகின்ற—வனம்-காடுகளிலோடுகின்ற—வாரி-வெள்ளமானது—சூழ்-சூழ்ந்த—குன்று-மலைகளை—உடை-ஆட்சியாகவுடைய—குலம்-நற்குலத்திற்பிறந்த—மள்ளர்குழூ-குறவர்கூட்டத்தின்—குரல்-குரலோசையானது—இன்-இனிய—துணை-பெட்டைகளுடன்—களி-களித்துக்கொண்டிருக்கும்—அன்னம்-அன்னப்பட்சிகளை—இரிக்கும்-பிரித்துவிடும்-எ-று- எ-ற்றசை. [குரல்-எழுவாய். இரிக்கும்-பயனிலை. அன்னம்-செயப்படுபொருள்.] (௧௨)

உடை என்னுமிரண்டும் பெயரெச்ச அகரவீறுகெட்டுநின்றன. இன்-என்பது-இனிமை என்பதின் விகாரமாகவும், அல்லது-இன்பு-என்பதின் விகாரமாகவும் சொல்வோர்கருத்தின்படி அமையும்- துணையாக இருப்பதனைத் துணை என்றார்.

வள்ளிகொள்பவர்கொள்வனமாமணி ... ... ... *
துள்ளிகொள்வனதூங்கியமாங்கனி ... ... *
புள்ளிகொள்வனபொன்விரிபுன்னைகள் ... ... ... *
பள்ளிகொள்வனபங்கயத்தன்னமே ... ... ... *

(இ-ள்.) வள்ளிகொள்பவர்-கிழங்குகள்கொள்ளப்படுகின்றவர்களால்—மாமணி-மாணிக்கங்கள்—கொள்வன-கொள்ளப்படுவன—பொன்-பொன்போல—விரி-மலர்த்த—புன்னைகள்-புன்னைமலர்கள்—புள்ளி-புள்ளிகளை—கொள்வன - இடையிற்கொண்டிருப்பன—தூங்கிய- தொங்குகின்ற—மாங்கனி-மாம்பழங்கள்—துள்ளி-ரசத்துளிகளை—கொள்வன-கொண்டிருப்பன—அன்னம்- அன்னப்பட்சிகள்—பங்கயத்து- தாமரைமலர்களில்—பள்ளிகொள்வன் - சயனித்துக்கொண்டிருப்பன-எ-று. [மாமணி-எழுவாய். கொள்ளப்படுவன -பயனிலை. இவ்வாறு மற்றவைகளை ஆங்காங்கு எழுவாயும் பயனிலையுமாகக் கூட்டியுரைத்துக்கொள்க.] (௧௩)

வள்ளி ஒருவிதக்கொடி- இது ஆகுபெயராய்த் தன்சினையாகிய கிழங்குகளைக்காட்டிநின்றது. துள்ளி-விரித்தல் விகாரம்-மா-கனி-இவற்றினிடையில் மெல்லொற்றுமிக்கது-புன்னை-பங்கயம்-இவை ஆகுபெயர்.

கொன்றைவேய்ங்குழற்கோவலர்முன்றிலித் ... *
கன்றறக்குங்குரவைக்கடைசியர் ... ... ... *
புன்றலைப்புனங்காப்புடைபோதரச் ... ... ... ... *
சென்றிசைக்குறவிச்சியர்செவ்வழி ... ... ... *

(இ-ள்.) கடைசியர்- உழத்திகள்பாடும்—குரவை- குரவைப்பாட்டுகள்—கொன்றை-கொன்றைமரங்களையும்—வேய்ங்குழல்-வேய்ங்குழலையுமுடைய

கோவலர்-இடையர்களுடைய—முன்றிலில்-முற்றத்திலிருக்கும்—கன்று-பசுவின் கன்றுகளை—உறக்கும்-நித்திரை செய்விக்கும்—நுளைச்சியர் - நெய்தனிலமாதர்கள்பாடும்—செவ்வழி-செவ்வழியென்னும் இராகம்—புன்றலைப்புனம்-சிறியகதிர்களையுடைய தினைப்புனங்களி லிருக்கும்—காப்பு- காவலானது—உடைபோதர- நீங்கிப்போம்படி—சென்று இசைக்கும்- போயொலிக்கும்—எ-று. [குரலவை-எழுவாய் உறக்கும்-பயனிலை. கன்று-செயப்படுபொருள். செவ்வழி-எழுவாய். இசைக்கும்-பயனிலை ] (ருச)

கொன்றை ஆகுபெயராய் நிலத்தைக்காட்டிற்று. கொன்றைமரங்களையுடையகோவலரெனினும் அவ்வாறே பொருட்படும்.

சேம்புகால்பொரச்செங்கழுநீர்க்குளத்... ... ...*
தாம்புகாலச்சுரிவளைமேய்வன ... .. ... ...*
காம்புகால்பொரக்கண்ணகன்மால்வரைப்... ... *
பாம்புநான்றெனப்பாய்பசுந்தேறலே... ... *

(இ-ள்.) காம்பு-மூங்கில்கள்—கால்-காற்றினால்—பொர - மோதுதலினால்—கண் அகன்-இடமகன்ற—மால்-பெரிய—வரை-மலைகளிலிருக்கும்—(இருல்கிழிந்து) பாய்பு- பாம்பானது—நான்றென-தொங்குவதுபோல—பாய்-பாய்கின்ற—பசுந்தேறல்-பசியதேனை—செங்கழுநீர்-செங்கழுநீர் மலர்களுள்ள—குளம்-ஏரிகளின்—தாம்பு-மதகுகள்—கால-சக்குவதினால்—சுரிவளை-சுரிசங்கங்கள்—சேம்புகால்- சேப்பமட்டைகள்—பொர-தம்மேலேமோதும்படி—மெய்வன-சென்றுஉண்பன-எ-று. ஏ-ஈற்றசை. வளை-எழுவாய். மேய்வன-பயனிலை. தேன்செயப்படுபொருள்.] (ருரு)

நான்றது எனற்பாலது ஈறுகெட்டு நான்று என நின்றது.நாலல்முதனிலை.

பெருந்தடங்கட்பிறைநுதலார்க்கெலாம் ... ...*
பொருந்துசெல்வமுங்கல்வியும்பூத்தலால் ......*
வருந்திவந்தவர்க்கீதலும்வைகலும் ... ... ...*
விருந்துமன்றிவிளைவனயாவையே ... ... ...*

(இ-ள்.) பெருந்தடம்-விசாலமான—கண் - நேத்திரங்களையும்—பிறை-இளந்திங்கள்போல்வளைவாகிய—நுதலார்க்குஎலாம்- நெற்றியினையுமுடையமங்கையர்களெல்லாருக்கும்—பொருந்து-நிலையாகிய—செல்வமும்-ஐசுவரியமும்—கல்வியும்-கல்வியுணர்ச்சியும—பூத்தலால் - உண்டாயிருப்பதினால்—வருந்தி-வறுமையினால்வருத்தமுற்று—வந்தவர்க்கு - தம்மிடத்தில்வந்தவர்களுக்கு—ஈதலும்-பொருள்கொடுத்தலும்—வைகலும்-நாள்தோறும்—விருந்தும்-விருந்தினராகவந்துஉண்பவர்களுக்கூட்டுதலாலுண்டாகும் பயனும்—அன்றி-அல்லது—விளைவன- விளைகின்றவை—யாவையே-எவையோ-எ-று. [விளைவன-எழுவாய். யாவை-பயனிலை.] (ருசா)

ஓகாரம்-எதிர்மறை இது இல்லையென இன்மையைக் காட்டிநின்றது. பெருந்தடம்ஒருபொருட்பன்மொழி. இது அந்நாட்டு மாதர்களுடைய நன்னடத்தையைக்காட்டுகின்றது.

பிறைமுகத்தலைப் பெட்பினிரும்புபோழ் ... ...*
குறைநறித்திரள் குப்பைப்பருப்பொடு ...... ...*
நிறைவெண்முத்தினிறத்தரிசிக்குவை .. ... ...*
உறையவொட்டினவூட்டிடந்தோறெலாம் ... ... *

(இ-ள்) பெட்பின்-விருப்பத்துடன்—பிறைமுகம்-பிறைமுகம்போன்ற—தலை-தலையிணையுடைய—இரும்பு-அரிவாய்மணையில்—போழ்-பிளக்கப்பட்ட—குறை-துண்டங்களாயிராநின்ற—கறித்திரள்-கறிக்கூட்டங்களும்—குப்பைப்பருப்பு-பருப்புக்குவைகளும்—வெள்-வெண்மையாகிய—முத்தினிறத்து-முத்தினிறத்தினையுடையதாய்—நிறை-நிறைந்த—அரிசிக்குவை-அரிசிக்குப்பலும்—ஊட்டு இடந்தோறு எலாம்-அன்னச்சாலையினிடமெங்கும்-கொட்பின-நிறைந்தவைகளாய்—உறைவ-பொருந்தியிருப்பன-எ-று. [கறித்திரள்-பருப்பு-அரிசி-இம்மூன்றும்-எழுவாய். உறைவ-பயனிலை.] (கஎ)

ஊட்டு-உண்பிக்கும் இடந்தோறுமெனப் பதம்பிரித்துக்கொள்க. இப்பண்டங்கள்மாறுமலிருக்குமென்பதுகருத்து.

கலஞ்சுரக்குநிதியங்கணக்கிலா ... ... ... ...*
நிலஞ்சுரக்குநிறைவளநன்மணி ... ... ... *
பிலஞ்சுரக்கும்பெறுதற்கரியதங் ... ... ... *
குலஞ்சுரக்குமொழுக்கங்குடிக்கெலாம் ... . *

(இ-ள்.) குடிக்கெலாம்-அந்நாட்டிலிருக்கும் குடிகளுக்கெல்லாம்—கலம்-கப்பல்களினிடமாக—கணக்கு-அளவு—இலா நிதியம்-இல்லாதபொருள்கள்—சுரக்கும்-உண்டாகும்—நிலம்-நிலங்களினிடமாக—நிறைவளம்-நிறைந்தவளப்பங்கள்—சுரக்கும்-உண்டாகும்—பிலம்-குழிகளினிடமாக—நன்மணி-நல்லமணிகள்—சுரக்கும்-உண்டாகும்—பெறுதற்கு-பெறுவதற்கு—அரிய-அரியதாகிய—தங்குலம்-அவர்கள் குலத்தினிடமாக—ஒழுக்கம்-ஒழுக்கமானது—சுரக்கும்-உண்டாகும்-எ-று. [நிதி-வளம்-மணி-ஒழுக்கம்-இவை எழுவாய் சுரக்கும் என்பன பயனிலை.] (கஅ)

கலம்-நிதியங்களைக் கொடுக்கும், நிலம்-நிறைவளத்தைக் கொடுக்கும்-பிலம்-மணிகளைக்கொடுக்கும்-குலம்-ஒழுக்கத்தைக்கொடுக்கும்-என வுரைப்பினுமமையும். இவ்வாறுரைக்குங்கால் கலம் நிலம் பிலம் குலம் என்பவை எழுவாய். சுரக்குமென்பவைபயனிலை. நிதியமுதலியவை செயப்படுபொருள்- நிதியம் என்பதிலிருக்கும் அம்சாரியை. ஒழுக்கமாவது ஆசாரம்-நலந்தளவேயாகுங்குணம் என்பதறுமறிக. கணக்கிலா என்பதனை ஆண்டாண்டுக்கூட்டிக்கொள்க. கணக்கிலாத என்னும்பெயரெச்சவீறு குன்றிநின்றது.

கூற்றமில்லையோர்குற்றமில்லாமையாற் ... ... *
சீற்றமில்லைதஞ்சிந்தையிற்செய்கையா ... ...*
லாற்றனல்லறமல்லதிலாமையா ... ... ... *
வேற்றமல்லதிழிதகவில்லையே ... ... ... ...*

(இ-ள்) ஓர்குற்றமில்லாமையால்-குற்றமென்பதுசிறிதுமில்லாமையினால்—கூற்றம்இல்லை-யமன் அணுகுவதில்லை—தம்-அவர்களுடைய—சிந்தை

டைபோன்ற—மடநடை-மடநடையும்—அளகம்-அளகபாரமுமுடைய—க டைசியர் உழத்தியர்களுடைய—முகமென-முகம்போல—கமலம்-செந்தா மரைமலர்கள்—அலர்வன-மலருகின்றன-எ-று. [குமுதம்-எழுவாய். அலர்வ ன-பயனிலை. கமலம்-எழுவாய். அலர்வன-பயனிலை] (௪௩)

இதழ்-ஆகுபெயர். மடநடை-மிருதுவானநடை. குமுதம்-வாய்போ லலர்வதென்றும், தாமரை-முகம்போ லலர்வதென்றுங் கூறினமையின் இதுவும் இதுபோலவருஞ் செய்யுட்க ளும், பிரதீபாலங்காரம்.

விதியினை நகுவனவயில்விழிபிடியின் ... ... ... *
கதியினை நகுவனவவர் நடைகமலப் ... ... ... *
பொதியினை நகுவனபுணர்முலைகலைவாழ் ... .. *
மதியினை நகுவனவனிதையர்வதனம் .. ... ... ... *

(இ-ள்.) வனிதையர் - அந்நாட்டிலுள்ள மாதர்களுடைய—அயில்-வேல் போன்ற—விழி-கண்கள்—விதியினை-முனிவர்கள் செய்யுநியதிகளை—நகுவ ன-பழிப்பன—அவர்நடை-அவர்கள் நடைகள்—பிடியின்-பெண்யானைகளி னுடைய—கதியினை-நடையினை—நகுவன-பழிப்பன—புணர்முலை-தம்மு ளொத்த அவர்களுடைய தனங்கள்—கமலம்-செந்தாமரையின்—பொதியி னை-அரும்புகளை—நகுவன-பழிப்பன—வதனம்-அவர்களுடைய முகங்கள் —கலைவாழ்-கலைகள் நிறைந்த—மதியினை-சந்திரனை—நகுவன-பழிப்பன— எ-று. [விழி-நடை-முலை-வதனம் இவைகள் எழுவாய். நகுவன-என்பவைகள் பயனிலை] (௪௪)

விதி-கதி-பொதி-மதி-இவற்றை முறையே செயப்படுபொருளாகக்கொள்க.
விதியினை நகுதல் முனிவர்கள் தங்கள் நியமங்களினின்று மாறுபடும்படி செய்தல். விதியினை நகுவன என்பதற்கு பிரமனை நகுமெனப் பொருளுரைப்பின் சிறப்பின்மைகாண்க. புணர்மு லையென்பதனை-நெருங்கிய முலையென்றுமுரைப்பர்.

பகலொடு நிகருவபடர்மணிமடவார் .. ... ...*
நகரொடு நிகருவ நளிர்வளரிளநீர் ... ... ... *
அகிலொடு நிகருவசுதைபுனைநகர்கள் ... ...*
முகிலொடு நிகருவகடிமணமுரசம் ... ... ... *

(இ-ள்.) மடவார்-அந்நாட்டு மாதர்களுடைய ஆபரணங்களின்—படர்ம ணி-பரந்தமணிகள்—பகலொடு-பகலுடன்—நிகருவ-பகைப்பன—ந கில்-அவர்களுடைய தனங்கள்—நளிர்வளர்-குளிர்ச்சிபொருந்திய—இளநீ ரொடு-இளநீர்களுடன்—நிகருவ-பகைப்பன—அகில்-அவர்களுடைய வஸ் திரங்கள்—சுதைபுனை-அமுதம்போற்றூய்மையுள்ள—நுரையினொடு-நுரை களுடனே—நிகருவ-பகைப்பன—கடி-விளக்கம்பொருந்திய—மணமுரச ம்-கல்யாணபேரிகைகள்—கார்-கருமைநிறமுள்ள—முகிலினோடு-மேகங்க ளுடனே—நிகருவ-பகைப்பன-எ-று. (௪௫)

படர்மணி-நகில்-அகில்-முரசம்-இவைகளைத்தனித்தனி எழுவாயாகக்கொண்டு நிகருவ என்பவைகளை ஆய்காங்குப் பயனிலை ஆக்குக. இளநீரோடு நகில்நிகருவ என்றும், நுரையோ டு அகில்நிகருவவென்று மொழிமாற்றுக.

காரொடுநிகர்வனகடிபொழில்கழனிப் ... ... ... *
போரொடுநிகர்வனபுணர்முலையணைசூழ் ... ... *
நீரொடுநிகர்வனநிறைகடனிதிசால் ... ... ... ... *
ஊரொடுநிகர்வனவிமையவருலகம் ... ... ... *

(இ-ள்) கார்-மேகங்கள்—கடிபொழிலொடு- வாசனைபொருந்திய சோலைகளை—நிகர்வன- ஒப்பாவன—கழனி- வயல்களிலிராநின்ற—போர் - நெற்போர்கள்—புணர்- நெருங்கிய— முலையொடு-மாதர்களுடைய தனங்களை—நிகர்வன-ஒப்பாவன—அணைசூழ்- கரைகளால் சூழப்பட்ட—நீரொடு நீர்நிலை—நிறைகடல்- நிறைந்தசமுத்திரங்கள்—நிகர்வன- ஒப்பாவன —இமையவர் உலகம்-தேவர்களுடையவுலகங்கள்—நிதிசால்- நிதிமிகுந்த—ஊரொடு-அந்நாட்டிலிருக்கிற ஊர்களை —நிகர்வன- ஒப்பாவன-எ-று. (௩௯)

எழுவாய்ப் பயனிலைகளை முன்பின்னாகக் கொண்டு முடிப்பினுமாம்; ஒடு-வேற்றுமைமயக்கம். மீண்டும் மொழிமாற்றியுரைக்க இடந்தருமாறு காண்க.

நென்மலையல்லனநிரைவருதரளம் ... ... ... *
சொன்மலையல்லனதொடுகடலமிர்தம் ... ... ... *
நன்மலையல்லனநதிதருநிதியம் ... ... ... *
பொன்மலையல்லனமணிபடுபுளினம் ... ... ... *

(இ-ள்) நிரைவரு-நிறைந்த—தரளமல்லன-முத்துக்குவைகளல்லன—நென்மலை-நெற்போர்களேயாம்—தொடு- வளைந்த—கடல்- பாற்கடலிலுண்டாகிய—அமுதமல்லன-அமுதங்களல்லன—சொன்மலை-உழத்தியர் சொன்மிகுதியேயாம்—நன்மலையல்லன-நல்லமலைகளல்ல —நதிதரு- நதிகளால்தரப்பட்ட—நிதியம்-திரவியமலைகளேயாம்—பொன்மலையல்லன-பொற்குவைகளல்ல—மணிபடு-மணிகள்பொருந்திய—புளினம்- மணற்குன்றுகளேயாம்-எ-று.

நென்மலை-சொன்மலை-நிதியம்-புளினம்-இவைகள் எழுவாய் ஆம் என்னும் ஒருசொல் ஆக்காக்குமாறு செய்து பயனிலையாகக் கொள்க. இதன்றாற்பரிய முதலில் காணப்படும்போது முத்துக்களைப்போல ஐயமுண்டாகிப் பின்பு நெல்லெனவே நிச்சயிக்கப்படுமாம். மற்றவைகளுக்கும் இவ்வாறே கொண்டுகொள்க.

இதனைக் கரும்பல்லநெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன என்னும்பெரியபுராணச்செய்யுளினும் கண்டுகொள்க. —நென்மலையல்லன நெற்போர்களில்லாத விடங்களில் நிரைவருதரளம்-நிறைந்தமுத்துக் குவைகளிருக்கின்றன சொன்மலையல்லன சொல்லுகின்ற அம்மூத்திக்குவைகளில்லாதவிடங்களில்-தொடுகடலமுதம்-கடலினிடத்திலுண்டாகும் உப்புக்குவைகளிருக்கின்றன, நன்மலையல்லன-நல்ல அந்த உப்புக்குவைகளில்லாதவிடங்களில்-நதிதரு நிதியம்-நதிகளாலே தரப்பட்ட நிதியக்குவைகளிருக்கின்றன, பொன்மலை அல்லன-அந்தப்பொற்குவைகளில்லாதவிடங்களில் மணிபடுபுளினம்-மணிகள்பொருந்திய மணற்குன்றுகளிருக்கின்றன வெனவும், நெற்போர்களல்ல முத்துக்குவைகளாமெனவும், மாதர்சொல்மிகுதியல்ல அமுதமாமெனவும், நல்லமலைகளல்ல நதிகளாலே தரப்பட்ட நிதியமாமெனவும், மணற்குன்றுகளல்ல பொன்மலைகளாமெனவும், பொருள்கூறினும் அமையும். நிதியம் என்பதுலிங்கவிருக்கும் அம்- சாரியை.

பந்தினையிளையவர்பயிலிடமயிலூர் ... ... ... *
கந்தனையனையவர்கலைதெரிகழகம் ... ... ... *

[வேறு]

இடங்கொள்சாயல்கண்டிளைஞர்சிந்தைபோற் ... *
நடங்கொள்சோலைவாய்மலர்பெய்தாழ்குழல் ... *
வடங்கொள்பூண்முலைமடந்தைமாரொடுந் ... ... *
தொடர்ந்துபோவனதோகைமஞ்ஞைகள் ... ... *

(இ-ள்.) இடங்கொள்-அவர்களிடத்துப் பொருந்திய—சாயல்கண்டு-சாயலைப்பார்த்து—இளைஞர் வாலிபர்களுடைய—சிந்தைபோல்-மனத்தொடர்வதுபோல்—நடங்கொள் விசாலமாகிய—சோலைவாய்- சோலைகளினிடத்து மலர்பெய்-பூமாலையணிந்த—தாழ்-தாழ்ந்த—குழல் - அளகபாரத்தையும்—வடங்கொள்-மணிவடம்பொருந்திய—பூண்முலை - தனங்களையுமுடைய—மடந்தைமாரொடும்-மாதர்களோடும்—தோகைமஞ்ஞைகள்-கலாபத்தையுடைய மயில்கள்—தொடர்ந்துபோவன - தொடர்ந்துசெல்வன-எ-று. [மஞ்ஞைகள்-எழுவாய்- செல்வன-பயனிலை] (௫௨)

பூண்முலை-என்றது அந்தனத்தினியல்பைக் குறித்ததாகையால் பூணென்பதற்குத் தனித்துப்பொருள்கூறவேண்டியதின்று. நடங்கொள்சோலை யென்பதற்கு வாவிகள் சேர்ந்த எனினுமமையும்.

வண்மையில்லையோர்வறுமையின்மையாற் ... ... *
திண்மையில்லைநேர்செறுநரின்மையா ... ... *
உண்மையில்லைபொய்யுரையிலாமையால் ... ... *
வெண்மையில்லைபல்கேள்விமேவலால் ... ... *

(இ-ள்.) ஓர்வறுமையின்மையால்- தரித்திரமென்பதொன்றுமில்லாமையினாலே—வண்மையில்லை - ஈகையில்லை—நேர்- எதிர்ந்து—செறுநர் -போர்செய்கின்றவர்கள்—இன்மையால்- இல்லாமையினாலே—திண்மையில்லை- பராக்கிரமமென்பதில்லை—பொய்புரையிலாமையால்- பொய்வார்த்தையில்லாமையினாலே—உண்மையில்லை- மெய்யென்பதெவ்வளவுமில்லை— பலகேள்விமேவலால்-பலகேள்விபொருந்தியிருப்பதினாலே —வெண்மையில்லை-அறிவில்லாமையில்லை-எ-று. [வண்மை-திண்மை உண்மை- வெண்மை-இவைகள் எழுவாய். இல்லை-பயனிலை.] (௫௩)

அந்நாட்டின்கணுள்ள பதிகளில் வாழ்வோர்கள் யாவரும் வள்ளல்தன்மை யுள்ளவர்களாயிருந்தும் இரப்பவர்களில்லாமையால் அவ்வள்ளல்தன்மை விளங்காதிருக்கின்றதென்க. இதுபோலவே மற்ற மூன்றுக்கும் பொருள்கூறி யுணர்ந்துகொள்க.

எள்ளுமேனலுமிறுங்குஞ்சாமையுங் ... ... ... *
கொள்ளுங்கொள்ளையிற்கொணரும்பண்டியு ... *
மள்ளரங்களத்துழுதின்பண்டியுந் ... ... ... *
துள்ளுநீர்மையிற்றலைமயங்குமே... ... ... *

(இ-ள்.) எள்ளும்-எள்ளுகளும்—ஏனலும்- தினைகளும்—இறுங்கும்- சோளங்களும்—சாமையும்-சாமைகளும்—கொள்ளும்- கொள்ளும்—கொள்ளையில்-மிகுதியாக—கொணரும்பண்டியும் - கொண்டுவருகின்ற பண்டியும்—

அள்ளல்-குழைசேறுண்டு—ஓங்கு-மிகுந்த—அளத்து-அளத்திலுண்டாகிய—அமுதின்பண்டியும்-உப்புப்பண்டியும்—தன்னுந்நீர்மையில் - வொண்டி போய்த்தள்ளுகின்றதன்மையினாலே—தலைமயங்கும்-இடமயங்கும்—எ-று. ஏகாரம்-ஈற்றசை. [பண்டிகள்-எழுவாய். மயங்கும்-பயனிலை] (௫௪)

இடமயங்குதலாவது- ஒருதிணைப்பொருள்மற்றொருதிணையிற் சேர்தலால் திணைமயக்கங் காட்டுமென்க.

உயருஞ்சார்விலர்வுயிர்கள்செய்வினைப் ... ... *
பெயரும்பல்கதிபிறக்குமாறுபோ ... ... ...*
லயிருந்தேனுமின்பாகுமாயரூர்த். ... ... ...*
தயிரும்வேரியுந்தலைமயங்குமே... ... ... ...*

(இ-ள்.) உயரும் உயருகின்ற—சார்விலா-சார்பில்லாத—உயிர்கள்-ஜீவன்கள்—செய்வினை- செய்யும்வினையினால்—பெயரும்- மாறிச்செல்கின்ற—பல்கதி-நாற்கதிகளில்—பிறக்கும் ஆறுபோல்- உற்பவிக்குமுறைமைபோல்—அயிரும்- சருக்கரையும்—தேனும்- நறையும்—இன்பாகும்- இனியவெல்லப்பாகும்—ஆயரூர்- இடையரூராகிய பாடியில் உண்டாகும்—தயிரும்- ததியும்—வேரியும்-மதுவும்—தலைமயங்கும்-பண்டமாற்றப்படுதலால் இடமாறும் —எ-று. ஏ-ஈற்றசை. [அயிரும்-தேனும்-பாகும்-தயிரும்- வேரியும்-எழுவாய். தலைமயங்கும் என்பதனை மேற்கூறிய எழுவாய்களுடன் தனித்தனி சேர்த்துப் பயனிலையாகக்கொள்க.] (௫௫)

தயிர்க்கு நிலம் வகுப்பாக் கூறினமையால் மற்றைப்பொருட்கும் நிலம்வகுத்துக் கூறல் வேண்டும். எங்ஙனமெனில், மருதநிலத்துண்டாகிய அயிருந்தேனும் குறிஞ்சிநிலத்துண்டாகியதேனுமெனக்கொள்க — அவ்வவ்வ நிலத்துப்பொருட்களில் ஈண்டுசிலகூறினும ஒன்றெழி பொழுப்சொல் என்னுமுருந்திரவிதியால் எல்லாப்பொருள்களையும் எடுத்துக்கூறிக்கொள்க.

இணைப்பொருள் மாறுபடக்கூறப்பட்டிருப்பதென்னையெனின், செய்யுளாதலின் என்க உயருஞ்சார்பு ஆவது அந்தானமநீங்கிய மெய்யுணர்வு அறமே உயிர்களதுபிறப்பினைநீக்கி மோக்ஷத்தருவது. நாற்கதியாவது-நரகர்-மக்கள்-தேவர்-விலங்குஎன்பவை.

கூறுபாடலுங் குழலின்பாடலும் .... ... ... ...*
வேறுவேறுநின்றிசைக்கும்வீதிவாய்... ... ... *
ஆறுமாறும்வந்தெதிர்ந்தவாமெனச் ... ... ... *
சாறும்வேள்வியுந்தலைமயங்குமே... ... ... ... *

(இ-ள்.) கூறுபாடலும் - பாடுகின்ற இசைப்பாடலும்—குழலின்பாடலும்- வேய்ங்குழற்பாடலும்—வேறுவேறுநின்று -வேறுவேறாயிருந்துகொண்டு—இசைக்கும்- சப்திக்கும்படியான—வீதிவாய் -வீதியிலிடத்து—ஆறும்ஆறும்வந்து-ஒருநதிவெள்ளம் வரும்போது—அதற்கெதிரில்-மற்றொருநதிவந்துஎதிர்த்ததுபோல--சாறும்வேள்வியும்-திருவிழாவோலக்கமும்மணக்கோலமும் எதிரெதிராகவந்து—தலைமயங்கும் - இடமயங்கும்—எ-று. [சாறும்வேள்வியும்-எழுவாய். தலைமயங்கும்-பயனிலை.] (௫௬)

சாறும்வேள்வியும் எதிரெதிராகவரும்போது ஒன்றிலிருக்கும்பரிசனமுதலியவை மற்றொன்றிலிடமாகக் கலக்கப்படுதலால் தலைமயங்குமென்றார்.

மூக்கிற்றூக்குறுமூரிநந்துநேர் .... ... ... ...*
தாக்கிற்றூக்குறும்பறையுந்தண்ணுமை ... ... *
வீக்கிற்றூக்குறும்விளியுமள்ளர்தம் ... ... ... *
வாக்கிற்றூக்குறுமொலியின்மாயுமே ... ... *

(இ-ள்) மூக்கின்-மூக்குதலால்—தாக்குறும்-ஒலித்தலைப்பொருந்துகின்ற—மூரி - பலமுள்ள—நந்துவிளியும்- சங்கின் ஓசையும்—நேர்தாக்கின்-நேராக அடித்தால்— தாக்குறும் - ஒலிக்கின்ற—பறைவிளியும் -பறைகளின் ஓசையும்—வீக்கின் - வார்விசிப்பினால்—தாக்குறும்- ஒலிக்கின்ற—தண்ணுமைவிளியும்-மழவியோசையும்—மள்ளர்தம்-பள்ளர்களுடைய—வாக்கின்-வாக்கினால்—தாக்குறும்-ஒலிக்கின்ற-ஒலியின் ஆரவாரத்தினால்--மாயும் ஒடுங்கும்-எ-று. [நந்து- பறை-தண்ணுமை-எழுவாய். மாயும்-பயனிலை ]()

தாலியைம்படைதழுவுமார்பிடை ... ... ... *
மாலைவாயமுதொழுகுமக்களைப் ... ... ... ...*
பாலினூட்டுவார்செங்கைபங்கயம் ... ... *
வானிலாவுறக்குவிவமானுமே... ... ... ... *

(இ-ள்.) தாலி-தாலியாகிய—ஐம்படை-பொன்னாற்செய்யப்பட்டிருக்கிற பஞ்சாயுதங்களும்—தழுவும்- பொருந்திய—மார்பு இடை-மார்பினிடத்தில்—மாலை-ஒழுங்காக—வாயமுது- வாயமுதானது—ஒழுகுமக்களை - ஒழுகிக்கொண்டிருக்குங்குழந்தைகளுக்கு—பாலின்-பாலுடன் அன்னத்தை—ஊட்டுவார்- ஊட்டுகின்றவர்களுடைய—செங்கை- சிவந்தகையானதுகள—பங்கயம்- தாமரைமலர்கள்—வான்-ஆகாயத்தினிடத்தில்— நிலா உற-சந்திர உதயம் பொருந்தினவளவில்—குவிவ-குவிதலை—மானும் -ஒப்பாகும்-எ-று. [செங்கை- எழுவாய். மானும்-பயனிலை ] (௫௯)

தாலி-என்பது ஐம்படைத்தாலிக்கு ஒருபெயர்.

பொற்பினின்றனபொலிவுபொய்யிலா... ...... *
நிற்பினின்றனநீதிமாதரார்... ... ... ... ... *
அற்பினின்றனவறங்களன்னவர்... ... ... ...*
கற்பினின்றனகாலமாரியே... ... ... .. *

(இ-ள்.) பொற்பின்-ஆடவருடையகுணநலத்தினால்—பொலிவு - பிரகாசமானது—நின்றன- நிலைபெற்றிருந்தன—பொய்யிலா -பொய்மையில்லாத—நிற்பின் - நிலைமையினால்—நீதி - நீதிகள்—நின்றன - நிலையாயிருந்தன—மாதரார் - மகளிர்களுடைய—அற்பின்- அன்பினால்—அறங்கள்-தருமங்கள்—நின்றன-நிலையாயிருந்தன—அன்னவர்- அந்தமகளிர்களுடைய—கற்பின்-பதிவிரதாதருமத்தினால்—காலமாரி- காலவருஷங்கள்—நின்றன- மாறாமல் பெய்கின்றன-எ-று. [பொலிவு-எழுவாய் நின்றன-பயனிலை. அறங்கள் எழுவாய் நின்றன-பயனிலை. காலமாரி எழுவாய். நின்றன-பயனிலை.] (௬௰)

இச்செய்யுளில் வழுவாத நிற்றலேபொற்பு, வழுவாது நிற்றலால்வருங்கீர்த்தியேபொலிவு.

சோலைமாநிலந்துருவிபாவரே ... ... ... ... *
வேலைகண்டதேமீளவல்லவர் ... ... ... ... ... *
சாலும்வார்புனற்சரயுவும்பல... ... ... ... *
காலினோடியுங்கண்டதில்லையே... ... ... ... *

(இ-ள்.) சோலை-பொழில்களாற்சூழப்பட்ட—மா-பெருமைபொருந்திய—நிலம்-அக்கோசலநாட்டின்—வேலை-எல்லையை—துருவி-தேடி—வேலைகண்டு-எல்லையையறிந்து—மீளவல்லவர்-திரும்பிவரத்தக்கவல்லவர்கள்—யாவர் எவர்கள்—சாலும்-பொருந்த—வார்-நீட்சியுள்ள—புனல்-நீரினையுடைய—சரயுவும்-சரயுநதியும்—பலகாலின்-பலகால்களால்—ஓடியும்-சென்றும்—கண்டதில்லை-அறிந்ததில்லை எ-று. (௬௰)

யாவரே என்னும் ஏகாரம் எதிர்மறைப் பொருட்கண்வந்தது. உம்மை யிரண்டில்-ஒன்று-சிறப்பு-ஒன்று-எச்சம்.

வீவில்சேரநீர்வேலைகால்மடுத்... ... ... ... ... *
ஊழிபேரினுமுலைவிலாநலங் ... ... ... ... *
கூடுகோசலமென்னுங்கோதிலா... ... ... ... *
நாடுகூறினோநகரங்கூறுவாம் .... ... ... ... ..*

(இ-ள்) வீவில்சேர-யாவும்விரிதலைப்பொருந்த—நீர்வேலை-நீருள்ளசமுத்திரங்கள்—கால்மடுத்து-பிரசண்டமாருதத்தைப்பொருந்தி—ஊழிபேரினும்-பூமிக்குள்ளேபெயர்ந்துவந்து கவிந்துகொண்டாலும்—உலைவு இலா-கெடுதலில்லாத—நலங்கூடு-நன்மைபொருந்திய—கோசலமென்னும்-கோசலமென்றுபெயருள்ள—கோதிலா-குற்றமில்லாத—நாடு-நாட்டின்சிறப்பினை—கூறினோம்-சொல்லினோம்—நகரங்கூறுவாம்- இனிநகரத்தின்சிறப்பைச் சொல்லுகின்றோம்—எ-று. (௬௧)

௩-வது-நாட்டுப்படலம்-முற்றியது.

ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.

## ௩-வது-நகரப்படலம்.

செவ்வியமதுரஞ்சேர்ந்தநற்பொருளிற்சீரியகூரியதீஞ்சொல் ... *
வவ்வியகவிஞரனைவரும்வடநூன்முனிவரும்புகழ்ந்ததுவரம்பில் ... *
எவ்வுலகத்தோர்யாவருந்தவஞ்செய்தேறுவானாதரிக்கின்ற ... *
அவ்வுலகத்தோரிழிவதற்கருத்திபுரிகின்றதயோத்திமாநகரம் ... *

(இ-ள்) செவ்விய - செவ்விதானவைகளும் — மதுரம்சேர்ந்த - மதுரம் பொருந்தியவைகளும் — நல் - நன்மையாகிய — பொருளின் - பொருள்களினை — கூரிய நுட்பமாகிய — சீரிய-வளப்பத்தையுடையவைகளுமாகிய — தீம்-இனிய — சொல்-பதினெட்டுவகைச்சொற்களையும் — வவ்விய - அறிவினை) கவர்ந்த — கவிஞர் அனைவரும் எல்லாப்புலவர்களாலும் — வடநூல்-வடநூல் வல்ல — முனிவரும்-வால்மீகிமுதலாகிய முனிவராலும் — புகழ்ந்தது-புகழப்படுகின்றதாய் — வரம்பு இல-எல்லை இல்லாத — எவ்வுலகத்தோர் - எவ்வுலகத்திலுமுள்ளவராகிய — யாவரும்-எல்லோரும் — தவம்செய்து- தவங்களைச்செய்து — ஏறுவான்-செல்ல — ஆதரிக்கின்ற - விரும்புகின்ற — அவ்வுலகத்தோர்-வைகுண்டத்திருப்பவர்க்கும் — இழிவதற்கு-இழிந்துவருவதற்கு — அருத்தி-விருப்பத்தை — புரிகின்றது-செய்யத்தக்கது --- அயோத்திமாநகரம்-அயோத்தியென்னும் பெரியநகரம்-எ-று [அயோத்திமாநகரம் - எழுவாய். அருத்திபுரிகின்றது-பயனிலை] (௧)

எவ்வுலகத்தோர் என்பதற்கு வைகுண்டமொழிந்த எல்லாவுலகத்தோரும் எனக்கொள்க. அவ்வுலகத்தோரும் இழிய அருத்திபுரிகின்றதற்குக்காரணம் நாராயணக்கடவுள் பூரணகலையுடன் திருவவதாரஞ்செய்தமையேயெனக்கண்டுகொள்க.

அவ்வுலகத்தோரும் என்னுஞ்சிறப்பும்மை விகாரத்தால்தொக்கது -அயோத்தியின் பெருமை[illegible]பதிநன்கருத்து.

நிலமகண்முகமோதிலகமோகண்ணோநிறைநெடுமங்கலநாணோ ... ... ...*
இலகுபூண்முலைமேலாரமோவுயிரினிருக்கையோதிருமகட்கினிய ... [[illegible]
மல[illegible]லோமாயோன் மார்பினன்மணிகள் வைத்தபொற்பெட்டியோவா
உலகின்மேலுலகோவூழியினிறுதியுறையுளோயாதெனவுரைப்பாம் ... ...*

(இ-ள்) (அவ்வயோத்திமாநகரமானது) நிலமகள்- பூமிதேவியினுடைய — முகமோ - வதனமோ — திலகமோ-திலகமோ — கண்ணோ- நேத்திரமோ — நிறை அழகுநிறைந்த — நெடு-நெடியதாகிய — மங்கலநாணோ-மாங்கலிய சூத்திரமோ — இலகு - விளங்காநின்ற — பூண் - ஆபரணங்களையுடைய — முலைமேல் - முலையின்மேற்றுலங்கும் — ஆரமோ - முத்துமாலையோ — உயிரினிருக்கையோ - உயிரினிடமோ — திருமகட்கு - இலக்குமிக்கு — இனிய -

லா-கண்டிராத—நகரது- இவ்வயோத்திக்கு ஒப்பானநகரமொன்று—காண்டிலர்- தாங்கள்காண—அமைப்பு அரும்-அடக்குதற்கரிய—காதல்- ஆசையானது—பிடித்து-பிடரியைப்பற்றி—முன் உந்த-முன்னேதள்ள—அந்தரம்-ஆகாயத்தில்—சந்திராதித்தர்-சந்திரனுஞ்சூரியனும்—இமைப்பு இலர்-கண்கள் இமைக்குதல் இல்லாதவர்களாய்—திரிவர்- நோக்கிக்கொண்டு இன்னமும் உழலுகின்றார்கள் (ஆதலால்)—இதனுக்கு-இந்நகரத்துக்கு—இது அலால்-இந்நகரம் உவமையேயல்லாமல்—இயம்பலாம்-சொல்லும்படியான—உவமை-உவமையானது—மற்றுஇயாதோ-பிறிதுயாதோ-இல்லை-என்று [உவமை-எதுவாய் யாது-பயனில்லை] (ரு)

நகரது என்பதிலிருக்கும் அது காரகத்தின்கண்வந்தது. உயர்திணையும்மைத்தொகை பலரீற்ற எஃதுஞ் சூத்திரவிதியால் சந்திரனுஞ் சூரியனும் என்னும் எண்ணும்மைகள் தொக்குப் பலரீறுகொண்டு முடிந்தன.

சந்திர ஆதித்தர் என்னும்பதம் சந்திராதித்தர் எனப் புணர்ந்தது, வடமொழிச்சந்தி இதனை தீர்க்கசந்தி எனக்கூறுவர்.

## தாற்பரியம்.

திரிமூர்த்திமுதலானவர்களே இந்நகரத்துக்கு ஒப்பானநகர் ஒன்றுங் காணாதவர்களாயிருக்க சந்திரசூரியர்கள் அவர்கள்காணாமை அறிந்தோ அல்லது அறியாமலோ தாங்கள்காணவேணுமென்று ஆசைகொண்டு இமைகளைமூடாமல் கண்கள்விழித்தவண்ணமாகவே இன்னமுமுழன்றுகொண்டிருக்கின்றார்கள். ஆதலால் இந்நகரமானது தனக்குத்தானே ஒப்பானதென்று சொல்லுவதன்றி வேறே ஒப்பிருக்குமென்று எவ்வாறுசொல்லக்கூடும்.

இப்படி நகரமென்றுணராமல் காணத்தொடங்கினமையிற் பிறிவொன என்றுபடக்கூறினார்.

இமைப்பிலரென்றதனால்-அதிகசாக்கிரதையாக நோக்கித்திரிகின்றாரென்றதாயிற்று

இவ்வாறு நோக்கித்திரிவது சந்திரசூரியருக்குச் சம்பந்தமில்லாமை தெரிந்திருந்தும் சம்பந்தப்படுத்திச்சொல்லுகையில் இது அதிசயோத்தியலங்காரம்.

அயின்முகக்குலிசத்தமரர்கோனகருமளகையுமென்றிவையயனார் ... ... *
பயிலுறவுற்றபடிபெரும்பாண்மைப்பெருந்திருநகரதுபடைப்பான் ... *
மயன்முதற்றெய்வத்தச்சருந்தத்தமனத்தொழின்மறந்தார் ... .. *
புயறொடுகுடுமிநெடுநிலைமாடத்திந்நகர்புகலுமாறெவனோ ... ... .. *

(இ-ள்) அயனார்- பிரமதேவன்—அயில்-கூர்மையை—முகம்-தன்னிடத்துள்ள—குலிசத்து- வச்சிராயுதத்தையுடைய—அமரர்கோன்- தேவேந்திரனது—நகரும்-நகரமாகிய அமராவதியும்—அளகையும்-குபேரனுடைய நகரமாகிய அளகாபுரியும்—என்றிவை-என்ற இவைகளை—பயிலுறல் உற்றபடி-பயிற்சிசெய்ததுபோல—பெரும்பாண்மை-மேம்பாடுள்ள—பெருந்திரு-மிகுந்தசெல்வமுடைய—நகர்- ஒருநகரத்தை—படைப்பான்- சிருட்டிக்கஎண்ணங்கொண்டு—(தங்களாலொண்ணாமையால்) மயன்முதல்- மயன்முதலாகிய—தெய்வத்தச்சரும்- தேவதச்சர்களும்—நாணினர்-நாணமுடையவர்களாய்—தத்தம்-தங்கள்தங்கள்—மனத்தொழில்- மனதினாலிருக்குந் தொழில்களை—மறந்தார் - மறந்துவிட்டார்கள் (என்றால்) —புயல்தொடு-மேகமண்டலத்தை அளாவுகின்ற—குடுமி- சிகரங்கள்பொருந்திய—நெடுநிலை நெடியநிலைகளையுடைய—மாடத்து - வீதிகள்நிறைந்துள்ள—இந்நகர்-

பிரமதேவன் பழகித்தேர்ந்தபின் படைத்ததாகிய இந்நகரத்தை—புகலுமாறு-சொல்லுமுறைமை எவ்விதமிருக்கின்றது-எ-று. [புகலுமாறு-எழுவாய். யாது-பயனிலை] (௪)

என்ற என்பதிலிருக்கும் பெயரெச்ச இறுதிநிலைவிகாரத்தால் குன்றியது.

நாணினர் என்னுந் தெரிநிலைமுற்றினை நாணி எனும் வினையெச்சமாகக்கொள்க.

அமராவதியையும் அளகையையும்படைத்துப்பழகி ஏனை அயோத்தியைப் படைத்தான் என்பதையறிந்த தேவதச்சர்கள் அதுபோல வேறொருநகரைப்படைக்கமுயன்று தங்களால் ஒன்றாமையால்முன்னுணர்ந்திருக்குந்தொழிலையுமறந்தார்களென்றால் இந்நகரத்தின் பெருமை என்றால் எவ்வாறுசொல்லப்படுமென்பது இதன் தாற்பரியம்.

அமராவதி அளகை என்னும் இரண்டினையும் பிரமன் படையாயிருக்கின்றானென்பதிதன்கருத்து. அயோத்தியைப்படைக்க கைபழகின அமராவதி அளகையென்னும் இவைகளைப்போலப்படைக்க எண்ணி நாணினார்கள் எனினும் அமையும்.

புண்ணியம்புரிந்தோர்புகுவதுதுறக்கமென்னுமீதருமறைப்பொருளே... *
மண்ணிடையாவரிராகவனன்றிமாதவமறத்தொடும்வளர்த்தார்... ... *
எண்ணருங்குணத்தினவனினிதிருந்திவ்வேழுலகாளிடமென்றால்... ... *
ஒண்ணுமோவிதனின்வேறொருபோகவுறைவிடமுண்டெனவுரைத்தல்... *

(இ-ள்.) புண்ணியம்-நல்வினைகளை—புரிந்தோர்-இம்மைக்கட்செய்தோர்—புகுவது-அவ்வினைப்பயன்களைத்துய்க்கும்பொருட்டுச்செல்லலாவது—துறக்கம் என்னும் ஈது-துறக்கமென்றுசொல்லும் இவ்வாக்கியம்—அரும்-அரிதாகிய—மறைப்பொருளே-வேதப்பொருளாதலால்—மாதவம்-பெரியதவத்தை—அறத்தொடும்-தருமங்களுடன்—மண்ணிடை-இப்பூமியின்கண்—வளர்த்தோர்-வளர்த்தவர்கள்—இராகவனன்றி-இராகவனையல்லாது—யாவர்-பிறர்யாவர் ஒருவருமில்லையே—எண்-எண்ணுதற்கு—அரும்-அரிதாகிய—குணத்தினவன்-குணத்தினையுடைய அவ்விராகவன்—இனிது-இனிதாக—இருந்து-வீற்றிருந்து—இவ்வேழுலகு-இவ்வேழுலகங்களையும்—ஆளிடம்-ஆளுமிடமிவ்வயோத்திநகரமென்றால்—இதனின்-இந்நகரைப்பார்க்கிலும் ஒரு-ஒப்பற்ற—போகம்-போகங்கள்—உறைவிடம்-பொருந்துவதானஇடம—உண்டென உரைத்தல்-வேறுமுண்டென்று சொல்லுதல்—ஒண்ணுமோ-கூடுமோ கூடாது-எ-று [உரைத்தல்-எழுவாய். ஒண்ணுமோ-பயனிலை

மறைப்பொருள் மறையிலுள்ளமை. மாதவம் அறத்தொடும் வளர்த்தானெனவே தான் செய்தும் பிறராற்செய்வித்தும் வளர்த்தானெனக்கொள்க. இசைவுமது.

தங்குமாபொருளுந்தருமமுந்துணையாத்தம்பகைப்புலன்களைத்தவிர்க்கும் *
பொங்குமாதவமுஞானமும்புணர்ந்தோர்யாவர்க்கும்புகலிடமான... ... *
செங்கண்மால்பிறந்தாண்டளப்பருங்காலந் திருவின்வீற்றிருந்தமைதெரிந்தால், அங்கண்மாஞாலத்தந்நகரொக்கும்பொன்னகரமரர்நாட்டியாதோ... *

(இ-ள்.) மாதங்கும்-பெருமைபொருந்திய—பொருளும்-திரவியமும்—தருமமும்-தருமமும்—துணையா-சார்பாக—தம்-தம்முடைய—பகை-பகையாகிய—புலன்களை-ஐம்புலன்களையும்—தவிர்க்கும்-நீக்கும்—பொங்கும்-அழகாய்ப்பொங்கிய—மா-பெரிய—தவமும்-தவங்களையும்—ஞானமும்-

ஞானத்தையும்—புணர்ந்தோர்-பொருந்தினோர்—யாவர்க்கும்- எல்லோர்கரும்—புகல்இடமாண-சென்றடையும்இடமாகிய—செம்கண்-செம்மைநிறமுள்ளகண்களையுடைய—மால்-நாராயணக்கடவுள்—பிறந்து-திருவவதாரஞ்செய்து—ஆண்டு-அவ்விடத்து—அளப்பு-அளத்தற்கு—அரும்- அரிதாகிய—காலம்-காலம்—திருவின்-திருமகளோடு—வீற்றிருந்தமை -வீற்றிருந்தானென்பது—தெரிந்தால்-தெரிந்தால்—அம்- அழகிய—கண் - இடத்தையுடைய—மா-பெரிய—ஞாலத்து- பூமிக்கண்விளங்கும்—அந்நகர்ஒக்கும் -அவ்வயோத்திநகரையொத்த—பொன்நகர்-அழகுள்ளநகரம்—அமரர்நாட்டு- தேவருலகத்திலும்-யாதோ-இல்லை-எ-று.[பொன்நகர்-எழுவாய் யாது-பயனிலை

பொருளுந்தரு மமும் துணையாயினல்லது பகைப்புலன்களைவதின்றாகலின். தங்குமா பொருளுந் தருமமுந்துணையாந் தம்புலப்பகைக ளைந்தென்றும், புலப்பகை களையில் தவங்கூடும் அத்தவத்தால் ஞானமுண்டாகும் அந்தஞானத்தையுடையோ ரெல்லோர்க்குஞ்சென் றடைதற்கு இடம் செங்கண்மாலாதலின் அழகாய்ப்பொங்குமாதவமுஞானமும புணர்ந்தோரியாவர்க்கும் புகலிடமான செய்கண்மாலென்றுங்கூறினர். புலப்பகைசேந்திரியம்.

அரைசெலாமவணவணியெலாமவணவரும்பெறன்மணியெலாமவண ... *
புரைசைமால்களிறும்புரவியுந்தேரும்பூதலத்தியாவையுமவண ... ... ... *
விரசுவார்முனிவர்விண்ணவரியக்கர்விஞ்சையர்முதலினோரவரும் .. ... *
உரைசெய்வாரானபோததனுக்குவமைதானரிதரோவுளதோ ... .. *

(இ ள்.) அரைசெலாம்- பூதலத்திலுள்ள அரசுகளெல்லாம்—அவண-அவ்விடத்தின்கணுள்ளன—அணியெலாம்-ஆபரணங்களெல்லாம்—அவண-அவ்விடத்திலுள்ளன—அரும்பெறல் - பெறுதற்கரிய—மணியெலாம் - மணிகளெல்லாம்—அவண- அவ்விடத்திலுள்ளன—புரைசை - கழுத்துக்கயிற்றையுடைய—மால்களிறும்-பெரியயானைகளும்—புரவியும் -குதிரைகளும்—தேரும்-தேர்களும்—பூதலத்தியாவையும்-பூமியின்கணுள்ள மற்றஎல்லாப்பொருள்களும்--அவண-அவ்விடத்திலுள்ளன--(இவைகளுமன்றி)முனிவர்-முனிவர்களும்—விண்ணவர்- தேவர்களும்—இயக்கர்-யக்ஷர்களும்—விஞ்சையர்-வித்தியாதரரும்—முதலினோரவரும்-இவர்கள்முதலியவெல்லாரும்—விரசுவார்-அந்நகரத்தின்கண்ணே வாசமாயிருப்பவர்களாயினோன—உரைசெய்வாரானார்- முன்னோர்கள் சொல்லுகின்றவர்களானார்கள்—ஆனபோது-அவ்வாறு சொல்லலாயினபோது—அதனுக்கு- அந்நகரத்துக்கு—உவமை-உவமை—அரிது-அருமை—உளதோ-அருமையின்றேடிச் சொல்லலாமென்று கருதினதுவேறுண்டோ இல்லை-எ-று. [உவமை-எழுவாய். அரிது-பயனிலை] ()

பூதலத்தியாவையும், அவணவென்று அங்குவந்திருக்கு முனிவர் முதலாயினோர் உரைசெய்வாரானாரெனப் பொருள்கூறுவதுமொன்று.

அரசெலாமவணவென்றது கோசலைநீங்கியமற்றையதேசத்தரசர்யாவர்களும் அவ்விடத்திலவந்திருக்கின்றார்களென்னுங்குறிப்பு இவ்வாறு கூறுங்கால் அரசு ஆகுபெயர். வேந்தர்கள் அரசுத்தன்மை தசரதமகாராசன்கொடுக்கப் பெற்றுக் கொள்ளுகையினால் அரசெலாமவண என்றெனினுமமையும். தான்-இடைச்சொல்.

புரைசை-யானைக்கழுத்திடுகயிறுயாவையுமென்பதனோடு சேனையென்பதனைக்கூட்டியுரைக்க ஆனபோது ஆகையால் அரிதுஇல்லை-இதுவுமது.

ரப்பிரமத்தையும்—ஒக்கும்-நிகர்க்கும்-எ-று [மதில்-எழுவாய். ஒக்கும்-பய
னிலை. வேதம்-தேவர் - முனிவர்- கன்னி- சாலி- இவைகள் தனித்தனி செயப்
படுபொருள்.] (௬)

பொறி-முனிவரைக்குறிக்குமிடத்து ஐம்பொறி.

பஞ்சிவான்மதியையூட்டியவனையபடருகிர்ப்பங்கயச்செங்கால், வஞ்சிபோ
ன்மருங்குல்குரும்பைபோற்கொங்கை வாங்குவேய்வைத்தமென்பணைத்தோ
ள், அஞ்சொலார்பயிலுமயோத்திமாநகரினழகுடைத்தன்றெனவறிவான், *
இஞ்சிவானோங்கியிமையவருலகங்காணியவெழுந்தநொத்துளதே ... ...*

(இ-ள்.) பஞ்சி-செம்பஞ்சிக்குழம்பில்—வால்- வெண்மைநிறமுள்ள—ம
தியை-சந்திரனை—ஊட்டிய அனைய-சேர்த்ததைஒத்த—படர்- செம்மைநிற
ம்படரும்—உகிர்-நகங்களையுடைய—பங்கயம்- செந்தாமரைமலர்போன்ற
செங்கால்-செம்மைநிறமுள்ளபாதங்களையும்--வஞ்சிபோல்-பூங்கொடிபோ
லும்—மருங்குல்-இடையினையும்—குரும்பைபோல்-குரும்பைபோலும்—
கொங்கை-தனங்களையும்—வாங்கு- வளைந்த—வேய்வைத்த- மூங்கிலைவைத்த
துபோலும்—மென்-மெல்லிய—பணை-திரட்சியாகிய—தோள்-தோள்களை
யும்—அம்-அழகிய—சொலார்- சொல்லையுமுடைய மடவார்—பயிலும்-வா
சஞ்செய்கின்ற—அயோத்தி-அயோத்தியென்னும்—மாநகரின்-பெரியநக
ரம்போல—அழகு உடைத்து அன்றோஎன-அழகினையுடையதோவென்றுவெ
ன—அறிவான்-அறியும்பொருட்டு—இமையவருலகம் - தேவருலகினை—கா
ணிய-காணுதற்காக—இஞ்சி-அந்நகரசூழுமதிலானது—வான்- ஆகாயத்
தின்மேலாக—ஓங்கி உயர்ந்து—எழுந்தது ஒத்துளது- எழுந்தாற்போன்று
ளது-எ-று. [இஞ்சி-எழுவாய். எழுந்ததொத்துளது-பயனிலை] (௭)

உடைத்து-அன்று- என்பவற்றின்கண் ஓகாரங்களைக்கூட்டுக.

அஞ்சொலார்பயிலும்-அயோத்திமாநகரமென்று நகர்க்குஞ்சொலாரையடைகொடுத்
துச்சொல்லியது. தேவருலகமும் அஞ்சொலாரால் அழகுபெற்றுவிளங்குமென எல்லாருஞ்
சொல்லுவராதலின் இவ்வஞ்சொலாரையுடைய நகர்போல அழகுடைத்தோ அன்றோவெ
ன்றுகாண எழுந்ததொக்குமென்பது இதனகருத்து.

கோலிடையுலகமளத்தலிற்பகைஞர்முடித்தலைகோடலின்மனுவி ... ...*
னூனெறிநடக்குஞ்செவ்வையின்யார்க்குநோக்கருங்காவலின்வலியின் ...*
வேலொடுவாள்விற்பயிற்றலின்வெய்யசூழ்ச்சியின்வெலற்கரும்வலத்தில் .*
சால்புடையுயர்விற்சக்கரநடத்துந்தன்மையிற்றலைவரொத்துளதே. ... *

(இ-ள்.) கோல்இடை-அளவுகோலால்—உலகம்- உலகத்தவரால்—அளத்த
லில்-அளக்கப்படுதலாலும்—பகைஞர் - அதன்கட்பகைஞருடைய—முடி-
முடிகளையுடைய—தலை- தலைகளை—கோடலின்- யந்திரங்களாற் கொள்ளப்
படுதலாலும்—மநுவின் நூல்நெறி - சிற்பநூலின்வழியே—நடக்கும்- செ
ய்விக்கும்—செவ்வையில் - அழகாலும்— இயார்க்கும் - எல்லோருக்கும்—
நோக்குஅரும் - கண்ணாலும்நோக்குதற்கரிய—காவலின் - காவலினாலும்—
வலியின் - பலத்தினாலும்—வேலொடு தாமேதொடர்ந்துகொல்லும்வேலு
ம்—வாள்- வாளும்—வில்- வில்லும்—பயிற்றலின்- பயின்றதினாலும்—வெ

பேருசூழ்ச்சியின் - விரும்பத்தக்க உபாயங்களையுடைமையானும்—வெலற்கு-பகைவரால்வெல்லுதற்கு—அரும் - அரிதாகிய—வலத்தின் - வெற்றியினையுடைமையானும்—சால்புடை - பெருமையுடைய—உயர்வின்- உயர்ச்சியினானும்—சக்கரம்- சக்கரங்கள்—நடத்துந்தன்மையில் - சுழலப்பட்டிருக்குந்தன்மையானும்—தலைவர் ஒத்துஉளது- மதில்அரசரையொத்திருக்கின்றது—எ-று. [மதில்-எழுவாய்.ஒத்துளது-பயனிலை.அரசர்-செயப்படுபொருள்]()

இது-சிலேடை உவமையாதலால் அரசரைக்குறிக்குமிடத்து கோவிடையுலகமளத்தல்-செங்கோலால் உலகத்தையாளுதல். பகைஞர் முடிந்தலைக்கோடலின்-பகைவர்தலைகளையறுத்தல்செய்கை. மநுவிதனெறி- மநுவாற்செய்தநூலநெறி வேவொடுவோன் விற்பயிற்றல். தொழிலைப்பயிற்றல். சூட்சி-விசாரித்தல், வலம் வெற்றி-உயர்வு மேம்பாடு சக்கரம்-ஆணைச்சக்கரம்.

மதிலினிடத்துச்சூழ்ச்சியாவது-புறத்தோரறியாமற் புகுதல் போக்குதற்குச்செய்தகருங்கைவழிமுதலானவை.

சினத்தயிற்கொலைவாள்சிலைமழுத்தண்டுசக்கரந்தோமரமுலக்கை... ... *
கனத்திடையுருமின்வெருவருங்கவண்கலென்றிவைகணிப்பிலகொதுகின் *
இனத்தையுமுவணத்திறையையுமியங்குங்காலையுமியலநினைவார் ... ... *
மனத்தையுமெறியும்பொறியுளவென்றுமற்றினியுணர்த்துவதெவனோ ...*

(இ-ள்.) சினத்து- போர்முகத்திற் கோபமுள்ள—அயில் - வேலும்—கொலை- கொலைசெய்யும்—வாள் - வாளும்—சிலை - வில்லும்—மழு - மழுவும்—தண்டு-தடியும்—சக்கரம் - சக்கரமும்—தோமரம் - கைவேலும்—உலக்கை-உலக்கையும்—கனத்து இடை-மேகத்தின்கண்விளங்கும்—உருமின்-இடியைப்போல—வெருவரும் - அச்சத்தைக்கொடுக்கும்—கவண்கல்என்றிவை-கவண்கல்லுமென்று சொல்லப்பட்ட இவை—கணிப்பு இல- எண்ணில்லாதன —கொதுகின் இனத்தையும்- கொசுகின் இனங்களையும்— உவணத்து இறையையும் - கருடனையும்—இயங்குங்காலையும்- செல்லுங்காற்றினையும்—இதம்அலதிங்குகளை —நினைவார் - நினைப்பவர்களுடைய—மனத்தையும்- மனத்தையும்—எறியும்- வெட்டத்தக்க—பொறியுளவென்றும்-இயந்திரங்களும்மதிலின்கணுளவென்றும்—இனி உணர்த்துவது எவனோ- அம்மதிற்காவலிவ்வாறென்று சொல்லுவதெவ்வாறு-எ-று [உணர்த்துவது - எழுவாய். எவன்-விளுப்பயனிலை. அயிலுக்குச்சினமாவது-தீப்போத.] (௰௨)

கொதுகினினத்தையும் உவணத்திறையையும் இயங்குங்காலையும் இதமல நினைவார் மனத்தையும் என்றது சிறுமை பெருமை. நுட்பம் அதிநுட்பத்தையும் உணர்த்திற்று.இதுவுமது காற்று-பரிசமுள்ளது. மனம்-பரிசமில்லாதது.இப்பொறிகள் சிற்பர்கள் இரும்புகளாற்செய்தமைத்தவை.

பூணிலும்புகழேயமையுமென்றினையபொற்பினின்றுயிர்நனிபுரக்கும்... *
யாணரொண்டிசைக்குமிருளறவிளைக்குமிரவிதன்குலமுதனிருபர் ... ...*
சேணையுங்கடந்துதிசையையுங்கடந்துதிகிரியுஞ்செந்தனிக்கோலு ... *
மாணையுங்கடத்துமாயினுமகருக்கணியெனவியற்றியதன்றே... ... ......*

செய்ய—மாமதில்- அப்பெரியமதிலை—வளைத்தல்- சூழ்ந்ததை—மானும்-ஒப்பாகும்-எ-று. [கானம் எழுவாய். ஒத்தது-பயனிலை. வளைந்தது- செயப்படுபொருள்.] (௰௬)

செந்தாமரைமலர்கள் மாதர்கள் முகங்களுடன் போர்செய்ய மதிலைச்சூழ்ந்துகொண்டதை ஒத்தது என்பதிதன்கருத்து.

மதில்வெளிப்புறமென்றதனால் அகழி யெனப்பொருள் கூறப்பட்டது.

சூழ்ந்தநாஞ்சில்சூழ்ந்தவாரைசுற்றுமுற்றுபாரெலாம் ... ... *
போழ்ந்தமாகிடங்கிடைக்கிடந்துபொங்கிடங்கர்மா... ... ...*
தாழ்ந்தவங்கவாரியிற்றடுப்பொணாமதத்தினா ... ... ... *
லாழ்ந்தயானைமீதெழுந்தழுந்துகின்றபோலுமே ... ... ... *

(இ-ள்)சூழ்ந்த-மிகுந்த—நாஞ்சில்-நாஞ்சில்களுடன்—சூழ்ந்த-சூழப்பட்ட—ஆரை-அம்மதிலை—சுற்றும்- சூழ்தலைப்பொருந்திய—முற்றுபார் எலாம்-எல்லாநிலத்தையும்—போழ்ந்த - அகழ்ந்ததுபோன்ற—மாகிடங்கிடை- பெரியஅகழியினிடத்து—கிடந்து-இருந்து—பொங்கு- பொங்குகின்ற—இடங்கர்மா- முதலைகள்உள்ளேயாழ்ந்து மீட்டுமேலெழுவது (எவ்வாறெனில்) —தாழ்ந்த- ஆழ்ந்த—வங்கம்-கப்பல்களையுடைய—வாரியில்-சமுத்திரத்தினிடத்தில்—தடுப்பொணா- தடுக்கவொண்ணாத—மதத்தினால்- மதமயக்கத்தினாலே—ஆழ்ந்த-அமிழ்ந்திய—யானை-யானைகள்—மீதெழுந்து- மேலெழுந்து—அழுந்துகின்றபோலும்- மீட்டும்அழுந்துகின்றனபோலிருக்கின்றன-எ-று. [முதலை-ஆழ்ந்தெழுதல்-எழுவாய். போலிருக்கின்றன-பயனிலை] ()

நாஞ்சில் ஆவது எப்புறத்தும் நடுவேயெய்தி மறைவுங்கூட்டு.

முதலை ஆழ்ந்தெழுவது யானையாழ்ந்தெழுவதுபோலிருக்கின்றதென்பது இதன் கருத்து.

நரும்வாளின்வாள்விதிர்தமெயிற்றிளம்பிறைக்குலம் ... ... *
பேரமின்னிவாய்விரித்தெதிர்ந்தகட்பிறங்குதீ ... ... ... *
சோரவொன்றையொன்றுமுன்றொடர்ந்துசீறிடங்கர்மா ...*
போரில்வந்துசீறுகின்றபோரரக்கர்போலுமே .. ... ...*

(வ-ள்.) நரும்வாளில்- நர்கின்றவாள்போல்—வால்விதிர்த்து- வாலைவிதிர்த்து—எயிறு - பற்களாகிய—இளம்- இளமைபொருந்திய—பிறைக்குலம்-பிறைக்கூட்டங்கள்—மின்னிப்பேர-ஒளிவிட்டுவிளங்க—வாய்விரித்து-வாயைத்திறந்துகொண்டு—எதிர்ந்த-எதிர்த்த—கண்-கண்களினின்றும்—பிறங்குதீ-விளங்குந்தீப்பொறிகள்—சோர-சொரிய—ஒன்றையொன்று-ஒன்றைமற்றொன்று—முன்றொடர்ந்து- எதிரிட்டுத்தொடர்ந்து—சீறு-சீறுகின்ற—இடங்கர்மா-முதலைகள் (விளங்குவதெவ்வாறெனில்)—போரில்வந்து-போர்க்களத்தின்கண்வந்து—சீறுகின்ற - ஒருவரையொருவர்பார்த்துச்சீறுகின்ற—போரரக்கர்-போர்செய்கின்றஅரக்கர்போலும் -எ-று. [முதலை - எழுவாய். போலும்-பயனிலை. அரக்கர்-செயப்படுபொருள்.] (௰௮)

பற்களது பன்மையைநோக்கி அதனுக்குவமையாகிய பிறையையும் பன்மையாகப்பிறைக்குலமென்றார்.

ஆருமன்னம்வெண்குடைக்குலங்களாவருங்கரா... ... ...*
கோளெலாமுலாவுகின்றகுன்றமன்னயானையாத்... ... .... *
தாளுலாவுபங்கயத்தரங்கமூர்துரங்கமா ... ... ... ... *
வாளும்வேலுமீனமாகமன்னர்சேனைமானுமே ... ... ...*

(இ-ள்.) ஆரும்-அவ்வகழியில்பயின்றுகொண்டிருக்கும்—அன்னம்-அன்னப்பட்சிகள்—வெண்குடைக்குலங்களா-வெண்குடைக்குலங்களாகவும்—வருங்கரா-அதிற்சஞ்சரிக்கும் முதலைகளெல்லாம்—கோளெலாம்-சூரியன்முதலியநவகோள்களும்—உலாவுகின்ற-ஊரும்படியான உயர்வுள்ள—குன்றம் அன்ன-மலையொத்த—யானையா-யானைகளாகவும்—தாளுலாவு - கொடிகள் பொருந்திய—பங்கயம்- தாமரைகளையுடைய—தரங்கமும்-அலைகளும்—துரங்கமா- குதிரைகளாகவும்—வாளும்- வாள்களும்—வேலும்-வேல்களும்—மீனமாக-மீனங்களாகவும்—மன்னர்சேனைமானும்- பொருந்தியமன்னர்சேனையையொத்துவிளங்கும் எ-று. [அகழி - எழுவாய். மானும்-பயனிலை சேனை-செயப்படுபொருள்] (௰௯)

தரங்கத்திற்குத் தாளுலாவு பங்கயமென அடைகொடுத்தது துரங்கமும்கலனைகடிவாளமுதலியனவற்றாற் புனையப்பட்டு நிற்றலென்று அறிதற்கென்க.

விளிம்புதெற்றிமுற்றுவித்துவெள்ளிகட்டியுள்ளுறப் ... ... *
பளிங்குபொற்றலத்தகட்டழுத்துறப்படுத்தபின்... ... ... *
தளிர்ந்தகற்றலத்தொடச்சலத்தினைத்தணித்துறத்... ... ... *
தெளிந்துணர்த்துகிற்றுமென்றறேவராலுமாவதே ... ... *

(இ-ள்) விளிம்பு-அவ்வகழியினருகே—தெற்றி-திண்ணைகள்—வெள்ளிகட்டி-வெள்ளியாற்கட்டி—முற்றுவித்து-முடிப்பித்து—உள்உற-உள்ளெலாம்பொருந்த—பொற்றலம்-பொன்தலமாகிய—தகடு-தகட்டினிடத்து—பளிங்கு- படிகம்—அழுத்துஉற- அழுத்தமுத்துப்பொருந்த—படுத்தபின்-படுத்திருத்தலினால்—தளிர்ந்த-விளங்கிய—கற்றலத்தொடு-அப்படிக்கல்லுடன்—அச்சலத்தினை-அவ்வகழியிலுள்ளநீரை—தணித்துஉற-தனித்துப்பொருந்த—தெளிந்து - இதுபடிகக்கல் இதுநீரெனப் பகுத்தறிந்து—உணர்த்துகிற்றுமென்றல்-சொல்லும்வாமென்பது—தேவராலுமாவதே - தேவர்களாலுமாகாது-எ-று. [உணர்த்துகிற்றுமென்றல்-எழுவாய். ஆவதோ-பயனிலை](௨௰)

தேவர்களாலுமாகாதென்றுசொல்லவே ஏனையோர் தெரிந்துணர்தமாட்டாரென்பது தானேபோதரும்-இதுவுமது,

அன்னநீரகன்கிடந்துசூழ்கிடந்தவாழியைத்... ... ... . *
துன்னிவேறுசூழ்கிடந்ததூங்குவீங்கிருட்பிழம் ... ... *
பென்னலாமிறும்புசூழ்கிடந்தசோலையெண்ணிலப் ... ...*
பொன்னின்மாமதிட்குமுத்தநீலவாடைபோலுமே... ... *

(இ-ள்) அன்ன - அத்தன்மையாகிய—நீர் - நீரையுடைய—அகல்-அகன்று—கிடந்து-அகழியை—சூழ்கிடந்த-சூழ்ந்துகிடக்கின்றனவாகிய—இறும்பு-மலைகள்—சூழ்கிடந்த - சூழ்ந்துகிடக்கும்—சோலை - வனமானது—ஆழி

வை-பெரும்புறக்கடலை—தன்னி - நெருங்கி—வேறுசூழ்கிடந்த- வேறாகச் சூழ்ந்துகிடக்கும்—தாங்கு-பொருந்திய—வீங்கு- மிகுந்த—இருள்- இருளினது—பிழம்பு - கூட்டம்—என்னலாம்-என்றுசொல்லும்படி ஆகும்—ஏயெனில்-என்னுமிடத்தில்—பொன்னின் - பொன்னாலாகிய—அம்மாமதிற்கு- அப்பெரியமதிலுக்கு—உடுத்த - சுற்றிய—நீலஆடைபோலும் - நீலத்திரைச்சீலையைப்போலும்-எ-று [சோலை-எழுவாய். போலும்-பயனிலை ஆடை-செயப்படுபொருள்.] (உ௧)

அகழியின்புறத்துச் சூழ்ந்திருக்குஞ்சோலைகள்பெரும்புறக்கடலைச் சூழ்ந்திருக்கும். இருள் போலிருக்கின்றதுமன்றிப் பொன்மதிலுக்காகச்சூழக்கட்டிய கறுப்புத்திரைச்சீலைபோலவிருக்குமென்றுங்கூறுக.

அகழியைச்சூழ்ந்த மலைகளுஞ் சோலைகளும் விளங்கிய தன்மை இவ்வாறென்பது இதன்கருத்து.

எல்லைநின்றவென்றியானையென்னநின்றமுன்னமால் ... ...*
ஒல்லையும்பர்நாடளந்ததாளின்மீதுயர்ந்தவால்... ... ... *
மல்லன்ஞாலம்யாவுநீதிமாறுறாவழக்கினு... ... ... ... ... *
நல்லவாறுசொல்லும்வேதநான்குமன்னவாயிலே .. ... *

(இ-ள்.) வாயில்-வாயில்கள்—எல்லைநின்ற-நான்குதிக்குகளிலுமிடத்திருக்கும்—வென்றி-வெற்றிபொருந்திய—யானை என்ன-யானைகள்போல—நின்ற-நிலைபெற்றுநின்றன அன்றியும்—முன்னம்- முற்காலத்தில்—மால்-திருமால்—ஒல்லை - விரைவாக—உம்பர்நாடு-மேலுலகத்தை—அளந்த - அளந்த—தாளின்-காலைப்போல—மீதுஉயர்ந்த - மேலாகவுயர்ந்தன (இவ்வாறுயர்ந்ததுமன்றி)—மல்லல் - வளப்பத்தையுடைய—ஞாலம்யாவும் - உலகங்களெல்லாம்—நீதிமாறுறா-நீதிமாறுறாத—வழக்கினால்- முறைமையினாலும்—நல்லவாறு - நன்னெறிகளை—சொல்லும்- சொல்லுகின்ற—நான்குவேதம்- நான்குவேதங்களையும்—அன்ன - ஒத்திருக்கின்றன—எ-று. [வாயில்-எழுவாய். அன்ன-பயனிலை. வேதம்-செயப்படுபொருள்] (உஉ)

பகைவரால் அழிக்கப்படாத திண்மையும் நிலைமையுமுடைய தென்பதுதோன்ற எல்லைநின்றவென்றியானையென்னநின்றவென்றும், நல்லமுறைமைகளை உலகத்தோர் அறிந்துகொண்டு ஒழுக்கத்தினின்று மாறுபடாமல் நடப்பதற்கு வேதங்கள்வழியாயிருப்பதுபோல உலகத்தோர் அறிந்து நடப்பதற்கு நன்னெறி இதன்வழியாகச் செல்லுவதினாலும் வேதமன்னவென்றுங் கூறினார்.

நாவில்பொற்றலத்தினிற்றவத்தினோர்கடங்குதாட் ... ... ...*
பூவுயிர்த்தகற்பகப்பொதும்பர்புக்கொதுங்குமால்... ... ...*
ஆவியொத்தவன்புசேவல்கூவவந்தணைந்திடா... ... ... ...*
ஓவியப்புறாவின்மாடிருக்கவூடுபேடையே... ... ... ... *

(இ-ள்.) ஆவியொத்த-தன்னுயிரொத்த—அன்பு-அன்பினையுடைய—சேவல்-ஆண்புறாவானது—கூவ-தான்கூவவும்—வந்து அணைந்திடா - வந்துசேராமல்—ஓவியம்-அக்கோபுரசிகரங்களில்சித்திரமாகச்செய்யப்பட்ட—புறாவின்மாடு- பெட்டைப்புறாவினிடத்தில்—இருக்க - இருக்கக்கண்டு—ஊடு- ஊடிய—பேடை-பெட்டைப்புறாவானது—நல்-நல்ல—தவத்தினோர்கள்-தவமுள்ளவர்கள்—தங்கும்-வாசமாயிருக்கும்—நாஇல்- குற்றமில்லாத—பொ

ஏழ்பொழிற்குமேழ்நிலத்தலஞ்சமைத்ததென்னநூ ... *
லூழுறக்குவித்தமைத்தவும்பர்செம்பொன்மேய்ந்துமீச்.
சூழ்சுடர்ச்சிரத்துநன்மணித்தசும்புதோன்றலால் ... *
வாழ்நிலக்குலக்கொழுந்தைமௌலிசூட்டியன்னவே... *

(இ-ள்.) ஏழ்பொழிற்கும்-ஏழுலகத்திற்கும்—ஏழ்நிலத்தலம்-ஏழுநிலத்தலத்தை—சமைத்ததென்ன- உண்டாக்கியதுபோல— நூல்- சிற்பநூலிற்சொல்லும்—ஊழுற - விதிக்குச்சரியாகப்பொருந்த—குவித்து அமைத்த- குவித்துக்கட்டிய—உம்பர்- அதன்மேல்—செம்பொன் - செம்பொன்னால்—மேய்ந்து-மூசுடுமேய்ந்து—மீசூழ்சுடர் - அதன்மேலொளிசூழ்ந்த—சிரத்து-சிகரத்தில்—நல்-நல்ல—மணி- மாணிக்கங்களாற்செய்யப்பட்ட—தசும்பு-குடங்கள்—தோன்றலால்-தோன்றவைத்தலால் (அக்கோபுரமானது) வாழ்-வாழும்—நிலக்குலக்கொழுந்தை- பூமிபிராட்டிக்கு—மௌலிசூட்டியன்ன-முடிசூட்டினாற்போன்றன-எ-று. [கோபுரம்-எழுவாய். அன்ன- பயனிலை. மௌலி-செயப்படுபொருள்] (உ௬)

இந்நகரத்தை முன்னம் நிலமகள் முகமோ என்றதற்கேற்பக் கோபுரத்தை மகுடமாகக்கூறினார்.

வேறு.

திங்களுங்கரிதெனவெண்மைதீற்றிய...... ... ...*
சங்கவெண்சுதையுடைத்தவளமாளிகை ... ... ...*
வெங்கடுங்கால்பொரமேக்குநோக்கிய .. ... ... *
பொங்கிரும்பாற்கடற்றரங்கம்போலுமே ... ... *

(இ-ள்.) திங்களும்- சந்திரனும்—கரிதென -கரிதென்றுசொல்லும்படி—வெண்மைதீற்றிய- வெளுமைநிறம் பொருந்தப்பூசிய—வெண்சங்கஞ்சுதை-வெண்சங்குச்சாந்தத்தையுடைய—தவளம் - தவளநிறமுடைய—மாளிகை-மாளிகைகள்(விளங்குதலெவ்வாறெனில்)—வெம்-வெவ்விதாகிய—கடுங்கால்பொர-கடுங்காற்றடித்தலால்—மேக்குநோக்கிய- மேனோக்கியெழுந்த—பொங்கு-பொங்கிவரும்—இரும்- பெருமையையுடைய—பாற்கடல்-திருப்பாற்கடலின்—தரங்கம்போலும் - அலைபோலுமிருக்கின்றது-எ-று [மாளிகை-எழுவாய். போலும்-பயனிலை தரங்கம்-செயப்படுபொருள்] (உ௭)

உம்மை சிறப்பும்மை கரியது எனற்பாலது விகாரவகையால் கரிதெனநின்றது. உடைய என்னும் பெயரெச்சவிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. கரிது என்றற்கு முதனிலை கருமை. பொர-எச்சத்திரிபு

புள்ளியம்புறவிறைபொருந்துமாளிகை ... *
தள்ளருந்தமனியத்தகடுமேய்ந்தன ... ... *
எள்ளருங்கதிரவனிளவெயிற்குழாம்... ... ... *
வெள்ளியங்கிரிமிசைவிரித்தபோலுமே ... ... *

(இ-ள்.) புள்ளி-புள்ளிநிறம்பொருந்திய—புறவு-புறாக்கள்வாசஞ்செய்யும்—இறை-இறப்புகளை—பொருந்தும்- பொருந்திய—மாளிகை-மாளிகை

ளின்மேல்—தள்ளருந்- நீக்குதற்கரிய—தமனியம்தகடுவேய்ந்தன- பதிக்கப் பட்டிருக்கும்பொற்றகடுகள்—வெள்ளியங்கிரியினை - வெள்ளிமலைமேல்—விரித்த- பரந்த—எள் அரும் - இகழ்ச்சியில்லாத—கதிரவன்-சூரியனுடைய—இளவெயிற்குழாம்போலும் - இளங்கிரிக்கூட்டத்தை யொக்கும்—எ-று. எ-ற்றதை [தகடுகள்-எழுவாய். போலும்-பயனிலை. வெயிற்குழாம்-செயப்படுபொருள்] (உஅ)

புள்ளிஅம்-வெள்ளிஅம்-இவற்றிலிருக்கும் அம் என்பவைசாரியை. புகு என்பது புற எனநின்று உச்சாரியைபெற்றுப்புறவுனநின்றது.

அம்-என்பதை அழகெனக்கொண்டால் என்னையெனின் சான்றோர்பெரும்பாலுமாட்சியின்மையின் சிறந்ததன்றென்க.

வயிரநற்கான்மிசைமரகதத்துலாஞ் ... ... *
செயிரறப்போதிகைகிடத்திச்சித்திர ... ... *
முயிர்பெறக்குயிற்றியவும்பர்நாட்டவர் ... ... *
அயிருறவிமைப்பனவளவில்கோடியே ... ... *

(இ-ள்.) வயிரம்-வயிரமணியாலாகிய—நல்-நல்ல—கால்மிசை- தூண்களின்மேல்—மரகதத்துலாம் - மரகதத்துலாக்கட்டைகளும்— செயிர்அற-குற்றமற—போதிகைகிடத்தி- மரகதப்போதிகைகளுங்கிடத்தி—உயிர்பெற-உயிரைப்பெற்றிருப்பதுபோற் றோன்றும்—சித்திரம்- சித்திரங்களை—குயிற்றிய-எழுதப்பட்டனவாகி—உம்பர்நாட்டவர்- தேவர்களும்—அயிர்உற - ஐயப்படும்படி—அளவுஇல்கோடி -அநேகங்கோடிமாளிகைகள்—இமைப்பன விளங்குவன-எ-று எ-ற்றதை. [மாளிகை எழுவாய். இமைப்பன-பயனிலை.

சந்திரகாந்தத்தின்றலத்தசந்தனப் ... ... ... *
பந்திசெய்தூணின்மேற்பவளப்போதிகை ... *
செந்தனிமணித்துலாஞ்செறிந்ததிண்சுவர் ... *
இந்திரநீலத்தவெண்ணில்கோடியே ... ... *

(இ-ள்.) சந்திரகாந்தத்தின்- சந்திரகாந்தக்கற்கள்பதித்த—தலத்த - நிலத்தையுடையனவாகியும்—பந்தி-வரிசையாக—செய்- திறத்திய—சந்தனத்தூணின்மேல்- சந்தனத்தூண்களின்மேல்—பவளப்போதிகை-பவளப்போதிகைகளையும்—செந்தனி மணித்துலாம்-இவர்த ஒப்பற்றமாணிக்கத்துலாக்கட்டைகளையும்—செறிந்த-நெருக்கமாகவுடையனவாகியும்—திண் -வலிதாகிய—சுவர்-சுவர்கள்—இந்திரநீலத்த- இந்திரநீலரத்தினங்களால்செய்யப்பட்டனவாகியும் விளங்குமாளிகைகள்—எண்ணில்கோடி- பலகோடியாம்—எ-று. [மாளிகைகள்-எழுவாய். எண்ணில்கோடியாம்-பயனிலை.] (௩0)

உம்மைகள் விகாரத்தாற்றொக்கன நீலரத்தினங்களுக்குள் இந்திரநீலரத்தினம் சிறந்தது. இதன்குணம் ஒருகுடப் பசுவின்பாலில் இம்மணியைப்போட்டால் அப்பால்முழுவதும் நீலநிறமாயிருக்குமெனச் சான்றோர் நூற்களிற்கூறியிருக்கின்றனர்.

பாடகக்காலடிபதுமத்தொப்பன ... ... *
சேடரைத்தழீஇயன செய்பவாயின... ... ... *

நாடகத்தொழிலனநடுவுதுய்யன... ... ... *
வாடகத்தோற்றத்தவளவிலாதன ... ... ...*

(இ-ள்.) பாடகம்- பாடகம்அணிந்த—கால்அடி-காலடிகளாகியபாதங்கள்—பதுமத்துஒப்பன-செந்தாமரைமலர்களையொப்பனவாகியும்—சேடரை இளைஞர்களை—தழீஇயன - தழுவிக்கொண்டிருப்பனவாகியும்—செய்யவாயின- செம்மைநிறம்பொருந்திய வாயினையுடையனவாகியும்— நாடகத்தொழிலன-நாடகத்தொழிலுள்ளனவாகியும்—நடுவுதுய்யன-வெளிபோன்றஇடையினையுடையனவாகியும்— ஆடகத்தோற்றத்த-பொன்னாலியன்றகாட்சியையுடையனவாயுமிராநின்றசித்திரமுள்ளமாளிகைகள்—அளவிலாதன-அளவில்லாதவைகளாயிருக்கின்றன—எ-று. அடி-கீழ்ப்புறமானது—பதுமத்துஒப்பன-தாமரைமலரைஒப்பனவாகி—பாடகம்-விசித்திரமானதொழிலுள்ளவைகளாகிய—கால் - தூண்களையுடையவைகளும்—சேடரைத்தழீஇயன - அஸ்திவாரத்தினால் ஆதிசேஷன்முடியைப் பொருந்தியவைகளும்—செய்யவாயின ஒழுங்குபடச்செய் தனையத்தவைகளும்—நாடி- யாவரும் வியப்புடன் பார்க்கும்படியான—அகத்தொழிலன - உட்புறத்தொழிலுள்ளவைகளும்—நடுவு நடுப்புறம்—துய்யன-இலைபூமாற்கும்பங்கள்போன்ற தொழிலையுடையனவுமுள்ளவைகளும்—ஆடகம் - பொன்மயமாகிய—தோற்றத்த - காட்சியையுடையனவாயும் விளங்காநின்ற மாளிகைகள்—அளவு இலாதன - அளவில்லாதவைகளாயிருக்கின்றனஎனப்பொருள்கூறுவதுமொன்று எ-று. [பாதங்கள்-எழுவாய். அளவிலாதன-பயனிலை] (௬௪)

ஒப்பனமுதலிய முற்றுகள் எச்சமுற்றுகள். தழுவிய என்பாலது விகாரவகையால் தழீஇயன எனநின்றது.

புக்கவர்கண்ணிணைபொருந்துறாதொளி ... ...*
தொக்குடன்றயங்கிவிண்ணவரிற்றோன்றலால் ... *
திக்குறநினைப்பினிற்செல்லுந்தெய்வவீ ... ...*
டொக்கநின்றிமைப்பனவும்பர்நாட்டினும் ... *

(இ-ள்.) புக்கவர்- அம்மாளிகைகளைப் பார்க்கப்புகுந்தவர்கள்—கண் இணை-இரண்டுகண்களும்—பொருந்துஉறா-இமைகள்பொருந்தாமல்—தொக்கு-அவர்கள்போலவே—ஒளியுடன்- இம்மாளிகையொளியோடுகலந்தொன்றாக—தயங்கி-விளங்கி—விண்ணவரின் - விண்ணவரைப்போல— தோன்றலால்-தோற்றுவித்தலால்—நினைப்பினில் - நினைத்தவளவில்—திக்குஉற- எட்டுத்திசைகளின்கண்ணும்—செல்லும்-செல்லுகின்ற—தெய்வவீடு-தெய்வவிமானத்தை—ஒக்கநின்று - ஒப்பாகத்தோன்றி—உம்பர்நாட்டினும் - மேலுலகமளவும்— இமைப்பன-ஒளிவீசுகின்றன-எ-று. [மாளிகைகள்-எழுவாய். இமைப்பன-பயனிலை.] (௬௫)

அணிபிறைமகளிருமலங்கல்வீரரும் ... ... ...*
தணிவனவறநெறிதணிவிலாதன ... ... ... *
மணியினும்பொன்னினும்வனைந்தவல்லது ... *
பணிபிறிதியன்றனபார்க்குமில்லையே ... ... *

(இ-ள்.) (அம்மாளிகைகள்) அணியிழை-ஆபரணங்களணிந்துள்ள — மகளிரும் - மாதர்களாலும் — அலங்கல்-மாலைகள் சூடிய — வீரரும்-வீரர்களாலும் — தணிவன - தழைப்பட்டிலாவைகளும் — அறநெறி தணிவு இலாதன - குறைவில்லாத தருமவழியினை உடையனவைகளுமாகி — மணியினும் - மணிகளாலும் — பொன்னினும் - பொன்னினாலும் — வனைந்தவல்லது - செய்யப்பட்டவைகளேயல்லாமல் — பிறிது - வேறொருபொருளால் — பணி இயன்றன - தொழிலசெய்யப்பட்டமாளிகைகள் — யாங்கும் இல்லை - எவ்விடத்துமில்லை என்-று. எ- ற்றனை. [மாளிகை-எழுவாய். இல்லை-பயனிலை] (௧௬)

வானுறநிமிர்ந்தனவரம்பில்செல்வத்த ... ... *
தானுயர்புகழனதயங்குசோதிய ... ... *
ஊனமிலறநெறியுற்றவெண்ணிலாக் ... ... *
கோனிகர்குடிகடங்கொள்ளைசான்றன ... ... *

(இ-ள்.) (அம்மாளிகைகள்) வான்உற - ஆகாயமளவும்பொருந்த — நிமிர்ந்தன - உயர்ந்தவைகளும் — வரம்புஇல் - அளவில்லாத — செல்வத்த - செல்வத்தையுடையவைகளும் — உயர்புகழன - உயர்ந்தபுகழையுடையவைகளும் — தயங்கும் - விளங்குகின்ற — சோதிய ஒளியையுடையவைகளும் — ஊனம் இல் - பழுதில்லாத — அறநெறியுற்ற - அறநெறியைப்பொருந்தியவைகளுமாய் — கோன் - செல்வங்களால் அரசனை — நிகர் - ஒத்த — எண்ணிலா - அளவில்லாத — குடிகள் தங்கொள்ளை - மிகுந்தகுடிகளால் — சான்றன - நிறைவுபெற்றன-எ-று [மாடங்கள்-எழுவாய் சான்றன-பயனிலை.] தான் இடைச்சொல். (௧௭)

அருவியிற்றாழ்ந்துமுத்தலங்குதாமத்த ... ... *
விரிமுகிற்குலமெனக்கொடிவிராயின ... ... *
பருமணிக்குழையனபசும்பொற்கோடிய ... *
பொருமயிற்கணத்தனமலையும்போன்றன ... *

(இ-ள்) (அம்மாளிகைகள்) அருவியில்தாழ்ந்து - அருவிகளைப்போலத்தாழ்ந்து — அலங்கும் - அசையும் — முத்துத்தாமத்த - முத்துமாலைகளையுடையனவாகியும் — விரிமுகில்குலமென - பரந்தமேகக்கூட்டம்போல — கொடி - நீலத்துகிற்கொடிகளால் — விராயின - கலக்கப்பட்டுள்ளவைகளாயும் — பருமணிக்குழையின - பருத்தமணிக்குழைகளையுடையனவாகியும் — பசும்பொன்கோடிய - பசும்பொன்மிகுதிகளையுடையனவாகியும் — பொரும் - பொருந்திய — மயில்கணத்தன - மயில்கூட்டம்போன்ற மாதர்களையுடையனவாயும் — மலையும்போன்றன - மலையினையும்ஒப்பனவாம்-எ-று. [மாளிகைகள்-எழுவாய். போன்றன-பயனிலை. மலை-செயப்படுபொருள்.] (௧௮)

பசும்பொன் - மாற்றுயர்ந்தபொன்.

அகிலிடுகொழும்புகையளாய்மயங்கின ... ... *
முகிலொடுவேற்றுமைதெரிகலாமுழுத் ... ... *
துகிலொடுநெடுங்கொடிச்சூலமின்னுவ ... ... *
பகலிடுமின்னணிப்பரப்புபோன்றவே ... ... *

(இ-ள்.) அகில்புகை - அகிற்கட்டையினால் இடப்பட்ட — கொழும்புகை - செழுமையாகிய புகையுடனே — அளாய்மயங்கின - கலந்தவைகளாய் — முகிலொடு - நீருண்ட மேகத்துடன் — வேற்றுமை - வேறுபாடு — தெரிகலா - தெரியாத — முழுத்துகிலொடு - பெரிய துகிற்கொடியுடன் — நெடுங்கொடிச்சூலமின்னுவ - நெடிய கொடிச்சூலங்கள் மின்னுகின்றவை — பகலிடு - பகற்போதிலிடுகின்ற — மின் மின்னலினுடைய — அணி - அழகிய — பரப்புபோன்றன - விரிவைப்போன்றிருக்கின்றன — எ-று. [சூலமின்னுவ - எழுவாய்: போன்றன - பயனிலை. மின்பரப்பு - செயப்படுபொருள்.] (௬௬)

அகிற்புகையுடன்கலந்த கொடியாடை மேகம்போன்றிருப்பதினால் அதைச்சேர்ந்தசூலம்பகலில்விளங்கு மின்னல்போன்றிருக்கின்றனவென்பது இதன் கருத்து.

துடியிடைப்பணைமுலைத்தோகையன்னவர் .... ... *
அடியிணைசிலம்புபூண்டரற்றுமாளிகைக் ... *
கொடியிடைத்தரளவெண்கோவைசூழ்வன ... ... *
கடியுடைக்கற்பகங்கான்றமாலையே ... ... *

(இ-ள்.) துடியிடை - துடிபோலுமிடையும் — பணைமுலை - பருத்தமுலைகளையும் — தோகையன்னவர் - மயில்போலுஞ்சாயலினையுமுடைய மகளிர்கள் — அடியிணை - பாதங்களிலே — சிலம்பு பூண்டு - சிலம்புகள் பூணப்பட்டு — அரற்றும் - ஒலித்துக்கொண்டிருக்கின்ற — மாளிகை - மாளிகைகளின்மேல்கட்டிய — கொடியுடை - கொடிகளினிடத்து — வெண் - வெண்மையாகிய — தரளம் கோவைசூழ்வன - முத்துமாலைகள் சூழ்வனவெல்லாம் — கடியுடை - மணம்பொருந்திய — கற்பகம் - கற்பகவிருக்ஷம் — கான்ற - கக்கிய — மாலையே - மாலையினையொத்தன எ-று. [கோவை - எழுவாய். ஒத்தன - பயனிலை. எஞ்சும் - மாலை - செயப்படுபொருள்.] (௬௭)

கான்வருநெடுவரைக்கதலிக்கானம்போற் ... *
கோணிமிர்பதாகையின்குழாந்தழைத்தன ... ... *
வாணனிமழுங்கிடமடங்கிவைகலும் ... ... *
சேண்மதிதேய்வதக்கொடிகடேய்க்கவே ... ... *

(இ-ள்.) நெடுவரை - பெரியமலையினிடத்து — கான்வரு - காணப்படுகின்ற — கதலிக்கானம்போல் - வாழைக்காடுபோல் — கோள்நிமிர் - நவக்கிரகமண்டலவரைக்கும்உயர்ந்த — பதாகையின்குழாம் - பதாகைத்திரள் — தழைத்தன - தழைத்திருக்கின்றவை — வாள் - ஒளி — நனி - மிகவும் — மழுங்கிட - மழுங்கும்படி — மடங்கி - வளைந்து — வைகலும் - நாடோறும் — சேண் - ஆகாயத்திற்செல்லுகின்ற — மதி - சந்திரன் — தேய்வது - தேய்கின்றதாயிருக்கின்றது அவ்வாறு தேய்வது — அக்கொடிகள் - அந்தக்கொடிகள் — தேய்க்கவே - தேய்ப்பதினாலோ யாங்கண்டிலம் - எ-று. (௬௮)

கொடிகளையுஞ் சந்திரன்தேய்கின்றதையுங்கண்டதன்றி அக்கொடிகள்தேய்க்கும்போதை யாங்கண்டிலமென்பதுகருத்து.

பதித்த—புரிசைப்பொன்மதில்-பொன்னாலாகியமதில்சூழ்ந்த—அயோத்தி யாருடை - அயோத்தியாநகரத்தை யாட்சியாகவுடைய—நிழலென - ஒளி போல—பொலியும்- விளங்குகின்றது—சேயிவான்சுடர் - வட்டமாகியசூரி யன்-எ-று. ஆம்-சாரியை [சுடர்-எழுவாய். பொலியும்-பயனிலை.] (௬௧)

எழுமிடத்துச்சூரியன் உதயமாகும்போது அகன்றஒளியைநீங்கி இடையொன்றி அயோ த்தியை யடுத்துவரும்போது ஒளியைப்பொருந்தி எற்படுபொழுதிடை யகற்காலம்நீங்கும் போது போதலின் ஒளியைநீங்கி நிற்றலின் அயோத்தியினொளியென்றுசொல்லும்படிபொலி யும் என்றுரைப்பதுமொன்று. சூரியனிடத்து இயல்பாக ஒளியிருக்குமானால் உதயமாகும் போதே யொளியிருக்கவேண்டும் அவ்வாறின்மையால் அயோத்திநகரத்து ஒளியைக்கொ ண்டே சூரியன்விளங்குமென்பது கருத்து. புரிசைப்பொன்மதில் ஒருபொருட்பன்மொழி.

ஆய்ந்தமேகலைவராப்பொன்மாளிகை ... ... *
வேய்ந்தகாரகிற்புகையுண்டமேகப்போய்த் ... *
தோய்ந்தமாகடனறுந்தூபநாறுமேற் ... ... *
பாய்ந்ததாரையினிலைபகரல்வேண்டுமோ .... *

(இ-ள்) ஆய்ந்த- திருத்தமாகச்செய்யப்பட்ட—மேகலையவர்- மேகலையி னையணிந்தமாதர்வாசஞ்செய்யும்—அம்-அழகிய—பொன்-பொன்னாற்செய் த—மாளிகை-மாளிகைகளிடத்து—வேய்ந்த- அளகத்திற்கு ஊட்டவும் பூசிக் கொண்டகளபம் புலரவும் அமைத்த—கார்- கருமையாகிய—அகிற்புகை-அ கிற்புகையை—உண்ட-பொருந்திய—மேகம் - மேகங்கள்—போய்-நீருண் ணச்சென்று—தோய்ந்த-படிந்த—மாகடல்-பெரியகடலானது—நறும் -ம ணத்தையுடைய—தூபம் - அப்புகைவாசனையே—நாறுமேல் - மணக்குமா னால்—பாய்ந்த - அம்மேகங்கள்பொழிந்த—தாரையினிலை- மழையினுடை யதன்மையை—பகரல்வேண்டுமோ- சொல்லவேண்டுமோ-எ-று. வேண்டுவ தில்லையென்பது குறிப்பெச்சம். [யாம்-தோன்றா-எழுவாய். பகரல்வேண்டு மோ-பயனிலை.]
(௬௨)

பொழிந்த வெனற்பாலதுதொடைநோக்கிப்பாய்ந்தவென நின்றது. அம்மேகங்கள்பொ ழித்தநீரும் மணக்குமெஃபதிதன்கருத்து.

குழவிசைமடந்தையர்குதலைக்கோதையர் ... *
மழலையங்குழலிசைமகரயாழிசை ... ... ... *
எழிலிசைமடந்தையரின்சொலின்னிசை ... ...*
பழையர்தஞ்சேரியிற்பொருநர்பாட்டிசை ... *

(இ-ள்.) குழலிசை- கடையொத்துவருகின்ற அளகத்தையுடைய—மடந் தையர்-பெண்களின்—குதலை - குதலைச்சொற்கள்—அம்-அழகிய—குழலி சை- வேய்ங்குழலினிசைபோலாம்—கோதையர் - கடைகூடிய அளகத்தை யுடையபெண்களின்—மழலை- மழலைச்சொற்கள்—மகரயாழிசை - மகரயா ழிசைபோலாம்—எழிலிசை-அழகுள்ளபருவமிசைந்த—மடந்தையர்-மாத ர்களுடைய—இன்-இனிய—சொல்இன்இசை- சொல்லாகிய இனியஇசையா னது—பழையர்தம் - கள்விலைஞருடைய—சேரியில் - சேரியிலிருக்கும்— பொருநர்-கூத்தருடைய—பாட்டிசை-பாட்டிசைபோலாம்-எ-று. [குதலை-

எழுவாய்-போலாம்-பயனிலை-வெய்ங்குழலிசை-செயப்படுபொருள். மழலை-எழுவாய் போலாம்-பயனிலை-மகரயாழிசை-செயப்படுபொருள். இன்சொல்-லின்னிசை-எழுவாய். போலாம்-பயனிலை, பாட்டிசை-செயப்படுபொருள் ]()

போலாமென் னுஞ்சொல் வருவித்துரைக்கப்பட்டது. மழலையாவது எழுத்துவடிவு பெறாத்தோற்ற மிளையவர் வார்த்தை ஆயினு மிம்மழலை பேரிளம்பெண்வரையி லுங்கூறத்தகும்

குதலை எழுத்துவடிவங்கூடாதபுன்சொல். குழலிசைமடந்தையர் வெய்ங்குழலிசையானது எழிலிசைமடந்தைய ரின்சொல் லின்னிசையை யொக்குமென்றும், குதலைக்கோதையர் மகரயாழிசைபொருநர்பாட்டிசையை யொக்குமென்றும் பொருள்கூறினும். அன்றியும்வேய்ங்குழலிசையும் மகரயாழிசையும் இன்சொ லின்னிசையும் பாட்டிசையும் அந்நகரத்தின்கண் விளங்குமெனப் பொருள்கூறினும் அமையும்.

கண்ணிடைக்கனல்சொரிகளிறுகாற்கொடு ..... *
மண்ணிடைவெட்டுவவெட்குமைந்தர்கள் ... *
பண்ணைகள்பயிலிடங்குழிபடைப்பன ... ... *
சுண்ணமக்குழிகளைத்தொடர்ந்துதூர்ப்பன ... *

(இ-ள்.) கண்ணிடை- கண்களினிடமாக—கனல் - தீப்பொறிகளை—சொரி-சொரிகின்ற—களிறு- யானைகள்—கால்கொடு - கால்களால்—மண்ணிடை- பூமியினிடத்து—வெட்டுவ - வெட்டுவன (அதனுல்)—வேட்குமைந்தர்கள்- விளையாட்டுகளைவிரும்புமைந்தர்கள்—பண்ணைகள்-கூட்டங்கள்—பயில்இடம் - விளையாடுமிடங்களில்— குழிபடைப்பன - குழிகளுண்டாகின்றன—சுண்ணம் - அவர்களணிந்துகொண்டிருக்கும் நறும்பொடிகளே—தொடர்ந்து - தொடர்ந்து வீழ்ந்து—அக்குழிகளைத்தூர்ப்பன - அந்தக்குழிகளைத் தூர்ப்பனவாம்—எ-று. [சுண்ணம்-எழுவாய். தூர்ப்பன-பயனிலை. குழிகள்-செயப்படுபொருள்.] (௪௧)

பற்றுகண்மடந்தையர்பயிற்றுவாரிடை ... ...*
சிந்துவமுத்தினமவைதிரட்டுவா .. ... ..... *
சுந்தமில்சிலதியராற்றுகுப்பைகள் ... ... ...*
சந்திரனொளிகெடத்தழைப்பதண்ணிலா ... *

(இ-ள்.) பந்துகள்-பந்துகளை—பயிற்றுவார்-ஆடுகின்றவர்களாகிய—மடந்தையர்இடை-மாதர்களிடத்தினின்றும்—முத்துஇனம்-முத்தினங்கள்—சிந்துவ-சிந்துவன—அவை-அம்முத்தினங்களை—அந்தம்இல்-அளவில்லாத—சிலதியர்-தாதிகள்—திரட்டுவார்- ஓரிடத்திற்சேர்ப்பார்கள்—ஆற்று- அவ்வாறு சேர்க்கப்பட்டனவாகிய—குப்பைகள் - குப்பைகள்—சந்திரன் - சந்திரனுடைய—ஒளி-பிரகாசமானது—கெட-மழுங்கும்படி—தண்- குளிர்ச்சிபொருந்திய—நிலா-ஒளியினுல்—தழைப்ப- தழைக்கப்பட்டிருப்பன-எ-று [குப்பை-எழுவாய். தழைப்ப-பயனிலை.] (௪௨)

அரங்கிடைமடந்தையாரோரவச் ... ... ...*
சுருங்கிடைக்கண்ணையிற்காமர்நெஞ்சினை ... ...*

உருங்குவமற்றவருயிரனவன்னவர் ... ... ... *
மருங்குல்போற்றெய்வனவளர்வதாசையே ... *

(இ-ள்.) மடந்தையர் - மடந்தையர்கள்—அரங்கிடை - நாடகசாலையினிடத்தில்—ஆடுவார் - ஆடுகின்றார்கள்—அவர் - அவர்களுடைய—கரும் - கருமைபொருந்திய—கடைக்கண் - கடைக்கண்களாகிய—அயில் - வேல்கள்—காமர் - காமுகருடைய—நெஞ்சினை - மனதை—உருங்குவ - வருத்துவன—அதனால்) மற்றவர் - அக்காமுகருடைய—உயிர்கள் - உயிர்களானவை—அன்னவர் - அம்மாதர்களுடைய—மருங்குல்போல் - இடைகள்போல—தேய்வன - மெலிகின்றன—ஆசை - அக்காமுகருக்குண்டாகு மாசையோ வெனில்—வளர்வது - மெலிவின்றி மேன்மேலும்விர்த்தியாகின்றது-எ-று. ஏ-ஈற்றசை [ஆசை - எழுவாய். வளர்வது - பயனிலை.] (௬௬)

உருக்குவவெனற்பாலது-உருங்குவ என மெலித்தல்விகாரமாயிற்று. மருங்குல்போற் றேய்வன என்றமையின் அம்மாதர் தனம்போல் ஆசைவளர்வன எனக்கூறினும்அமையும். கடைக்கண் - கண்ணினது கடையென ஆறும்வேற்றுமைத்தொகையாகக்கொள்க.

பொழிவனசோலைகள்புதியதேன்சில ... ... *
விழைவனதென்றலும்மிஞிறுமெல்லென ... ... *
நுழைவனவன்னவைநுழையத்தோடொடு ... ... *
குழைவனபிரிந்தவர்கொதிக்குங்கொங்கையே ... *

(இ-ள்) சோலைகள் - சோலைகளானவை—பொழிவன - பொழிவனவாகிய—புதிய - புதுமையாகிய—தேன் - தேனை—விழைவன - விரும்புகின்றவைகளாகிய—சிலமிஞிறு - சிலவண்டுகளின்இசையும்—தென்றலும் - தென்றற்காற்றும்—மெல்லென - மந்தகதியாக—நுழைவன - சாளரவழியால்நுழைகின்றன—அன்னவை - அவ்விரண்டும்—நுழைய - அவ்வாறுநுழைவதினால்—பிரிந்தவர் - பிரிந்திருக்குமடவாருடைய—கொதிக்கும் - வெதும்புகின்ற—கொங்கை - தனங்கள்—தோடொடு - வருத்தத்தோடு—குழைவன - மெலிகின்றன—எ-று. ஏ-ஈற்றசை. [கொங்கை - எழுவாய். குழைவன - பயனிலை.] (௬௭)

மிஞிறு - ஆகுபெயர். நுழைய - எச்சத்திரிபு.

இறங்குவமகரயாழெடுத்தவின்னிசை... ... *
நிறங்கிளர்பாடலானிமிர்வவவ்வழி... ... ... ... *
கறங்குவவள்விசிகருவிகண்முகிழ்த்து... ... ... *
உறங்குவமகளிரோடோதுங்கிள்ளையே... ... ... *

(இ-ள்.) இறங்குவ - வளைந்தனவாகிய—மகரயாழ் - மகரயாழினிடத்து—எடுத்த - விரலாலேகவர்ந்தெடுத்த—இன்னிசை - இனியஇசையானவை—நிறங்கிளர் - வண்ணம்விளங்குகின்ற—பாடலால் - மிடற்றோசையினதுபாட்டொடு—நிமிர்வ - ஒத்திருப்பன—அவ்வழி - அம்முறைக்குச்சரியாக—வள்விசி - வார்கட்டிய—கருவி - முழவங்கள்—கறங்குவ - ஒலிப்பன—(அவ்விசையைக்கேட்டு) மகளிரோடு - மடவாரோடு—ஓதும் - பேசும்—கிள்ளை - கிள்ளைகள்—கண்முகிழ்த்து - கண்களைமூடிக்கொண்டு—உறங்குவ - துயில்வனவாம் எ-று. [கிள்ளைகள் - எழுவாய். உறங்குவ - பயனிலை] (௬௮)

இறங்குவமகரயாழ்-அவரோகண ஆரோகண கிரமமுள்ள யாழெனப் பொருள்கூறினும் அமையும். இதுவுமன்றி-இறங்குவ மகரயாழென்பதற்கு உலகத்தவர் தலைபிறங்கிவணங்கச்செய்வனவாகிய மகரயாழெனக்கூறினும் அமையும். இவ்வாறு கூறுங்கால் இறங்குவ எனற்பாலது இறங்குவ என மெலித்தல்விகாரமாயிற்றெனக்கொள்க.— இதனை நரம்பின் யாழ்கொண்டு கடலகம வணக்கவுற்றுனென்னும் சிந்தாமணிக் காந்திருவதத்தையாரிலம்பகத்தில்-உ௱௰-வது-செய்யுளிற்காண்க. எடுத்த இன்னிசை-விரல் கவர்ந்தெடுத்த கீதம் என்பதனையுங்-காந்திருவதத்தையா ரிலம்பகத்திற்காண்க. பாடலால்-வேற்றுமைமயக்கம்.

மகரயாழ்-கசு-நரம்புகளையுடையது-இன்னேயிவ்வாறுபின் கின்னரமிதுனம்- அசுணம்-என்னுமபட்சிகளின் தன்மையும் ஏனையோர்தன்மையும் எடுத்துக்கூறவேண்டுவதில்லை.

குழைவரிச்சிலைநுதற்கொவ்வைவாய்ச்சியர் ... ... *
பதயுகத்தொழிற்கொடிபழிப்பிலாதன... ... ... *
குழைதமலர்த்தாமரையன்னதாளினுல் ... ... *
உழைபடச்சிவப்பனவுரவுத்தோள்களே .. ... *

(இ-ள்.) குழைத்-குழைதபொருந்தியதாய்—வரி-கட்டினையுடைய—சிலை-வில்லைத்தகவில்போன்ற—நுதல் - நெற்றியினையும்—கொவ்வை- கோவைக்கனிபோலும்—வாய்ச்சியர்-வாயினையுமுடையமடவார்களுடைய—பதயுகம்-சாந்திகக்கூத்து விநோதக்கூத்து என்னுமிருவகையாகிய—தொழிற்கொடு -பரதத்தொழிலபயின்று—பழிப்புஇலாதன- பழிப்பில்லாதனவாகிய— தழை-இதழ்கள்நெருங்கிய—மலர்த்தாமரையன்ன - செந்தாமரைமலரையொத்த—தாளினால் - பாதங்களால்—உழைபட- உதைபடுதலினுமே— உரவுத்தோள்கள்-ஆடவர்களுடையவலியதோள்கள்—சிவப்பன- செம்மைநிறப்படைப்பன-எ-று. ஏ-ஈற்றசை. [தோள்கள்- எழுவாய். சிவப்பன-பயனிலை] (௬௯)

இது மனைவியினுடைய ஊடலைநீக்கத் தொடங்கியகாலத்தில்நிகழ்ந்தசெய்கை. அக்காலத்து உதைக்கலால் மகளிர்க்குக் குற்றமில்லையென்பது அறநூற்றுணிபு. தலைமகளுந்தலைமகளுக்கோரமரிக்கட் கூடியிருந்தவழி அவன்மாட்டுப் புலத்தற்காரண மில்லையாகவும் காதல்கைம்மிகுதலானுணரியதோர் காரணமுளதாக வுட்கொண்டதனை யவன்மேலேற்றி யவள் ஊடுதல்-கூத்திருவகை யென்பதனைச்சாந்திகக்கூத்தே விநோதக்கூத்தென்றாய்ந்துறவகுத்தனனாகநாதியர்க்குரனே-என்னுஞ் சூத்திரத்தாலுணர்க இதனைவிரித்துரைப்பிற்பெருகும்-காந்திருவதத்தையாரிலம்பகம் -௱அ௰-வது-செய்யுளுரையில் கண்டுகொள்க-பரதம்-என்பது-விகாரவகையால் பதமெனநின்றது.

பொழுதுணர்வரியவப்பொருவின்மாநகர்த் ... *
தொழுதகைமடந்தையர்சுடர்விளக்கெனப்... ... *
பழுதறுமேனியைப்பார்க்குமாசைகொல்... ... *
எழுதுசித்திரங்களுமிமைப்பிலாதவே... ... *

(இ-ள்.) பொழுதுஉணர்வுஅரிய -பொன்மணியொளிகளின்மிகுதியால்பகற்பொழுதும் இராப்பொழுதும் அறிதற்கரிய—பொருவில் - ஒப்பில்லாத—அம்மாநகர் - பெரிய அந்நகரிடத்திராநின்ற—தொழுதகை - கற்பினால்தொழத்தக்க தன்மையினையுடைய—மடந்தையர்-மாதருடைய—சுடர்-ஒளிபொருந்திய—விளக்கென-விளக்கைப்போல—பழுதுஅறு-குற்றமற்ற—மேனியை- சரீரத்தை—பார்க்கும்- பார்க்கவேண்டுமென்கிற—ஆசைகொல்-ஆசையினாலோ—எழுது-மாளிகைகளில்எழுதிய—சித்திரங்க[illegible]வியங்

கரும்—இமைப்பு இலாத - இமைப்பில்லாத தன்மையையுடையன—எ-று. வேற்றுமை [சித்திரம்-எழுவாய். இமைப்பிலாத- பயனிலை.] சொல்-ஐபத்தின் கண் வந்தது. (௫௰)

மணியொளி-நிலவொளியைப் மழுக்குவதினால் பொழுதுணர்வரியவென்றார், நல்லாரணி கலம்பகலைச்செய்ய என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளானுமுணர்க.

தணிமலர்த்திருமகடயங்குமாளிகை... ... ...*
யிணையொளிபரப்பிநின்றிருடுரப்பன ... ... *
திணிசுடர்நெய்யுடைத்தீவிளக்கமோ.. ... ...*
மணிவிளக்கல்லமகளிர்மேனியே ... ... ...*

(இ-ள்.) தணி - செழுமையாகிய—மலர் - மலரின்கண்வாழும்—திருமகள் - திருமகளானவள்—தயங்கும் - விளங்காநிற்கும்—மாளிகை - மாளிகைகளானவை—இணர்-கற்றையாகிய—ஒளி- ஒளிகளை—பரப்பிநின்று-விரித்துநின்று—இருள்-இருளை—துரப்பன நீக்குகின்றன—திணி- நெருங்கிய—சுடர்-சுடர்பொருந்திய—நெய்யுடை- நெய்யையுடைய—தீவிளக்கமோ தீவிளக்கங்களினொளியோ—மணிவிளக்கோ - மாணிக்கதீபங்களின் ஒளியினோ—அல்லன-இவ்விரண்டுமல்ல—மகளிர்மேனியே - மாதர்களுடைய இயல்பான மேனியின் ஒளியினையோட்டுவன - எ-று. ஏ-தேற்றமை. [மாளிகை-எழுவாய். ஓட்டுவன-பயனிலை இருள் செயப்படுபொருள்.] (௫௧)

மாளிகையினின்றும் ஒளிபரந்து இருளைத்துரக்காநின்றன. அவ்வொளி தீவிளக்கொளியோ-மணிவிளக்கொளியோ அல்ல,மாதர்மேனியொளியேயெனக்கூறுவதுமொன்று.
மாதர்கள்மேனியிலொளி இருவகையொளியினுஞ்சிறந்ததென்பதுஇதன்கருத்து

பதங்களிற்றண்ணுமைபாணியண்ணுற... ... ...*
விதங்களின்விதிமுறைசதிமிதிப்பவர் ... ... *
மதங்கியர்சதிவகுத்துக்காட்டுவ... ... ... *
சதங்கைகளல்லனபுரவித்தார்களே... ... ... *

(இ-ள்.) பதங்களில்-கிரமங்களில்—தண்ணுமை-மூழவமும்—பாணி-தோரியமடந்தையர்பாடும் இசைப்பாட்டும்—பண் - யாழ்நரம்பினிசையும்—உற-ஒத்து ஒலிக்க—விதங்களின்-அபிநயவிதங்களுடன்—விதிமுறை-பரதசாஸ்திரமுறைமைப்படி—சதிமிதிப்பவர்-ஜதிமிதிப்பவர்கள்—மதங்கியர்-பதினாறுவயதுள்ளபெண்களாம்—அச்சதி- அவர்களாடும்அந்தஜதியை—வகுத்துக்காட்டுவ-வகைப்படுத்திக்காட்டுமவை—சதங்கைகள் அல்லன- அவர்கள்கால்களில் அணிந்திருக்குஞ் சதங்கைகளேயல்ல—புரவித்தார்கள் -மேற்சொல்லியமுறைமைப்படி ஆடுங்குதிரைகளின்கழுத்துகளில் அணியப்பட்டிருக்குங் கிங்கிணிமாலைகளேவகுத்துக்காட்டும்-எ-று. [புரவித்தார்-எழுவாய்.காட்டும்-பயனிலை. சதியை-செயப்படுபொருள்] (௫௨)

கூத்தினைச் சதியென்றது ஆகுபெயர்- வலத்தாள் முன்மிதித்து அரங்கிலேறிக் கைத்தலங் காட்டி ஆடுதல் மரபாதலால் சதிமிதிப்பவரென்றார்,

இதற்குத்தலைவர்த்தனையென்றுபெயர். மிதித்தலென்னுங் காரணம் கூத்தாகிய காரியத்தைக்காட்டிநின்றது, தோரியமடந்தையர் ஒத்துப்பாடுகின்றவர்கள். அபிநயமாவது-கதை

தருவாது பாட்டுகளின்பொருள்தோன்றக் கைகாட்டி அபிநயப்பது-இதுஅந்நகரத்திலுள்ள மும்பரத்தின்சிறப்புகூறியது.

மூளைப்பன முறுவலம் முறுவல்வெந்துயர் ... ...*
விளைப்பன வன்றியுமெலிந்து நாடொறு ... ... *
மிளைப்பன நுண்ணிடையிளைப்பமென்முலை... ...*
திளைப்பன முத்தொடுசெம்பொனாரமே ... ...*

(இ-ள்.) முறுவல்-அம்மதங்கியர் முகத்தினிடத்து புன்னகைகள்—மூளைப்பன உண்டாகுவன—அம்முறுவல் - அப்புன்னகைகள் (காமுகர்க்கு)—வெந்துயர்-வெந்துயரத்தை—விளைப்பன- உண்டாக்குவன—அன்றியும்-அதுவன்றியும்— நுண்இடை - அம்மதங்கியருடைய நுண்ணிய இடைகள்—நாடொறும்- நாளுக்குநாள் சிறியவாக—மெலிந்து-வருந்தி—இளைப்பன-சுருங்குவன—இளைப்ப-அவைகள்சுருங்கும்படி—மென்முலை-அம்மடவாருடைய மெத்தென்றதனங்களினிடத்து—முத்தொடு-முத்துவடமும்—செம்பொன் -செம்பொன்னாலாகிய—ஆரமும்- பதக்கங்களும்—திளைப்பன-பொருந்துவனவாம்- எ-று [முத்தும் பொன்னும்-பயனிலை. திளைப்பன-பயனிலை.] ( )

மாதர்கள் முறுவலைக்கண்டு ஆளைப்பதுமன்றி அவர்கள் இடையினைக்கண்டும் மெலிவா மெலிகின்றார்களென்பது இதன்கருத்து. இதனைச்சோம்பிக்கொதுங்கியமஞ்ஞையென்னு ந்திருக்கோவையாராலும் உணர்க.

இடையிடையெங்கணுங்களிப்பறாதன ... ... ... *
நடையிளவன்னங்கணளினநீர்க்கயல் .. ... ...*
பெடையிளவண்டுகள்பிரசமாந்திடுங் ... ... *
கடகரியல்லன்மகளிர்கண்களே ... ... ... *

(இ-ள்.) இடையிடையெங்கணும்- இடந்தோறும் இடந்தோறும்—களிப்பறாதன-களிப்புநீங்காதனவாயிருப்பவை—நடை - அழகான நடையினையுடைய—இள அன்னங்கள்- மடவன்னங்களும்—நளினநீர்க்கயல்-தாமரைகள் பொருந்திய நீர்த்தடாகத்தில்வாழும் சேல்மீன்களும்—பெடை - பெட்டைவண்டுகளும்—இளவண்டுகள்- இளமையாகிய ஆண்வண்டுகளும்—பிரசம்- தேனினை—மாந்திடும்-உண்ணுகின்ற—கடகரி- மதச்சுவட்டினையுடைய யானைகளும்—அல்லன- இவைகளுமன்றி—மகளிர்-மாதர்களுடைய—கண்கள்- பார்வைகளுமாம்—எ-று. ஏ-ஈற்றசை. [அன்னங்கள்-கயல்-வண்டுகள்-கடகரி-கண்கள்-இவை எழுவாய். களியறாதன-பயனிலை.] (௫௭)

மேற்கூறியவைகளெல்லாம் வயல்களினிடத்தும், வாவிகளினிடத்தும், பொழில்களினிடத்தும், களிப்புடன் சஞ்சரிக்குமென்பது இதன்கருத்து.

நளினம் இடையெங்கணும் தாமரைமலர்களிடத்தெங்கும் களிப்புநீங்காம லிருக்கின்றவை. நடையிளஅன்னங்கள்- நீர்இடையெங்கணுங்களிப்புநீங்காமலிருக்கின்றவை. சேல்மீன்கள்-பெடையிளவண்டுகள் அந்தத்தாமரை மலர்களில் பிரசமாந்திடும். கடகரி-நீர் மாந்திடும். மாதர்கண்களோவென்றால் களியறாமலிருக்கும் என்றுரைப்பினும் அமையும்.

தழல்விழியாளியுந் துணையுந்தாழ்வரை... ... ... *
முழைவழி மழகிரி நிகர்களிற்றின் மும்மத ... ... *

மழைவிழும் விழுந்தொறு மண்ணுங்கீழுறக் ... ... *
குழைவிழு மதில்விழுங் கொடித்திண் டேர்களே ... *

(இ-ள்.) தழல்-தீப்பொறியைக்கக்குகின்ற—விழி-விழியையுடைய—ஆளியும்-சிங்கமும்—துணையும்-அதன்பேடையும்—முழைவிழை-விரும்புகின்ற குகைகள்பொருந்திய—தாழ்வரை-தாழ்வரையிணையுடைய—கிரிநிகர்-மலைபொத்த—களிற்றின்-யானையினுடைய—மும்மதம்-மும்மதநீரும்—மழைவிழும்-மழைபோலவிழும்—விழுந்தொறும்-அம்மதம்விழுந்தோறும்—மண்ணும்-பூமியும்—கீழ்உற-ஆழமுற—குழைவிழும்-சேறுவிழும்—அதில்-அச்சேற்றில்—கொடி-கொடிகளையுடைய—திண்தேர்-வலியதேர்கள்—விழும்-விழாநிற்கும்-எ-று. [தேர்-எழுவாய். விழும்-பயனிலை.] (௫௫)

மழையுங் குழையுந் தேர்விழுதற்குக் காரணமாகநின்றன.

ஆடுவார்புரவியின்குரத்தையார்ப்பன... ... ... ... *
சூடுவாரிகழ்ந்தவத்தொங்கன்மாலைக... ... ... ... *
ஓடுவாரிழுக்குவவூடலூடுறக்... ... ... ... *
கூடுவார்வனமுலைகொழித்தசாந்தமே... ... .... *

(இ-ள்) சூடுவார்-வேறுமாலைதரித்துக்கொள்ளுகின்றவர்களால்—இகழ்ந்த-நீக்கிவிடப்பட்ட—அத்தொங்கல்மாலைகள்-அத்தொங்கலாகியமாலைகள்—ஆடு-ஆடுகின்ற—வார்-வார்கட்டிய—புரவியின்-குதிரைகளின்—குரத்தை-குளம்புகளை—ஆர்ப்பன-கட்டுவன—ஊடல்-ஊடலானது—ஊடு உற-தங்கள்மனதிலேபொருந்த—கூடுவார்-பின்கூடுகின்றவர்களாகியமாதர்களுடைய—வனம்-அழகிய—முலை-தனங்களினின்றும்—கொழித்த-நீக்கிவிடப்பட்ட—சாந்தம்-சந்தனங்கள்—ஓடுவார்-வீதியிலோடுகின்றவர்களை—இழுக்குவ-ஓடவொட்டாமல்வழுக்குவன எ-று. [மாலை-எழுவாய். ஆர்ப்பன-பயனிலை. குரம்-செயப்படுபொருள். சாந்தம்-எழுவாய். இழுக்குவ-பயனிலை. ஓடுவார்-செயப்படுபொருள்.] (௫௬)

தொங்கல்-மாலை-இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

இளைப்பருங்குரங்களாலிவுளிபாரினைக்...... ......*
இளைப்பனவவ்வழிகிளர்ந்ததூளியின் ... ... ... *
ஒளிப்பனமணியவையொளிரமீதுதேன் ... ...*
துளிப்பனகுமரர்தந்தோளின்மாலையே ... ... *

(இ-ள்.) இளைப்பு அரும்-இளைப்பில்லாத—குரங்களால்-குளம்புகளினாலே—இவுளி-குதிரைகளானவை—பாரினை-பூமியை—இளைப்பன-இளைக்கின்றன—அவ்வழி-அவ்விடத்து—கிளர்ந்த-மேலெழுந்த—தூளியின்-தூளியினாலே—குமரர்தம்-அக்குதிரைகளையேறிவரு மைந்தர்கள் அணிந்துகொண்டிருக்கும்—மணி-மணிகள்—ஒளிப்பன-மறையப்படுவனவாம்—அவை-அம்மணிகள்—ஒளிர்-விளங்கும்படி—தோளின்மாலை-அக்குமாரர்கள் தோளிலணிந்திராநின்ற பூமாலைகள்—மீது-அம்மணிவடங்கள்மேல்—தேன்-தேனை—துளிப்பன-சிந்துவனவாம்-எ-று. [மாலை-எழுவாய். துளிப்பன-பயனிலை. தேனை-செயப்படுபொருள்.] (௫௭)

விலக்கருங்கரிமதம்வேங்கைநாறுவ... ... ... *
குலக்கொடிமாதர்வாய்குமுதநாறுவ ... ... ...*
கலக்கடைகணிப்பருங்கதிர்கணாறுவ ... ... *
மலர்க்கடிநாறுவமகளிர்கூந்தலே ... ...... *

(இ-ள்.) விலக்கு அரும்- விலக்குதற்கரிய—கரி-யானைகளினுடைய—மதம்-மதநீர்கள்—வேங்கை- வேங்கைப்பூப்போல— நாறுவ - நாறுவனவாம்—கொடி - பூங்கொடிபோன்ற—குலமாதர்- குலமகளிருடைய—வாய்-வாய்கள்—குமுதம்- செவ்வல்லிமலர்போல—நாறுவ - தோன்றுவனவாம்—கலக்கடை-அவர்களணிந்திருக்கும் ஆபரணங்களினிடத்து—கணிப்பு அரும்-அளவிடுதற்கு அரிய—கதிர்கள்-ஒளிகள்—நாறுவ - தோன்றுவனவாம்—மலர்க்கடி-மலர்மணம்—நாறுவ-கமழ்வன—மகளிர்கூந்தல்- அம்மகளிர்கூந்தல்களினிடத்து—எ-று. [மதம்-வாய்-கதிர்-கடி-எழுவாய். நாறுவ-பயனிலை ] (ருஅ)

குமுதம்நாறுவ என்பது மணப்பனவென்றுங் கூறப்படும்.

கோவையிந்நகரொடெண்குறிக்கலாதவத் ... ...*
தேவர்தந்நகரினைச்செப்புகின்றதென்... ... *
யாவையும்வழங்கிடத்திகலியிந்நகர்... ... ... *
ஆவணங்கண்டபினளகைதோற்றதே... ... ...*

(இ-ள்.) இக்கோநகர்-இவ்விராசநகரத்தோடு ஒப்பாமென்று—எண்-எண்ணத்திலும்—குறிக்கலாத-குறிக்கவொண்ணாத—அத்தேவர்தம்நகரினை- தேவர்களுடைய நகரமாகிய அந்த அமராவதியை—செப்புகின்றது என்-ஒப்பெடுத்துச்சொல்லுவதெவ்வாறு—இந்நகர் ஆவணம்- இவ்வயோத்தியின்கடைவீதியானது—யாவையும்-எல்லாப்பொருள்களையும்—வழங்கிடத்து- வழங்கும்போது—இகலி -அதனோடுஉள்ளேபகைத்து—கண்டபின் - அதன் தன்மையைக்கண்டபின்பு—அளகை- அளகையானது—தோற்றது -தோல்வியடைந்தது—எ-று [அளகை-எழுவாய். தோற்றது-பயனிலை.] (ருகூ)

இந்நகரத்தின் ஆவணத்தைக்கண்டு அளகைதோற்றதென்றால் இந்நகரத்துக்கும் ஒப்பாகாத தேவருலகத்தை இந்த ஆவணத்துக்கு ஒப்பென்று எவ்வாறுசொல்லலாம் எனமுடிக்க—ஆவணவீதியில் எல்லாப்பொருளும் நிறைந்திருப்பதினால் இந்நகர் வீதிகளுள் ஆவணவீதி சிறந்ததாயிற்று. கோவை யென்பதிலிருக்கும் ஐகாரத்தைச் சாரியையாக்கி இக்கோநகரெனப்பதமாறுக.

அதிர்கழலொலிப்பனவயிலிமைப்பன... ... *
கதிர்மணியணிவெயில்கால்வமான்மத ... ... *
முதிர்வுறக்கமழ்வனமுத்தமின்னுவ... ... ... *
மதுகரமிசைப்பனமைந்தரீட்டமே... ... ...*

(இ-ள்.) மைந்தரீட்டம்- அந்நகரின்கண்வாழும் மைந்தர்கூட்டத்தில்—அதிர்கழல்-அதிருங்கழல்கள்—ஒலிப்பன-சத்திப்பன—அயில்-வேலாயுதங்கள்—இமைப்பன-பிரகாசிப்பன—கதிர்- கிரணங்கள்விடுகின்ற—மணி - மணிகளாலியன்ற—அணி- ஆபரணங்கள்—வெயில்- ஒளியை—கால்வ- கக்குவன—முதிர்வு-மிகுதிபொருந்த—மான்மதம்- கஸ்தூரிகள்—கமழ்வ- மணப்ப

ன—முத்தம்-முத்துமாலைகள்—மின்னுவ-பிரகாசிப்பன—மதுகரம்-வண்டுகள்—இசைப்பன-இசைபாடுவன—எ-று. (௬௰)

ஆங்காங்கு எழுவாயும் பயனிலையும் முடித்துக்கொள்க அதிர்கழல்கள் ஒருமொழியாகக் கொள்க.

வளையொலிவயிரொலிமகரவீணையின்... ... ...*
கிளையொலிமுழவொலிகின்னரத்தொலி... ... *
துளையொலிபல்லியந்துவைக்குஞ்சும்மையின்... *
விளையொலிகடலொலிமெலியவிம்முமே... ... *

(இ-ள்.) வளைஒலி-சங்கின் ஓசையும்—வயிர்ஒலி-ஊதுகொம்பின் ஓசையும்—மகரவீணையின் கிளைஒலி-மகரயாழின்கட்டியதந்தியின் ஓசையும்—முழவு ஒலி-மத்தளங்களின் ஓசையும்—கின்னரத்துஒலி-கின்னரத்தோசையும்—துளைஒலி தாரைசின்னமுதலிய துளைக்கருவிகளின் ஓசையும்—பல்இயம்-இசைகளையன்றிப்பலவாத்தியங்களும்—துவைக்கும்-சத்திக்கும்—சும்மையின்-ஆரவாரத்தால்—விளை-உண்டாகும்—ஒலி-ஓசையும்—கடலொலி-கடலோசையானது—மெலிய-கீழ்ப்பட—விம்மும்-அந்நகரின்கண்மேற்படும்-எ-று. [ஒலிகள்-எழுவாய். விம்மும்-பயனிலை] (௬௧)

மன்னவர்தருதிறையளக்குமண்டப ... ... *
அன்னமென்னடையவராடுமண்டப ... ... ... *
உன்னருமருமறையோதுமண்டபம் ... ... *
பன்னருங்கலைதெரிபட்டிமண்டபம்... ... ... *

(இ-ள்) மன்னவர்-மற்றதேயத்தரசர்கள்—தரு-கொண்டுவருகின்ற—திறையளக்கும்-திறைப்பொருளையளக்கும்—மண்டபம்-மண்டபங்களும்—அன்னம்-அன்னநடைபோலும்—மெல்-மெத்தென்னும்—நடையவர்-நடையையுடையமடவார்—ஆடும்மண்டபம்-ஆடுகின்றநிருத்தமண்டபங்களும்—உன் அரும்-இவ்வளவுடையதென நினைத்தற்கு அரிய—மறை-வேதங்கள்—ஓதுமண்டபம்-ஓதுமண்டபங்களும்—பன்னு-சொல்லுகின்ற—அருங்கலைதெரி-அரியகலைகளை ஆராய்ச்சிசெய்கின்ற—பட்டிமண்டபம்-கல்விமண்டபங்களும்இருக்கும்-எ-று. [மண்டபம்-எழுவாய். இருக்கும்-பயனிலை] (௬௨)

இரவியிற்சுடர்மணியிமைக்குந்தோரணத்... ...*
தெருவினிற்சிறியனதிசைகள்சேண்விளங் ... *
கருவியிற்பெரியனவாரணத்தானங்கள்... ... ...*
பரவையிற்பெரியனபுரவிப்பந்தியே... ..... *

(இ-ள்.) சுடர்மணி-ஒளியுள்ளமணிகள்—இரவியில்-சூரியனைப்போல—இமைக்கும்-பிரகாசித்துக்கொண்டிருக்கும்படியான—தோரணம்-தோரணங்களையுடைய—தெருவினில்-தெரிவைக்குறிக்குமிடத்தில்—திசைகள்-திக்குகள்—சிறியன-சிறியனவாம்—சேண்-தூரத்தினின்றும்—விளங்கும்-விளங்கிவரும்—அருவியின்-மலையருவியினும்—ஆனை-ஆனைகளின்—தானங்கள்-மதநீர்கள்—பெரியன-பெரியனவாம்—பரவையில்-கடலினும்—புரவி

ப்பந்தி-குதிரைப்பந்திகள்—பெரியன-பெரியனவாம்-எ-று. [திசைகள்-ஆசனங்கள்- பந்தி-இவைகளை எழுவாயாகக்கொண்டு ஆம்என்னும்ஒருசொல்வருவித்து அதனைப்பயனிலையாகக்கொள்க.] (௫௩)

சூளிகைமழைமுகிறொடக்குந்தோரண... ... *
மாளிகைமலர்வனமகளிர்வாண்முகம்... ... ....*
வாளிகளன்னவைமலர்வமற்றவை... ... ... ...*
யாளிகளன்னவர்நிறத்திலாழ்பவே... ... ... *

(இ-ள்.) சூளிகை- சூளிகையிலுள்ள—மழை- குளிர்ச்சிபொருந்திய—முகில் -மேகத்தை—தொடக்கும்- அளாவுகின்ற—தோரணம்- தோரணங்கள்கட்டிய—மாளிகை-மாளிகையின்சாளரங்கள்—மகளிர்- மகளிர்களுடைய—வாள்- ஒளிபொருந்திய—முகம்-முகங்களை—மலர்வன - மலர்வன—அன்னவை-அம்முகங்கள்—வாளிகள் -அம்புகளை—மலர்வ- மலர்வன—மற்றவை- அவ்வம்புகள்—ஆளிகள்-சிங்கங்களை—அன்னவர்-ஒத்தஆடவர்கள்—நிறத்தில்-மார்பில்—ஆழ்ப-ஆழ்வனவாம்-எ-று [வாளிகள்- எழுவாய் ஆழ்ப- பயனிலை.] ( )

சாளரங்களினிடமாக மாதர்முகங்கள்தோன்ற - அம்முகங்களிற்றோன்றிய கண்கள் ஆடவர்மார்பிற் பொருந்துமெனக் மாளிகை ஆகுபெயர். மாதர் கண்கள்- ஆடவர் வருந்துதற்கேதுவாயிருக்கின்றனவென்பதுகருத்து.

மன்னவர்கழலொடுமாறுகொள்வன ... ... ... *
பொன்னணிதேரொலிபுரவித்தாரொலி... ... *
இன்னகையவர்சிலம்பேங்கவேங்குவ ... ...*
கன்னியர்குடைதுறைக்கமலவன்னமே ... ...*

(இ-ள்) பொன் - பொன்னால்—அணி - அலங்காரஞ்செய்யப்பட்டுள்ள—தேர் ஒலி - தேரொலியும்—புரவி - குதிரைகளுடைய—தார்ஒலி - கிண்கிணிஒலியும்—மன்னவர் - அரசர்களுடைய—கழலொடு- வீரக்கழலொலியோடு—மாறுகொள்வன - மாறுகொண்டொலிப்பன—இன் - இனிதாகிய—நகையவர்-நகையையுடையமாதர் அணிந்திருக்கும்—சிலம்பு - சிலம்புகள்—ஏங்க- ஒலித்தலால் (அதுதங்களினமெனவுட்கொண்டு) —கன்னியர்-அக்கன்னியர்—குடை துறை- நீராடுந்துறையிலிருக்கும்—கமலம்- தாமரைமலரில்வாழும்—அன்னம் - அன்னப்பறவைகள்—ஏங்குவ - ஒலிப்பன—எ-று. [தேரொலியும் - தாரொலியும் - எழுவாய். மாறுகொள்வன - பயனிலை அன்னங்கள்- எழுவாய். ஏங்குவ-பயனிலை ] (௫௫)

ஊடவுங்கூடவுமுயிரினின்னிசை... ... ... *
பாடவும்விறலியர்பாடல்கேட்கவு ... ... ...*
மாடவுமகன்புனலாடியம்மலர்... ... ... ...*
சூடவும்பொழுதுபோஞ்சிலர்க்கத்தொன்னகர்... *

(இ-ள்.) அத்தொன்னகர்- அப்பழமையாகிய நகரின்கண்—சிலர்க்கு-சில மடவார்க்கு—ஊடவும் - தத்தங்கணவரோடூடவும்—கூடவும்- அவ்வூடல்தீர்

ந்து கூடவும்—உயிரின் - உயிர்போன்ற—இன் இசை- இனிய இராகங்களை—பாடவும் - தாம்பாடவும்—விறலியர் - விறலியருடைய—பாடல் - இசைப்பாடல்களை—கேட்கவும் - கேட்கவும்—அகல் - அகன்ற—புனல் - புனலையுடைய தடாகத்திற்கண்—ஆடவும் - குடைந்து விளையாடவும்—ஆடி- அவ்வாறு விளையாடி—அம்- அழகிய—மலர்- மலர்களை—சூடவும்-எடுத்துச்சூடவுமாக—பொழுதுபோம் - பொழுதுபோகும்—எ-று. [பொழுது- எழுவாய். போம்-பயனிலை]. (௬௬)

போகும் என்பதுபோமெனநின்றது. ஊடிக்கூடுதல் காமத்துக்கின்பமாதலால் ஊடவுங்கூடவுமென்றார்.

முழங்குதிண்கடகரிமுன்பினூரவு ... ... ... *
மெழுங்குரத்திவுளியோடிரதமேறவும்... ... ... *
பழங்கணோடிரந்தவர்பரிவுதீர்தர... ... ... *
வழங்கவும்பொழுதுபோஞ்சிலர்க்கம்மாநகர் ... *

(இ-ள்.) அம்மாநகர்- அப்பெரியநகரினிடத்து—சிலர்க்கு - சில ஆடவர்க்கு—முழங்கு- சத்திக்கும்—திண்-வலியையும்—கடம்-மதத்தையமுடைய—கரி-யானைகளை—முன்பின் - முன்னும்பின்னுமாக—ஊரவும்- ஏறிநடத்தவும்—எழுகுரத்து-மேலெழுகின்ற குளம்பினையுடைய—இவுளியோடு- குதிரைகளிலும்—இரதம்-இரதங்களிலும்—ஏறவும்-ஏறவும்—பழங்கணோடு-மெலிவுடன்வந்து—இரந்தவர்-இரந்தவருடைய—பரிவுதீர்தர- வருத்தந்தீர—வழங்கவும்-கொடுக்கவுமாகப்—பொழுதுபோம்-பொழுதுபோகும்-எ-று.

கரியொடுகரியெதிர்பொருத்திக்கைப்படை... ...*
வரிசிலைமுதலியவழங்கிவாளுளைப்... ... ... *
புரவியிற்பொருவில்செண்டாடிப்போர்க்கலை... *
தெரிதலிற்பொழுதுபோஞ்சிலர்க்கச்சேணகர் ...*

(இ-ள்.) அச்சேண்நகர்-விசாலமாகிய அந்நகரினிடத்து—சிலர்க்கு-சிலவீரர்க்கு—கரியொடுகரி - யானைகளோடுயானைகளை—எதிர் - எதிரெதிராக—பொருத்தி - போர்செய்வித்தும்—வரிசிலைமுதலிய - நீண்டவில்முதலான—கைப்படை- கைப்படைகளை—வழங்கி-வழங்கியும்—வாள்-வெண்மையாகிய—உளை- கழுத்துமயிர்களையுடைய—புரவியில்- குதிரையின்மேலேறிக்கொண்டு—பொருஇல்- ஒப்பற்ற—செண்டாடி-வையாளிவீதியில்விளையாடியும்—போர்க்கலை- தனுர்வேதங்களை—தெரிதலில்- ஆராய்ச்சிசெய்தலால்—பொழுதுபோம் - பொழுதுபோகும்—எ-று. (௬௮)

நந்தனவனத்தலர்கொய்துநவ்விபோல்... ... ...*
வந்திளையவரொடுவாவியாடிவாய்ச்... ... ... *
செந்துவரழிதரத்தேறன்மாந்திச்சூ... ... ...*
ழந்தலிற்பொழுதுபோஞ்சிலர்க்கவ்வொண்ணகர் *

(இ-ள்.) அவ்வொண்நகர்- ஒளிபொருந்திய அந்நகரினிடத்து—சிலர்க்கு- சிலமகளிர்க்கு—நந்தனவனத்து - நந்தனவனத்தினிடத்துச்சென்று—அலர் கொய்து - மலர்களைக்கொய்தும்— நவ்விபோல்வத்து - மான்கள்போல்வந்து—இளையவரொடு - தத்தங்கணவரோடு—வாவியாடி - தடாகங்களில்விளை யாடியும்—வாய் - இதழினிடத்துப்பொருந்திய—செந்துவர் - செம்மைநிற மான து—அழிதர-அழியும்படி—தேறல் - மதுவை—மாந்தி - அருந்தியும் —குதலைந்தவிஃ- குதலைவிளையாடலால்—பொழுதுபோம் - பொழுதுபோ கும்—எ-று. (௬௬)

[ வேறு. ]

நானாவிதமாநளிமாதிரவீதிபோடி ... ... ... *
மீனாறுவேலைப்புனல்வெண்முகிலுண்ணுமாபோ . ... *
லானாதமாடத்தினையாடுகொடிக்கண்மீப்போய்... ...*
வானாறுநண்ணிப்புனல்வற்றிடநக்குமன்றே... ... ...*

(இ-ள்.) நானாவிதமா- பலபலவிதமாக—நளி - செறிந்த—மாதிரம்-ஆகாய த்தின்—வீதிபோடி-வழிபிற்சென்று—மீனாறு-மீன்புலவுநாறுகின்ற—வே லைப்புனல்- கடற்புனலை—வெண்- வெண்மையாகிய—முகில்-மேகங்கள்—உ ண்ணுமாபோல்- பருகுமாறுபோல—ஆனாத- நீங்காத—மாடத்தினையாடு- மாடங்களின்மேலாடுகின்ற—கொடிக்கள் - கொடிகளானவை—மீப்போய்- மேலேசென்று—வானாறு- ஆகாயகங்கையை—நண்ணி- பொருந்தி—புன ல்- அதன்நீரானது—வற்றிட-வற்றும்படியாக—நக்கும்- உண்ணும்—எ-று. [கொடி-எழுவாய் நக்கும்- பயனிலை. புனல்-செயப்படுபொருள்.] (௬௭)

வன்றோரணங்கள்புணர்வாயிலும்வானிறும்பர் ... ... *
செம்பொன்றிருந்திம்மேலோரிடமில்லெனச்செம்பொனிஞ்சி .*
குன்றேந்துதோளான்குணங்கூட்டிசைக்குப்பையென்ன*
வொன்றொன்றுடரண்டுமுயர்ந்தோங்கினவும்பர்நாண ... *

(இ-ள்.) வன்-வலிய—தோரணங்கள் - தோரணங்களானவை—புணர் - சேர் ந்த—வாயிலும் - கோபுரவாயில்களும் — செம்பொன் - செம்பொன்னாற் செய்த—இஞ்சிஒன்றொடிரண்டும்- மூன்கூறிய புடைநகர் மதிலொன்றுடன் இடைநகர் உள்நகர் என்னும் இரண்டு நகரங்களைச் சூழ்ந்தமதில்இரண்டும் — மேல்ஓர்இடம்இல்லென- இதற்குமேல் சிறிதுமிடமில்லையென்னும்படி—வா னின் உம்பர்- தேவருலகின்மேலும்—சென்றுஓங்கி - சென்றுயர்ந்து—குன் றுஒக்கு - மலையைப்போலும்ஓங்கிய—தோளான்- தோளையுடையதசரதனு டைய—குணம் - நற்குணங்களால்—கூட்டு - சேர்க்கப்பட்ட—இசைக்குப் பையென்ன- புகழின்மிகுதிபோல—உயர்ந்துஓங்கின - உயர்ந்தோங்கின— எ-று. [மதில்கள்- எழுவாய். ஓங்கின- பயனிலை.] (௬௮)

காடுப்புனமூங்கடலன்னகிடங்குமாத ... ... ...*
ராடுங்குளனும்மருவிச்சுனைக்குன்றுமும்பர் ... ... *

வீடும்விரவும்மணிப்பந்தரும்வீணைவண்டு ... ... *
பாடும்பொழிலும்மலர்ப்பல்லவப்பள்ளிமன்றே ... *

(இ-ள்.) காடும்-அந்நகர்சூழ்ந்தகாவற்காடும்—புனமும்- விளைபுனங்களும்—கடல்அன்ன - கடல்போன்ற—கிடங்கும் - அகழும்—மாதர்- மடவார்—ஆடுங்குளனும்- நீராடுங்குளங்களும்— அருவி - அருவிகளையும்—சுனை- சுனைகளையுமுடைய—குன்றும் - குன்றுகளும்—உம்பர்வீடும்- தேவருலகத்தினளவும்—விரவும்-பொருந்திய—மணிப்பந்தரும் - ரத்தினப்பந்தல்களும்—வீணை வீணைபோலும்—வண்டு- வண்டுகள்—பாடும்பொழிலும்-இசைபாடும்சோலைகளும்—மலர்ப்பல்லவம்பள்ளி- மலர்களாலும் தளிர்களாலுஞ்சயனம்போல்வனவாம்-எ-று [காடு-முதலியவற்றை எழுவாயாக்கி-ஆம்- என்னும் ஒருசொல் வருவித்துப் பயனிலையாகக்கொள்க] (எஉ)

தெள்வார்மழையுந்திரையாழியுமுட்கநாளும்... ... ...*
வள்வார்முரசம்மதிர்மாநகர்வாழுமாக்கள்... ... ... *
கள்வாரிலாமைப்பொருள்காவலுமில்லையாதுங் .. ... *
கொள்வாரிலாமைக்கொடுப்பார்களுமில்லைமாதோ... *

(இ-ள்.) தெள்-தெளிவாகிய—வார்- நீரையுடைய—மழையும்-மேகங்களும்—அலை- அலைகளையுடைய—ஆழியும்-கடல்களும்—உட்க - அஞ்ச—நாளும்-நாள்தோறும்—வள்வார்-வாராற்கட்டிய—முரசம்- பேரிகைகள்—அதிர்-முழங்குகின்ற—மாநகர்வாழும்- பெரியஅவ்வயோத்திமாநகரின்கண்வாழும் மாக்கள்-மனிதர்களில்—கள்வார்இலாமை-களவுசெய்வாரின்மையால்—பொருள்-ஈட்டியபொருட்கு—காவலும்இல்லை- காவல்செய்வாருமில்லை—யாதும்-யாதொருபொருளையும்—கொள்வார் இலாமை- வறுமையாலிரப்பாரின்மையால்—கொடுப்பார்களுமில்லை- கொடுப்பவர்களுமில்லை—எ-று [காவலும்-கொடுப்பவர்களும்-எழுவாய். இல்லை-பயனிலை.] (எங)

கல்லாதுநிற்பார்பிறரின்மையிற்கல்விமுற்ற ... ... ...*
வல்லாருமில்லையவைவல்லரல்லாருமில்லை... ... ... *
எல்லாருமெல்லாப்பெருஞ்செல்வமுமெய்தலாலே ... *
யில்லாருமில்லையுடையார்களுமில்லைமாதோ... ... ...*

(இ-ள்.) கல்லாது - கல்விகள்கற்காமல்—நிற்பார் - வீணாகநிற்பவர்கள்—பிறர்இன்மையில்- ஒருவருமின்மையால்—கல்வி - அக்கல்விகளில்—முற்ற-முழுவதும்—வல்லாரும்இல்லை - கற்றுவல்லவர்களுமில்லை—அவை - அக்கல்விகளில்—வல்லரல்லாருமில்லை - வல்லவரல்லாதவர்களுமில்லை—எல்லாரும்- அந்நகரத்திலிருப்பவர்களெல்லாரும்—எல்லாச்செல்வமும்- எவ்வகைச்செல்வமும்—எய்தலாலே-பொருந்தியிருத்தலாலே—இல்லாரும்இல்லை-வறியவர்களுமில்லை—உடையார்களும்இல்லை-செல்வமுடையவர்களுமில்லை—எ-று.

வல்லார்- வல்லரல்லார்- இல்லார்- உடையார் - என்னுமிவைகளைத் தனித்தனி எழுவாயாகக்கொண்டு இல்லை என்பவைகளையும் அவ்வாறே பயனிலையாகக்கொள்க.

ஏகம்முதற்கல்விமுளைத்தெழுந்தெண்ணில்கேள்வி ... ❋
ஆகம்முரட்டிண்பணைபோக்கியருந்தவத்தின் .. ... ❋
சாகந்தழைத்தன்பரும்பித்தருமம்மலர்ந்து... ... ...❋
போகங்கனியொன்றுபழுத்ததுபோலுமன்றே... ... ❋

(இ-ள்.) (அயோத்தியானது) கல்வி - கல்வியென்னும்—ஏகம்முதல் - ஒரு முதலானது—முளைத்தெழுந்து - முளைத்துமேலெழுந்து—எண்இல் - அளவிடவொண்ணாத—கேள்வியாகு - கேள்விகளாகிய—முரண்திண் - பலம் பொருந்திய—அப்பணை - அக்கொம்புகளை—போக்கி - மேலோங்கவிடுத்து—அரும் - அரிய—தவத்தின் - தவமாகிய—சாகம்தழைத்து - இலைகள்தழைத்து—அன்பு - அன்பாகிய அரும்புகள்—அரும்பி - முகைத்து—தருமம் - தருமமாகிய மலர்கள்—மலர்ந்து - மலர்ந்து—போகம் - போகமாகிய—கனியொன்றுபழுத்ததுபோலும் - ஒருபழமானது பழுத்ததுபோலுமிருக்கின்றது—எ-று. [அயோத்தி - எழுவாய் போலும் - பயனிலை. படும் - செயப்படுபொருள்]

முரண்திண் ஒருபொருட்பன்மொழி.

௪-வது-நகரப்படலமுற்றிற்று.

ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.

## ௫-வது-அரசியற்படலம்.

அம்மாணகருக்கரசன்னரசர்க்கரசன்... ... ... ... ❋
செம்மாண்டனிக்கோலுலகேழினுஞ்செல்லநின்றான் ...❋
இம்மாண்கதைக்கோரிறைபாயவிராமனென்னு ... ...❋
மெய்ம்மாண்கழலோற்றருநல்லறமூர்த்தியன்னான்... ❋

(இ-ள்.) மாட்சிமைபொருந்திய அந்நகருக்கு அரசனுவான் யாவனெனில் மன்னவர்மன்னவனும் செவ்விதானமாட்சிமையுள்ள ஒப்பற்றசெங்கோலானது ஏழுலகத்திலுஞ்செல்லும்படியிருந்தவனும் மாட்சிமையுள்ள இந்தச்சரிதத்துக்குத் தலைவனுகிய இராமமூர்த்தியென்னும் பெயருள்ள பெருமைசெறிந்த வீரகண்டையணிந்தவனைப்பெற்ற நல்லதருமமூர்த்தியையொத்தவனுமாம்-எ-று. (௧)

இராமமூர்த்தியைப்பெற்றவன் இந்த நகரத்துக்கு அரசனென முடிந்துக்கொள்க. இம்மாண்டனிக்கோ லுலகேழினுஞ்செல்லநின்றான் என்பதனுக்குச்செவ்விதானபெருமையினுல் ஒப்பற்ற தன்செங்கோலானது ஏழுலகத்துஞ் செல்லநின்றானெனப்பொருள்கூறினுமமையும். இதனை ஏயாங்கதமென்னும் -இசையாற்றிசைபோயதன்றே-என்னுஞ் சிந்தாமணிச்செய்யு

னாலுமுணர்க. செங்கோலாவது-நீதி. அது ஒருபாற்கோடாது செவ்விய கோல்போல்வதி னாற்செங்கோலெனக்கூறப்பட்டது.

ஆதிம்மதியுமருளுமறனுமமைவு ... ... ... *
மேதினியிடல்வீரமுமீகையுமெண்ணில்யாவும்... ... *
நீதிந்நிலையுமிவைநேமியினோர்க்குநின்ற... ... *
பாதிமுழுதுமிவற்கேபணிகேட்பமன்றோ... ... *

(இ-ள்.) முதன்மையாகிய மதியும் அருளையுந் தருமமுஞ் சாந்தகுணமும் குற்றமில்லாத பலம்பொருந்திய வீரமும் கொடையும் எண்ணுமிடத்தில் மற்றுமுள்ள செய்கையாவும் (இவைகளேயன்றி) நீதியுந்நிலையுமாகிய இவைகளும் மற்றைய அரசர்களிடத்தில் பாதிநின்றன அவ்வாறன்றி அவை முழுவதும் இவ்வரசனுக்கு ஏவல்கேட்பனவாம்-எ-று. (உ)

மேற்கூறிய செய்கைகளில் மற்ற அரசர்களிடத்தில் சில இருக்கும் இவ்வரசனிடத்தில் முழுவதும் உண்டென்பது இதன்கருத்து.

மொய்யார்கலிசூழ்முதுபாரின்முகந்துதானக் ... ... *
கையார்புனலானனையாதனகையுமில்லை... ... ... ... *
மெய்யாயவேதத்துறைவேந்தருக்கேய்ந்தயாவும்... ...*
செய்யாதயாகமிவன்செய்துமறந்தமாதோ... ... ...*

(இ-ள்.) அலைகள்நெருங்கிய சமுத்திரத்தினாற் சூழப்பட்ட பழமையாகிய பூலோகத்தில் இவ்வரசன் தானங்கொடுக்கும்போது முகந்துவிடுங் கையிற் பொருந்திய நீரினால் நனையாதவைகளாகிய கைகளுமில்லை - உண்மையாகிய வேதங்களினிடத்தில அரசர்களுக்கு இன்னவை யுரியவெனப் பொருந்திய யாகங்களில் எவ்வரசர்களுஞ்செய்யாதுவிட்ட யாகங்கள் இவ்வரசனாற்செய்து மறக்கப் பட்டன-எ-று. (௩)

இவ்வுலகத்திலிருக்கும் பிராமணர்களுடைய கைகள் இவ்வரசன்கொடுக்குந் தானநீரினால் நிறையாதவையில்லையெனக்கூட்டுக. தானங்கொடுக்கும்போது தத்தஞ்செய்வதற்கு நீர் விடுதல்முறைமை. தானம்பொருளின்னதெனக்குறிக்காமையாற் பலதானமுங்கொள்க. அரசர்கள் செய்யக்கூடாமையாகவிட்ட அரிய யாகங்களையு மிவ்வரசன்செய்தனன் என்பதும், இவனிடத்தில் தானம்வாங்காத பிராமணர்களில்லையென்பதும் யாகங்களெல்லாஞ் செய்தா னென்பதும் இதன்றாற்பரியம்.

தாயொக்குமன்பிற்றவமொக்குநலம்பயப்பிற்... ...... *
சேயொக்குமுன்னின்றொருசெல்கதியுய்க்குநீரால்... ... *
நோயொக்குமென்னின்மருந்தொக்குநுணங்குகேள்வி.. *
யாயப்புகுங்காலறிவொக்குமெவர்க்குமன்னன்... ... ...*

(இ-ள்.) அத்தன்மையுள்ள தசரதமகாராசன் அன்பினால் யாவர்க்குந் தாயையொப்பாவன்- யாவர்க்கும் நன்மையைக்கொடுக்குந் தன்மையினால் அவரவர்கள் செய்யுந்தவத்தையுமொப்பாவன்- தான்முன்னிலையாயிருந்து அவரவர்களை யொப்பற்ற நற்கதிகளிற் செலுத்துகின்றமையால் அவரவர்கள் புத்திரனை யொப்பாவன்- வியாதிகள் பொருந்துமாயின் (அவைகளுக்குத்தக்க அவுஷதங்கள் கொடுப்பித்துத் தீர்க்குந்தன்மையினால்) அவுஷதத்தையொப்

பாவலர்- துன்னியகேள்விகளை யாராய்ச்சிசெய்யச்சென்றால் அவரவர்கள் கருத்துகளுக்கிசையச் சந்தேகமுதலியவையில்லாமல் தெளிவிக்குந் தன்மையினால் அவர்களறிவையொப்பாவன்-எ-று. (௬)

ஈந்தேகடந்தானிரப்போர்கடலெண்ணினுண்ணூ ... *
லாய்ந்தேகடந்தானறிவென்னுமளக்கர்வாளாற் ... *
காய்ந்தேகடந்தான்பகைவேலைகருத்துமுற்றத் ... ... *
தோய்ந்தேகடந்தான்றிருவிற்றொடர்போகமெனவும் ... *

(இ-ள்) அவ்வரசன்-இரப்பவர்களாகிய சமுத்திரத்தைப் பொருள்கொடுத்துக்கடந்தான்-அளவில்லாத நுண்ணியசாஸ்திரங்களாகிய சமுத்திரத்தை அறிவினாலாராய்ச்சிசெய்துகடந்தான்- வாள்முதலாகிய படைகளாற் கடிந்து பகைவராகியசமுத்திரத்தைக்கடந்தான்- கருத்துப்பூர்த்தியாக அநுபவித்துச் செல்வத்தினால்பொருந்தியபோகமாகிய சமுத்திரத்தைக் கடந்தான்-எ-று.

இரப்போர் கடலைக்கடந்தல் அவர்கள்கேட்டுமேலொருவரிடத்துச்செல்லாவண்ணங் கொடுத்தல் என வுணர்க. இதனை- இலனென்னுமெவ்வ முரையாமையீதல்- என்னுந் திருக்குறளானுமுணர்க.

[ வேறு. ]

வெள்ளமும்பறவையும்விலங்கும்வேசைய ... ... *
ருள்ளமுமொருவழியோடநின்றவன் ... ... ... *
றள்ளரும்பெரும்புகழ்த்தயரதப்பெயர் ... *
வள்ளல்வள்ளுறையயின்மன்னர்மன்னனே ... .... *

(இ-ள்) ஆற்று வெள்ளமும் பக்ஷிகளும் மிருகங்களும் விலைமாதருடைய மனமும் ஒருவழியிற்செல்லும்படி அரசுசெய்தவன்- நீக்குதற்கரிய பெரும் புகழைப்படைத்த தசரதனென்னும் பெயருடையவள்ளலாகிய உறை பூட்டும் வேலாயுதத்தையுடைய அரசர்க்கரசன்-எ-று. (௭)

தயரதன்-மேற்கூறிய மூன்றும் ஒருவழியோட நின்றவனெனக்கூட்டுக.

வெள்ளமொருவழியோடல் -அம்மன்னவனாட்டில் மாதமும்மாரிபெய்வதினால்விளைவுக்கு இவ்வெள்ளம் வேண்டுவதின்றி நேரேசென்று கடலிற்சேருமெனவும், பறவைகளும் விலங்குகளும் வேடர்கள் முதலானோருக்கஞ்சி யலைந்துதிரியாம லொருவழியே செல்லுமெனவும்,

புலி-பசு-மான்-முதலியவை யொன்றற்கொன்று விரோதமின்றி யொருவழியிற்செல்லுமெனவும், கருடன் பாம்பு முதலியவையும் அவ்வாறே விரோதமின்றியொருவழியிற்செல்லுமெனவுங் கண்டுகொள்க. இதனை பொருதுறைசேர்வேலினாய் புலிப்போத்தும்புல்வாயும்-ஒருதுறையினீருண்ண வுலகாண்டான். என்னுஞ்செய்யுளானுமுணர்க.

வேசையருள்ளம் முன்வந்தவனிடத்தில் பணயம் வாங்கிக்கொண்டு பின்வருகிறவனிடத்திற் பணயம்வாங்காமல் முதல்வந்தவனிடத்தே மனஞ்செல்லுமெனவுங்கண்டுகொள்க

நேமிமால்வரைமதிலாகநீள்புறப் ... ... ... ... *
பாமமாகடல்கிடங்காகப்பன்மணி ... ... ... *
வாமமாளிகைமலையாகமன்னற்குப் ... ... ... *
பூமியுமயோத்திமாநகரம்போலுமே ... ... *

(இ-பு.) பெரியசக்கரவாளகிரியானது மதிலாகவும் நீண்டபெரும் புறக்கடலானது அகழியாகவும், இடையிலுள்ள மலைகள் பலமணிகள் பதித்து அழகுள்ள மாளிகைகளாகவும் தசரதமகாராசனுக்கு இந்தப்பூமியும் அயோத்தியென்னும் பெரியநகரம்போலாம்-எ-று. (எ)

உலகமெல்லாம் அவ்வரசன் சொல்வழி நிற்குமென்பது இதன்கருத்து.

யாவரும்வன்மைநேரநிற்றுதிட்டலான் ... ... *
மேவருங்கையடைவேலுந்தேயுமாற் ... ... ... *
கோவுடைநெடுமணிமகுடகோடியாற் ... ... ... *
சேவடியடைந்தபொற்கழலுந்தேயுமால் ... ... *

(இ-பு.) ஆயுதச்சாலையிலே சென்றவர்கள் அதன் வலிமையையறியத் தொட்டுப்பார்ப்பதினால் அம்மன்னவனது பொருந்திய கைவேலுந்தேயும்-வந்துப்பணிகின்ற மற்றையத்தராசர்களுடைய ரத்தினகிரீடங்களின் மிகுதியால் அவ்வரசனுடைய கால்களிற்றரித்திருக்கும் பொன்னாலாகிய வீரகண்டையுந்தேயும்-எ-று.

அரிந்து-எச்சத்திரிபு-நிட்டல் வலித்தல்விகாரம். அரசர்கள் தசரதமகாராசாவின்வேலாயுதத்தையெதிர்க்கும் வல்லமையில்லாததினாலே இண்டிட்டுப்பார்க்கின்றார்களெனக்கொள்க மேலும் கறையுந் தேய்வதன்றிப் புகழ் செல்வ முதலியவை தேய்வதில்லையென்பது குறிப்பெச்சம்.

மன்னணிமுடியுயிர்தொறும்வளர்ந்துதேய்வின்றித் ... *
தன்னிழல்பரப்பவுமிருளைத்தள்ளவும் ... ... .. *
அண்ணறன்குடைமதியமையுமாதலான் ... ... *
விண்ணிடைமதியினைமிகையிதென்பவே. ... ... *

(இ-பு) தசரதமகாராசாவினுடைய வெண்குடையாகிய சந்திரன் இவ்வுலகத்தினிடத்திருக்கும் உயிர்கள்தோறும்பரந்து குறைவில்லாமல் குளிர்ந்தநிழலைவிரிக்கவும், பாபமாகிய இருளைநீக்கவும், பொருந்தியிருக்குமாதலால் ஆகாயத்தினிடத்துவருஞ்சந்திரன் வேண்டுவதில்லை யிது அதிகமென்றுபெரியோர்கள்கூறுவார்கள்-எ-று. [இது-உருவக அணியில் அம்பத ரூபகாலங்காரம்.] . (௯)

விண்மதியுயிர்தோறும் வளருமேயாகிலுந் தேயுந்தன்மையுடன் களங்கமுமுள்ளது. அன்றியும் பூதவிருளை நீக்குமேயல்லது பாபவிருளைநீக்காது ஆதலா லம்மதி விசேஷமான பயனில்லாதிருக்கின்றதென்பதுகருத்து.

வயிரவான்பூணணிமடங்கன்மொய்ம்பினு ... ... *
னுயிரெலாந்தனுயிரொப்பவோம்பலாற் ... ... *
செயிரிலாவுலகினிற்சென்றுநின்றுவா ... ... *
ழுயிரெலாமுறைவதோருடம்புமாயினான் ... ... *

(இ-பு) வயிரமணிமுதலிய மணிகளாற்செய்யப்பட்டுச் சிறந்த ஆபரணங்கள் அணிந்து சிங்கம்போன்ற பராக்கிரமமுள்ள தசரதமகாராசன் தன்னாட்டிலுள்ள உயிர்களையெல்லாந் தன்னுயிர்போலப்பாதுகாத்தலினால் குற்றமில்லாத இவ்வுலகத்தில் சஞ்சரித்தும், நிலையாயிருந்தும் வாழ்கின்ற உயிர்களெல்லாம்பொருந்துவதாகிய ஓருடம்புபோலவுமாயினான்-எ-று. இது-அவ்வரசன் அன்பினைவிளக்கியது. (௰)

குன்றெனவுயரியகுவவுத்தோளினான் ... ... ... *
வென்றியந்திகிரிவெம்பருதியாமென ... ... *
வொன்றெனவுலகிடையுலாவிமீயிசை ... ... ... ... *
நின்றுநின்றுயிர்தொறுநெடிதுகாக்குமே ... .. *

(இ-பு.) மலைபோல வுயர்ந்த திரட்சியுள்ள புசங்களையுடைய தசரதமகாராசனது வெற்றியுள்ள ஆக்கினைச்சக்கரமானது வெவ்விய சூரியனைப்போல ஒன்றாக உலகத்தில் உலாவி உயிர்கள்தோறுந் தனித்தனி நின்று அந்தச் சூரியனைப்பார்க்கிலும் அதிகமாகப் பாதுகாக்கின்றது. (௰௧)

இவ்விறைவனுயிர்களுக்கோரிடையூறுமின்றிக்காக்கின்றானென்பதுகருத்து.

எய்யெனவெழுபகையெங்குமின்மையான் ... ... *
மொய்பொருதினவுறுமுழவுத்தோளினான் ... ... *
வையகமுழுவதும்வறிஞனோம்புமோர் ... ... ... *
செய்யெனக்காத்தினிதரசுசெய்கின்றான் ... ... *

(இ-பு.) எய்யென்னும் ஓசையுடன் எதிர்த்துவருகின்ற பகை யெங்குமில்லாமையால் வலியாற் பொருதற்குண்டாகுந் தினவுபொருந்திய முழவம்போன்ற தோள்களையுடைய அவ்வரசன் இவ்வுலகமுழுவதையும் தரித்திரனுக்கொருவயலிருந்தாலதனை யவன் காத்துக்கொள்வதுபோலக்காத்து அரசாட்சிசெய்கின்றான்-எ-று. (௰௨)

வறிஞனானவன் தன்பயிராப்பட்டிமாடு முதலியவைமேயாவண்ணங்காப்பதுபோல இவ்வரசன் தன்னாலும் தன்பரிசனத்தாராலுமேயன்றிக் கள்வர்-பகைவர்-யானை-புலி-மான்-பன்றி-இவைகளாலும் வருத்தம் நேரிடாவண்ணம் உயிர்களைக் காக்கின்றானென்பதுகருத்து.

அரசியற்படலம்-முற்றியது.



ஆகத்திருவிருத்தம்-௱௭௯.

[௰௨]



ஸ்ரீராமசெயம்.

# பாலகாண்டம்.



## ௬-வது-திருவவதாரப்படலம்.



ஆயவனொருபகலயனையேநிகர்... .. ... ...*
தூயமாமுனிவரற்றொழுதுதொல்குலத் ... ... *
தாயருந்தந்தையுந்தவமுமன்பினான் ... ... ...*
மேயவான்கடவுளும்பிறவும்வேறுநீ ... ... *

(இ-பு.) அத்தன்மையுள்ளவனாகிய தசரதமகாராசன் ஒருநாள் பிரமதேவனையேயொத்த பரிசுத்தமும் பெருமையுமுடைய வசிட்டமுனிவரனைத் தொழுது பழமையாகிய என்குலத்தாய்மாரும், பிதாக்களும், தவமும் அன்பினாற்பொருந்திய தெய்வமும், பிறவாகியமற்றுமுள்ளவைகளும் நீயேயாம்-எ-று

எங்குலத்தலைவர்களிரவிதன்னினுந் ... ... *
தங்குலம்விளங்குறத்தரணிதாங்கினார் ... ... ...*
மங்குறைவில்லைவரம்பில்வையக ... ... ...*
மிந்நுனதருளினாலினிதினோம்பினேன்... ... *

(இ-பு.) எங்கள் முன்னோர்களாகிய அரசர்கள் சூரியனைப்பார்க்கினும் விசேஷமாகத் தங்கள்குலம் விளங்குதலைப் பொருந்தும்படி இவ்வுலகத்தைத் தாங்கினார்களேயன்றி- இடையில் ஒருவருங் குறைந்தவர்கள் இல்லையென்று அடியேனுந் தேவரீருடைய அருளினு லெக்காலத்திலும் எல்லையில்லாத பூமியை இனிதாகப்பாதுகாத்தேன்—எ-று. (உ)

அறுபதினாயிரமாண்டு மாண்டுற ... ... ... *
வுறுபகையொடுக்கியிவ்வுலகையோம்பினேன்... *
பிறிதொருகுறையிலைபெற்பின்வையக ... ... *
மறுகுறுமெனபதோர்மறுக்கமுண்டரோ... ...*

(இ-பு.) அறுபதினாயிர வருஷமும் நீங்க மிகுந்த பகைவரையெல்லாம் ஒடுக்கி இந்த வுலகத்தைப் பாதுகாத்தேன் -வேறொரு குறையுமில்லை இனிமெயனக்குப்பின்பு இவ்வுலகமானது கலங்குதலைப்பொருந்துமென்பதாகிய ஒரு கலக்கம் எனக்குள்ளுண்டாயிருக்கின்றது—எ-று. (௩)

அருந்தவமுனிவருமந்தணாளரும் ... ... ... *
வருந்துதலின்றியேவாழ்வின்வைகிறு ... ... ... *
பிருந்துயருழக்குநரெற்பினென்பதோ ... ... *
சருந்துயர்வருத்துமென்னகத்தையென்றனன் ....*

(இ-ள்.) யாவருஞ் செய்தற் கருமையாகிய தவத்தையுடைய முநிவரும், பிராமணர்களும், வருத்தமில்லாமல் வாழ்வுடன் பொருந்தியிருந்தார்கள்— எனக்குப்பின்பு மிகுந்த துயரத்தை அனுபவிப்பார்களோ என்பதாகிய ஒரு பெரிய துயரமானது என்மனத்தை வருத்துகின்றது என்று சொல்லுகிறான்.—எ-று.

முரசறைசெழுங்கடைமுத்தமாமுடி... ... ...... *
யரைசர்தங்கோமகனனையகூறலும்... ... ... *
விரைசெறிகமலமென்பொகுட்டமீமேவிய... ... ...*
வரசரோருகன்மகன்மனத்திலெண்ணினான்... ...*

(இ-ள்.) பேரிகை யொலித்துக்கொண்டிராநின்ற செழுமையுள்ள முற்றத்தையுடைய முத்துமுதலாகிய மணிகள்பதித்த பெரியமகுடமணிந்த அரசர்க்கரசனாகிய தசரதமகாராசன் அந்தவண்மையான வார்த்தைகளைச்சொன்னவளவில்வாசனைபொருந்திய மென்மைத் தன்மையுள்ள தாமரைமலர்ப்பொகுட்டிடமேவியிருக்கும் இடமாகிய பொருந்திய பிரமதேவனுடைய புத்திரனாகிய வசிஷ்டமுனிவர் தன்மனதிலநினைந்தார்—எ-று. (௫)

அலைகடனடுவணோரனந்தன்மீமிசை... ... ... *
மலையெனவிழிதுயில்வளருமாமுகில் ... ... *
கொலைதொழிலரக்கர்தங்கொடுமைதீர்ப்பனென் ...*
றுலைவுறுமமரருக்குரைத்தவாய்மையை... ... .. *

(இ-ள்) அலைகின்ற நீரையுடைய சமுத்திரத்தின் மத்தியில் ஒப்பற்ற ஆதிசேஷன்மேல் நீலமலைபோல் கண்துயிலமருந் திருமாலானவர் உயிர்கள்கொலைசெய்வதாகிய செய்கையுள்ள ராக்ஷதர்களுடையதீமையைத்தீர்க்கின்றனென்று வருந்துதலைப்பொருந்திய தேவர்களுக்கு உரைத்தவார்த்தையை எ-று

அநந்தனாகிய கொலைதொழிலென நின்றது-தன்-இடைச்சொல் உலைவு உறும் என்பது பிரிக்க. உலைவு என்னும் மொழியீற்றுகரம் புணர்ச்சிவிகாரமாயினும் முற்றுமுற்றொன்றாய் நின்றது விகாரத்தால் பெயரெச்சமாய் நின்றது. மாமுகில் என்பது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை இங்ஙனமிசைத்திடத்து மேகத்தைப்போல நிறமுள்ளவராகிய திருமாலெனவிரியும். மீமிசை ஒருபொருட்பன்மொழி.

கொடுந்தொழிலரக்கராற்றொலைந்துவானுளோர்... ...*
கடவுமர்களையென்றுகலந்துகூறலும்... ... ... *
படிபொருளுணர்ந்தவப்பரமன்யாமினி... ... ...*
படிவதில்லெனமறுத்தவரொடேகினான்.... ... ...*

(இ-ள்.) கொடுமையான தொழிலையுடைய ராவணன்முதலாகிய ராக்ஷதர்களிற்செய்யும் வருத்தத்தினால் இந்திரன் முதலாகிய தேவர்கள் தங்கள் சுவர்க்கலோகத்தை விட்டுநீங்கி விஷந்தங்கிய கண்டத்தையுடைய சிவனதுதிருவடியிலடைந்து (பணிந்துதங்கள் துயரத்தை) சொன்னவளவில் முன்னுண்டாயிருந்த பொருளையுணர்ந்த அந்தப்பரமசிவன் இனிநாம் அவர்களைக்கொல்லுவதில்லையென்று மறுத்துச்சொல்லி அவர்களுடன் சென்றார்—எ-று. (எ)

படுபொருளுணர்ந்த என்றது இராவணன் முதலானவர்களுற்பத்தியானகாரணமும் அவர்களின்னரா லிறக்கவேண்டுமென்பதையு முணர்ந்தவனென்பதுகருத்து. ஆதியில் தாமவர்களுக்குவரங்கொடுத்தருளினவராதலால் இனியாம் அடுவதில்லென்றனெனக்கொள்க.

வடவரைக் குடுமியின்விண்மாசறு ... ... ...*
சுடர்மணிமண்டபந் துன்னிநான்முகக் ... ...*
கடவுளையடிதொழுதமரர்கண்டக .. ... ... *
ரிடிநிகர்வினையமதியம்பினரரோ ... ..... ...*

(இ-ள்) தேவர்கள் மகமேருவி னுடைய சிகரத்தி னுச்சியிலிருக்கும் குற்றமற்ற ஒளிபிணையுடைய இரத்தினங்கள்பதித்த மண்டபத்திற்சேர்ந்து நான்குமுகங்களுள்ளபிரமதேவனுடையபாதத்தைவணங்கி ராக்ஷதர்களுடைய இடிபோன்ற செய்கையைச் சொல்லினார்கள்-எ-று (அ)

மகமேரு வடதிசையிலிருப்பதாதலால் வடவரையெனப்பட்டது. அமரர்கண்டகரிடிநிகர்வினையம தியம்பினர் - எனப் பாடமோதி தேவகண்டகராகிய இராக்கதர்செய்யுங் கொடியசெயலையைச் சிவன்கூறினரெனப் பொருள்கூறுதலுமுண்டு.

பாகசாதனன்றனைப்பாசத்தார்த்துடன் .. ... ...*
மேகநாதன்புகுந்திலங்கைமேயநாள் .. ... ... *
போகமாமலருறைபுனிதன்மீட்டமை ... ... ...*
தோகைபாகற்குறச்சொல்லினனரோ ... ... *

(இ-ள்) தேவர்க ளிவ்வாறு சொன்னவளவில் தேவேந்திரனை வெற்றிபொருந்திய மேகநாதனானவன் பாசத்தாற் கட்டிக்கொண்டுசென்று இலங்கையி லிருந்தநாளில் தான்போய் மீட்டுக்கொண்டு வந்ததைப் பார்வதிபாகனாகிய சிவனுக்குப் போகமுள்ள பெரியதாமரைப்பூவிலிருக்கும் பிரமதேவன் சொல்லினன்—எ-று. (௯)

மேகநாதனெனப்படுகிறவன் இந்திரசித்தன். இவன்பிறந்தகாலத்தில்மேகவொலியைப் போலொலித்தமையால் மேகநாதனெனப் பெயர்கூறப்பட்டது. தேவேந்திரனுடன் போர் செய்து அவனைக் கட்டிக்கொண்டு வந்தபின்பு இந்திரசித்தனென்னும் பெயருண்டாயிற்று. மேயவென்பதனை முன்னுரைத்தாங்குரைத்துக்கொள்க.

இருபதுகரந்தலையீரைந்தெனனுமத் ... ... ...*
திருவிலிவலிக்கொருசெயலின்றெங்களாற் ... ... *
கருமுகில்வண்ணவளர்கருணையங்கடல் ... ... ... ...*
பொருதிடக்கணிக்கினுண்டெனும்புணர்ப்பினார் ...*

(இ-ள்) இருபதுகைகளும் பத்துத்தலைகளு முடையவனென்று சொல்லத்தக்க அந்த இராவணனுடைய பலத்துக்கு எங்களாலாகுஞ் செய்கை யொன்றுமில்லை-நீலமேகம்போலக் கண்வளருங் கிருபாசமுத்திரமாகிய திருமாலானவர் அவ்விராவணனுடன் போர்செய்துவென்று அவனால் உங்களுக்கு நேரிட்டிருக்குந் துன்பத்தைத் தணிக்கத் தொடங்குவாரானால் நன்மையுண்டென்று சொல்லிய புணர்ப்பினையுடையவர்கள்-எ-று. (௰)

இது குளகச்செய்யுள் திருவிலியென்னுஞ்சொல் பாவியென்னுங்குறிப்புணர்த்திநின்றது.

இனைகெழுபயோததிதுயிலுந்தெய்வவான் ... ...*
மரகதமலையினைவழுத்திநஞ்சிறைற் ... ... ...*

மரகதமலைக்குவித்திருந்தகாலையிற் ... ... ... *
பரகதியுணர்ந்தவர்க்குதவுபண்ணவன் ... ... ... *

(இ-ள்) அலைகள் பொருந்திய திருப்பாற்கடலில் அறிதுயிலமருந் தெய்வத்தன்மையுஞ் சிறப்புமுள்ள மரகதமலைபோன்ற நாராயணமூர்த்தியைமனதில் தியானித்துத்தங்கள் கைக்கமல மலர்களைக்குவித்தஞ்சலிசெய்துகொண்டிருந்தபோது உண்மையுணர்ந்தவர்களுக்குப் பரமபதம் அருளிச்செய்யும் அத்திருமாலானவர்—எ-று. (௰௧)

இதுவுந் துளகம்- துளகம் பலபாடல் ஒருபயனிலேகொண்டு முடிவது. குத்திரம்-ஜனகம்பலபாட் டொருவினைகொள்ளும்-வழுத்துதல் கண்டுத் தியானித்த லென்னும் பொருள்படநின்றது.

மலர்மிசையேகினான்மாணடிசேர்ந்தார் என்றுந் திருக்குறளுக்கு அடியைத் தியானிப்பவர்களென்னும் பரிமேலழகருரையானுமுணர்க.

கருமுகிலுமரைக்காடுபூத்துநீ ... ... ... ... *
டிருசுடரிருபுறத்தேந்தியேடவிழ் .. ... ... *
திருவொடும்பொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவதுபோற்கலுழன்மேல்வந்துதோன்றினன் ... *

(இ-ள்) இவர்களிவ்வாறிருக்கும்போது நீருண்டு கருமைநிறங்கொண்டமேகமானது செந்தாமரைமலர்க்காடு பூத்துக்கொண்டும் நீடியசந்திர சூரியர்களாகிய இருசுடரை இரண்டுபுறத்திலு மேந்திக்கொண்டும், இதழ்விரிந்ததாமரைப்பூவில் வீற்றிருக்கும் இலக்குமியுடன் விளங்க ஒரு செம்பொன்மலையின் மேல வருதல்போலக்கருடன்மேல்வந்துதோன்றினார்-எ-று (௰௨)

திருமாலானவர் நீலநிறமுள்ளவரும் திருமுகந் திருவாய் திருநேத்திரங்கள் திருக்கரங்கள் திருவடிகள் செம்மைநிறமுள்ளவருமாதலால்-கருமுகில்தாமரைக்காடுபூத்தென்றும் - கருடன் செம்மைநிறமுடையனாதலால் செம்பொன்மலைபோலென்றும்,மிகுதிபற்றித்தாமரைக்காடென்றுங்கூறினார்-சுடர்-சந்திரனும்,சக்கரம்-சூரியனுமாகக்கொள்க. இதழ தாமரைக்காதலால் வினையாகுபெயர், வருவது - எனற்பாலது விகாரவகையாற் றுவவிகுதி குன்றிநின்றது.

எழுந்தனர்கறையிடற்றிறைபுந்தாமரைச்... ... *
செழுந்தவிசுவந்தவத்தேவுஞ்சென்றெதிர் ... ... *
விழுந்தனரடிமிசைவிண்ணுளோரொடுந் ... ... *
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்குவார்.

(இ-ள்) (திருமால்வந்தவளவில்) களங்கமுடைத்தையுடைய சிவனும், தாமரைப்பூவாகிய செழுமையுள்ள ஆசனத்தில் மகிழ்ந்து வீற்றிருக்கும்பிரமதேவனும்தேவர்களுடனெழுந்தவர்களாய்எதிர்சென்று அவர்பாதத்திலேவிழுந்து பணியும்தோறும்பணியுந்தோறும்களிப்பினால்விளங்குகின்றார்கள்-எ-று

எழுந்தனர் கறையிடற்றிறையுமென்பதற்கு- கறைமிடற்றிறை யெழுந்தன மற்றையர்கள் பணிந்தார்களெனப்பொருள்கூறுவாருமுளர்.

துளங்குவார் எனப்பாடமாயின் களிப்பினால் விதிர்ப்புறுகின்றார்களெனக்-கறை-விஷம்-மிடறு-கழுத்து-எழுந்தனர் விழுந்தனர் என்னும் வினைமுற்றுக்கள் ஈண்டுவினையெச்சமாய்த் துளங்குவாரென்னும் வினைமுற்றுக்கொண்டு முடிந்தது.

# திருவவதாரப்படலம்.

ஆடினர்பாடினரங்குமிங்குமா... ... ... ...*
வோடினருவகையா றறவுண்டோர்கிலார்... ... *
வீடினரரக்கரென் றுவக்கும்விம்மலார் .. ... *
சூடினர்முறைமுறை துளவத்தாண்மலர் ... ... *

(இ-பு.) ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைக் கண்டவளவில் அரக்கர்களிறந்து விட்டார்களென்று சந்தோஷிக்கும் பூரிப்பினால் சந்தோஷமாகிய மதுவையுண்டு யாதொன்றும் தெரியாதவர்களாய் ஆடினவர்களாயும், பாடினவர்களாயும், அங்குமிங்குமாகவோடினார்கள் - இதுவுமன்றி முறை முறையாகச்சென்று துளவணிப்பட்ட அவர்திருவடித்தாமரையைத்தங்கள் சிரசில் அணிந்துகொண்டார்கள் — எ-று.
(௰௪)

வீடினரென எதிர்காலத்தாற் கூறப்படுவது, யோரக்காலத்து நிகழுங்காலத்தோ போராங்குருவருடைய, வினைச்சொற்கிளவி யிறந்தகாலத்துக் குறிப்பொடுகிளத்தல் - விரைந்த பொருளென மொழிப்பவர் என்பது இத்தியிதிபற்றி வீடினரென விறந்தகாலத்தாற் கூறினர். — பிற இசையெச்சம்.

பொன்வரையிழிவதோர்புயலின்பொற்பற... ... *
வென்னையாருடையவன்றோளினின்றெம்பிரான் ... *
சென்னிவான்றடவுமண்டபத்துச்சேர்ந்தரி ... ...*
துன்றுபொற்பீடமேற்பொலிந்துதோன்றினான். *

(இ-பு.) இவர்கள் செய்கை யிவ்வாறிருக்க, — நம்முடைய பெருமானாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் பொன்மலையினின்றும் இழிவதாகிய ஒரு பற்றமேகத்தின் அழகு பொருந்த என்னையாளாக உடையவராகிய பெரிய திருவடிகள்தோளினின்றுமிழிந்து சிகரத்தினால் ஆகாயத்தையளாவு மண்டபத்திற்சென்று சேர்ந்து சிங்கங்களின் பிடரியின்மேல்பொருந்திய பொற்பீடமேற் பொலிவுற்று வீற்றிருந்தார் — எ-று.
(௰௫)

பெரியதிருவடியென்பது-கருடன்; அநுமான் - சிறியதிருவடி. இது வைஷ்ணவ சம்பிரதாயம். சென்னிவான்றடவுமண்டபம் என்பதனை வான்றடவுஞ் சென்னியையுடைய மண்டபமெனப் பதமாறிக்கூட்டியமையும்.

பிற இசையெச்சமாகக் கொள்ளப்பட்டது. பொற்பீடம் - பொன்னாலாகிய ஆசனமெனப்பதம்பிரிக்க.

விதியொடுமுனிவரும்விண்ணுளோர்களு ... ...*
மதிவளர்சடைமுடிமழுவலாளனு ... ... ...*
மதிசயமுடனுவந்தயலிருந்துழிக்... ... ... *
கொதிகொள்வேலரக்கர்தங்கொடுமைகூறினார் ...*

(இ-பு.) பிரமதேவனும், முனிவர்களும், தேவர்களும், இளந்திங்கள் பொருந்திய சடைமுடியையுடைய சிவனும் அதிசயமுடன் சந்தோஷித்துப் பக்கத்திலிருந்தபோது கொதித்தலைக்கொண்ட வேலேந்திய இராக்கதர்களுடைய கொடுமையைச் சொல்லினார்கள் — எ-று.
(௰௬)

தூ-இசை-நிறைத்து நின்றது.

ஐயிருதலையினோனனுசராதியா ... ... ... *
மெய்வலியரக்கரால்விண்ணுமண்ணுமே ... ...*
செய்தவமிழந்தனதிருவினாயக ... ... ... ...*
வுய்திறமிலலையென்றுயிர்ப்புவிங்கினார் ... ... *

(இ-பு,) திருமகள் நாயகனே பத்துத்தலைகளையுடைய இராவணன் அவன் தம்பி மார்முதலான தேகவலியுள்ள ராக்ஷதர்களால்சுவர்க்கலோகமும்பூலோகமுஞ்செய்யுந்தவங்களையுந்தருமங்களையு மிழந்துவிட்டன, இனிநாங்கள்பிழைக்கிற தன்மையிலலையென்று சொல்லிப்பெருமூச்சு விட்டார்கள்-எ-று.

இராவணனுக்கு முதற்பெயர் தசக்கிரீவன் கைலையங்கிரியையெடுத்தபோது தன்கைநசுக்கப்பட்டுக்கொண்டு ரோதனஞ்செய்தகாரணத்தால் இராவணனெனப் பெயருண்டாயது. விண்ணைநீக்கி அநுசராதியா மெய்வலியரக்கராலெனப்பாடமோதுதலுமுண்டு,ஏ-ஒழியிசை.

எங்கணீர்வரங்களாலரக்கரொன்றானார் ... ... *
பொங்குமூவுலகையும்புடைத்தழித்தனர் ... ...*
செங்கணாயகவினிநீர்த்தலில்லையே ... ... *
துங்குவருலகையோர்நொடியினென்றனர் ... *

(இ-பு) செங்கணாயகனே எங்களுடைய பெரியவரங்களால் அரக்கரென்று சொல்லப்பட்டிருப்பவர்கள் - பொங்குமுள்ள திரிலோகங்களையும் அடித்தழித்தார்கள் இனி அவர்களை யொழித்தலில்லாவிட்டால் இவ்வுலகங்களை ஒருநொடிப்பொழுதில் உண்டுவிடுவார்கள்—எ-று. (௰௮)

என்றனரிடருழந்திறைஞ்சிவேத்தலு... ... ...*
மன்றலர்துளவினான்வருந்தல்வஞ்சகர் ... ... *
தந்தலைபறித்திடர்தணிப்பனியானிக் ... ... *
கொன்றுநீர்கேண்மெனவுரைத்தனன்மேயினான்.... *

(இ-பு) இவ்வாறு சொன்னவர்களாய்த் துன்பங்கொண்டு வணங்கித் துதிசெய்தவளவில் (அவர்களை நோக்கி) நீங்களினி வருந்தாதிருங்கள் - இராக்கதர்களுடைய தலைகளையறுத்துப் பூலோகமுதலாகிய மூன்றுலோகங்களுக்கும் துயரத்தைத் தணிக்கின்றேம் ஆனால் நீங்களொருவார்த்தை கேளுங்களென்று வாசனைபொருந்த துளசிமாலை யணிந்திருக்கும் திருமாலானவர் சொல்லுகலைப் பொருத்தினார்—எ-று. (௰௯)

உழந்தல் - அநுபவித்தல்-வருந்தல்-ஒருமைப்பன்மை மயக்கம்—பொய்பாவம்வஞ்சகமுள்ளவர்களாதலால் அரக்கரை வஞ்சகரென்றார். ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தென்றநூலால் மூவுலகுங்கொள்ளப்பட்டது திரிலோகமாவது-சுவர்க்கலோகம்- பூலோகம்- பாதாளலோகம்- கேண்மினென் னாக்கற்பாலது மின் என்னும் முன்னிலைப் பன்மை யேவல் முற்றுச்சொல்குன்றிக் கேண்மெனநின்றது. மேவினான் எனற்பாலது மேயினானென விகாரமாயிற்று.

வானுளோரனைவரும்வானரங்களாய்க் ... ... *
கானினும்வரையினுங்கடிதடத்தினும் ... ... *
சேனையோடவதரித்திடுமின்சென்றென... ... *
வானைமலர்த்தனைருளினூழியான் ... ... ...*

(இ-பு.) வரனத்தை யுள்ளவர்களாகிய நீங்கள் யாவருஞ்சென்று வானரங்களாகிக் காட்டினிடத்தும், மலைகளினிடத்தும், வாசனை தங்கிய சோலைகளினிடத்தும், அவதரியுங்களென்று கிருபைகடலாகிய திருமாலானவர் திருவாய் மலர்ந்தருளினார்—எ-று. (உய)

ஆனனம்-முகம்-அது-ஈண்டு ஆகுபெயராய் வாயினையுணர்த்திற்று. அருளின் ஆழியானென்றும் அருளினால்சமுத்திரத்தை யொத்தவனென்றும் பொருள்படுமாறுமிக.

மராதமனையவர்வாருமவாழ்வுமோர்... .... ...*
நிசாதகணைகளானீறுசெய்யயாங் .. ... ... *
கசாதுரகமாக்கடல்கொள்காவலன்... ... ...*
றசாதன்மதலையாவருதுந்தாரணி... ... ... *

(இ-பு:) அத்தன்மையுள்ள அரக்கர்களுடைய பேய்த்தேரினையொத்த வரங்களையும், வாழ்வுகளையும், ஒப்பற்ற உண்மையாகிய ரத்தகணைகளால் அழிக்கும்படி -யானைகள்- தேர்கள்- குதிரைகள்- பதாதிகளாகிய பெரியசேனாசமுத்திரத்தையுடைய அரசனாகிய தசரதனுடைய புத்திரனாகப்பூலோகத்தில் யாஞ் செல்கின்றோம்—எ-று. (உக)

வளைபொருந்திகிரியும்வடவைநிகர ... ... ... *
விளைதருசினவுடைவிரிகொள்பாயலு ... ... .*
மிளைஞர்களெனவடிபரவவேகிநாம்... ... ...*
வளைமதிலயோத்தியிலவருதுமென்றனன்...... ...*

(இ-பு) சங்கமுஞ் சக்கராயுதமும் வடவாமுகாக்கினி நிகரும்படி உண்டாகின்ற விஷத்தையுடைய விரித்தலைக்கொள்ளும் பாயலாகிய சேஷனும் தம்பியர்களாக அடியைப்பரவும்படி நாஞ்சென்று மதில்சூழ்ந்த அயோத்தியில் வருகின்றோமென்றனர்—எ-று. (உஉ)

என்றவனுரைத்தபோதெழுந்துதுள்ளினர் ... ...*
நன்றிகொண்மங்கலநாதம்பாடினர் ... ... ... *
மன்றலர்செழுந்துளவணியுமாயனு ..., ... ...*
ரின்றெமையளித்தனனென்னுமேம்பலால்... ......*

(இ-பு) ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளினபோது தேவர்கள் எல்லாரும் வாசனை பரந்த செழுந் துளவமாலை யணிந்த சுவாமியானவர் இப்போது நம்மை ரக்ஷித்தனரென்னுஞ் சந்தோஷத்தினால் எழுந்து துள்ளி நன்மைகொண்ட மங்கலகீதம்பாடினார்கள்—எ-று. (உங)

[வேறு.]

போயதெம்பொருமலென்றுவிந்திரனுவகைபூத்தான் ... ...*
றாயடாமலருமோனுஞ்சுடர்மதிசூடிமேனுஞ் ... ... ....*
சேயுயர்விசும்புளோருந்தீர்ந்ததெந்சிறுமையென்றார்... ...*
மாயிருஞாலமுண்டோன்கழன்மேற்சரணம்வைத்தார் ... *

(இ-பு.) எங்கள் துன்பம் நீங்கிவிட்டதென்று கொண்டாடி -தேவேந்திரன் சந்தோஷமுடையவனானான்- பரிசுத்தமாகிய பெருமைபொருந்திய தா

மணமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், பிரகாசமுள்ள சந்திரனைத்தரித் திருக்கும் சிவனும், மிகவும் உயர்ந்த சுவர்க்கத்திலிருக்கும் தேவர்களும் எங்கள் சிறுமை தீர்ந்ததென்றுட்கொண்டார்கள் மிகவும்பெரிய உலகமுண்ட திருமாலானவர் கருடன்மேல் திருவடிகளைவைத்தருளினார்—எ-று. (௨௪)

சரணம்வைத்தாரென்றது ஆரோகணித்துக்கொண்டாரென்னும்பொருள்படநின்றது.

என்னையாளுடையவையன்கலுழன்மீதெழுந்துபோய ... *
பின்னரிவானவரைநோக்கிப்பிதாமகன்பேசுகின்றான்... ... ...*
முன்னரேயெண்ணின்வேந்தன்யாமெனமொழிகின்றான்மற் ... *
றன்னவாறெவருநீர்போயவதரித்திடுமினென்றான் ... ... *

(இ-பு) என்னை யடிமையாகவுடைய நாராயணமூர்த்தியானவர் கருடவாகனத்தின்மேல் எழுந்தருளிப்போனபின்பு தேவர்களைநோக்கிச்சொல்லுகின்றபிரமதேவன்-முன்னமே நாங்கரடிப்படைகளுக்கெல்லாம் அரசனாகிய சாம்பவானாக அவதரித்திருக்கிறேனென்றுசொல்லி அவ்வாறு நீங்களெல்லாரும்போய் அவதரித்திடுங்களென்றான்—எ-று. (௨௫)

தருவுடைக்கடவுள்வேந்தன்சாற்றுவானெனதுகூறு ... ... *
மருவலர்க்கசனியன்னவாலியுமகனுமென்ன... ... ... *
இரவிமற்றெனதுகூறங்கவற்கிளையவனென்றேத ... ... *
அரியுமற்றெனதுகூறுநீலனென்றறைந்திட்டானால்.... , ... *

(இ-பு) கற்பகவிருக்ஷங்களையுடையதேவேந்திரன் என்னுடையபகைவர்களாகிய இடியையொத்த வாலியும், அவன்புத்திரனாகிய அங்கதனுமென்று சொல்ல, பின்பு சூரியன் என்னுடையகூறு-வாலிக்கிளையவனாகிய சுக்கிரீவனென்று சொல்ல, அக்கினிதேவனும் என்கூறு- நீலனென்று சொல்லினன்-எ-று.

மேற்கூறிய இரண்டுவினையெச்சங்களும் அடைந்திட்டான் என்னும் வினைகொண்டு முடிந்தன, நீலனும் என்ற உம்மை தொக்குநின்றன.

வாயுமற்றெனதுகூறுமாருதியெனலுமற்றோர்... ... ... *
காயுமற்கடங்களாக்காசினியகலிடமீது ... ... ... *
போயிடத்துணிந்தோமென்றார்புராரிமற்றியானேவாத ...*
சேயெனப்புகன்றான்மற்றைத்திசையுளோர்க்குவழியுண்டோ.... *

(இ-பு) வாயுதேவன் என்னுடையகூறு அநுமானென்று சொல்லியவளவில் மற்றைத்தேவர்கள் கோபிக்கின்ற வானரங்களாகிப் பூமியினிடத்திற் செல்ல நிச்சயித்துக்கொண்டோமென்றார்கள். (புராரி) திரிபுரதகனஞ்செய்தவராகிய சிவன் நானே அந்த வாயுபுத்திரனென்று சொன்னார். மற்றத்திசையிலிருப்பவர்களை வகுத்துச்சொல்லஅளவுண்டோ—எ-று. (௨௭)

அருட்டருகமலக்கண்ணனருண்முறையயலருரோது ... ... *
மிருட்டருமிடத்திறேனுமமரருமினையராகி... ... ... ... *
மருட்டருவனத்திண்டண்ணின்வானரராகிவந்தார் ... ... ...*
பொருட்டருமிறைவர்தத்தமுறைவிடஞ்சென்றுபுக்கார்... ...*

(இ பு.) பாகவதர்களுக்குக் கிருபையைத் தருகின்ற தாமரை மலர்போன்ற திருநேத்திரங்களுள்ள நாராயணமூர்த்தியானவர் அருளிச்செய்த முறைமைப்படி தாமரைப்பூவில் வீற்றிருக்கும்பிரமதேவனும், கருமைநிறம்பொருந்திய கண்டத்தையுடைய சிவனும், தேவர்களும், இத்தன்மையாகிய எத்பாடுகள்செய்துகொண்டு மபக்கத்தைத்தருகின்ற ஆரணியங்களிலு மற்றப் பூமியிலும் வானரர்களாய் வந்தார்கள்- புருஷார்த்தங்களை நினைத்துத்தொழுகின்றவர்களுக்குத் தருகின்றவர்களாகிய பிரமதேவனுஞ் சிவனும் தங்கள்தங்கள் வாசஸ்தானங்களிற்போய்ச் சேர்ந்தார்கள்—எ-று. (௨௮)

ஈதுமுன்னிகழ்ந்தவண்ணமெனமுனிபிதயந்தெண்ணி ... ... *
மாதிரம்பொருதிண்டோண்மன்னநீவருந்தலேழ்ந் ... *
பூதலமுழுதுங்காக்கும்புதல்வரையளிக்கும்வேள்வி ... ... *
தீதறமுயலின்யாமிந்தைதீரநீதிருமென்றான் ... ... ... ...*

(இ-பு) இதுமுன்னம் நடந்த முறைமை யாலவாவென்று வசிஷ்டமுனிவர் தம்முடைய மனதில்நினைத்துத் திக்குகளையும் பொருதத்தக்க திண்ணிய புஜங்களையுடைய அரசனே நீ வருந்துதலைநீங்கு- பதினுலுலோகங்களையுங் காக்கும்படியான புத்திரனைத்தரத்தக்கதான புத்திரகாமேஷ்டி குற்றமறச் செய்வையாகிலப்பனே யுன்சிந்தையிலிருக்கும்வருத்தந்தீருமென்றார்-எ-று

என்னமாமுனிவன்கூறவெழுந்தபேருவகைபொங்க ... *
மன்னவர்மன்னனந்தமாமுனிசரணஞ்சூடி... ... .. ... ...*
யுன்னையேபுகலப்புக்கேனுக்குறுகண்வந்தடைவதுண்டோ ... *
வன்னதற்கடியேன்செய்யும்பணிபணிகளிதியென்றான் ... ...*

(இ-பு.) புத்திரகாமேஷ்டி செய்யென்று பெருமை பொருந்திய வசிஷ்டமுனிவர் சொல்லியவளவில் உண்டாகிய பெரிய சந்தோஷமானது மேலிட, அரசர்க்கரசனாகிய தசரத மகாராசன் அந்த வசிஷ்டருடைய திருவடிகளைத் தன்முடியில் சூட்டிக்கொண்டு தேவரீரையே அடைக்கலமாகச் சேர்ந்தவனுக்குத் துன்பம்வந்து சேர்வதுமுண்டோ- அத்தன்மையுள்ள இஷ்டியைகுறித்து அடியேன் செய்யவேண்டிய ஏவல்யாதோ அதனையும் இனிதாகக்கட்டளையிட்டருளவேண்டுமென்றான்—எ-று. (௩௰)

ஏ-தேற்றம்-அடைவதுண்டோ என்னும் ஓகாரம் அடையாதென்னும்எதிர்மறைப்பொருளில்வந்தது.

மாசறுவாரர்களோடுமற்றுளோர்தமையுமீன்ற ... ... ...*
காசிபனருளமைந்தவிபாண்டகன்கங்கைசூடி ... ... *
மீசனும்புகழ்தற்கொத்தோனிருங்கலைபிறவுமெண்ணித் ... ...*
தேசுடைத்தந்தையொப்பான்றிருவருள்புனைந்தமைந்தன் ... *

(இ-பு.) குற்றமற்றதேவர்களையு மற்றுமுள்ளவர்களையு மீன்ற காசியபரிஷி பெற்ற புத்திரனாகிய விபாண்டகரென்னும் பெயரையுடையவருங் கங்காநதியைத்திருமுடியில் அணிந்திருக்குஞ் சிவனும் புகழ்தற்கொத்தவரும் பெருமைபொருந்திய வேதமுதலிய சாஸ்திரங்களிலு மற்றவைகளிலும் எண்ணு

யிடத்து ஒளியையுடைய தமது பிதாவாகிய காசிபருக்கொப்பானவருமாகிய முனிவருடைய திருவருளைப்பெற்றபுத்திரன் — எ-று. (௬௧)

வருகலைபிறவுநீதிமனுநெறிவரம்பின்வாய்மை ... ... ......*
தருகலைமறையுமெண்ணிற்சதுமுகற்குவமைசான்றோன் ... *
திருகலையுடையவிந்தச்செகத்துளோர்தன்மைதேரா... ... *
வொருகலைமுகச்சிருங்கவுயர்தவன்வருதல்வேண்டும் ... ...*

(இ-பு.) வழங்குகின்ற கலைஞானங்களிலும் பிறவற்றிலும் நீதியிலும் மனுவினாற்சொல்லப்பட்ட ஒழுக்கத்திலும் அளவில்லாததா யுண்மைநெறிகளைச் சொல்லுகின்றவேதசாஸ்திரங்களிலும் யோசிக்குமிடத்தில் நான்குதிருமுகங்களையுடைய பிரமதேவனுக்கொப்பானவராய்த் திருகிவருகின்ற அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த விந்தவுலகத்தி லிருப்பவர்களுடைய தன்மையை உணராதஒருகொம்புள்ள கலைமானின்முகமுடைய உயர்ந்த தவசியாகிய கலைக்கோட்டுமுனிவர் அந்த இஷ்டி செய்வதற்காக வருதல்வேண்டும்-எ-று (௬௨)

பாந்தளின்மகுடகோடியரித்தபாரதனில்வைகு ... ... *
மாந்தர்கள்விலங்கென்றுன்றுமனத்தன்மாதவத்தினெண்ணிற் *
பூந்தவிசுவந்துளோனும்புராரியும்புகழ்தற்கொத்த ... ... *
சாந்தனால்வேள்விமுற்றிற்றயர்களவராமென்றான் ... *

(இ-பு.) சர்ப்பரூபமாகிய ஆதிசேஷனின் ஆயிரம்பணாமுடிகளாலும் தாங்கப்பட்ட பூலோகத்தில் பொருந்திய மனிதர்களை மிருகங்களென்று நினைக்குமனமுள்ளவராகிய பெருமைபொருந்திய தவத்தில் எண்ணுமிடத்துத் தாமரைப்பூவாகிய ஆசனத்தைச்சந்தோஷித்ததிலிருப்பவராகிய பிரமதேவனும் பரமசிவனும் புகழ்தற்கொத்த சாந்தகுணமுள்ள அந்த முனிவரால் யாகம் நிறைவேற்றினால புத்திரர்களுண்டாவர்களாவார்களென்றுசொன்னார்-எ-று. ( )

ஆங்கதையினையகூறுமருந்தவர்க்கரசன்செய்ய ... ... ... *
பூங்கழற்றொழுதுவாழ்த்திப்பூதலமன்னர்மன்னன் ... ... ...*
நீங்கருகுணத்தான்மிக்கசெழுந்தவன்யாண்டையுள்ளா ... *
னீங்கியான்புரியுந்தன்மையருளுதியிறைவவென்றான்... ... .*

(இ-பு.) இத்தன்மையனவாகிய வார்த்தைகளைச்சொல்லிய அருமையாகிய தவமுனிவர்களுக்கெல்லாஞ் சிறந்தவராகிய வசிஷ்டருடைய செந்தாமரைமலர்போன்றபாதங்களைத்தொழுது வாழ்த்திப்பூலோகத்திலிருக்கும் அரசர்க்கரசனாகியதசரதமகாராசனானவன் குற்றம்நீங்கிய குணங்களாற்சிறந்தசெழுமையுள்ளவராகிய அந்தக்கலைக்கோட்டுமுனிவரெவ்விடத்திருக்கின்றார் இங்குநான் செய்யுந் தன்மையை யிறைவனே அருள்செய்யுமென்றான்—எ-று. (௬௪)

[வேறு]

புத்தானகொடுவினையோடருந்துயரம்போயொளிப்பவுணர்ந்தாங்குஞ் *
சத்தானகுணமுடையோன்றனையியென்றுந்தன்னைனிபின்காலைபோல்வா....*

னைந்தானும்வெல்தற்கரியான்மனுகுலத்தேவந்துதித்தோனிலங்குமௌலி *
யுத்தானபாதனருளுரோமபாதனென்றுளனிவ்வுலகையாள்வான்...... ... *

(இ-பு.) நவமாகிய கொடிய வினைகளுடன் அரிய துயரமானது போயொழிப்பதற்குக் காரணமான சத்துவ குணமுடையவனுந் தயை தாக்ஷணியம் கிருபை இவைகளினிடம் போல்பவனும் எதனாலும் வெல்லுதற்கரியவனும் மனுகுலத்தில்வந்து பிறந்தவனுமாகிய பிரகாசிக்கா நின்ற கிரீடமணிந்துள்ள உத்தானபாதனென்னும் அரசன் பெற்ற உரோமபதன் என்று சொல்லப்பட்டு இந்த உலகத்தை யாளுகின்ற ஒரு அரசனிருக்கின்றான்—எ-று. (௧௫)

அன்னவன்றன்புரந்தனிக்குந்திருநாட்டினெடுங்காலமளவதாக... ... *
மின்னிமெழுமுகிலின்றிவெந்துயரம்பெருகுதலும்வேதநன்னூல்... ...*
மன்னுமுனிவரையழைத்துமாதானங்கொடுக்கினும்வான்வழங்காதாகப் ...*
பின்னுமுனிவரர்க்கேட்பக்கலைக்கோட்டுமுனிவரின்வரன்பெறுமென்றார்.

(இ-பு.) அவ்வரசன் ரட்சிக்கா நின்ற திருநாட்டினிடத்தில் நெடுங்காலவளவாக மின்னிக்கொண்டுவருகின்ற மேகம்பொழியாமையினால் வெம்பிய துயரமதிகரிக்கவே வேதமுதலிய நல்லசாஸ்திரங்களில உணர்ச்சி பொருந்திய முனிசிரேஷ்டர்களை வரவழைத்துப் பெரியதானங்கொடுக்கவும் அம்மேகம்பொழியாததாகவே பின்னும் அம்முனிவரை நோக்கித்தானங்கொடுத்தும் மழைபெய்யவில்லையேயென்று வினவினான் அவர்கள் கலைக்கோட்டு முனிவரால் மழைபெய்யுமென்றார்கள்—எ-று. (௧௬)

ஓதநெடுங்கடலாடையுலகின்னிவ்வாறு நவின்றக்காலங் கனமேவுமுன்னும் ... ...*
மீகாதில்குணத்தருந்தவனைக்கொணருமவகையாவதெனக்குரைக்குமெவலை *
சோதிநுதற்கருநெடுங்கட்டுவர்நறுவாய்த்தரளநகைத்துணைமென்கொங்கை..
மாதரொருந்தியாமேகியருந்தவனைக்கொணர்துமெனவணக்கஞ்செய்தார் ..*

(இ-பு.) முனிவர்கள் இவ்வாறு சொல்லியபோது அலைகளையுடைய நெடிய சமுத்திரமாகிய புடைவையால் சூழப்பட்ட உலகத்தில்வாழும் மனிதர்களை யிருகண்களெனவே மதித்துக்கொண்டிருக்கும் குற்றமில்லாத குணத்தையுடைய கலைக்கோட்டுமுனிவரை இவ்விடத்துக்குக் கொண்டுவரும்வகை எப்படியென்று அரசன் ஆலோசிக்கும்போது ஒளிபொருந்திய நெற்றியினையும், கருமைதங்கிய நெடிய கண்களையும், பவளம்போன்ற அதரத்தையுடைய வாயினையும், முத்துபோன்ற பற்களையும், தமக்குத்தாமே யொப்பாகிய தனங்களையுமுடைய மாதர்கள் எழுந்து நாங்கள் சென்று அந்த முனிவரை அழைத்துக்கொண்டுவருகிறோமென்று வணக்கஞ்செய்தார்கள்—எ-று. (௧௭)

தமக்குத்தாமேயொப்பாகிய என்பதனை நச்சினார்க்கினியாருரையிற்காண்க. இரண்டு கொங்கையெனப் பொருள்கொள்வாருமுளர்.

ஆங்கவரம்மொழிபுரைப்பவரசன்மகிழ்ந்தவர்க்கனிதாசாதியாய .... [தோ
பாங்குளமற்றவையருளிப் பனிப்பிறையைப் பழித்தநகைப்பணைத்த வேய்த்
தோங்குமிடைதடித்தமுலையிருண்டகுழன்மருண்டவிழிப்பவளச்செவ்வாய்ப்*
பூங்கொடியீரேகுமெனத்தொழுதிறைஞ்சியிரதமிசைப்போயினரே ... *

(இ-பு.) (அம்முனிவர்) அருக்கிய முதலானவைகளோடு ஆசனங்கொடுத்து இருக்கக்கடவீரென்று சொல்ல, அவர்களிருந்தபின்பு இனியவார்த்தைகளைச் சொன்னவளவில முருக்கம்பூவையொத்த அதரத்தையுடைய அம்மாதர்கள் முனிவரைவணங்கி விடைபெற்றுக்கொண்டு விரைவினிலெழுந்துபோய்த் தங்கள் ஆசிரமத்திற்சேர்ந்தார்கள்—எ-று. (௪௧)

அருக்கியம் பாத்தியம் ஆசமனம் இம்மூன்றும் பெரியோர்களுக்குச் செய்யு முபசாரம். அருக்கியம் நீர் சிரசில் புரோக்ஷித்தல் பாத்தியம்-பாதங்களைக் கழுவுதல் ஆசமனம்-ஆசமனஞ்செய்யக்கொடுத்தல்- இருக்க என்னும் வியங்கோள் இருக்கெனவிகாரமாயிற்று.

திருந்திழைபயர்சிலதினங்கடேர்ந்துழி ... ... ...*
மருந்தினுமினியனவருக்கைவாழைமாத் ... ... *
தருந்தருங்கனிதொடுதாழையின்பல .... ...*
மருந்தவருந்தெனவருளினாரரோ... ... .... *

(இ-பு) திருத்தமாகச் செய்யப்பட்ட ஆபரணங்களணிந்துகொண்டிருக்கும் அக்கன்னிகைமாதர்கள் சிலநாள் சென்றபோது அரியதவமுனிவ ரோ அமிர்தத்தினுமினியவைகளாகிய-பலா-வாழை-மா-என்னுமிம்மிருட்சங்கள் தந்தபழவர்க்கங்களும் தேங்காய்களும் உண்ணுமென்றுகொடுத்தார்கள்.

தருதரு எனற்பாலது தருந்தரு என மெலித்தல் விகாரமாயிற்று. தாழை- தெங்கு- பலம்-பழம்-அருந்தென்பதை சிறிதுசிறிதாகக்கொடுத்துத்தின்னப்படுகிறீர்களெனக்கொள்க உழி-என்பது-ஈண்டு காலத்தின்கண்வந்தது.

இன்னனபலபகலிறந்தபின்றிரு... ... ... ... *
நன்னுதன்மடந்தையர்நவையின்மாதவன் ... *
தன்னையெம்மிடத்தினுஞ்சார்தல்வேண்டுமென்... *
றன்னவர்தொழுதுமவரொடேகினார் ... ...*

(இ-பு.) இத்தன்மையுடையவைகளாகிய பலநாள் சென்றபின்பு அழகிய நல்லநெற்றியையுடைய அம்மாதர்கள் குற்றமில்லாத கலைக்கோட்டு முனிவரை நோக்கி எங்களிடத்துக்கும் தேவர்வருதல்வேண்டுமென்று அவர்கள் வணங்கினவளவில் அவர்களுடன் சென்றார்—எ-று. (௪௨)

இடத்தினும் என்பதிலீற்றிலிருக்கும் உம்மை எச்சவும்மை.

விம்முறுமுவகையர்வியந்தநெஞ்சின ... ... *
ரம்மவிதீதுவெனவகலுநீணெறி ... ... ... *
செம்மையின்முனிவரன்றொடரச்சென்றனர் ...*
தம்மனைமனமருட்டையலார்களே... ... ... *

(இ-பு) (கலைக்கோட்டுமுனிவர் தடைசொல்லாமல் வருதலினால்) மயக்கத்தைச்செய்கின்ற அம்மாதர்கள் அதிகரிக்கும் சந்தோஷமுடையவர்களும், அதிசயமுற்ற மனமுடையவர்களுமாய் அம்முனிவரைநோக்கி எங்கள்பன்னசாலை யிதோ விருக்கின்றது இதோ விருக்கின்றதெனச் சொல்லிக்கொண்டு போகின்ற நெடிய மார்க்கத்தில் செவ்விதாக அக்கலைக்கோட்டுமுனிவர் தங்கள்மனம்போலப்பின்றொடர்ந்துவரச்சென்றார்கள்—எ-று. (௪௩)

அம்ம முன்னிலையசை. செம்மையின் முனிவரன் என்பது ஒழுக்கத்திணையுடைய முனிவனாக்கொள்ளினுமமையும். செவ்விதாக வென்றவிட்டது. இவ் – ஆல்வழிக்கண்வந்த சாரியையாகக்கொள்க. முனிவரன் – முனிசிரேஷ்டன்.

வளநகர்முனிவரன்வருமுன்வானவன்... ... ...*
களமர்கடுவெனக்கருகிவான்மிசை... ... ... *
சளசளவெனமழைத்தாரைகான்றன ... ... ...*
குளனொடுநதிகடங்குறைதபரவே... ... ... *

(இ-ம்.) இவ்வாறு கலைக்கோட்டுமுனிவர் உரோமபதராசனுடைய வளப்பம்பொருந்திய நகரத்துக்கு வருமுன் மேகங்கள் பரமசிவனது கண்டத்திற் பொருந்திய விஷத்தைப்போலக் கருநிறங்கொண்டு ஆகாயத்தின்மேனின்று சளசளவென்று மழைத்தாரைகளைக் குளங்களும், நதிகளும், தங்கள் குறைதீரும்படி பொழிந்தன — எ-று. (௪௫)

சளசளவென்பது – இரட்டைக்கிளவி குளன் மொழியிறுதிப்போலி.

பெரும்புனனதிகளுங்குளனும்பெட்புறக் ... ...*
கரும்பொடுசெந்நெலுங்கவின்கொண்டோங்கிட *
விரும்புயல்ககனமீதிடைவிடாதெழுந்... ... *
தரும்புனல்சொரிந்தபோதரசுணர்ந்தனன்... ...*

(இ-ம்.) ஆறுகளுங் குளங்களும் மிகுந்த நீர்விடத்துக் கொண்டிருக்கிற ஆனந்திக்கவும், கரும்புஞ் செந்நெற்களும் அழகுகொண்டு ஓங்கிவளரவும், பெரியமேகம் ஆகாயத்தின்மேலெழுந்துநின்று இடைவிடாமல் அரியநீரைச்சொரிந்தபோது உரோமபதராசன் உணருகின்றான் — எ-று. (௪௬)

உணர்கின்றனன் என நிகழ்காலத்தாற் கூறப்பட்டது.

காமமும்வெகுளியுங்களிப்புங்கைத்தெழு ... ...*
கோமுனியிவணடைந்தனன்கொல்கொவ்வைவாய்த்*
தாமரைமலர்முகத்தரளவாணகைத்... ... ... *
தூமமென்குழலியர்புணர்த்தசூழ்ச்சியால்... ... *

(இ-ம்.) காமத்தையுங் கோபத்தையு மயக்கத்தையும் வெறுத்துணர்ந்தமுனிசிரேஷ்டராகிய கலைக்கோட்டுமுனிவர் கோவைப்பழம்போன்ற வாயினையும்; செந்தாமரைமலர்போன்ற முகத்தினையும், முத்துகளொத்த ஒளிபொருந்திய பற்களையும், புகையூட்டிய மிருதுவாகிய அளகபாரத்தையு முடைய கணிகைமாதர்செய்த வுபாயத்தினால் இவ்விடத்தில் வந்தாரோ — எ-று (௪௭)

என்றெழுந்தருமறைமுனிவர்யாரொடுஞ்... ... *
சென்றிரண்டியோசனைசேனைசூழ்தர... ... ...*
மன்றலங்குழலியர்நடுவண்மாதவக்... ... ... *
குன்றினையெதிர்ந்தனன்குவவுத்தோளினான்... ... *

(இ-ம்.) திரட்சியாகியதோளையுடைய அவ்வரசன் இவ்வாறு ஆலோசித்துக்கொண்டு சிங்காசனம் விட்டெழுந்து சேனைசூழ்ந்துவர அரியவேதங்களுட

ணர்த்த முனிவர்கள் யாவருடனும் இரண்டுயோசனை தூரவழிசென்று வாசு
லைதங்கிய அளகபாரத்தையுடைய அம்மாதர்கண்மத்தியில் பெருமைபொரு
ந்திய தவத்தில் மலைபோல் சலனப்படாத தன்மையுள்ள கலைக்கோட்டுமுனி
வரை எதிர்கொண்டான்—எ-று. (சஅ)

சிறப்பினால் தவக்குன்றென உயர்திணை அஃறிணையாயிற்று. மன்றல் அம் இதிலிருக்கும் அம்சாரியை- அழகெனவுமாம்.

வீழ்ந்தன்னடியிசைவிழிகளிரசர ... ... ..*
வாழ்ந்தனமினிமெனமகிழ்சிந்தையான் ... *
சூழ்ந்தெழுமாதராந்தம்மைநோக்கிநீர் .. ... *
போழ்ந்தனிரொலிடர்புணர்ப்பினாலென்றான் ... *

(இ-ள்.) அம்முனிவரைக் கண்டவளவிலினி வாழ்ந்தோமென்று மகிழ்ந்த
சிந்தையையுடைய அவ்வரசன் கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிய அம்மு
னிவருடைய பாதத்தினிடத்தில் தாழ்ந்து வணங்கினபோது தன்னை வணங்கி
எழுந்த அம்மாதர்களை நோக்கி நீங்கள் உபாயத்தினால் என்னுடைய துன்ப
த்தை நீக்கினீர்களென்று சொல்லுவான்—எ-று. (சகூ)

அரசருமுனிவருமடைந்தவாயிடை ... ... ...*
வரமுனிவஞ்சமென்றுணர்ந்தமாலைவாய்... ... *
வெருவினர்விண்ணவர்வேந்தன்வேண்டலாற் ... *
கரையெறியாதலைகடலும்போன்றனன்... ... *

(இ-ள்) அரசர்களும் முனிவர்களும் வந்தபொழுது சிரேஷ்டமுள்ள கலைக்
கோட்டுமுனிவர் இது வஞ்சகம் என்று அறிந்து கொண்ட காலத்தில் தேவர்
களும் பயந்தார்கள். உடனே அவ்விராசன் வேண்டிக் கொண்டமையால் (அம்
முனிவர்) கோபங்கொள்ளாமல் கரையுடைத்துப் புரண்டுவராமலிருக்கும் அ
லைநீரையுடைய சமுத்திரம்போலிருந்தார்—எ-று (ருய)

அவ்வெல்லுஞ் சுட்டெழுத்து—ஆ—வென்றீண்டி யகரவுடன்படுமெய்பெற்று - அயிடை
யென நின்றது. கரையெறியாத அலைகடலென்பாலது கரையெறியாது அலைகடலென்றது
பக்சத்திரிவு- புறம் புரிந்திவ்விலோரொன்றதுபோல.

வள்ளுறுவயிரவாண்மன்னன்பன்முறை... ... ...*
வெள்ளருமுனிவனையிறைஞ்சியாரினுந் ... *
தள்ளருந்துயரமுஞ்சமைவுஞ்சாற்றலு ... ... *
முள்ளுறுவெகுளிபோயொளித்ததாமரோ ... ...*

(இ-ள்.) உறைபொருந்திய பலமுள்ள வாளாயுதத்தையுடைய அவ்வரசன்
இகழ்ச்சிசெய்தற்கரிய கலைக்கோட்டுமுனிவரைவணங்கி அநுவளையில் மழை
யின்றி யாவராலும் நீக்குதற்கரிதாயிருந்த தன்னுடைய துயரத்தையும் தற்
காலமழைபொழிந்த அமைதியையுஞ் சொல்லியவளவில்அம்முனிவருள்ளத்
திற்பொருந்திய கோபமானது ஒளித்துப்போயிற்று—எ-று. (ருக)

அருள்சுரந்தரசனுக்காசியுங்கொடுத்... ... ...*
தருடருந்தேரின்மீதொல்லையேறினன்... ... *

பொருடருமுனிவருந்தொடரப்போயினன்*......*
மருளொழியுணர்வுடைவரதமாதவன்... ... ...*

(இ-பு.) மயக்கம் நீங்கிய ஞானத்தையுடைய சிரேஷ்டம்பொருந்திய கலைக்கோட்டுமுனிவர் மனையிலிருந்து அவ்வரசனுக்கு ஆசீர்வசனமுங் கொடுத்து உருளைபூண்ட தேரின்மேல் விரைவாக எதிரவராய் வந்தருமுனிவர்களுந் தொடர்ந்துவர வழிக்கொண்டு சென்றார்—எ-று. (௩௨)

*போயினன்-என்னும் வினைமுற்றினை போயென்னும் வினையெச்சமாகக்கொள்க.

அடைந்தனன்வளநகரலங்கரித்தெதிர்... ... ...*
மிடைந்திடமுனியொடும்வந்தங்கோயில்புக் .... *
கொடுங்கலியொடாற்றுமாத்துறையுளோட்டியோர்...*
மடங்கலாதனத்திடைமுனியையவைத்தனன்... ... *

(இ-பு.) உரோமபதராசன் வளப்பம்பொருந்திய நகரத்தைச்சேர்ந்து அங்கிருப்பவர்கள் நகரத்தை யலங்கரித்து எதிர்கொண்டுவர, அம்முனிவருடன் தன்னரண்மனையிற்போய்க் குறைவில்லாத பொற்கூட்டத்தினாற்செய்யப்பட்டிருக்கிற சபாமண்டபத்திற் சேர்ந்து ஒப்பற்ற சிங்காசனத்தில் அம்முனிவனையிருக்கச்செய்தான்—எ-று. (௩௩)

அருச்சியமுதலியகடன்களாற்றிவே... ... ...*
றுணாக்குறைவிலவொவ்வுவந்துதானரும் ... ... *
முருக்கிதழிளமுலைமுகநலாடனை ... ..... ...*
யிருக்கொடுவிதிமுறையினிதினீந்தனன் ... *

(இ-பு.) செய்யாமல்விட்டது வேறொன்றென்றுசொல்லாதவண்ணம் அருக்கியமுதலாகிய உபசாரமுறைமைகளைச்செய்து சந்தோஷித்துத் தான்பெற்ற முருக்கம்பூவையொத்த அதரத்தையும், இளமையாகிய தனங்களையுமுடைய முகநலாளென்கின்ற கன்னிகையை விதிமுறைமைப்படி வேதபத்திரஞ்சொல்லி இனிதாகக்கொடுத்தான்—எ-று. (௩௪)

வறுமைநோய்தணிதரவான்வழங்கவே .. ... ...*
யுறுதுயர்தணிந்ததவ்வுலகம்வேந்தருள் ... ... *
செறிகுழல்போற்றிடத்திருந்துமாதவத் ... ... *
திறனுண்டிருக்குநகரசவென்றனன் ... ... *

(இ-பு.) தசரதராசனே நெடுங்கால மழையில்லாமையால் சம்பவித்திருந்த வறுமைநோய் தீரும்படி மேகமழைபொழிந்த வளவில் அந்தநாட்டிற் பொருந்திய துயரந்நீங்கிற்று - உரோமபதன்பெற்ற முகநலாள் உபசாரஞ் செய்யத்திருந்திய மாதவத்தையுடையமுனிவர் அந்நகரத்திலிருக்கின்றனென்று வசிஷ்டமுனிவர்சொன்னார்—எ-று. (௩௫)

செறிகுழல்அன்மொழித்தொகை.பதம்பிரிக்குமிடத்துநெருங்கிய அளகபாரத்தையுடையாள்.

[வேறு.]

என்றலுமேமுனிவரன்றனடியிறைஞ்சியினிதேகிக்கொணர்வனென்றேத்... *
துன்றுகழன்முடிவேந்தரடிபோற்றச்சுமந்திரனேமுதல்வராய ... ... *
வன்றிறல்சேரமைச்சரொடுமாமணித்தேரேறுதலும்வானோர்வாழ்த்தி. ...*
யின்றெமதுவினைமுடிந்ததெனச்சொரிந்தார்மலர்மாரியிடைவிடாமல்...*

(இ-பு) இவ்வாறு சொல்லியவளவில் தசரதமகாராசன் அந்த வசிஷ்டமுனிவருடைய பாதங்களைவணங்கி அடியேன் இப்போதே சென்று அம்முனிவனை அழைத்துக்கொண்டு வருகிறேனென்றுசொல்லி வீரகண்டையினையும், மகுடத்தினையுமுடைய மற்றுந்தேசத்தரசர்கள் தன்னடியைப் போற்றவும், சுமந்திரன்முதலாகிய சிறந்த பலமுள்ள மந்திரிகளுடன் பெரியமணிகள்பதித்ததேரின்மேலேறினவளவில் தேவர்கள்வாழ்த்தி எங்கள்குறையின்றுமுடிந்ததென்று கொண்டாடிக்கற்பகப்பூ மாரியை யிடைவிடாமற் சொரிந்தார்கள்-எ-று.

காகளமும்பல்லியமுங்கடலின்மேன்முழங்கக்காணம்பாட ... ... ...*
மாகதர்களருமறைநூல்வேதியர்கள்வாழ்த்தெடுப்பமதுரச்செவ்வாய்த் ...*
தோகையர்பல்லாண்டிசைப்பக்கடற்றானையுடைசூழக்கடமோனென்ன ...*
வேகியருநெறிநீங்கிரோமபதன்றிருநாட்டையெய்தினானன்றே ... ... ...*

(இ-பு.) எக்காளமுமற்றுமுள்ள பலவாத்தியங்களும் ஒலிக்காநின்ற சமுத்திரத்திலும் அதிகமாக முழங்கவும், பாடகர்நின்றுபாடவும், அருமையான வேதசாஸ்திரங்களுணர்ந்த பிராமணர்கள்வாழ்த்தொலி எடுப்பவும், மதுரம் பொருந்திய செவ்வாயினையுடைய மாதர்கள் பல்லாண்டு கூறவும், சமுத்திரம்போன்றசேனை புடைசூழ்ந்துவரவும், சூரியன் போலச்சென்று அரிய மார்க்கத்தைக்கடந்து உரோமபதராசன் திருநாட்டைக் கண்டான்-எ-று. ()

கொழுந்தோடிப்படர்கீர்த்திக்கோவேந்தனடைந்தமைசென்றொற்றர்கூற
கழுந்தோயிம்வரிசிலைக்கைக்கடற்றானையுடைசூழக்காவலேந்தன் ... [க்
செழுந்தோடப்பலவணியும்விசமாகதர்கடிரளும்பாட... ... ... *
வெழுந்தோடுமுவகையுடன்யோசனைசென்றரசையெதிர்கொளெண்ணி *

(இ-பு.) கொழுந்துவிட்டுப் படர்கின்ற கீர்த்தியினையுடைய தசரதராசன் வந்ததைத் தூதர்கள்போய்ச் சொல்லியவளவில் வீரகண்டையணிந்த காலையுடைய உரோமபதன் முற்றியும் வயிரமேறிய நீண்டவில்லேந்திய கையினையுடைய சமுத்திரம்போல அதிகமாகிய சேனை வீரர்கள் சூழ்ந்துவரவும், செழுமையானகாதணிகளும், மற்றுமுள்ளபலஆபரணங்களும் ஒளியைவீசவும், பாடகர் கூட்டமாய்ச்சேர்ந்து இசைபாடவும், எழுந்து நனைகுழுந்தின் செல்லுவதாகிய சந்தோஷத்துடன் தசரதராசனை எதிர்கொள்ள எண்ணி ஒருயோசனைதூரஞ்சென்றான்—எ-று. (௫௮)

கொழுந்தோடிப் படர்கின்றகீர்த்தி என்றது மேன்மேலும் விர்த்தியாகின்றகீர்த்தியென்னுங்குறிப்பு. கோவேந்தன் அரசர்க்கரசன் செழுமை-மணிகளின் விசேஷத்தைக் குறித்தது கொளல் என்பது அல்விகுதிகுன்றிக் கொள் என முதனிலைமாத்திரையாய்நின்றது. அரசன் என்னும் உயர்திணை-சிறப்புப்பற்றி அரசு என அஃறிணையாய் நின்றது.

எதிர்கொள்வான்வருகின்றவயவேந்தன்றனைக்கண்ணுற்றெழுமீராண ... *
வதிர்கின்றபொலந்தேர்நின்றரசர்பிரானிழிந்தடிசென்றடியின்வீழ .. *
முதிர்கின்றபெருங்காதனழைத்தோங்கவெடுத்திறுகமுயங்கமேலாடும். ... *
கதிர்கொண்டசுடர்வேலான்றனைநோக்கியிவையுரைத்தான்களிப்பின்மிக்கான்.

(இ-பு.) எதிர்கொள்ளவருகின்ற வெற்றியுள்ள உரோமபதராசனைக்கண்டு-அரசர்க்கரசனாகிய தசரதமகாராசனானவன் மேகங்களும் நாணும்படி யொலிக்கின்ற பொன்னாலாகிய தேரினின்றுமிழிந்துபோது உரோமபதராசன் சென்றுபாதத்தில வணங்கினவளவில அதிகரிக்கின்ற பெரிய ஆசையானது நன்றாகத்தோங்க,அவ்வரசனையெடுத்து இறுகத்தழுவிக்கொண்டவளவில் ஒளிபொருந்திய சூரியனையொத்த வேலாயுதத்தையுடைய தசரதமகாராசனை நோக்கிகளிப்பிலமிகுந்தவனாய் இவ்வார்த்தைசொல்லுகின்றான்-எ-று (௫௯)

உலகத்தினைச்சூரியன் ஒழிப்பதுபோலப் பகைவரை யொழிப்பதினால் சுடர்வேல் என்றார். [illegible] வுவமைத்தொகை-உவமைத்தொகையாவது-போலமுதலிய உவம உருபுகள் தொக்குநிற்பது.

யான்செய்தமாதவமோவிவ்வுலகுசெய்தவமோயாதோவிங்ஙன் ... ...*
வான்செய்தசுடர்வேலோய்படர்நிணமனைமகிழமணித்தேரேற்றித் .. [வ
தேன்செய்ததார்மௌலிநம்பூர்செந்நகைச்செறுநகரிற்கொணர்ந்தான்தெவ்
ரூன்பெய்தசுடர்வடிவேல்லோமபதனுலாக்குமராவுத்தோளான் ... *

(இ-பு) பகைவருடைய சரீரத்தில் புண்ணுண்டாகச் செய்வதற்கேதுவான வேலாயுதத்தையுடைய உரோமபதனென்று சொலலப்படுகின்ற பலம் பொருந்திய தோள்களையுடைய அரசனானவன் தெய்வலோகம் நிலைபெறச் செய்த ஒளியுள்ளவேலாயுதத்தையுடைய தசரதமகாராசனே நீயிவ்விடத்தில் வந்தது நான்செய்த பெரிய தவப்பயனோ இவ்வுலகஞ்செய்ததவப்பயனோ அல்லது மற்றெதுசெய்ததவப்பயனோவென்று அவ்வரசன் மனமகிழும்படி சொல்லித்தேனைப்பொழிகின்ற மாலையணிந்தமகுடந்தரித்த தசரதமகாராசனை மணிகள்பதித்த தேரிலேற்றிக்கொண்டு தன்னுடைய வளப்பம்பொருந்தியநகரத்திற்கொண்டுவந்தான்—எ-று. (௬௰)

வானிலைக்கச்செய்தது-சம்பராசுரனைவென்று இந்திரனுக்குப்பொன்னுலகந்தந்தது. சுடர்வேல- [illegible] வேலொளியுமாம்.—சுடராவடிவேல வடிவுள்ள ஒளியுள்ளவேல்-சேறுநகர் என்னும [illegible]-வெற்றி என [illegible].

ஆடகப்பொற்சுடரிமைக்குமணிமாடத்திடைப்பொருமண்டபத்தையண்மிப்.
பாடகச்செம்பதுமமலர்ப்பாவையர்பல்லாண்டிசைப்பப்பைம்பொற்பீடத்
தேடூற்றவடிவேலோன்றனையிருத்திக்கடன்முறைகள்யாவுநீந்து... ....*
தோடூற்றமலர்த்தாராவிருந்தளிப்பவினிதுவந்தாங்காரர்நாடந்தான் .*

(இ-பு.) ஆடகமென்னும் பொன்னினது ஒளியானது பிரகாசித்துக்கொண்டு இருக்கும்படியான அழகுபொருந்திய அரண்மனையிடத்தி லிருக்கும் ஒருமண்டபத்திற்சேர்ந்து பாடகமணிந்த செந்தாமரைமலர்போன்ற பாதங்களையுடையமாதர்கள் பல்லாண்டுகூறப் பைம்பொன்னாலாகிய சிங்காசனத்தில் தகட்டுவடிவாகப்பொருந்திய வடித்தவேலையுடைய தசரத மகாராசனை

மிருக்கச்செய்து அருக்கியபாத்தியாசமனங்கள் கொடுத்து இதழ்கள் நெருங்கிய பூமாலையணிந்துள்ள உரோமபதராசனானவன் விருந்திடவுண்டு தேவருலகத்தை இந்திரனுக்குக் கொடுத்தவனாகிய தசரதமகாராசன் இனிதாகச்சந்தோஷமடைந்தான்—எ-று. (௬௧)

ஆடகம் கிரிச்சிறை சாம்பூநதம் சாதரூபம் எனப் பொன்வகை நாலு. ஆடகப்பொன் என்பதனை இருபெயரொட்டுப் பண்புத்தொகையாக்கி ஆடகமாகிய பொன்னால் செய்யப்பட்டு என அமைப்பினு மமையும்.

செவ்விதனுஞ்சாந்தளித்துந்தேர்வேந்தன்றனைநோக்கிப்பிணிசேர்ந்த... *
கவ்வையுறாதருள்கமெனநிகழ்ந்தபரிசாசர்பிரான்கழறலோடு ... ... *
மவ்வியநீத்துயர்ந்தமனத்தருந்தவனைக்கொணர்ந்தீங்கண்பிடிப்பனென்ற.. *
செவ்விமுடியோயெனவுந்தேரேறிச்சேனையொடயோத்திசேர்ந்தான்.. *

(இ-ள்.) அழகும் வாசனையுமுள்ள சந்தனமும் கொடுத்தபின்பு தசரதமகாராசனை நோக்கி இவ்விடத்துக்கு நீர்வந்தகாரியத்தைச் சொல்லியருளவேண்டுமென்று உரோமபதராசன்சொல்ல, முன்னடந்த சங்கதிகளைத் தசரதமகாராசன்சொன்னவளவில் (அதைக்கேட்டு) அழகுநிறைந்த மகுடமுள்ள தசரதமகாராசனே அழுக்காறுமுதலியவைகளை நீங்கி மேன்மைபொருந்திய மனத்தையுடைய கலைக்கோட்டுமுனிவரையழைத்துக்கொண்டுவந்து அவ்விடத்தில் விடுக்கிறேனென்று சொன்னவளவில் தசரதமகாராசன் தேரின்மேலேறிக்கொண்டு சேனையுடன் அயோத்தியாநகரத்தைச் சேர்ந்தான்—எ-று. (௬௨)

மன்னர்பிரானகன்றதற்பின்வையவேதனுமறைநூல்வடிவங்கொண்ட ... *
தன்னமுனிவரனுறையுட்டனையணுகிப்பிணையடித்தாமரைகளம்பொன் ... ... *
மன்னுமலர்முடியணிந்துவரன்முறைசெய்திடவினவிவருதற்கொத்த ... *
தென்னையெனவடியேற்கோர்வரமருளுமடிகளெனையாவதென்றான் ...... *

(இ-ள்) அரசர்க்கரசனாகிய தசரதமகாராசன் சென்றபின்பு வெற்றிபொருந்திய உரோமபதமகாராசனானவன் அரியவேதசாஸ்திரங்கள் வடிவங்கொண்டனையொத்த கலைக்கோட்டுமுனிவருடைய இடத்திற்சேர்ந்து அவருடைய இரண்டு பாததாமரைமலர்களையும் அழகுள்ள பொன்னாற் செய்யப்பட்டு மணிகள் பதித்த தன்மகுடத்தில் அணிந்துகொண்டு வரன்முறையாகிய வந்தனை வழிபாடுசெய்ய அவர் (அவ்வரசனை நோக்கி) இங்கு நீ வருதற்குப்பொருந்தியகாரியம் யாதென்றுசொல்ல, சுவாமிகள் அடியேனுக்கு ஒரு வரமருளிச்செய்யவேண்டுமென்று உரோமபதராசன்சொல்ல, அம்முனிவர் நீகேட்கும்வரம் யாவதென்றார்—எ-று. (௬௩)

தன்முடியிலணிதலாவது-பணிதல்.

புறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்கபெருந்தகைதன்புகழிற்பூத்த ..., *
வறனூன்றுதிருமனத்தானமரர்களுக்கிடரிழைக்குமவுணராயோர் .... ... *
திறலுண்டவடிவேலான்றசரதனென்றுயர்கீர்த்திச்செங்கோல்வேந்தன் .... *
விறல்கொண்டமணிமாடவயோத்திநகரடைந்திவணீமீடலென்றான்... ... *

(இ-பு.) ஒருபுருவின்பொருட்டாகத் தராசுத்தட்டிலேறிய சிபிச்சக்கரவர்த்தியின்புகழுள்ள சூரியகுலத்திலுண்டான தருமமே குடிகொண்டிருக்கும் நல்லமனமுள்ளவனும், தேவர்களுக்குத் துன்பத்தைச்செய்த அசுரர்களுடைய வெற்றியை அபகரித்துக்கொண்ட வடிவேலாயுதத்தை யுடையவனுமாய்த் தசரதனென்று சொல்லப்பட்டுயர்ந்தகீர்த்தியினையுடைய செங்கோல்செலுத்துமரசனது பணிமாடங்களுள்ள வெற்றிபொருந்திய அயோத்திநகரத்திற்சேர்ந்து மறுபடி இப்படுவருவதாயாய்கேட்கும் வரம் என்றுசொல்லுவான் — எ-று. (௬௯)

அல்புக்க சரித்திரமின்டெழுதிப்பெருகும். புரு பன்றும் முதனிலை புக்கு எனத்திரிந்து இறந்தகால இடைநிலைகாட்டாதுநின்றது. புகழிற்பூத்த எம்பதற்குப் புகழைப்போலப்புகழுண்டாகிய எனப்பொருள்கொள்ளினு மமையும்.

புரு என்பது புறவென்பதின் மரூஉ-வெப்பவைப்பியவாறேயாம்.

அவ்வரந்தந்தனமினித்தேர்கொணர்திபெனவருந்தவத்தோனறைதலோடும்
வெவ்வரந்தீன்றயில்படைக்குஞ்சுடர்வேலோனடியிறைஞ்சி வேந்தர்வேந்தன், மைவிழித்துயர்ந்தனெனப்றதிர்ஞாற்றேர்கொணர்ந்ததனிற் கலைவலாளன், செவ்விருதத்திருவிதெனும்போற்தேறுகெனவேமிச்சிறந்தான்மன்னோ.

(இ-பு) அந்தவரந் தந்தோ மினித் தேர்கொண்டு வாவென்று கலைக்கோட்டுமுனிவர் சொன்னவளவில் வெவ்விய அரத்தைத்தின்று கூர்மைபெற்றிருக்கின்ற ஒளியுள்ள வேலாயுதத்தையுடைய உரோமபதராசன் அம்முனிவருடைய பாதங்களைவணங்கி அரசர்க்கரசனாகிய தசரதமகாராசன் துயரம்நீங்கி மேன்மையடைந்தவனானென்று தனக்குள் மதித்துக்கொண்டு அதிர்கின்ற ஓசையினையுடைய தேர்கொண்டுவந்து அந்தத்தேரில் கலைக்கோட்டுமுனிவரை நோக்கி அழகுள்ள நெற்றியினையுடைய திருமகள் போல்பவளாகிய சாந்தையுடன்வந்து சுவாமிகள் ஆரோகணித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவளவில் (அவ்வாறே) ஆரோகணித்துச்சிறந்திருந்தார்—எ-று. ()

சேர்ந்தானென்பதனைச் சிறப்புடனேறினனெனக்கொள்க. திறம்பாவது - வேறுகோத்திரங்கள் கோத்திருத்தலாம். இவ்வரசன் கைவேல அரத்தினை மாறுகச்செய்யுந்தூக்கவலிமையுடையதென்பதுந்தோன்ற வெவ்வரந்தின்றயில்படைக்குமவேலென்றார். ஏறுகவென எனுமது வியாவகையால் ஏறுகெனநின்றது.

கலைவலாளன் என்பது-வேதசாஸ்திரங்கள்கற்று வல்லமுனிவனெனப் பதம்பிரிக்கப்படும்.

[வேறு.]

குனிசிலைவயவனுங்கரங்கள்கூப்பிடத்... ... ...*
துனிபறுமுனிவரர்தொடர்ந்துசூழ்வர ... ... *
வனிதையுமருமறைவடிவுபோன்றொளிர் ... ...*
முனிவனும்பொறியினைதெறிகொமுன்னினான் ... *

(இ-பு.) போர்முகத்தில் வளைக்கும்படியாகிய வில்லினையுடைய உரோமபதராசன் கைகுவித்து அஞ்சலியத்தனத்துடன் தொடர்ந்துவரவும், பிணித்துன்பம்நீங்கிய முனிசிரேஷ்டர்கள் சூழ்ந்து தொடரவும், சாந்தலையென்

னும் பத்தினியும், அருமையாகிய வேதசொரூபம் போன்று விளங்குமுனிவரும், தேரின்மேலேறிக்கொண்டு மார்க்கத்தினைக் கருதினார்கள்-எ-று. ()

நெறியை முன்னினர் என்பதற்கு வழிநடந்தார்களென்று தாற்பரியமாம்.

வயவனும் என்பதினீற்றிலிருக்கும் உம்மையினைத் தொடர் என்னுமொழியையீண்டுந் வருவித்து அதன்மேலேற்றித்தொடரவும் எனப்பொருள்கூறப்பட்டது வயவன் வெற்றியையுடையவன் வனிதை-மாது-வேதம் நான்கென்ற தொகைப்பட்டிருப்பினும் ஒவ்வொருவேதமும அனந்தமாதலால் முழுவதுமோதியுணர்தலெளியதன்றாகையால் அரியவேதமெனக்கூறப்படுகின்றது. ஏறிக்கொண்டு சொல்லெச்சம்.

அந்தரதுந் துமிமுழக்கியாய்மலர்... ... ... *
சிந்தினர்களித்தனரறமூர்த்தேவரும்... ... ... *
வெந்தெழுகொடுவினைவீழ்க்குமெய்ம்முதல்... ... *
வந்தெழவருடருவானென்றெண்ணியே .. ... *

(இ-பு.) அம்முனிவர் தேரேறிச்செல்வதைக் கண்டவளவில் அறமும், தருமக்கடவுளும், தேவர்களும், கொழித்து மேலிட்டிருக்கிற பாவங்களைக் கீழ்ப்படுத்தும் பரவாசுதேவர் திருவவதாரமாகும்படி செய்தருள்வாரென்றுகருதி அந்தச்சந்தோஷமிகுதியால் ஆகாயத்தில் வாத்தியங்களைமுழக்கி நல்ல மலர்களைப்பொழிந்து களிப்படைந்தார்கள்—எ-று. (௬௭)

சிந்தினர் என்னும் வினைமுற்றினை வினையெச்சமாகக்கொள்க. முதல்-யாவர்க்கும்யாவைக்குங்காரணம். மெய்-நித்தியத்துவத்தைக்காட்டிநின்றது. களிப்பு சந்தோஷமிகுதி- அதுபரவசப்படுத்தும். வந்தெழ என்பதனை ஒருமொழியாகக்கொள்க.

ஆதுவரவ்வழிபயோத்தி துன்னினார்... ... ...*
மாதிரம்பொருததோள்மன்னர்மன்னன்முன் ... *
போதினர்முனிவரவோதவேற்றலும்... ... ......*
காதலென்றளவறுகடலுளாழ்ந்தவன்......... ..*

(இ-பு) அப்போது தூதர்கள் அயோத்திபுரிசேர்ந்து கலைக்கோட்டுமுனிவர்வருகின்றதைத் திக்குவிசயஞ்செய்ததோள்களையுடைய அரசர்க்கரசனாகிய தசரதமகாராசன்முன்புசொல்லினர். அவ்வாறு சொன்னவளவில் அவ்வரசனும் ஆசையென்றுசொல்லப்பட்டு அளவற்றசமுத்திரத்தில் மூழ்கினன்

எழுந்தனன்பொருக்கெனவிரதமேறினன் ... *
பொழிந்தனமலர்மழையாசிபூத்தன... ... ...*
மொழிந்தனபல்லியமுரசமார்த்தன ... ... ...*
விழுந்தனதீவினைவேரினோடுமே ... ... ... ... *

(இ-பு.) இவ்வாறு சந்தோஷமடைந்த அரசன் விரைவாக எழுந்து தேரிலேறினன் அப்போது தேவர்களால் கற்பகமலர்கள் மழைபோலப் பொழியப்பட்டன, முனிவர்களால் ஆசீர்வாதங்களுண்டாயின, பலவாகிய வாத்தியங்கள் ஒலித்தன, பேரிகைகள் ஆரவாரித்தன, தீவினைகள் வேருடன் வீழ்ந்துவிட்டன—எ-று. (௬௮)

எழுந்தனன் என்பதனை வினையெச்சமாகக்கொள்க. வாத்தியங்கள் ஊதப்படுவதும் அடிக்கப்படுவதுமாகிய பலவேறுவகைப் பட்டவைகளாதலால் மொழிந்தனவெனப் பொதுவி

மொழிந்தனனுசிகண்முநிபிநான்மறைக் ... ... *
கொழுந்துமேற்படர்தாக்கொள்கொம்பாயினான் *

(இ-பு) (முனிவு யோசனைத் தூரஞ்சென்றுகண்டவிடத்தில்) இரதத்தைவிட்டிழிந்துசென்று இத்தன்மையுள்ளவராகிய அந்தக்கலைக்கோட்டு முனிவருடைய இரண்டாகப்பொருந்திய திருவடித்தாமரை மலர்களில்விழுந்துபணிந்தான் (அரசன்அவ்வாறு பணிந்தவளவில்) பழமையாகிய நான்குவேதங்களின் கொழுந்துமேலேபடரும்படி கொள்கொம்புபோலிருக்கும் அம்முனிவர் உன்னமயினால் ஆசீர்வசனங்களைக்கூறினார்—எ-று. (௭௫)

கொளகொம்பிருந்தால் கொடி அதனைப்பற்றிக்கொண்டு ...ர்ந்தோங்கி மிகுதியாகப் பரந்து பயனைத்தரும். அதுபோலவேதம் இவரைப்பற்றியோங்... யாவர்க்கும் பயன்படுமென்பதுகருத்து.

அயல்வருமுனிவருமாசிகூறிடப் ... ... ... *
புயல்பொழிதடக்கையாற்றொழுதுபொங்குநீர்க், *
கயல்பொருவிழியொடுகலைவலாளனை .. ....... *
யியல்பொடுகொணர்ந்தனனிரதமேற்றியே ... *

(இ-பு) கலைக்கோட்டுமுனிவருக்கு அயலில்வருகின்ற மற்ற முனிவர்களும் ஆசீர்வசனஞ்சொல்ல (அவர்களையும்) மேகம் வருஷிப்பதுபோலத்தானங்கொடுக்கும் பெரியகைகளால் நமஸ்கரித்துக்கலைக்கோட்டுமுனிவரை அவருடையபத்தினியுடன்இரதத்திலேற்றிக்கொண்டு முறைமைப்படி தன்னகரத்திற்கொண்டுவந்தான்—எ-று. (௭௬)

கயல் பொரு...ழி இரண்டாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை பதம்பிரிக்குமிடத்துப் பொங்குநீரிலிருக்கிற சேல்மீன்போன்ற கண்களையுடையவளென்றுதல்காண்க கலைவலாளன் சாஸ்திரங்களைக்கற்றுவல்லவன்.

அடிகுரன்முரசதிரயோத்திமாநகர் ... ... ... *
முடியுடைவேந்தனம்முனிவனோடுமோர்.... ... *
கடிகையினடைந்தனன்கமலவாண்முக ... ... ... *
வடிவுடைமடந்தையர்வாழ்த்தெடுப்பவே... ...... *

(இ-பு.) முடிடத்தையுடைய தசரதமகாராசனானவன் - செந்தாமரைமலர்போன்ற ஒளியுள்ள முகவழகுடைய மாதர்கள் வாழ்த்துக்கூறும்படி அடிக்கப்படுகின்ற ஓசையினையுடைய பேரிகை மாமுரசு முழங்கிக்கொண்டிருக்கும்படியாகிய அயோத்திமாநகரத்தில் அந்தக்கலைக்கோட்டு முனிவருடன் ஒருநாழிகைக்குள்போய்ச்சேர்ந்தான்—எ-று. (௭௭)

கசட்டுறுவினைத்தொழிற்பவ்வராயுழ ... ... *
லசட்டர்களைவரையறுவரர்க்கிய... ... ... ... *
வசிட்டனுமருமறைவடிவுபோன்றொளிர் ... ... *
விசிட்டனும்வேத்தவைபொலியமேவினார்... ... *

(இ-பு.) அயோத்தியிலடைந்தவேந்தன் குற்றத்தினைப்பொருந்திய செய்கையினையுடைய திருடர்போல உழலுகின்ற கீழ்மைத்தன்மையுள்ளவர்களாகி

ய பஞ்சேந்திரியங்களை அறுகின்றவர்களாகச்செய்த வசிஷ்டமுனிவரும், அருமையாகிய வேதசொரூபம்போன்று விளங்குகின்ற கலைக்கோட்டுமுனிவரும் ராசசபையில் பிரகாசிக்கும்படி சேர்ந்தார்கள் —எ-று. (௭௬)

ஞானந்தை யபகரிப்பதினால் கள்வரொன்றார். வினைத்தொழில் ஒருபொருட்பன்மொழி. அசட்டர்களைவரொன்பது இழிப்பின்கண் அஃறிணை உயர்திணையாகக்கூறப்பட்டது. பஞ்சேந்திரியமாவன-சத்தம்-பரிசம்-ரூபம்-ரசம்-கந்தம்-என்பவைகளாம். இவை சனனமரண துக்கங்களுக்கேதுவாயிருப்பதுபற்றிக் கிழமைத்தனமுள்ள பஞ்சேந்திரியமென்றார். விசிட்டம்-நல்லொழுக்கம்,

மாமணிமண்டபமன்னிமாசறு ... ... ... ...*
தாமணித்தவிசிடைச்சுருதியேநிகர் .. ..... ...*
கோமுனிக்கரசனையிருத்திக்கொள்கட... ... ...*
னேமுறத்திருத்தி வேதினையசெப்பினான் ... ...*

(இ-பு.) சபையிற்சேர்ந்த தசரதமகாராசன் மாணிக்கம் பதிக்கப்பட்டிருக்கிற மண்டபத்திற்பொருந்திக் குற்றமற்றபரிசுத்தமாகிய ரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஆசனத்தினிடத்தில் வேதங்களையொப்பாகிய சிரேஷ்டம்பொருந்திய முனிவர்களுக்கிறையாகிய கலைக்கோட்டுமுனிவருக்குச்செய்யத்தக்க உபசாரங்களைச் சந்தோஷம் பொருந்தச்செய்துபின்பு வேண்டுவனவாகிய இந்தவார்த்தைகளைச்சொல்வேறான்—எ-று. (௭௭)

எம்ம என்னுமொழி இடைகுறைந்து எம் என நின்றது,

சான்றவர்சான்றவதருமமாதவம் .... ... ... *
போன்றொளிர்புனிதநின்னருளிற்பூத்தவெ .. ...*
ளூன்றதொல்குலமினியரசின்வைகுமா ... ... *
லியான்றவமுடைமையுமிழப்பின்றுமரோ... ...*

(இ-பு·) பெரியோர்களுக்கும்பெரியோரே தருமத்தையும் பெரிய தவத்தையும் ஒத்துவிளங்கும்புனிதரே உமதுடைய அருளினால் உண்டாகிய என்னுடைய பெருமையுள்ளகுலமானது இனி அரசுடன்பொருந்தும் நான்தவமுடைமையும் இழத்தலிலலாததாகும்—எ-று. (௭௮)

எனக்கு இதுவரையில் புத்திர சம்பத்தில்லாமையால் இனி அரசாட்சி என் குலத்துக்கில்லையென்றும், நான்செய்ததவமெல்லாம் வீணாய்விட்டதென்றும், துயரப்பட்டுக் கொண்டிருந்தேன்- இப்போது சுவாமிகள் எழுந்தருளியபடியினாலே புத்திரசம்பத்துண்டாகி என் குலம் அரசுடன்வாழுமென்பது தாற்பரியம்.

சான்று-என்பது-பலநற்குணங்களாலும் நிறைந்திருத்தல்-அக்குணங்கள்-அன்பு-நாணம்-ஒப்புரவு கண்ணோட்டம்-வாய்மைபிறர்குற்றத்தைச்சொல்லாமை-பணிவு-முதலியவை

என்னலுமுனிவரனினிதுநோக்குறூ... ... ... *
மன்னவர்மன்னகேள்வசிட்டனென்னுமோர்... ...*
நன்னெடுந்தவன்றனைநவையில்செய்கைநீ... ...*
நின்னையிவ்வுலகினினிருபர்நேர்வரோ... ... ... .*

(இ-பு.) தசரதமகாராசன் இவ்வாறுசொன்ன வளவில்-கலைக்கோட்டுமுனிவர் அவ்வரசனை இனிதாகப்பார்த்து அரசர்க்கரசனே கேட்பாயாக-வசிட்டனென்றுசொல்லப்படுகிற குறைவில்லாதநல்லதவமுள்ளவரோ உனக்குத்துணை குற்றமில்லாத செய்கையையுடையாய் நீ யாதலால் இவ்வுலகிலிருக்கும் அரசர்கள் உன்னை ஒப்பாவார்களோ—எ-று. (௭௯)

எதிர்மறை ஓகாரம் ஒப்பாகார்களென்னும் பொருடந்துநின்றது.

என்றனைபற்பலவினிமைகூறிநந்... ... ... ...*
குன்றமழ்வரிசிலைக்குவவுத்தோளினாய்... .. ... *
நன்றிகொளரிமகநடத்தவெண்ணியோ... ... ...*
வின்றனையழைத்ததிங்கியம்புவாயென்றான்... ...*

(இ-பு.) இவ்வாறுசொல்லுகின்றவைகளாகிய பலபல இனியவார்த்தைகளைச்சொல்லிப்பொன்மலையையொத்த நீண்டவில்லேந்துந் திரட்சியாகியதோட்களையுடைய தசரதமகாராசனே இப்போது என்னை இவ்விடத்திற்கு அழைப்பித்தது நன்மைபொருந்திய அசுவமேதயாகஞ்செய்யக்கருதியோ சொல்லுவாயென்றான்—எ-று. (௮௰)

நல்ல குன்றென்றமையால் பொன்மலையெனக் கூறப்பட்டது.

உலப்பில்பல்லாண்டெலாமுறுகணின்றியே... ...*
தலப்பொறையாற்றினேனறநயர்வத்தில ... ... *
சலப்புநீருடுத்தபாரளிக்குமைந்தரை.... ... ...*
நலப்புகழ்பெறவினிநல்கல்வேண்டுமால்... ... *

(இ-பு.) தொலைவில்லாத பலவருஷங்களெல்லாம் துன்பமில்லாமல் பூமிபாரந்தாங்கினேன் (இதுவரையில்) புத்திரர்கள் உற்பத்தியாயினாரிலர் (ஆதலால்) அலம்புகின்ற நீருள்ள சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைக் காக்கும்படியாகிய புத்திரர்களை நல்லபுகழ்பெறத்தக்கதாகக்கொடுத்தல்வேண்டும்—எ-று.

அலம்புநீர் எனற்பாலது விகாரவகையால் அலப்புநீரென நின்றது.

என்றலுமாசறீயிரங்கலிவ்வுல ... ... ... ...*
கொன்றுமோவுலகமீரேழுமோம்பிடும்... ... *
வன்றிறன்மைந்தரையளிக்குமாமகம் ... ... ...*
மின்றுநீயியற்றுதற்கெழுகவீண்டென்றான்... ...*

(இ-பு.) தசரதமகாராசன் இவ்வாறுசொன்னவளவில்-ராசனே-நீ துயரப்படாதே இந்த ஒரு உலகத்தைமாத்திரமோ பதினான்குலோகங்களையுங்காக்கும்படியாகிய மிகுந்தவல்லமையுடைய புத்திரர்களைக்கொடுக்கத்தக்கபெரியயாகத்தை இன்றுசெய்வதற்கு இப்போது நீ எழுந்திருவென்று சொல்லினான்—எ-று. (௮௧)

பதினாலு உலகம் ஆவன-கீழேழுலகம்-மேலேழுலகம்.

ஆயதற்குரியனகலப்பையாவையு ... ... ...*
மேயெனக்கொணர்ந்தனர்திருப்பர்க்கேர்ந்துழ்... *

பின்னுமப்பெருந்தகையிருந்துவீழ்ந்தவை ... *
தம்மையுஞ்சுமந்திரன்றனக்குநல்கின ... ... *
தொன்னலர்க்கிடமும்வேறலகிலோங்கிய ... ... *
மன்னுயிர்தமக்குநீள்வளமுந்தன்னவே ... ... *

(இ-ள்.) பகைவர்க்குஇடப்படுவதும்வேறுபுலமில்லிருந்திராதின்றநிலையான உயிர்கட்கு நல்லப்படுவதும் அள்ளமுடியும் அந்தத் தசரதமகாராசன் பொற்றட்டில் சிதறிவீழ்ந்திருக்குமவற்றைப்பிண்டமாகத்திரட்டிச்சுமந்தி ரனுக்குக்கொடுத்தான்—எ-று. ([illegible])

உலன்னுமன்னுயிரொன்றது- ஈண்டு மக்களுயிரை-தம்மை இன எதுகை.

வாம்பரிவேள்வியுமகவைநல்குவ .. ... ... *
தாம்புரையாகுதிபிறவுமந்தண... ... ... ...*
ணோம்பிடமுடிந்தபினுலகுகாவல... ... ... *
னேம்பலோடெழுந்தனனியாருமேத்தவே... ...*

(இ-ள்) அஸ்வமேதயாகமும் புத்திரனைத்தருவதாகிய மேன்மைபொருந் திய புத்திரகாமேஷ்டி முதலியபிறவும் கலைக்கோட்டுமுனிவர் பழுதுபடா து செய்ய நிறைவேறியபின் பூமிக்குக் காவலனாகிய தசரதமகாராசன் சந் தோஷித்துடனெழுந்தனன்—எ-று. ([illegible])

வாம்பரியென்பதற்குப்பதப்பொருள் தாவுகின்றகுதிரையெனக்கொள்க-வாவும்-என்ப து-விகாரவகையால் வாம் எனநின்றது. ஏம்பல்- யாதுகாதல்.

முருடொடுபல்லியமுழங்கியார்த்தன ... ... ...*
விருடருமுலகமுமிடருநீங்கின .. ... ... *
தெருட்டருவேள்வியின்கடன்கழித்துழி ... ...*
மருட்டருமவையின்வந்தரசனெய்தினன் ... ....*

(இ-ள்.) சிறுபேரிகைமுதலிய பலவாத்தியங்கள்முழங்கி ஆரவாரித்தன, இ ருளின்சூழப்பட்டிருக்கிற எல்லாவுலகங்களும் துன்பம்நீங்கின, வேதங்க ளால் ஆராய்ச்சிசெய்யத்தக்க யாகத்தின்முறைமைகளைச்செய்து தீர்த்தபோ து அருளைத்தரத்தக்க சபாமண்டபத்தில் அரசன்வந்துசேர்ந்தான்-எ-று.()

இருள்- ராக்ஷதர் செய்கையால் தானதவங்கள் மாறுபட உண்டானபாவம்- அருடரும வையென்றது சபையின்றன்மை யெனக்கொள்க அது இடவிசேடம் தானங்கொடுக்குமிடமெனினுமமையும்.

செய்ம்முறைகடன்முறைதிறம்பலின்றியே ... *
மெய்ம்முறைகடவுளர்க்கிறுத்துவின்னுளோர்க் .. *
தம்முறையளித்துநீடந்தணாளர்க்கும் ... .. *
கைம்முறையளித்தனன்கனகமாரியே ... ... *

(இ-ள்) இவ்வாறு அரசன்சபையில்வந்துசேர்ந்தபின் அவ்விடத்திலிருந்து கொண்டு செய்யத்தக்க கடன்முறைகள் தவறுதலில்லாமல் மெய்யாகியபத் தியுடனரங்கநாதருக்குக்கொடுத்துமற்றைத்தேவர்களுக்கும்அவ்வாறேகொ

(இ-பு.) அவ்வாறிருக்கையில் பிரசவகாலம் சமீபித்தபோது பெருமை பொருந்திய பூமிதேவியானவள் மகிழ்ச்சியினுலோங்கவும், அலங்கரிக்கத்தக்க புநர்பூசநக்ஷத்திரமும், தேவர்களும் பரிசுத்தமாகிய கர்க்கடராசியும் சந்தோஷித்தினால் எழுந்துள்ளவும்—எ-று. (௱௧)

வேய்புநர்பூசமும் என்பதற்கு-கழையென்றும் ஒருபெயருள்ள புநர்பூசமெனினுமமையும்.

சித்தருமியக்கருந்தெரிவைமார்களும் ... ... ... *
வித்தகமுனிவரும்விண்ணுளோர்களு ... ... ...*
நித்தருமுறைமுறைநெருங்கியார்ப்புறத் .. ... *
தத்துறலொழிந்துநீடருமமோங்கவே... ... ... *

(இ-பு.) சித்தர்களும், யக்ஷர்களும், அவர்களுடைய மாதர்களும், ஞானமுனிவர்களும், தேவர்களும், நித்தியர்களு முறைமுறைநெருங்கி யாரவாரிக்கவும், இடையூறுநீங்கி நீடியதருமமோங்கவும்—எ-று. (௱௨)

ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந் ... ... *
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக் ... ... ...*
கருமுகிற்கொழுந்தெழிற்காட்டுஞ்சோதியைத்....*
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை .. ... ...*

(இ-பு.) ஒருகாலத்தில் உலகங்களையெல்லாம் தன்றிருவயிற்றில் சேரவைத்துக்கொண்டிருந்து அரியவேதங்களுக்கும் உணர்தற்கரியவருங் கரியமேகக்கொழுந்துபோல அழகுகாட்டுஞ்சோதிச்சொரூபமுள்ளவருமாகிய நாராயணமூர்த்தியைக் கற்புள்ளகௌசலையம்மை செல்வம்பொருந்தப் பெற்றாள்—எ-று. (௱௩)

ஆசையும்விசும்புநின்றமரரார்த்தெழ ... ... *
வாசவன்முதலினர்வணங்கிவாழ்த்துறப் ... ...*
பூசமுமீனமும்பொலியநல்கினுண் ... ... ... *
மாசறுகேகயன்மாதுமைந்தனை .. ... ... ...*

(இ-பு.) திக்குகளிலும், ஆகாயத்திலுமிருந்து தேவர்களாரவாரிக்கவும், தேவேந்திரன்முதலானவர்கள் வணங்கிவாழ்த்தவும், பூசநக்ஷத்திரமும், மீனராசியும், கூடியதினத்தில் குற்றமற்றகேகயராசன்புத்திரியாகிய கைகேசியம்மையானவள் ஒருபுத்திரனை யீன்றாள்—எ-று. (௱௪)

தளையவிழ்தருவுடைச்சைலகோபனுங் ... ... ...*
கிளையுமம்பராயிசைகெழுமியார்ப்புற... ... ...*
வளைபுகுமரவினுடலவன்வாழ்வுற ... ... .*
விளையவற்பயந்தனளிளையமென்கொடி. ... ...*

(இ-பு.) முறுக்குகள்விரிந்த மலர்கள்பொருந்திய கற்பகவிருக்ஷத்தினையுடைய தேவேந்திரனும், அவன் சுற்றமாகிய தேவர்களும், ஆகாயத்தின்மேல் பொருந்தி யாரவாரிக்கவும், புற்றில்செல்லுகின்ற சர்ப்பத்தின் பெயர்கொண்ட ஆயிலியநக்ஷத்திரமும், கர்க்கடராசியும், வாழ்வுபெறவு மிளையவரா

றிய லட்சுமணப்பெருமாளைச் சுமித்திராதேவிபெற்றாள்—எ-று. (௱௫)

ஆயில்யநக்ஷத்திரத்துக்கு அரவநாளென ஒருபெயர்-மலைகளைக்கோபித்தவனாதலால் இந்திரனுக்குச் சயிலகோபனென்றும்பெயர்.

படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார் .. ... ...*
நடங்கினர்தாமறைநவிலநாடக... ... ... ... *
மடங்கலு மகரமும்வாழ்வினேறுங்கிட .... ... *
விடங்கிளர்விழிபிறழுண்டீட்டுமீன்றனள் ... ... *

(இ-பு.) படங்களாகப் பிரகாசியாநின்ற பலதலைகளையுடைய சர்ப்பமாகிய ஆதிசேஷனால் எத்தப்பட்டிருக்கும் புவிமகள் கூத்தாடவும், வேதங்கள் நடனமிடவும், சிங்கராசியும், மகரநக்ஷத்திரமும் வாழ்ந்திலோங்கவும், விஷத்தைப்போலக்கருமைநிறமும் விளங்குகின்ற கண்களையுடைய சுமித்திராதேவியானவள் மறுபடியும் ஒருபுத்திரனையீன்றாள்—எ-று. (௱௬)

பலதலையென்பது பஃறலையெனப் புணர்ச்சிவகையா லிடையிலாய்தம்பெற்றுநின்றது.

ஆடினாரம்பையரமுதவேழிசை... ... ... *
பாடினர்கின்னரர்துவைத்தபல்லியம் .. .. ......*
வீடினாரக்கரென்றுவக்கும்விம்மலா ... ... *
லோடினருலவினரும்பர்முற்றுமே... ... ... *

(இ-பு) ரம்பாஸ்திரீகள் நாட்டியமாடினார்கள்-கின்னரர்கள் அமுதம்போன்றயாழ்வாசித்தார்கள்-பலவாத்தியங்கள் முழங்கின- அரக்கர்களிறந்தொழிந்தார்களென்கிற சந்தோஷத்தினால் தேவர்களெல்லாரும் விண்ணுலகமுழுவதிலுமோடியுலாவினார்கள்—எ-று. (௱௭)

ஓடினரரசன்மாட்டுவகைகூறநின் ... ... ... *
றாடினர்சிலதியரந்தணாளர்கள் .. ... ... ... *
கூடினர்நாளொடுகோளுநின்றமை ... ... *
நாடினருலகினிநவையின்றென்றனர்... ... ...*

(இ-பு.) தோழிகள் அரசனிடத்திலோடிச்சந்தோஷமிகுதியால்தாங்கள்வந்தசேதியைச்சொல்லாமல்நின்றாடினார்கள்-சோதிடர்கள்வந்துசேர்ந்து நக்ஷத்திரமும் கிரகங்களும் நின்றநிலைமையினை ஆராய்ந்து பார்த்து இனியுலகினில்தீமையில்லாமையாய்விடுமென்றார்கள்—எ-று. (௱௮)

பேடைமாமதிதிநவமிமீன்கழை... ... ... *
நீடுறுமாலைகர்க்கடகநீதிசே ... ... ... ... ...*
ரோடைமாகளிறனையதயராசிகோ ... ... ... ...*
னாடினோதசநால்வருச்சமே. ... ... ... ... *

(இ-பு.) நெற்றிப்பட்டங் கட்டியிருக்கிற யானையையொத்த இராமமூர்த்தியின் திருவவதாரகாலம் என்னவெனில்; சித்திரைமாதமும், நவமிதிதியும், புனர்பூசநக்ஷத்திரமும், நீடியமாலைப்பொழுதுமாம்-அந்தக்காலராசிநிலையோ

வெளில்,கர்க்கடகமாம் நவக்கிரகங்களை நாடுமிடத்தில் பதினொன்றாமிடத்தி ல் நால்வராம் மற்ற ஐவரும் உச்சர்களாம்—எ-று. (௭௯)

ஆடு-என்பதனை அங்கங்குங்கூட்டுக மேஷராசியில் சூரியன்பிரவேசிக்கின்ற மாதமாத லால்சித்திரைமாதம்மேடமதியென்னப்பட்டது. மீன்-என்பது நக்ஷத்திரம்.கழையென் பது புநர்பூசத்துக்குப்பெயர். நால்வரொன்றமையின்ஐவரொன்றுமொழிவருவித்துரைக்கப்பட்டது

என்றனர்சாதகமீசற்கெனையர் ... ... ... ... *
தன்றனக்குந்தருமுறையிற்றன்றெரிந் ... ... ... *
தொன்றியதமணியத்தெழுதியோதினர் ... ... ... *
வன்றிறற்சார்குருவாழ்த்தெடுப்பவே. ... ... ... *

(இ-பு) மிகுந்தவல்லமையுள்ள பிரகஸ்பதிபகவான் தங்களை வாழ்த்தும்ப டி இராமமூர்த்திக்கு இவ்வாறுசாதகமெழுதிக்கூறி (இதுவுமன்றி மற்றைமூ வர்களுக்கும் தக்கமுறைமையா லாராய்ந்து பொருந்திய பொன்தகட்டி லெ ழுதிச்சொன்னார்கள்—எ-று. (௮௰)

என்றனர் - என்பதனை யெச்சமாகக்கொள்க. எனையர் தன்றனக்கும், என்பது ஒருமை பன்மைமயக்கம் தந்தமக்கு எனப் பாடமாயின் இனவெதுகையென்க.

மாமுனிதன்னொடுமன்னர்மன்னவ ... ... ... *
னேமுறப்புனல்படஇவிததொடின்பொரு .. ... *
டாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக் ... ... *
கோமகர்திருமுகங்குறுகிநோக்கினான். ... ... ... *

(இ-பு) இவ்வாறுசாதகமெழுதிக் கூறியதைக்கேட்டுச் சந்தோஷமுண்டா னதிலை தசரதமகாராசன்-பெருமைபொருந்திய வசிஷ்டமுனிவருடன் செ ன்று சரயுநதியில்ஸ்நானஞ்செய்துதெல்லும்ஒள்ளியபொருளுமிகுதியாகப் பிராமணர்களுக்குத்தானங்கொடுத்துத்தவளச்சங்குமுழங்கும்படிவந்துமேம்பா ஷ்டம்பொருந்திய தன்புத்திரர்களுடைய திருமுகங்களைப்பார்த்தான்.எ-று

எம்ம- என்பது- எம்- என இடைக்குறையாய் நின்றது படியென்னுங் குறில் விகாரவ கையூரல் நின்று இடைநிலையின்மிக்காலங்காட்டி நின்றது புனல் ஆகுபெயர் தாம்- இடை சொல்-ஆர்ப்பு-ஆரவாரித்தலை-உற-பொருந்த எனப்பதம்பிரிக்க-திருமுகம் அழகுள்ளமுகம்.

இறைதவிர்ந்திடுகேபாரிபாண்டொரேழ்திறி... ... *
நிறைதருசாலைதாணிக்கியாவையு ... ... ... *
முறைகெடவறியவர்முகந்துகொள்கெனு... ... *
வறைபறையென்றனனரசர்கோமகன் ... ... *

(இ-பு.) ஏழுவருஷவரைக்கும் நம்முடையதேசத்தில்வரிநீங்கக்கடவதென் றும்,நிதி நிறைந்திருக்கும் பொக்கிஷச் சாலையின் பூட்டினைத் திறந்துவிட் டு அவைகளிலுள்ள பொருட்களையெல்லாம் முறைமைகெட ஏழைகள் வே ண்டியமட்டில் எடுத்துக்கொள்ளக் கடவர்களென்றும் பறை அறையென்று தசரதமகாராசன் கட்டளையிட்டான்—எ-று. (௮௰௧)

தாழ்-தாழ்ப்பாள்-அது ஈண்டுப் பூட்டென்றுசொல்லப்பட்டது.முகந்துகொள்கவெனு ஊற்பாலது விகாரவகையால் முகந்துகொள்கெனுவென நின்றது.

படைபொழித்திடுகெம்பதிகளேயினி ... ... ... *
விடைபெறுகமுடிவேந்தர்வேதியர் ... ... ... *
நடையுறுநியமமுதலவையின்றுகுக ... ... ... *
கடவுளர்விழவொழிகளிக்கவெங்கணும் ... ... ... *

(இ-பு.) சேனையோர் தங்கள் சேவகத்தை விட்டிருக்கக்கடவர்கள் - மகுடவர்த்தனர்களாகிய அரசர்கள் சிறைநீங்கித் தங்கள் தங்கள் தேசத்திற்சேரும்படி உத்தரவுபெறக்கடவர்கள் - பிராமணர்களுடைய ஒழுக்கம்பொருந்திய செய்கடன்களும்பழுதின்றி நடக்கக்கடவனவாக - தேவர்களுக்கு நடத்துந் திருவிழாவுடன் எவ்விடத்தும்யாவரும் களிப்படையக்கடவர்கள்—எ-று. ()

நியமம்-செபதப ஓமங்கள்.

ஆலயம்புதுக்குகவந்தணாளர்கு ... ... ... *
சாலையுஞ்சதுக்கமுஞ்சமைக்கசந்தியுங் ... ... ... *
காலையுமாலையுங்கடவுளர்க்கணி ... ... ... *
மாலையுந்தீபமும்வழங்குகென்றனன். ... ... *

(இ-பு.) தேவாலயங்கள் புதுமைபெறச் செய்வனவாக - பிராமணர்களுக்கு அக்கிராகாரங்களும், சதுக்கத்திடங்களும், சமைக்கப்படுவனவாக - காலைப்பொழுதிலும், உச்சிப்பொழுதிலும், அந்திப்பொழுதிலும், கடவுளர்களுக்கு அணிகின்ற பூமாலைகளும், தீபமுதலியவைகளும், வழங்கப்படுவனவாக.

சமைக்க என்னுமொழி-குச்சாரியைகெட்டுச் சமைக்கவெனநின்றது. வழங்குக என்றனன் என்பது வழங்குகென்றனன் என விகாரமாயிற்று. சதுக்கம்-நான்குதெருகூடுமிடம்.

என்புழிவள்ளுவரியானைமீமிசை ... ... ... *
நன்பறையறைந்தனர்நகரமாந்தரு ... ... *
மின்னிறந்துசுப்பிறார்தாமும்விம்மலா ... ... *
லின்பமென்றளக்கருமளக்கரொய்தினார். ... ... *

(இ-பு) இவ்வாறு அரசன் கட்டளையிட்டபோது வள்ளுவர்கள் யானைமேல் பறையறைந்தார்கள் அந்நகரத்திலிருக்கும் ஆடவர்களும், மின்னலையொத்த இடையினையுடைய மாதர்களும், பூரிப்பினால் இன்பமாகிய அளப்பதற்கரிய சமுத்திரத்தில் மூழ்கினார்கள்—எ-று. ([illegible])

என்றவழி எனற்பாலது என்புழி என நின்றது-இதனைப்பிரித்துச் சொல்லுமிடத்து என்னுஞ்சொல்லுகையினிடத்து என்றுதல்காண்க. இன்பமென்று அளக்கருமெனற்பாலது இன்பமென்றளக் கருமென விகாரமாயிற்று.

ஆர்த்தனர்முறைமுறையன்பினாலுடல் ... ... *
போர்த்தனபுளகம்வேர்பொடித்தநீணிதி ... ... *
தூர்த்தனர்திரிதொறுசொல்லினார்க்கெலாந் ... ... *
தீர்த்தனென்றறிந்ததோவவர்தஞ்சிந்தையே ... ... *

(இ-பு.) இவ்வாறு இன்பம் அடைந்தவர்கள் முறைமுறையாகநின்று ஆரவாரித்தார்கள் அன்பினால் அவர்களுடல் புளகங்கொண்டு மறைத்தன. அன்றி

யும் வேபர்வையுண்டாயின, இத்தச் சந்தோஷச்செய்தியைச் சொல்லினோர்க்கெல்லாம் எதிரெதிராக யிருந்ததிதிகொடுத்தார்கள். அவர்களிப்படிக்கொடுப்பதற்குக்காரணம் இப்போதுதித்தயான குழந்தை நாராயணமூர்த்தியாகுமென்று அவர்கள் சிந்தையறிந்துகொண்டமைதா-எ-று. (௫௰௬)

எதிரெதிர்கொடுத்தல் ஒருவர்க்கொருவர்கொடுத்தல் - மிகுதிதோன்றத் தீர்த்தனரென்றார்

பண்ணையுமாயமூர்த்திராளும்பாங்கரும் ... ... ... *
கண்ணகன்றிருநகர்களிப்புக்கையிகுத் ... ... ... *
செண்ணெயுங்களபமுமிழுதுநானமுஞ் ... ... *
சுண்ணமுந்தூவினார்வீதிதோறும் ... ... ... ... *

(இ-பு.) மாதர்கூட்டமும், தோழிமார்கூட்டமும், ஆடவர்கூட்டமும், தோழர்கூட்டமும், சந்தோஷமிகுந்து இடமகன்ற சிறந்த அந்நகரத்தின் வீதியெங்கும் எண்ணெய்யும், சந்தனக்குழம்பும், நெய்யும், கஸ்தூரியும், வாசனைப்பொடியும், தூவினார்கள்—எ-று. (௫௰௭)

திருநகரத்திருக்கு மாதர்கூட்ட முதலாயினோர் தூவினரெனப் பொருள்கூறினுமமையும், தூவினரென்பது- முன்னிதி கொடுத்ததுபோல வீதிகள்தோறும் கொடுத்தார்களென்று பொருள்கொள்க. எண்ணெய்யுமெனற்பாலது எண்ணெயுமெனவிகாரமாயிற்று.

வேறு.

இத்தகைமாநகரீராறுநாளுஞ் ... ... ... ... *
சித்தமுறுங்களியோமிறந்தே... ... ... ... *
தத்தமையொன்றுமுணர்ந்திலர்தாவா ... ... ... *
மெய்த்தவனும்மவிதிப்பமதித்தான் ... ... ... *

(இ-பு.) இத்தகைமைப்பாட்டினையுடைய பெருமைபொருந்திய அந்நகரத்திலிருப்பவர்கள் திருவவதாரநாள்முதல் பன்னிரண்டுநாளும், தங்கள் தங்கள் மனதில்பொருந்தியகளிப்புடன்சிறந்து தம்மைச்சிறிதும் அறியாதுபரவசமானார்கள் இவர்களிப்படியிருக்கக் கெடாதமெய்த்தவமுள்ள வசிஷ்டமுனிவர் (அந்தப்புத்திரர்களுக்கு) நாமகரணஞ்செய்ய எண்ணங்கொண்டார்.

கராமலையத்தளர்கைக்கிரியெய்த்தே ... ... ... *
யாரவணையிற்றுயில்வோயெனவந்நாள் ... ... *
விராவியளித்தருண்மெய்ப்பொருளுக்கே ... ... *
யிராமனெனப்பெயரீந்தனனன்றே... ... ... *

(இ-பு.) முதலையானது போர்செய்தலினால் தளர்கின்ற துதிக்கையையுடைய மலைபோன்ற யானையானது இளைத்துச் சர்ப்பசயனத்தில் அறிதுயில் அமர்கின்ற கடவுளேயென்றுகூவ, அந்நாளில் அவ்விடத்தில்வந்து அந்தயானையைரக்ஷித்தருளிய உண்மைப்பொருளாகிய நாராயணமூர்த்திக்கு இராமனென்று திருநாமங்கொடுத்தார்—எ-று. (௫௰௯)

ரமு-என்கிறதாதுவின்மேல் ராமனென்று பெயர்கூறப்பட்டதென்றும், ரமு என்பதற்குப்பொருள் அடியார்களிருதயங்கள்தோறும் நிறைந்து இன்புற்றுக்கொடுப்பவரென்றும் பெரியோர்களால்கூறப்படுகின்றது அந்தக்கருத்துவிளங்க ஆனைமேலரக்ஷித்தவரெனக்கூறினார்

வீரருமிளைஞருமெறிபொழில்களின்வா ... *
ஈரமெய்ம்மைதருமுனிவரிடைப்போய்ச்... ... .. *
சேர்பொழுதணிநகர்த்திருகுவரெதிர்வார்.........*
கார்வரவலர்பயிர்பொருவுவர்களியால்... ... ... *

(இ-பு.) ஸ்ரீராமமூர்த்தியும், பரதாழ்வாரும், இளையபெருமாளும், சத்துருக்கப்பெருமாளும், வாசனைவீசுகின்ற சோலைகளினிடத்திலே குளிர்ச்சியுடன்வசிக்கும் முனிவர்களிடத்துக்குப் போய்க்கண்டு அளவளாவும்போது அலங்கரிக்கிறதாந் நகரத்துக்குத்திரும்பிவருவார்கள் அவ்வாறு வரும்போது எதிர்ப்படுகின்றவர்கள் களிப்பினால் மேகம்வந்தால் தழைக்கும் பயிரைப் போலாவார்கள்—எ-று. (௱௬௰)

ஏழைபராவருமிவர்கடநலோதாய்... ... ... *
கேழ்கிளர்மதலையர்கிளைகளுமினையார்... ... *
வாழியவெனவவர்மனனுறுகடவுட் ... ... ... *
டாழ்குவர்கௌசலைதயரதனெனவே.. ... ... *

(இ-பு) அந்நகரத்திலிருக்கும் மாதர்கள்யாவரும் இவர்களுடையபெரிய தனங்களிற்படுகின்ற அழகுடன்விளங்கும் ஆடவர்களும், இவர்கள் சுற்றத்தினர்களும், கௌசலையும் தசரதமகாராசனும் கடவுளை வணங்குதல்போல ஸ்ரீராமமூர்த்திமுதலாகிய இந்தப்புத்திரர்கள்வாழக்கடவார்களென்று அவரவர்மனதிற்பொருந்திய கடவுளர்களை வணங்குவார்கள்-எ-று. (௱௬௨)

கடல்கருமுகிலொளிர்கமலமதலரா ... ... ... *
வடவரையுடன்வருசெயலெனமறையுந் ... ... *
தடவுதலறிவருதனிமுதல்வனும் ... ... ... ...*
புடைவருமிளவலுமெனநிகர்புகல்வார் ... ...*

(இ-பு.) வேதங்களுந்தேடுதற்கு அரிய ஒப்பற்ற ஸ்ரீராமமூர்த்தியும் அவருடன் இளையபெருமாளுமாக வருகின்றது சமுத்திரம் அல்லது கரியமேகமானது பிரகாசியாநின்ற செந்தாமரைமலர்களைமலர்ந்துகொண்டு பொன்மலையுடன் வருகின்ற தன்மைபோலாமென்று ஒப்புச்சொல்வார்கள்-எ-று

எதிர்வருமவர்களையெமையுடையிறைவன் ... *
முதிர்தருகருணையின்முகமலரொளிரா ... ... *
வெதுவினையிடரிலையினிதுறுமனையு .. ... ...*
மதிதருகுமரரும்வலியர்கொலெனவே .. ... *

(இ-பு) எதிரில்வருகின்றவர்களை நோக்கி எம்மையடிமையாகவுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் மிகுந்தகருணையுடன் முகமலர்விளங்கி யாதொரு காரியம் உங்களுக்கு ஆகவேண்டுவது துயரில்லை உங்களுடைய மனைவியர்களும், அறிவுள்ளபுத்திரர்களும் இனிதுடன் சுகமாயிருக்கிறார்களாவென்றுவினவுவ. ()

அம்மைதயுதியெமதாசெனவுடையே ... ...*
இம்மைதருபொருளலவெமதுயிருடனேம் ... ...*



ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.



## ௭-வது-கையடைப்படலம்.



அனைவருகற்பகநாட்டுநன்னக... ... ... ...*
அனைவருமனைதரவயிர்க்குஞ்சிந்தையா .. ... *
னினையவுமரியதுவிசும்பினீண்டதோர் ... ...*
புனைமணிமண்டபம்பொலியவைகினான் ... *

(இ-பு.) அரும்புகள்பொருந்திய கற்பகவிருக்ஷங்களையுடைய தெய்வலோகத்திலிருக்கும் அமராவதியென்னும் நல்லநகரத்தில்வாழும் தேவர்கள் யாவரும்வரும்படி சந்தேகிக்கும் சிந்தையினால் நினையவும் அரியதாய் ஆகாயவளையில் நீண்ட ஒப்பற்றமணிகள்பதித்த ஒருமண்டபமானது விளங்கத்தக்கதாக அதிலெசென்றுசேர்ந்தான்—எ-று. சேர்ந்து. (க)

அனைதர அயிர்த்தல்-இந்தமண்டபத்தைநோக்கினபோது தேவர்கள் இந்திரன்சபையென்று இங்குவர நினைத்தவுடனே யிதுஆமோ வல்லவோவென்று சந்தேகந்தோன்றி. அவர்கள் சிந்தையால் நிச்சயித்தற்கரிதான அலங்காரமுடைய தென்பது தாற்பரியம்.

தூயமெல்லணையணைபொலிந்துதோன்றினான் ... *
சேயிருவிசும்பிடைத்திரியுஞ்சாரணர் ... ... *
நாயகனிவன்கொலென்றயிர்த்துநாட்டமோ ... *
ராயிரமில்லையென்றையநீங்கினார் ... ... ... *

(இ-பு.) பரிசுத்தமாகிய மென்மைத்தன்மையுள்ள சிங்காதனத்தில்வீற்றிருந்தான் (அவ்வாறுவீற்றிருக்கும் அரசனை மிகவுமுயர்ந்த ஆகாயவீதியில் சஞ்சரிக்கும் தேவதூதர்கள்நோக்கி இவன் நம்முடைய அரசனோவென்று சந்தேகித்து நன்றாகப்பார்த்து ஆயிரங்கண்களில்லையாதலாலிந்திரனல்லனென்று அந்தச்சந்தேகம் நீங்கினார்கள்—எ-று. (உ)

மடங்கல்போன்மொய்ம்பினானுறையுண்மன்னுயி *
ரடங்கலுமுலகும்வேறமைத்துத்தேவரோ ... *
டுடன்கொணான்முகனையும்படைப்பனென்றெழுந் *
தொடங்கியதனியருமுனிவன்றோன்றினான் ... *

(இ-பு) சிங்கம்போலப் பராக்கிரமமுள்ள தசரதமகாராசன் இவ்வாறுவீற்றிருக்கும்போது அவ்வரசனெதிரில் நிலையாகிய உயிர்கள் முழுவதையும் உலகங்களையும் வேறேசிருஷ்டித்து நான்குமுகங்களுள்ள பிரமதேவனையும் இப்பொழுதே சிருஷ்டிக்கிறேனென்று தொடங்கிய பிறவித்துன்பம்நீங்கிய விசுவாமித்திரமுனிவர்தோன்றினார்—எ-று. (ங)

மதேவன் உலகமும், கற்பகச்சோலைசூழ்ந்த தேவலோகத்திலிருக்கும் அமராவதி யநகரும், அயோத்தியென்னும் பொன்மயமான இந்தநகரமுமல்லாது வேறே அடைக்கலமான விடமுண்டோ பகைவரைக்காய்ந்தஉதிரக்கறைதங்கும் வேலாயுதத்தையுடைய அரசனே சொல்லுவாயாக—எ-று. (ஏ)

பன்னகம்-என்பதற்குச் சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருக்கும் பலமலைகளெனப்பொருள்கொள்ளினும் அமையும். அக்கடவுளுக்குரிய ஆறுபடைவீட்டில் குன்றுதோறாடல் ஒன்று.

முனிவர்களுக்குத் தேவர்களுக்கு மிடையூறுநேரிட்டால் மேற்சொல்லிய இடங்களிலும் இவ்வயோத்தியிலும் குறைசொல்லவருவார்களென்பது கருத்து.

இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கையிழந்துபோந்து *
நின்றளிக்குந்தனிக்குடைக்கீழ்ப்புகுந்திருந்துகுறையிரந்துநின்றநாகர் .*
குன்றளிக்குங்குலமணித்தோட்சம்பரனைக்குலத்தோடுந்தொலைத்துநீகொண்
டன்றளித்தவரசன்றோபுரந்தரனின்றாள்கின்றதரசவென்றான் ... ... *

(இ-பு.) தேவேந்திரன் இனியதளிர்களையுடைய கற்பகவிருக்ஷங்கள் நல்ல தேனை யிடையில் துளிக்கும்படியாகிய நிழலில் அரசுவீற்றிருப்பதை யிழந்துவந்து உன்னுடையதனித்த ஒற்றைக்குடைநிழலிற்சேர்ந்து தன்குறையைச்சொல்லி என்னரசினையெனக்கு வாங்கித்தரவேண்டுமென்று பிரார்த்திக்கப்பார்த்து மலையினையொத்த மணிக்குலங்களாற்செய்யப்பட்ட அணியணிந்த தோளையுடைய சம்பரனைக் குலத்துடனழித்து அவன் அபகரித்துக்கொண்ட அரசினை நீ பெற்றுக்கொண்டு அந்நாளில் கொடுத்த அரசல்லவா அந்தத்தேவேந்திரனாள்கின்றதென்று முனிவர்சொன்னார்—எ-று. (அ)

சம்பராசுரனென்பவன் இந்திரனுடன் போர்செய்து வெற்றிகொண்டு பொன்னுலகத்தை யபகரித்துக்கொள்ள அவ்விந்திரன் தோற்றுவந்துகுறைசொல்ல, நீ சென்று அவ்வசுரனை வென்று அந்தப்பொன்னுலகத்தை உன்னுடையதாக்கிக்கொண்டு பின்பு நீகொடுத்த அரசல்லவா இந்திரனிப்போது ஆள்கின்றானென்பது தாற்பரியம்.

உரைசெய்யுமளவினவன்முகநோக்கியுள்ளத்திலொருவராலுங் ... ... *
கரைசெய்வரியதொருபேருவகைக்கடல்பெருகக்கரங்கள்கூப்பி .. ...*
அரசுசெய்திருந்தபயனெய்தினன்மற்றினிச்செய்வதருளுகென்று ... *
முரசதிருங்கடைத்தலையான்முன்மொழியப்பின்மொழிபுமுனிவனுக்கே.. *

(இ-பு.) முனிவரிவ்வாறு சொல்லுமளவில் அவர்முகத்தைநோக்கித் தன்மனதில் ஒருவராலும் கரையிடவொண்ணாத பெரியசந்தோஷமென்னும் கடலானது பெருகக்கொண்டு தன்கைகளைக்குவித்து அடியேனிதுவரையில் அரசுசெய்திருந்ததால் அடையவேண்டிய பிரயோஜனத்தைத் தேவரீர் தரிசனத்தால் இப்போது அடைந்தேன் இனி அடியேன் செய்யவேண்டியகாரியம் யாதோ அதனை யருளிச்செய்யவேண்டுமென்று பேரிகைமுழக்கம் நீங்காத முற்றத்தையுடைய தசரதமகாராசன் முன்சொல்ல, அம்முனிவர் அப்போதே பின்சொல்லுகின்றார்—எ-று. (கூ)

தருவனத்துள்யானியற்றுந்தகைவேள்விக்கிடையூறாத்தவஞ்செய்வோர்கள் *
வெருவரச்சென்றடைகாமவெகுளியெனநிருதரிடைவிலக்காவண்ணம் ..*

செருமுகத்துக்காத்தியெனநில்சிறுவர்நால்வரினுங்கரியசெம்மல் ... ... *
ஒருவனைத்தந்திடுதியெனவுயிரிரக்குங்கொடுங்கூற்றினுளையச்சொன்னான்

(இ-ள்) விருட்சங்கள்நெருங்கிய ஆரணியத்தினிடத்தில் நான்செய்யுந்தவ வேள்விக்கு இடையூறாகத் (தவஞ்செய்வோர்கள் அஞ்சும்படி மேலிட்டுப் பொருந்துகின்ற காமவெகுளிமயக்கம்போல) நிருதர்கள் மத்தியில் விலக் காதவண்ணமாகப் போர்முகத்தில் வேள்வியைக்காத்தியென்றுசொல்லி உன் புதல்வர்கள் நால்வரினும் நீலநிறமுள்ள ஒருவனாகிய இராமமூர்த்தியைத் தா கடவையென்று உயிரையிரக்கின்ற கொடிய கூற்றுவனைப்போல அம்ம ன்னவன் வருந்தும்படிசொன்னான் — எ-று. (௰)

இராமமூர்த்தியைத் தாவென்றது தசரதமகாராசனுக்குத் தன்னுயிரைக்கூற்றுவன் வந்து கொடுவென்றதுபோலிருந்ததென்பது கருத்து. நிருதர்கள்வந்து யான்செய்யும்வேள்வியைத் தடுக்காவண்ணமெனக்கூட்டுக.

எண்ணிலாவருந்தவத்தோனியம்பியசொன்மருமத்தினெறிவேல்பாய்ந்த *
புண்ணிலாம்பெரும்புழையிற்கனனுழைந்தாலெனச்செவியிற்புகுதலோடும்
உண்ணிலாவியதுயரம்பிடித்துந்தவாருயிர்நின்றூசலாட ... ... ... *
கண்ணிலான்பெற்றிழந்தானெனவுழந்தான்கடுந்துயரங்காலவேலான் ...... *

(இ-ள்) அளவில்லாத அரிய தவத்தையுடைய விசுவாமித்திரர் சொல்லிய வார்த்தையானது எறிகின்ற வேல்பாய்ந்து மார்பிலுண்டாகிய புண்ணினிடத் துப்பொருந்திய பெரிய துவாரத்தில் தீ நுழைந்ததுபோலத்தன்செவிகளில் நுழைந்தவுடன் உள்ளத்திலுண்டாகிய துயரமானது பிடித்துத்தள்ள (அத னால்) கடைத்தற்கரிய உயிரானது போவதும்வருவதுமாக ஊசலாடப்பிறவி முதற் கண்ணில்லாத ஒருவன் தவத்தினாற்பெற்று மீட்டுமக்கண்ணினையிழந்த சிவ்வந்தகன் துயரப்படுவதுபோலப் பகைவருக்கு எமனையொத்த வேலாயு தத்தையுடைய தசரதமகாராசன் கொடியதுயரத்தை யனுபவிக்கின்றவனா னான் — எ-று. (௰௧)

தெண்டிரைப்பொற்றேன்சுனிக்குநறுந்தாரானொருவண்ணந்துயரநீங்கிப் ... *
மண்டலத்திலனிசிறியனிவன்பெரியோய்பணியிதுவேற்பணிநீர்க்கங்கை *
கொண்டபுன்சடையானும்புரந்தரனுநான்முகனும்புகுந்துசெய்யு ... *
மண்டருமிடையூறுயான்காப்பன்பெருவேள்விக்கெழுகவென்றான் .. *

(இ-ள்) ஒழுங்காக ஊற்றுகின்ற தேனைப்பொழியும் நல்லபூமாலையணிந்த அவ்வரசன் ஒருவாறு துயரம்நீங்கி (முனிவரைநோக்கி) இராமன் படையாற் றலில்லாதவன் அன்றியும் - சிறுவன் ஆதலால் தேவரீர்கட்டளையிடுமேவலிது வேயானால் குளிர்ச்சிபொருந்திய கங்காநதிநீரை யொருபுறமாகப் பொழிந் த சடாமகுடமுள்ள ருத்திரமூர்த்தியும் பிரமதேவனும் தேவேந்திரனும் வ ந்து செய்கின்ற இடையூறுக்கு இடையூறுண்டாகத்தக்கதாக யான் காக்கின் றேன் பெரிய வேள்விக்கு எழுந்திருமென்றுசொன்னான் — எ-று. (௰௨)

என்றனனென்றலுமுனிவோடெழுந்தனன்மன்படைத்தமுனியிறுதிக்காலம்.
மன்றலுவாவெனவிளைமேவோருயிர்த்தனர்மேல்வெயில்காந்ததர்குமிக்கு.. *

த்துக்கொண்டுவரச்சொன்னானென்று சொன்னவளவிலே அறிவாலுயர்ந்த ஸ்ரீராமமூர்த்தியானவர்வந்து தம்முடையபிதாவினருகிற்சார்ந்தனர்.—எ-று. ()

வந்தநம்பியைத்தம்பிதன்னொடு ... ... ... *
முந்தைநான்மறைமுனிக்குக்காட்டிநற் ... ... *
றந்தைநீதனித்தாயுநீயிவர்க் ... ... ... ... *
கெந்தைதந்தனனியைந்தசெய்கென்றான் .. ... *

(இ-பு) இளையபெருமானாகிய இலக்குமணனுடன்வந்த ஸ்ரீராமமூர்த்தியைப் பழமையாகிய நான்குவேதங்களையுமுணர்ந்த விசுவாமித்திரமுனிவருக்குக்காட்டி ஐயனே யிவர்களுக்கு நல்ல பிதாவும் நீயே யொப்பற்றதாயும் நீயே யென்னுடைய அடைக்கலமாகக் கொடுத்தேன் இனி யிவர்களாலுமக்கு இசைந்த காரியங்களைச் செய்துகொள்ளலாமென்றான்—எ-று. (௱௭)

கொடுத்தமைந்தரைக்கொண்டுசிந்தைமுந் ... ... *
தெடுத்தசீற்றம்விட்டினிதுவாழ்த்தியே ... ... *
லடுத்தவெவ்வினைபோய்முடித்துநாமென ... ... *
நடத்தல்வேயினனவணீங்கினான் ... ... *

(இ-பு.) முக்குற்றங்களும்நீங்கின விசுவாமித்திரமுனிவர் தசரதமகாராஜன் கொடுத்த புத்திரர்களைப் பெற்றுக்கொண்டு முன்னுண்டாகிய கோபம்நீங்கி யினிதாக ஆசீர்வசனஞ்சொல்லி இனிநாம்போய் ஆடுதற்குரிய வேள்வியை நிறைவேற்றுவோமென்றுசெல்லலுற்றனர்—எ-று. (௱௮)

வென்றிவாள்புடைவிசித்துமெய்ம்மைபோ ... *
லென்றுந்தேய்வுறாத்தூணியார்த்திரு... ... ...*
குன்றம்போலுயர்தோளிற்கொற்றவில்... ... *
லொன்றுதாங்கினுலகந்தாங்கினான்... ... ...*

(இ-பு.) உலகங்களை யெல்லாங்காக்குங்கடவுளாகியஸ்ரீராமமூர்த்தியானவர் வெற்றிபொருந்திய உடைவாளை யிடப்புறத்தில் கட்டிப் பெரியமலை போலுயர்ந்த இரண்டு தோள்களுக்குள் ஒரு தோளினிடத்தில் மெய்ம்மையைப்போல எப்போதுங் குறைவுபடாத தூணியுங்கட்டி மற்றொரு தோளில் வெற்றியுள்ள ஒருவில்லையுந்தாங்கினான்—எ-று. (௱௯)

அன்னனம்பியுந்தானுமையனு ... ... ... *
மன்னனின்னுயிர்வழிக்கொண்டாலெனச் ... *
சொன்னவாதவத்தொடர்ந்துசாயைபோற் ... ...*
பொன்னின்மாநகர்ப்புரிசைநீங்கினான் ... ... *

(இ-பு) அவ்வாறுவில்முதலியவை தாங்கிக்கொண்டதம்பியுடன்தானுந்தங்கள் பிதாவாகிய தசரதமகாராஜாவின் இனிய உயிரானது வழிபற்றிச்செல்வதுபோல, இவர்பின்செல்லென்று தந்தையாற்சொல்லப்பட்டவிசுவாமித்திரமுனிவரைத்தொடரும்அவர் சாயைபோல அவரைவிட்டு நீங்காமல் தொடர்ந்து பொன்னாற் சமைக்கப்பட்டதாகிய அந்தப்பெரிய அயோத்திநகரின்மதில் வாயிலைக்கடந்தான்—எ-று. (௱௰)

ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.

## அ-வது-தாடகைப்படலம்.

திங்கள்மேவுஞ்சடைத்தேவன்மேன்மாரவேள் ... ... ... *
இங்குநின்றெய்யவும்மெரிதரும்நுதல்விழிப் ... ... *
பொங்குகோபஞ்சுடப்பூளைவீயன்னதன் ... ... ... *
அங்கம்வெந்தன்றுதொட்டனங்கனேயாகினான் .... ... *

(இ-ள்) (முனிவர்சொல்லுகின்றார்) இளம்பிறைதங்கிய சடையினையுடைய் பரமசிவன்மேல் மன்மதனானவனிங்கிருந்து மலர்க்கணைகளையேவியவளவில் அக்கடவுளது எரிகின்ற நெற்றிக்கண்ணினின்று முண்டாகிய கோபாக்கினி தகித்ததினாலம்மன்மதன் பூளைப்பூவைப்போலத் தன்னுடல்வெந்து அன்று முதல் அனங்கனாயினன்—எ-று. (க)

வாரணத்துரிவையான்மதனைச்சினவுநாள் ... ... ...*
ஈரமற்றங்கமிங்குகுதலாலிவணெலாம் ... ... ... *
ஆரணத்துறையுளாயங்கநாடிதுவுமக் ... ... ... ... *
காரணக்குறியுடைக்காமனுச்சிரமமே ... ... ... *

(இ-ள்.) வேதத்துறையி லிருப்பவனே யானைத்தோற் போர்வையினையுடைய பரமசிவன் மன்மதனைக் கோபித்தநாளில் அவனங்கமானது பசையற்று இங்குச்சிந்தின காரணத்தினாலிவ்விடமெல்லாம் அங்கநாடென்னும் பெயரையுடையது - அதுவுமன்றி இவ்விடமானது அந்தக்காரணக்குறிப்பினால் காமனுச்சிரமம் என்னும்பெயரையுமுடையது—எ-று. (உ)

பற்றவாவேரொடும்பசையறப்பிறவிபோய் ... ... ...*
முற்றவானுணர்வுமேன்முடிவிலாதறிவுசென் ... ... ...*
றுற்றவானவனிருந்தியோகுசெய்தனனெனிற் ... ... *
சொற்றவாமளவதோமற்றிதன்றூய்மையே ... ... ... *

(இ-ள்.) இருவகைப்பற்று மாசையு மிவைகட்குக் காரணமாகிய அஞ்ஞானத்துடன் பசையறவும் பிறவிநீங்கவும் மெய்ஞ்ஞானநிலை மேலிட்டிருப்பவர்கள் அறிவுதோறுஞ் சென்றிருக்கும் அப்பரமசிவன் வீற்றிருந்து யோகஞ்செய்தனனென்றால் இந்தஆசிரமத்தின்பரிசுத்தம் ஒருவரால்சொல்லலாகும் அளவுள்ளதோ அல்ல—எ-று. (௩)

என்றவந்தணனியம்பலும்வியத்தவ்வயிற் ... ... *
சென்றவர்க்கெதிரெழுஞ்செந்நெறிச்செல்வரோ... *
டன்றுறைந்தலர்கதிர்ப்பரிதிமண்டிலமகன்... ... ...*
குன்றினின்றிவரவோர்சுரநெருங்கினார் ... ... *

(இ-பு.) இவ்வாறு அம்முனிவர் சொல்லியவளவில் சந்தோஷித்து அவ்விடத்திற்சென்று அந்த ஆசிரமத்தினின்றும் எதிர்வந்த நல்லொழுக்கமாகிய செல்வமுள்ள முனிவர்களுடனன்று அவ்விடத்திலிருந்து பரந்த கிரணங்களையுடைய சூரியமண்டலமானது விசாலமுள்ள உதயகிரியினின்றும் எழும்போது அவ்விடம் நீங்கிச்சென்று வெதும்புகின்றதாகிய ஒரு பாலைநிலத்தினையடைந்தார்கள்—எ-று. (௪)

பரிதி[illegible]னவனிலம்பசையறப்பருகுவான் ... ... ... *
விருதமேற்கொண்டெலாம்வெளியிலேயல்லதோர் ... ... *
இருதுவேறின்மையாலெரிசுடர்க்கடவுளுங் ... ... .. *
கருதின்வேமுள்ளமுங்காணில்வேநயனமும் ... ... *

(இ-பு.) சூரியதேவன் அப்பூமியின் ஈரமும் ஒழியும்படி யுண்ணுமாறு விருதினை மேற்கொண்டலாவுப்படியான கோடைகாலமாகிய பருவமேயன்றி வேறொருபருவமும் அவ்விடத்திலில்லாமையாலந்நிலத்தினை யெரிகின்ற அக்கினிதேவனும் நினைப்பானாயின் அவனுள்ளமும் வெந்துபோம் - கண்களால் பார்த்தாலோ அக்கண்களும் வெந்துபோம்—எ-று. (௫)

படியின்மேல்வெம்மையைப்பகருநா ... ...*
முடியவேமுடியமூடிருளும்வான்முகடும்வேம்... ... *
விடியுமேல்வெயிலும்வேமழையும்வேமின்னினோ . ...*
டிடியும்வேமென்னில்வேறியாவைவேவாதவே ... ... *

(இ-பு.) அப்பாலைநிலத்திருக்கும் வெப்பத்தைக்குறித்துச்சொன்னாலும் அவ்வாறுசொல்லும் நாவானது முழுவதும்வேகும்-உலகத்தை மூடுகின்றவிருளும்வேகும்-அண்டமுகடும்வேகும்- விடியற்காலமானாற் சூரியனும்வேகும்- மின்னலிடி யென்னுமிவைகளுடன் மேகங்களும்வேகும் என்றால்மற்றவைவேகாமலிருப்பவை—எ-று. (௬)

விஞ்சுவான்மழையின்மேலம்பும்வேலும்படச் ... ...*
செஞ்செவேசெருமுகத்தன்றியேதிறனிலா... ... ... *
வஞ்சர்தீவினையனான்மானமாமணியிழந்... ... ... *
தஞ்சினர்நெஞ்சுபோலென்றுமாறுதரோ... ... ...*

(இ-பு.) மேகம் பெய்கின்ற மிகுந்த மழையினும் மிகைமாக அம்புகளும் வேல்முதலியமற்றப்படைகளும்பாயும்படிவெல்லுவதுமிறத்தலுமாகிய செய்கைகளிரண்டில் ஒருசெய்கையுமில்லாமல் பலனில்லாதவஞ்சகத்தையுடைய மன்னரது கொடியசெய்கையால் அவர்களிடத்தி லகப்பட்டுக்கொண்டு அபிமானமாகிய ஒருமணியையிழந்து அச்சமுற்றிருப்பவர்கள் மனமாறாமல் எவ்வாறு கொதித்துக்கொண்டிருக்குமோ அவ்வாறு அந்நிலமானது எந்நாளும் ஆறாமலிருக்கின்றது—எ-று. (௭)

பெரும்போர்செய்யத்தக்க சுத்தவீரர்கள் யுத்தஞ்செய்துவெல்லுதல் அல்லது எதிரியிடத்திலகப்பட்டுக்கொல்லுத லிவ்வாறன்றி வஞ்சகருடையமோசத்தினால்மானமிழக்கும்படிநேரிடுமாயின் அத்தச்சுத்தவீரர்கள்மனம்வெதும்புவதுபோலவெதும்புகின்றதென்பது தாற்பரியம்.

பேய்பிளந்தொக்கநின் றலர்பெருங்கள்ளியின் ... ... *
காய்பிளந் துக்ககாரகில்களுந் தழையிலா ... ... ... *
வேய்பிளந் துக்கவெண்டரளமும்விடவரா ... ... ... *
வாய்பிளந் துக்கசெம்மணியுமேவனமெலாம் ... ... *

(இ-பு) பேய்கள் பிளந்தலை ஒப்பாகநின்று உலர்ந்த கள்ளிகளின் காய்பிளந்து சிந்தியிருக்கிற கரிய அகிற்கட்டைகளும் தழையின்றி யுலர்ந்த மூங்கில் வெடித்துச் சிந்திய வெண்முத்துகளும் விஷமுள்ள பாம்புகளின்வாய்கள் வெடித்துச்சிந்தியமாணிக்கங்களும் அந்நிலமெங்கும் நிறைந்திருக்கும்.

பாருமோடாது நீடாதெனும்பாலதே ... ... ... *
ஆருமோடாதுகூடாதரோ சூரியன் ... ... ... ... *
தேருமோடாதுமாமாகமீமேகினேர் ... .. ... ... *
காருமோடாதுநீள்காலுமோடாதரோ ... ... ... *

(இ-பு.) நிலத்தினுக்குக்கடினத்தன்மையேயன்றி நெகிழுந்தன்மை யில்லாமையால் அந்நிலமுழுதும் வன்னமாகவேயிருந்து வெதும்புகின்றதேயன்றி அப்புறப் ஓடாது. அந்நிலத்துக் கதிதேவதையாகிய காளியும் ஓடிக்கொண்டேயிருக்கவேண்டுமல்லாமல் நின்றநிலையில் நிற்கக்கூடாது ஆகாயத்தின்மேல் அந்நிலத்துக்குநேராகச்சூரியன் தேருஞ்செலலாது மேலாசிக்குமிடத்தி லந்நிலத்துக்குநேராகமேகமுஞ்செல்லாது- நீளுகில் நகாற்றுஞ்செலலாது.()

நீடாதெனும்பாலது பூமி சரிக்காதென்னும்பகுதியினையுடையதாதலால்பாருமோடாது அந்நிலமும் அவ்விடம்விட்டு நீங்காமலிருக்கின்றதெனப் பகமபரிந் துணரக்கொள்க ஆ-ரும்-மற்றநான்குநிலத்துப் பொருள்களும் ஓடாது அந்நிலத்திற்சேராவாம் எனெனில்-நீடாதெனும்பாலது அந்நிலத்திற்செல்றால் விர்த்தியாகும் தலைமையிலேயே லஇப்படுதியாவெனப்பொருள்கூறுவதுமொன்று. இவ்வாறுகூறுங்கால பார் ஆகுபெயர்.

கண்கிழித் துமிழ்விடக்கனலராவரசுகார் ... ... ... *
விண்கிழித்தொளிருமின்னனையபன்மணிவெயின் ... *
மண்கிழித்திடவெழுஞ்சுடர்கண்மண்மகளுடற் ... ... *
புண்கிழித்திடவெழுங்குருதியேபோலுமே ... ... ... *

(இ-ள்.) கண்-கண்களை—கிழித்து திறந்துகொண்டு—உமிழ்-கக்குகின்ற—விடம்-விஷமாகிய—கனல்- தீயினையுடைய—அராவரசு-நாகராசனுடைய—கார்-கருமைநிறமுள்ள—விண்-மேகத்தை—கிழித்து-கிழித்துக்கொண்டு—ஒளிரும்-பிரகாசியாநின்ற—மின் அனைய- மின்னலையொத்த—மண்கிழித்திட-அந்நிலம்வெடிக்க—(அவ்வெடிப்பினின்று) எழும்-எழுகின்ற—மணிவெயில்-மாணிக்கங்களின்செஞ்சுடர்கள்—(எவ்வாறிருக்குமெனில்)மண்மகள் பூமிதேவியினுடைய—உடற்புண்-உடலிலிருக்கும்புண்ணானது—கிழித்திட வெடிக்க-எழும்—அதினின்றும் எழுகின்ற- குருதிபோலும்- உதிரம்போலவேயிருக்கின்றதென்க-எ-று. கண்கிழித்துகண்பிளந்தெனினும் அமையும்.

மாணிக்கங்களின் செஞ்சுடர் நிலப்பிளப்பினூடேயாக மேலெழுவது பூமிதேவியினுடைய புண்ணினின்றெழுகின்ற உதிரம்போலிருக்கின்றதென்பதுகருத்து, நிலவெடிப்பின்வழியாக எழும் நாகராசன் [illegible] மணிவெயிலென்பர், அதனின்றாலையொத்த மணிவெயிலென்று கூறிக்கொள்க.

[வேறு.]

புழுங்குவெம்பசியொடுபுரளும்பேரரா ... *
விழுங்குவந்தெதிரெதிர்விரிந்தவாயின்வாய் ... ... *
முழங்குவெங்கரிபுகுமூழ்கிவிசை ... ... ... *
வழங்குவெங்கதிர்சுடமறைவுதேடியே... ... *

(இ-ள்) வழங்கு-வழங்குகின்ற—வெங்கதிர்-வெவ்வியசூரியகிரணங்கள்—சுட-சுடுவதினாலே அந்தவெப்பத்துக் காற்றாமல் மறைவுதேட—முழங்கு-இரைந்துகொண்டிருக்கிற—வெங்கரி-கொடியயானைகள்—புழுங்கு-வெம்புகின்ற—வெம்பசியொடு-மிகுந்தபசியுடன்—புரளும்-புரண்டுகொண்டிருக்கிற—பேரரா-பெரும்பாம்புகள்—விழுங்குவந்து-அவ்விடத்துயிர்களை விழுங்கக்கருதிவந்து—எதிரெதிர்-எதிரெதிராக—விரிந்த-விரித்துக்கொண்டிருக்கும்—வாயின்வாய் - வாயினிடத்தில்—மூழ்கிப்புகும்-விரைந்துசெல்லும்—எ-று. (௰௧)

அந்நிலவெப்பத்துக்காற்றாமல் யானைகள் பாம்புகளின்வாயில்புகுமென்பதுகருத்து.

ஏகவெங்கனலரசிருந்தகாட்டினிற்... ... ண் *
காகமுங்கரிகளுங்கரிந்துசாம்பின ... ... ...*
மாகவெங்கனலெனும்வடவைத்தீச்சுட... ... *
மேகமுங்கரிந்திடைவீழ்ந்தபோலுமே... ...... *

(இ-ள்) ஏகம்-ஒப்புவேறில்லாத—வெங்கனல்-வெம்மையுள்ள அக்கினிதேவன்—அரசிருந்த- அரசுவீற்றிருக்கும்—காட்டினுள்-அக்காட்டினுள்ளே—எரிகின்ற-வெப்பத்தினால்—காகமும்-காக்கைகளும்—கரிகளும்- யானைகளும்—கரிந்து- வெந்துகரிந்து—சாம்பின-ஒடுங்கிக்கிடக்கின்றவை—மாகம்-மேன்மையுள்ள—வெங்கனலெனும்- வெவ்விதானஅக்கினியென்றுசொல்லப்பட்ட—வடவைத்தீ - வடவாமுகாக்கினியானது—சுட- தகிப்பதினால்—மேகமும்-மேகங்களும்—கரிந்து- கருகி—இடை- அந்நிலத்திலிடத்தில்—வீழ்ந்தபோலும்- வீழ்ந்ததுபோலாகும்—எ-று. (௰௨)

கானகத்தியங்கியகழுதின்றேர்க்குலந் ... ... *
தானகத்தெழுதலாற்றலைக்கொண்டோடிப்போய்..*
மேனிமிர்ந்தெழுந்திடில்விசும்பும்வேமென ... *
வானவர்க்கிரங்கிநீர்வளைந்ததொத்ததே ... ... *

(இ-ள்.) கானகத்து-அவ்வனத்தினிடத்தில்—இயங்கிய-விளங்குகின்ற—கழுதின்தேர்க்குலம்-பேய்த்தேர்க்கூட்டமானது—அகத்து- அந்நிலத்து—எழுதலால்-தீயுண்டாவதினால்—தலைக்கொண்டு - அது அவ்விடமெங்கும்பரந்து—ஓடிப்போய்- ஓடிச்சென்று—மேல்நிமிர்ந்தெழுந்திடின் - மேலே போங்கியெழுமானால்—விசும்பும் - தேவலோகமும்—வேமென- வெந்துபோமென்றுகருதி—வானவர்க்கு - தேவர்களுக்காக—இரங்கி- இரக்கமுற்று—நீர்- நீரானது—வளைந்தது-சூழ்ந்திருப்பதை—ஒத்தது-ஒத்திருக்கின்றது—எ-று. இ-வருணித்துரைக்கப்பட்டது. (௰௩)

எய்ந்தவக்கனலிடைபெழுந்தகானத்தேர் ... ... *
காய்ந்தவக்கடுவனங்காக்கும்வேலியின் ... ... *
வேந்தனுக்காகவீற்றிருக்கச்செய்ததோர் ... ... *
பாய்ந்தபொற்காலுடைப்பளிக்குப்பீடமே ... *

(இ-ள்) எய்ந்த-பொருந்திய—அக்கனலிடை-அந்தத்தீயினிடத்தினின்றெழுந்த-உண்டாகிய—கானல்தேர்-கானலாகியபேய்த்தேரானது—காய்ந்த-வெந்த—அக்கடுவனம்-அந்தக்கொடியவனத்தை—காக்கும்-காக்காநின்ற—வேலியின்-வேலியாகிய—வேந்தனுக்கு-மன்னவனுக்கு—அரசுவீற்றிருக்க-அரசுவீற்றிருப்பதற்காக—செய்ததோர்-செய்ததாகியதொரு—பாய்ந்தபொற்கால்உடை-பொருந்திய பொற்காலினையுடைய—பளிக்குப்பீடம்-பளிங்காசனம்போலிருக்கின்றதென்க—எ-று. (௰௪)

அக்கினிக்கொழுந்தின்மேலெழுகின்ற கானற்றேரானது பொற்காலுள்ளபளிங்குப்பீடம்போலிருக்கின்றதென்பதுகருத்து.

தாவருமிருவினைசெற்றுத்தள்ளரு ... ... ... *
மூவகைப்பகைபரண்கடந்துமுத்தியிற் ... ... *
போவதுபுரிபவர்மனமும்பொன்விலைப் ... .. *
பாவையர்மனமும்போற்பசையுமற்றதே ... ... *

(இ-ள்.) (அந்நில) தாவரும்-கெடுதற்கரிய—இருவினை-நல்வினை தீவினையென்னுமிருவினைகளையும்—செற்று-கெடுத்து—தள்ளரும்-நீக்குதற்கரிய—மூவகை-மூன்றுவகையாகிய—பகையரண்-பகையரணை—கடந்து-தொலைத்து—முத்தியில்-மோக்ஷவீட்டில்—போவது-செல்வதற்கு—புரிபவர்-விரும்புகின்றவர்களுடைய—மனமும்-மனம்போலவும்—பொன்விலைப்பாவையர்மனமும்போல்-வேசையர்மனம்போலவும்—பசையும்அற்றது-ஈரமுமற்றது—எ-று. (௰௫)

மூவகைப்பகையாவது-காமம்-வெகுளி-மயக்கம்.

பொரிபரற்படர்நிலம்பொடிந்துகீழுற ... ... *
விரிதலிற்பெருவழிவிளங்கித்தோன்றலால் ... ... *
அரிமணிப்பணத்தராவரசர்நாட்டினும் ... ... *
எரிகதிர்க்கினிதுபுக்கியங்கலாயதே ... ... ... *

(இ-ள்.) பொரி-பொரிகின்ற—பரல்-பருக்கைக்கற்கள்—படர்-பரந்த—நிலம்-அப்பூமியானது—பொடிந்து-வெடித்து—கீழுறவிரிதலில்-கீழுலகவரைக்கும்விரித்து—(வழியாதலினால்) அரிமணி-செம்மைநிறமுள்ள மாணிக்கங்கள்பொருந்திய—பணத்து-படத்தையுடைய—அராவரசர்நாட்டினும்-நாகராசாக்களுடைய பாதாளலோகத்திலும்—எரிகதிர்க்கு-விளங்குஞ்சூரியகிரணங்களுக்கு—இனிது- இனிதாக—புக்கு-சென்று—இயங்கலானது-பிரகாசிக்கும்படியாயிற்று. (௰௬)

எந்தெழுகொடுந்தாபினையெய்தலும் ... ... *
அருந்தவனிவர்பெரிதளவிலாற்றலோ ... ... *

பொருந்தினாயினும்பூவின்மெல்லியர்... ... *
வருந்துவரிறிதென்மனத்திறேர்க்கின்றான் .. ... *

(இ-பு.) வெந்துபொறிபெருகின்ற இத்தன்மையுள்ளதான கொடியபாலைநிலம்நேரிட்டவளவி லிவர்கள் அளவில்லாதபலத்தைப்பொருந்தினவர்களே யானாலும்மலரினுமெல்லியர் ஆதலால் சற்றுவருந்துவார்களென்று விசுவாமித்திரமுனிவர் தம்முடையமனதிற் கருதினார்—எ-று. (யஎ)

நோக்கினனவர்முகநோக்கநோக்குடைக் ... *
கோக்குமாருமடிகுறுகநான்முகன்... ... ... *
ஆக்கிய * விஞ்சைகளிரண்டுமங்வழி ... ... *
ஊக்கினனவையவருள்ளத்துள்ளினார் ... ... *

(இ-பு.) அவ்வாறு கருதியமுனிவர் அவர்கள் முகத்தைப் பார்த்தவளவில் அழகுள்ள அவ்விரண்டு ராசகுமாரர்களும் சமீபத்தில்வர,பிரமதேவன் தனக்குபதேசித்த இரண்டு மந்திரங்களையும் அவர்செவிகளி லுபதேசித்தவுடன் அவைகளை அவர்கள் தங்கள் மனதில் சிந்தித்துக்கொண்டார்கள்—எ-று. ()

உள்ளியகாலையினூழித்தீயினை... ... ... ...*
எள்ளுறுகொழுங்கனலெஞ்சும்வெஞ்சுரத் ... *
தெள்ளுறுதண்புனலிடைச்சேறலொத்தது ... .. *
வள்ளலுமுனிவனைவணங்கிக்கூறுவான்... ... *

(இ-பு) அம்மந்திரங்களை யவர்கள்சிந்தித்தபோது வடவாமுகாக்கினியை யிகழ்ச்சிசெய்யத்தக்க செழுமையுள்ள தீயானது குறைந்த வெவ்விய பாலைநிலத்தில் செல்லும்போது அவர்களுக்குத் தெளிந்தகுளிர்ச்சியுள்ள நீரினிடத்தில் செல்வதையொத்திருந்தது (அவ்விருக்க) ஸ்ரீராமமூர்த்தியானவர் விசுவாமித்திரமுனிவரைவணங்கிச் சொலலுகின்றார்—எ-று. (யகூ)

கழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான் ... .. *
விழிபடவெந்ததோவேறுதானுண்டோ... ... *
பழிபடர்மன்னவன்படைத்தநாட்டினூஉங்... ...*
கழிவதென்காரணமறிகூறென்றான்... ... *

(இ-பு.) கழிகள்பொருந்திய கங்கைநீராகிய மாலையணிந்த சடாமகுடமுள்ள பரமசிவனது நெற்றிக்கண் பார்வைபட்டு அதினாலிவ்வாறு வெந்ததோ அல்லது வேறுகாரணமுண்டோ பழிப்படைந்த ஒருராசன்படைத்த நாட்டின் அழிவினும் அதிகமாக இந்நாட்டிவ்வாறு பூமியழிவதற் கென்னகாரணமோ சொல்லவேண்டுமென்றார்-க-று-அம்சரீவையு. (உய)

என்றலுமிராமனைநோக்கியின்னுயிர்... ... ...*
கொன்றழலிலாங்கவள்கூற்றின்றோற்றத்தள்...*

* விஞ்சைகளிரண்டையும் பலை அதிபலை என்று . சமஸ்கிருதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

அன்னவிரோளிணையுமலைத்தோளருண் ... ... *
மன்னுயிரனைத்தையும்வாரிவாய்ப்பெய்து ... ... *
தின்னுயிர்வளர்க்குமோர்தீயகோள்கூற்றமே... *
அன்னவள்யாவளென்றறையக்கேட்டியால் ... *

(இ-பு.) மலையினையொப்பாகச்சொல்லத்தக்க புசங்களையுடையராமனே- இன்னுமவளத்தன்மை யுடையவளெனில், பிரமதேவனால் சிருஷ்டிக்கப்பட்ட நிலையாகிய உயிருள்ள பொருள்களையெல்லாம்வாரித் தன் வாயிற்போட்டுக்கொண்டு இனியவுயிரைவளர்க்கா நின்ற கோபாக்கினியைக்கொண்ட யமனையொத்தவள் அந்தத்தாடகையாவளென்றால் சொல்லக்கேட்பாயாக-எ-று

இயக்கர்தங்குலத்துளானுலகமெங்கணும் ... ...*
வியக்குறுமொய்ம்பினானெரியின்வெம்மையான். *
மயக்கில்சற்சரனெனும்வலத்தினானொரு ... ... *
தியக்கிலன்சுகேதுவென்றுளனோர்தூய்மையான்.. *

(இ-பு.) இயக்கர்குலத்திலுள்ளவனும் உலகங்களெங்கும் அதிசயிக்கத்தக்கதாகப் பலமுள்ளவனும் அக்கினிபோல வெப்பமுண்டாயவனுமாகிய பயக்கமில்லாத சற்சரனென்கிற வல்லமையுள்ளவன் பெற்ற தளர்ச்சியில்லாதவனாகிய சுகேது என்றுசொல்லப்பட்டபரிசுத்தன் ஒருவன் இருந்தான்-எ-று.

அன்னவன்மகவிலாதயருஞ்சிந்தையான்... ... ...*
மன்னெடுந்தாமரைமலரின்வைகிய ... ... ...*
நன்னெடுமுதல்வனைவழுத்திநற்றவம் ... ... *
பன்னெடும்பகலெலாம்பயின்றபான்மையான் ... *

(இ-பு.) அந்தச் சுகேதுவென்பவன் புத்திரர்களில்லாமல் அயர்ச்சிகொண்டசிந்தையுள்ளவனாகி நிலையாகிய பெரியதாமரைமலரில் வீற்றிருக்கும் நல்லபெரியமுதல்வனாகிய பிரமதேவனைத்துதிசெய்து பலகாலம் நல்லதவஞ்செய்தமுறைமையினையுடையவன்—எ-று. (உ௭)

முந்தினனருமறைக்கிழவன்முற்றுநின் ... ... *
சிந்தனையென்னெனச்சிறுவரின்மையா ... ... *
னொந்தனனருளெனாவணங்குகேள்வியாய்... ... *
மைந்தர்களிலையொருமகளுண்டாமென்றான்......*

(இ-பு.) இவ்வாறு இவன் தவஞ்செய்கையில் திருவுளமிரங்கிப் பிரமதேவன் பிரத்தியக்ஷமாகி (அவனைநோக்கி) உன்சிந்தனை நிறைவேறும் ஆயினும் அந்தச்சிந்தனையாது கூறுகவென வினவினவளவில் அவனும் புத்திரர்களில்லாமையினால்வருந்தினேன் அடியேனுக்குக்கிருபைசெய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவளவில் நுண்ணியகேள்வியையுடையவனே உனக்குப்புத்திரர்களுற்பத்தியாவதில்லை ஆயினும் ஒருபுத்திரியுற்பத்தியாவளென்று அருளிச்செய்தார்—எ-று. (உ௮)

(இ-பு.) மாயமும், வஞ்சமும், அளவில்லாதபலமும், தங்களுக்குத் தெரியவொண்ணாதையுத்தத்தையும்பார்க்கிலும் அதிகமாகப்பயின்று அவர்கள் வளரும்போது அவர்களைப்பெற்ற வெம்புகின்ற கோபமுள்ள இயக்கனவன் களிப்பின் மிகுதியால—எ-று. (௧௩)

தீதுறுமவுணர்கடீமைதீர்தர... ... ... ...*
மோதுறுகடலெலாமொருகைமொண்டிடு... ...*
மாதவனுறைவிடமதனின்வந்துநீள் ... ... ...*
பாதவமனைத்தையும்பறித்துவீசினான் .. ... *

(இ-பு.) தீமைபொருந்திய அவுணர்கள்செய்யுங்கொடுமை யொழியும்படி அலைகள்மோதுகின்ற கடலையெல்லாம் ஒருகையினால் மொண்டு உண்ட முனிவர்வாசஞ்செய்யும் ஆச்சிரமத்திற்சேர்ந்து அங்கிருக்கு மரங்களையெல்லாம் பறித்தெறிந்தான்—எ-று. (௧௪)

விழைவுறுமாதவம்வெஃகினோர்விரும் ... ... *
புழைகலையிரலைடபயுயிருண்டோங்கிய ... ... *
வழையொடுமரனெலாமடிப்பமாதவன் ... .. *
றழலெழவிழித்தனன்சாம்பராயினான்... ... *

(இ-பு.) தவத்தைவிரும்பிய முனிவர்களா லாதரிக்கப்பட்ட ஆண்மான்களையும், பெண்மான்களையும், கலைமான்களையுங்கொன்று ஓங்கிய சுரபுன்னைமுதலாகிய மரங்களையெல்லா மடிக்கக்கண்டு அகஸ்தியர் கோபங்கொண்டு அக்கினிப்பொறியுண்டாகப்பார்த்தவளவில் அவன்சாம்பலாயினான்-எ-று. ()

மற்றவன்விளிந்தமைமைந்தர்தம்மொடும்... ... *
பொற்றொடிகேட்டுவெங்கனலிற்பொங்குறு ... *
முற்றுறமுடிக்குவன்முனியையென்றெழா... ... *
நற்றவனுறைவிடமதனைநண்ணினாள் ... ... ... *

(இ-பு) அந்தவியக்கனிறந்ததைப் புத்திரர்களுடன் அவன்மனைவிகேள்விப்பட்டு வெவ்வியதீயைப்போலப்பொங்கி இந்தமுனிவனைமற்றமுனிவர்களுடன் முடித்துப்போடுகிறேனென்று அவ்வகஸ்திய ராச்சிரமத்தைச் சேர்ந்தாள்—எ-று. (௧௬)

இடியொடுமடங்கலுமவிழியுமேங்கிடக் ... ... *
கடிகெடவமரர்கள்கதிருமட்குறத் ... ... ... *
தடியுடைமுகிற்குலஞ்சலிப்பவண்டமும் ... ... *
வெடிபடவதிர்த்தெதிர்விளித்துமண்டவே... ... *

(இ-பு) இடியும் சிங்கங்களும் கண்டமாருதமும் ஏக்கங்கொள்ளவும் தேவர்கள் தங்கள் காவல்கெட்டோடவும் சந்திர சூரியர்களும் அஞ்சவும் மின்னல்பொருந்திய மேகங்கள்சலிக்கவும் அண்டங்கள் வெடிபடவும் ஆரவாரித்து எதிரில்கூவிக்கொண்டுவரவே—எ-று. (௧௭)

(இ-பு) அந்தத்தாடகையானவள் தீப்போலெரிக்கா நின்ற மனதையுடையவளாய் மிகுந்தவலிமையையுள்ள தன்புத்திரர்களை வேறாகவிட்டு நீங்கித்தகுதியுள்ளதான தவத்தொழிலையுடைய அகஸ்தியமுனிவரன் கோபத்தைக்கருதிக்கொண்டு வழியில் வடவாமுகாக்கினி பொருந்தியதுபோல இவ்வனத்தில் வந்திருக்கிறான்—எ-று. (௬௨)

உரைப்பரும்பிணிப்புறுலோபமொன்றுமே ... *
அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோற் ... *
கிளப்பருங்கொடுமையவரக்கிகேடிலா... ... ...*
வளப்பருமருதலைப்பழித்துமாற்றினாள் ... ...*

(இ-பு) மனதில் மிகுந்த பந்தமாகப் பொருந்தத்தகாத உலோபகுணமானது சிலவேளை தோன்றுமாகில் அளவிடற்கரிய நற்குணங்களை யழித்துவிடுமுறைமைபோலவாக்கினால் சொல்லவுங்கூடாத கொடுமையினையுடைய அந்த அரக்கியானவள் கேடில்லாதமிகுந்தவளப்பத்தையுடைய மருதநிலமாயிருந்த விந்நிலத்தையழித்து இவ்வாறுமாற்றிவிட்டாள்-எ-று. (௬௩)

* உலோபமென்கிற ஒருகுணமானது கருதுகின்ற பெரியதொந்தப்பட்டு மற்ற எல்லா நற்குணங்களையும் அழிக்குமாறுபோலெனப் பொருள்கூறினும் அமையும்.
உள்ள-எனக்கூறற்பாலது உளவெனநின்றது- உலோபந்தோன்றுமேலெனவும்பாடமுண்டு.

[ வேறு. ]

இலங்கையர்சன்பணியமைந்தொரிடையூறாய் ...*
விலங்கல்வலிகொண்டனது வேள்விநலிகின்றாள்.. *
அலங்கன்முகிலேயவனிவ்வங்கநிலமெங்கும் ... *
குலங்களொடடங்கநனிகொன்றுதிரிகின்றாள் ... *

(இ-பு.) இராவணனுடைய ஏவலிலமைந்து யாவர்க்கும் ஓரிடையூறாய் அபிரம்யானைபலங்கொண்டு என்னுடைய வேள்வியைக்கெடுக்கின்றாள் அன்றியும் பூமாலையணிந்த மேகம்போன்ற அழகுள்ளராமனேயவளிருக்க அங்கநாடெங்குமிராநின்ற உயிர்களையெல்லாம் குலங்களுடன் அதிகமாகக்கொன்று திரிகின்றாள்—எ-று. (௬௪)

மூன்றுலகளித்துமுறைநின்றவுயிரெல்லாந் ... *
தன்னுயிரெனக்கருதுதன்மையினன்மைந்த ... *
வன்னினியுரைத்துவதினிச்சிறிதுநாளின்... ......*
மன்னுயிரனைத்தையும்வயிற்றினிடுமென்றான் ... *

(இ-பு.) முறைப்படி காக்கின்ற நாட்டைக்காத்து அந்நாட்டிலிருக்கும் உயிர்களையெல்லாம் தன்னுயிர்போல நினைக்கா நின்ற தன்மையினையுடைய தசரதமகாராசன்புத்திரனேயின்னமும் நான்சொல்லத்தக்கதென்னிருக்கின்றது இனிச்சிறிதுநாளில் நிலைபெற்ற உயிர்களையெல்லாம் தன்வாயில் போட்டுக்கொள்வாள்—எ-று. (௬௫)

தன்னுயிரெனக்கருதுந் தன்மையினன் என்னும் பாடங்கொண்டு அந்நிலையைப்பொருள்கூறுதலுமுண்டு.

இடங்கருஞ்செந்திசையுமேழுலகுமெங்கும் ... *
அடங்க...ங்கவுருமஞ்சநனியார்த்தாள் ... ... *

(இ-ள்) மதநீரைப்பெருகாநின்ற பெரியயானைகளின் துதிக்கைகளை முடிந்து வடம்போல அணிந்துகொண்டிருப்பதினாலே ஒளியாநின்ற இடையையுடையவளாகிய தாடகையானவள் தேவலோகமும் எந்தவுயதிசைகளும் ஏழுலகுமாகிய பலவுலகங்களிலுமிருக்குமுயிர்களெல்லாம் மறுகிநடுங்கவும் இடியஞ்சவுமிகுதியாய் ஆரவாரித்தாள்—எ-று. (௫௰)

ஆர்த்தவரைநோக்கிநகைசெய்தெவருமஞ்சக் ... *
கூர்த்தநுதிமூக்கலைபயிற்கொடியகூற்றைப் .. ...*
பார்த்தெயிறுதின்றுபகுவாய்முழைதிறந்தோர் ....*
வார்த்தையுரைசெய்தனளிடிக்குமழையன்னாள் ....*

(இ-ள்) இவ்வாறு ஆரவாரித்து அவர்களைநோக்கி நகைசெய்து யாவரும் பயங்கொள்ளும்படி கூர்மைபொருந்திய நுனியையுடைய சூலாயுதமாகிய கொடியயமனையும் பார்த்துப் பற்களைக்கடித்துப் பிலப்பாகிய வாயைத்திறந்து இடிக்காநின்ற மேகம்போன்றவள் ஒருவார்த்தை சொல்லுகிறாள்—எ-று.().

கடக்கரும்வலத்தெனதுகாவலிதில்யாவும் ..........*
கெடக்கருவறுத்தனனினிச்சுவைகிடக்கும் ... ... *
விடக்கரிதெனக்கருதியோவிதிகொடுந்தப் ........*
படக்கருதியோபகர்மின்வந்தபரிசென்றே ........*

(இ-ள்) செல்லுதற்கரிய பலமாகிய என்காவல் பொருந்திய இந்நிலத்தில் எல்லாவுயிர்களும் அழியும்படி கருவறுத்தேன் ஆதலால் இனிச்சுவையுள்ள மாமிசமெனக்குக்கிடைத்தலரிதென்றெண்ணியோ அல்லது விதியானது தள்ளிக்கொண்டுவர இறந்துபோவதைக்கருதியோ நீங்கள் வந்ததன்மையென்று சொல்லி—எ-று. (௫௨)

மேகமழையிற்றுவிழித்தனள்புழுங்கா....... ..*
மாகவரையற்றகவுதைத்தனண்மறிதலின் ... ......*
பாகமெனுமூற்றெயிறதுக்கியயில்பற்றி ... ... ...*
ஆகமுறவுய்த்தெறிவனென்றெதிரழன்றாள் ... ... *

(இ-ள்) மேகங்கள் தொடக்கற்று விழும்படி நோக்கி மனம் வெதும்பிப் பெரியமலைகள் அடிபெயரும்படி பூமியையுதைத்தும் சந்திரபாகமென்று சொல்லும்படியான பெரிய கோரதந்தங்களை அதுக்கிச் சூலத்தைப் பற்றிக்கொண்டு ஸ்ரீராமமூர்த்திமார்பில்பொருந்த எறிகிறேனென்று எதிரிற்கோபங்கொண்டாள்—எ-று. (௫௩)

அன்னவண்முனிவற்கதுகருத்தெனினுமாவி ... ....*
உன்னினைவடிக்கணைதொடுக்கிலனுயிர்க்கே ......*
துன்னினைவினைத்தொழிலெருட்கிபுரைக்னாலும் ..*
பெண்ணெனமனத்திடைபெருந்தகைநினைந்தான்..*

(இ-பு) பெருமைபொருந்திய விசுவாமித்திரமுனிவருக்கு அவளைக்கொல்வது என்னமாயிருந்தாலும் ஸ்ரீராமமூர்த்தியானவர் அவளுயிரை யுண்ணானென்று பாணங்களையேவுகிலர் - ஏனெனில், அவர்பெருந்தகைமையுடைப்பாட்டினையுடையவராதலால் உயிர்களுக்கெல்லாய் நடுக்க முண்டாகும்படியான தீயதொழில் செய்திருப்பவளேயாகிலும் இவள் பெண்ணென்று மனதில் நினைத்தார்—எ-று. (௬௪)

[ வேறு. ]

வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றுளயில் .... .... *
எறிந்துகொல்வனென்றேற்கவும்பார்க்கிலாச் .. ...*
செறிந்ததாரவன்சிந்தைக்கருத்தெலாம் ... ..... *
அறிந்துநான்மறையந்தணன்கூறுவான் ... ... ....*

(இ-பு) வெறித்திருக்கும் செம்மயிரினையும் வெள்ளியபற்களையுமுடைய அவ்வரக்கியானவள் சூலத்தையெறிந்து கொல்லுகிறேனென்று கையிலெடுக்கவும் நோக்காத இதழ்கள்நெருங்கிய பூமாலையணிந்திருக்கும் ஸ்ரீராமமூர்த்தியினுடைய மனக்கருத்தை யெல்லாமறிந்து நான்குவேதங்களுமுணர்ந்த அந்தணராகிய விசுவாமித்திரர்சொல்லுகின்றார்—எ-று. (௬௫)

அந்தணன் - அழகியதட்பத்தை யுடையவன்.

தீதென்றுள்ளவையாவையுஞ்செய்தெமைக் ... .*
கோதென்றுண்டிடலளித்தனேயேகுறை ... ... ...*
யாதென்றெண்ணுவதிக்கொடியாளையு ... ... *
மாதென்றெண்ணுவதோமணிப்பூணினாய் ... ...*

(இ-பு) பொல்லாங்கென்றுள்ளவைகளையெல்லாஞ்செய்து எங்களைக்கோதென்றுகருதி யுண்டு விட்டனள் இவ்வளவேகுறையிந்தச்செய்கை என்னென்று நினைப்பது மணிகள் பதிக்கப்பட்ட ஆபரணங்களணிந்த ராமனே இக்கொடியவளையும்பெண்ணென்று நினைப்பதோ—எ-று. (௬௬)

முனிவர்கள் தவத்தினால் தசையொடுங்கி எலும்புகள்தோன்றும்படியிளைத்த உடலுள்ளவர்களாதலால் கோதென்றார்.

நாண்மையேயுடையார்பிழைத்தார்நரு ... ... ... *
வாண்மைபெற்றவன்றிறலாடவர் ... ... ... *
தோண்மையேயிவள்பேர்சொலத்தோற்பரோல் ...*
ஆண்மையென்னுமதாரிடைவைகுமே ... ... ...*

(இ-பு) இவளுடன் யுத்தஞ்செய்ய நாணமுடையவர்களாயினபேர்களே யுயிர்பிழைத்தவர்கள் அதுநிற்கப்பிரகாசியாநின்றவாளாயுதத்திறமுள்ள வென்றிபொருந்தியசுத்தவீரர்களேயாகிலும் இவள்பெயரைக்கேள்விப்பட்ட மாத்திரத்தில் தங்கள் புசபலத்தை யிழந்துவிடுவார்களானால் ஆண்மைத்தன்மையாரிடத்திலிருக்கின்றது நீயோசித்துப்பார்—எ-று. (௬௭)

இ[illegible]ன்னிடைத்தானுமத்தொழுஞர் ... .....*
[illegible]படைத்தனைவர்வாளவர் ... ... ... ...*

மற்றாம்பிவடோளெனின்மைந்தரோ ... ... *
டற்றாம்[illegible]யாதுகொலாண்மையே ... ... ... *

(இ-ப.) முன்னொருகாலம் தேவேந்திரனிவனுடன் எதிர்த்துத்தோற்றுப் போனான் அனைவர்களும் தேவர்களும் தங்கள் சேனைகளெல்லா மிவளாலிறந் துபோகக்கண்டு தோற்றோடிப்போனார்கள் இவள் தோள்கள் மந்திரகிரி யையொப்பானவென்றால் ஆடவர்களுடைய ஆண்மைத்தன்மைக்குமிவளு டைய பெண்தன்மைக்கும் தாரதம்மியம் நோக்குமிடத்து இனி ஆண்மைத் தன்மையென்பது யாவரிடத்திலிருக்கின்றது சொல்வாயாக—எ-று. (௫௮)

மன்னர்மன்னவன்காதலமற்றுமொன் ... ... ... *
பின்னம்யானுரைக்கின்றதியாதெனின் .. ... ... *
முன்னொர்காலநிகழ்ந்தமுறைமையீ ... ... ... *
தென்னவோதலுற்றான்றவத்திறலான் ... ... ... *

(இ-ப.) அரசர்க்கரசனாகிய தசரதமகாராசாவின் புத்திரனே பின்னரும் நான் ஒரு சங்கதிசொல்லுகிறேன் அது என்னவெனில், இதுவுமுன்னமொ ருகாலத்தில் நடந்தமுறைமையென்று முடிவுபெறாததவமுள்ள விசுவாமித் திரமுனிவர் சொல்லத்தொடங்கினார்—எ-று. (௫௯)

பிருகுவென்னும்பெருந்தவன்றன்மனை ... ... *
வருகயற்கட்கியாதிவல்லாசுரர்க் ... ... ... ... *
குருகுகாதலுறவுறவாதலாற் ... ... ... ... ... *
கருதியாவிகவர்ந்தனனேமியான் ... ... ... ... *

(இ-ப.) பிருகுவென்னும் பெயரையுடைய பெரியதவமுனிவருடைய பத் தினியாகிய சேல்மீன்போன்ற பார்வையையுடைய-கியாதி யென்பவள்-வ லியஅசுரர்களுக்கு மனமிளகும்படியான அன்புண்டாகத்தக்கதாக உறவுபூ ண்டமையைக்கருதிச்சக்கிரபாணியானவர் அவளுயிரைவாங்கிவிட்டார்-எ-று

அசுரர் என்பது விகாரவகையால் ஆசுரரெனநீண்டது இயவரிடத்துறவுகொண்டமை யால் பெண்ணென்று கருதவேண்டுவதில்லையென்று கொன்றானென்பதுகருத்து.

வானகந்தனின்மண்ணினின்மன்னுயிர் ... ... ... *
போனகந்தனக்கென்றெணும்புந்திய... ... ... *
தானவள்குமதிப்பெயராடனை ... ... ... ... *
ஊனொழித்தனன்வச்சிரத்தும்பர்கோன் ... ... *

(இ-ப.) விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலுமாகப் பொருந்திய உயிர் களெல்லாம் தனக்கு ஆகாரமாகநினைக்கும் புத்தியையுடைய தானவளாகிய-கு மதியென்னும்பெயரையுடையவளுடைய உடலை தேவேந்திரன் வச்சிராயுத த்தினாலொழித்துவிட்டான்—எ-று. (௬௰)

ஆகமாலரிக்காகண்டலன்றனக் ... ... ... ... *
கோதுகீர்த்தியுடையவல்லாதிலை... ... ... *
[illegible]தமென்பனவெய்தியவோசைய... [illegible]
[illegible]டைந்துயங்கியதாரிதும் ... ... ... ... *

(இ-பு.) இவ்வாறு செய்ததினால் திருமாலுக்கும், இந்திரனுக்கும், யாவரும் சொல்லும்படியான கீர்த்தியுண்டாயினமையன்றிக் குற்றமெய்யவைகள் அம்பலித்தனவோ மகரந்தங்களைப்பொருந்தி விளங்கும் பூமாலையணிந்துள்ள ராமனே நீசொல்வாயாக—எ-று. (௪௨)

கறங்கிட்டத்திகிரிப்படிகாத்தவர்... ... ... ....*
பிறங்கடைப்பெரியோய்பெரியோரொடு... ... *
மறங்கொடித்தலைமன்னுயிர்மாய்த்துநின் ... ...*
றறங்கெடுத்தவட்காண்மையும்வேண்டுமோ... ...*

(இ-பு.) ஆக்கினைச்சக்கரம் எங்குஞ் செல்லத்தக்கதாக இந்தப்பூமியைக்காத்த சூரியகுலமன்னவருடைய புத்திரனாகிய பெரியோனே பெரியோர்களுடன்பகைகொண்டு இவ்வுலகத்திலிருக்கும் உயிர்களையுங்கொன்று நீடியதருமத்தையுங்கெடுத்தவளுக்கு ஆண்மையும் வேண்டுமோ—எ-று (௪௩)

சான்றுதாளற்றதெண்ணித்தருமம்பார்த் ... ... *
தேற்றும்வினையென்பதன்றியிவளைப்போ ... *
லாற்றங்கெட்டவுந்தின்னநயப்பதோர் ... ... ...*
கூற்றுண்டோசொலாய்கூற்றுறழ்வேலினாய்... ...*

(இ-பு) பிரமனால் விதிக்கப்பட்டிருக்கும் ஆயுள்பிரமாண முடிந்ததையெண்ணி அவ்வுயிர்செய்தபுண்ணியங்களை நோக்கி யெண்ணிக்கொண்டுபோவதேயன்றி இவளைப்போல உயிர்களெல்லாம் நாற்றத்தை யறிந்தவளவில் அவைகளையுண்ணவிரும்புகின்ற கூற்றுவனுமுண்டோ கொலைசெய்வதால் கூற்றுவனையொத்தவேலாயுதமுடையவனே சொல்வாயாக—எ-று. (௪௪)

மன்னும்பல்லுயிர்வாரித்தன்வாய்ப்பெய்து ... ...*
தின்னும்புன்மையிற்றீமையதேயைய ... ... ...*
பின்னுந்தாழ்குழற்பேதைமைப்பெண்ணிவள் ...*
என்னுந்தன்மையெளிமையின்பாலதே ... ...*

(இ-பு.) உலகத்திற்பொருந்திய பலவுயிர்களையும்வாரித் தன்வாயிற் போட்டுக்கொண்டு தின்னுகின்ற கீழ்மைத்தனத்தைப் பார்க்கினும் தீமை வேறுயாதோ ஐயனே பின்னுகின்றதாழ்ந்தஅளகத்தையுடைய பேதைமைப்பெண்ணிவள் என்றென்னுந்தன்மை அறியாமையின்பாலதாம்-எ-று. (௪௫)

ஈறிலல்லறம்பார்த்திசைத்தேனிவள் ... ... *
சீறிநின்றதுசெப்புகின்றேனலன் ... ... ... *
ஆறிநின்றதறனன்றாக்கையைக் ... ... ... .*
கோறியென்றெதிரந்தணன்கூறினான்... ... ...*

(இ-பு.) முடிவில்லாத தருமத்தைநோக்கிச் சொன்னேனேயல்லது-இப்போது இவள் சீறிநின்றதைநோக்கிச் சொல்லுகிறேனல்லன்-ஆதலாலினி நீ பொறுமைகொண்டிருப்பது தருமமல்ல, இவ்வாக்கையைக்கொல்லென்றுஸ்ரீராமமூர்த்தியெதிரில் விசுவாமித்திரமுனிவர் சொன்னார்—எ-று. (௪௬)

ஐயனங்கதுகேட்டறனல்லவும் ... ... ... *
எய்தினாலதுசெய்கவென்றேவினான் ... ... *
மெய்யநின்னுரைவேதமெனக்கொடு ... ... *
செய்கையன்றோவறஞ்செய்யுமாறென்றான்... ...*

(இ-பு.) ஸ்ரீராமமூர்த்தியானவர் அந்தவார்த்தையைக்கேட்டுப் பாபமானது நேரிலேவந்தேயானாலும் மெய்யனே அதனைச்செய்யென்று நீயேவினால் தேவரீருடைய வாக்கியத்தை வேதவாக்கியமாக ஏற்றுக்கொண்டு அவ்வண்ணமே செய்தலல்லவோ தருமஞ்செய்யுமுறைமையென்றார்—எ-று. (௬௭)

கங்கைத்தீம்புனலுடன்கருத்தையு ... ... ...*
மங்கைத்தீயனையாளுமனக்கொளாச் ... ... *
செங்கைச்சூலவெந்தீயினைத்தீயதன் .. ... ...*
வெங்கட்டீயொடுமேற்செலவீசினாள் ... ... ...*

(இ-பு.) மதுரமுள்ள கங்காநதிநீர்சூழ்ந்த கோசலநாட்டையுடையஸ்ரீராமமூர்த்தியின் கருத்தையும் தீயானது பெண்ணுருவங்கொண்டதன்ன தாடகை அறிந்துகொண்டு தன்செங்கையிலிருக்கும் சூலமாகிய வெவ்வியதீயை வெப்பம்பொருந்தியதான கொடியகண்களிலிருந்துண்டாகுந்தீயுடன் ஸ்ரீராமமூர்த்தியின்மேல்செல்லும்படிவீசினாள்— எ-று. (௬௮)

புதியகூற்றனையாள்புகைந்தேவிய ... ... ... *
கதிர்கொண்மூவிலைக்காலவெந்தீமுனி .. ... ...*
விதியைமேற்கொண்டுநின்றவன்மேலுவா ... *
மதியின்மேல்வருங்கோளெனவந்ததே... ... ...*

(இ-பு.) புதிய எமனையொத்த தாடகையானவள் மனம்வெம்பி யேவிய ஒளிபொருந்திய மூவிலைச்சூலமாகிய காலாக்கினியானது விசுவாமித்திரமுனிவர் கட்டளையிட்ட தொழிலைச்செய்யாநின்ற இராகவன்மேல் பூரணச்சந்திரன்மேல் வருகின்ற பாம்பாகிய இராகுவைப்போலவந்தது—எ-று. (௬௯)

மாலுமக்கணம்வாளியைத்தொட்டனன் ... ...*
கோலவிற்கால்குனித்ததுங்கண்டிலர்... ... ... *
காலனைப்பறித்தக்கடியாள்விட்ட ... ... ... *
சூலமற்றறுதுண்டங்கள்கண்டனர் ... ... ...*

(இ-பு) அவள்சூலத்தைவிட்ட அப்பொழுதே திருமாலவதாரமாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் பாணத்தைத்தொட்டதையும் அம்புவைத் தேவுதற்கரியவிற்குனைதலைவளைத்ததையும் யாருங்கண்டிலர்மற்ற எதனைக்கண்டார்களென்றால் சூலம் அறுந்துவீழ்ந்ததைக்கண்டார்கள்—எ-று. (௭௰)

அல்லின்மாரியனையநிறத்தவள் ... ... ... *
சொல்லின்மாத்திரையிற்கடல்தூர்ப்பன ... ...*
கல்லின்மாரியைக்கைவகுத்தானது... ... ... *
வில்லின்மாரியின்வீரன்விலக்கினான்... ... ...*

(இ-பு) மேகநிறமுள்ள அந்தத் தாடகையானவள் ஒருசொல்லினளவுக்குள் மலைகளையெடுத்து மழைபொழிவதுபோலெறிந்தாள் அதனை ஸ்ரீராமமூர்த்தியானவர் வில்லிலிருந் தேவுகின்ற பாணவருஷத்தினால் விலக்கிவிட்டார்-எ-று.

வேறு.

சொல்லொக்குங்கடியவேகச்சுடுசரங்கரியசெம்மல்... ... *
அல்லொக்குநிறத்தினாண்மேல்விடுதலும்வயிரக்குன்றக் ... *
கல்லொக்குநெஞ்சிற்றங்காதப்புறங்கழன்றுகல்லாப். ... ...*
புல்லர்க்குநல்லோர்சொன்னபொருளெனப்போயிற்றன்றே. *

(இ-பு.) அவன் எறிந்தமலைகளையெல்லா மழித்துப் பின்னும் ஸ்ரீராமமூர்த்தியானவர் முனிவர்கள்சாபத்தையொக்குங்கடியவேகத்தையுடைய சுடும்படியானபாணத்தையிருளையொத்தநிறமுள்ளதாடகையின்மேல்விட்டவளவில் அது அவளுடைய வயிரமலைபோன்ற மார்பிலேதங்கிவிடாமல்முதுகின்புறமாகக்கழன்று கற்றறிவில்லாத மூடர்களுக்கு நல்லோர்சொன்ன பொருள் போலப்போயது—எ-று. (௭௨)

பொன்னெடுங்குன்றமன்னான்புகர்முகப்பகழியென்னும் ....*
அந்நெடுங்காலவெங்காற்றடித்தலுமிடித்துவானிற்..... ... *
கன்னெடுமாரிபெய்யக்கடையுகத்தெழுந்தமேக ... ... *
மின்னொடுமசனியோடும்வீழ்வதேபோலவீழ்ந்தாள்... ... *

(இ-பு.) நெடிய பொன்மலையையொத்த ஸ்ரீராமமூர்த்தியேவிய புகர்முகமுள்ளபாணமாகிய அச்சண்டமாருதமானது வீசிமோதினவளவில் கல்மழைபெய்வதற்காக இடித்துக்கடையுகத்தி லெழுந்தமேகமானது மின்னலுடனும் இடியுடனும் வீழ்வதுபோல் வீழ்ந்தாள்—எ-று. (௭௩)

பொடியுடைக்கானமெங்குங்குருதிநீர்பொங்கவீழ்ந்த ... *
தடியுடையெயிற்றுப்பேழ்வாய்த்தாடகைதலைகடோறு ... ...*
முடியுடையரக்கற்கந்நாண்முற்றியுற்பாதமாகப் ... ... *
படியிடையற்றுவீழ்ந்தவெற்றியம்பதாகையொத்தாள்... ...*

(இ-பு.) புழுதியையுடைய அந்தவனமெல்லாம்உதிரவெள்ளமானது பொங்கும்படிவிழுந்த- மாமிசம்பொருந்திய பற்களையுடைய தாடகையானவள் தலைகள்தோறு மகுடத்தையுடைய ராவணனுக்கு மரணகாலம்வருவதற்குமுந்தியுற்பதயாகப் பூமியில் அறுந்துவிழுந்த அவனுடைய வெற்றிக்கொடியையொத்தாள்—எ-று. (௭௪)

காய்திரிந்தாழியாகத்தாடகைக்கடினமார்பத் ... ... ... *
தூன்றியபகழிவாயூடொழுகியகுருதிவெள்ளம் ... ... ...*
ஆன்றவக்கானமெல்லாமாயினதந்திமாலைத் ... ... ... *
தோன்றியசெக்கர்வானந்தொடக்கற்றுவீழ்ந்ததொத்தே ... *

(இ-பு.) வனமென்னுந் தோற்றமாறிச் சமுத்திரம்போலாகும்படி தாடகையினுடைய உறுதியுள்ளமார்பினிடத்தில் ஊன்றிய பாணத்தின் வழியே

புறப்பட்டு ஒழுகிய உதிரப்பெருக்கானது அந்தியாகிய மாலைப்பொழுதில் தோன்றிய செவ்வானமானது பற்றத்தறப்பூமியில்வீழ்ந்ததுபோன்றுவிசாலமாகிய பெரியபூமியெங்குமாயிற்று—எ-று. (எ௫)

வாசநாண்மலரோனன்னமாமுனிபணிமறுத்த... ... ... *
காசலாங்கணகப்பைம்பூட்காகுத்தன்கன்னிப்போரிற்... ... *
கூசிவாளரக்கர்தங்கள்குலத்துயிர்குடிக்கவஞ்சி ... ... ..*
ஆசையாலுழலுங்கூற்றுஞ்சுவைசிறிதறிந்ததன்றே ... ... *

(இ-பு.) வாசனைதங்கிய புதிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கும் பிரமதேவனையொத்த பெருமைபொருந்திய விசுவாமித்திர முனிவருடைய கட்டளையைமறுக்காதமணிகள்பதிக்கப்பட்டுப்பொன்னாலியன்ற ஆபரணங்களணிந்துள்ள ஸ்ரீராமமூர்த்தியின் முதற்போரில் வாளரக்கர் குலத்தாருயிரை யுண்ணக்கூசிப் பயந்திருந்த எமனும் கொஞ்சம் ருசியறிந்தான்—எ-று. (எ௬)

காகுத்தன்குலத்தில்வந்த ஸ்ரீராமனென்க-கன்னி இளமை.

யாமுமெம்மிருக்கைபெற்றேமுனக்கிடையூறுமில்லை ... ...*
கோமகற்கினியதெய்வப்படைக்கலங்கொடுத்தியென்று ... *
மாமுனிக்குரைத்துப்பின்னர்விற்கொண்டமழையனான்மேற். *
பூமழைபொழிந்துவாழ்த்திவிண்ணவர்போயினாரே ... . *

(இ-பு.) தேவர்கள் விசுவாமித்திரரைநோக்கி முனிவனே நாங்களும் எங்களிருப்பிடம்பெற்றோம் இனியுனக்கு இடையூறில்லை இந்தராசகுமாரனுக்கு இனியதேவதாஸ்திரங்கள்கொடுவென்று அம்முனிவருக்குச்சொல்லியபின்பு வில்பொருந்தியமேகமொத்தஸ்ரீராமமூர்த்தியின்மேல் புஷ்பவருஷம்வருஷித்துவாழ்த்தித்தங்களிடத்துக்குப்போய்விட்டார்கள்—எ-று. (எஎ)

௮-வது- தாடகைப்படலம்-முற்றிற்று.

---

ஆக. திருவிருத்தம் - [illegible].



ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.



## ௭-வது - வேள்விப்படலம்.



விண்ணவர்போயபின்னர்விரிந்தபூமழையினாலே... ... ... *
தண்ணெனுமக்கானநீங்கித்தாங்கருந்தவத்தின்மிக்கோன்... ...*
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தனசடையன்வெண்ணெய்.*
அண்ணறன்சொல்லேயன்னபடைக்கலமருளினானே ... ...*

(இ-ள்.) தேவர்கள்போனபின்பு அவ்விடமெங்கும்பரந்தபூமழையினாலே குளிர்ச்சியுடையதென்கிற அவ்வனம்விட்டுநீங்கிப் பிறர்தாங்குதற்கரியதவத்தினாலே மேலாகிய விசுவாமித்திர முனிவரானவர் இவ்வுலகத்தி லிருப்பவர்களுடைய வறுமையாகிய பிணிக்கு ஔஷதம்போன்றதிருவெண்ணெய்நல்லூரி லிருக்கும்பெருமையிற்சிறந்த சடையப்பமுதலியார்வாக்குப்போல் வறாமைக்குத் தவறுதலில்லாத படைக்கலங்களை ஸ்ரீராமமூர்த்திக்குக்கொடுத்தார்-எ-று.(௧)

ஆறியவறிஞன்கூறியளித்தலுமண்ணறன்பால் .. ... ... *
ஊறியவுவகையோடும்பர்தம்படைகளெல்லாந் .. ... ...*
தேறியமனத்தான்செய்தநல்வினைப்பயன்களெல்லா ... ... *
மாறியபிறப்பிற்றேடிவருவபோல்வந்தவன்றே ... ... *

(இ-ள்.) சாந்தமுள்ளவிசுவாமித்திரமுனிவர் உபதேசஞ்சொல்லிக்கொடுத்தவளவில மிகுந்த சந்தோஷத்துடன் தேவாஸ்திரங்களெல்லாம்தேறியமனமுள்ள ஒருவன் முற்பிறப்பிற்செய்த நல்வினைப்பயன்களெல்லாம் மறுபிறப்பில அவனைத்தொடர வருதல்போல ஸ்ரீராமமூர்த்தியினிடத்தில்வந்தன()

மேவினம்பிரிதலாற்றேம்வீரநீவிதியினெம்மை... ... ...*
ஏவினசெய்துநிற்றுமிளையவன்போலவென்று... ... ... *
தேவர்தம்படைகள்செப்பச்செவ்வியோன்றகைவுநேரப்... ...*
பூவைபோனிறத்தினாற்குப்புறத்தொழில்புரிந்தவன்றே... ...*

(இ-ள்.) அவ்வாறுவந்த தேவாஸ்திரங்கள் ஸ்ரீராமனைநோக்கி நாங்களுன்னிடத்தில்வந்தோமினியுன்னை விட்டுப்பிரியோம் வீரனே முறைமைப்படி நீயேவிய தொழில்களை இலக்குமணன்போலச் செய்துகொண்டிருக்கிறோமென்று சொல்ல, அதைக்கேட்ட ஸ்ரீராமமூர்த்தியும் இது செவ்விதானதேயென்று சம்மதிக்க அன்றுமுதல் அப்படைகள் காசாம்பூப்போலநிறமுள்ள ஸ்ரீராமமூர்த்திக்குப் புறத்தொழில் செய்துகொண்டிருந்தன—எ-று.

இனையனநிகழ்ந்தபின்னர்க்காவதமிரண்டுசென்றார் ... ... *
அனையவர்காணவாண்டோர்சரவம்வந்ததுதித்தோன்ற... ... *

முனைவனீதியாவதென்றுமுன்னவன்வினவப்பின்னர் ... ...*
வினையறத்தோற்றுநின்றமேலவன்விளம்பலுற்றான்... ... *

(இ-பு.) இத்தன்மையான காரியங்கள் நடந்தபின்பு அவ்விடம்விட்டு இரண்டுகாதவழிதூரஞ்சென்றார்கள்- அவ்வாறு செல்லும்போது அவர்களுக்குத்தெரியும்படி அக்குருகுலைச சமீபமாகவந்துதோன்ற ஸ்ரீராமமூர்த்தியானவர் முனிசிரேஷ்டரே இவ்வொலி யாதோவென்றுவினவ, நல்வினைதீவினைகளெல்லாம் ஒழியும்படி தவஞ்செய்திருப்பவராகிய விசுவாமித்திர முனிவர்சொல்லுகின்றார்—எ-று. (௪)

மானசமடுவிற்றோன்றிவருதலாற்சாயுவென்றே... ... ...*
மேன்முறையமரர்போற்றும்விழுநதியதனிறேடும் ... *
ஆனகோமதிவந்தெய்துமரவமதென்னவப்பாற் ... ... *
போனபின்பவங்கடீர்க்கும்புனிதமாநதியையுற்றார் ... ...*

(இ-பு.) மாநசதடாகத்தி லுற்பத்தியாகி வருதலால் சாயுவென்று மேம்பட்ட முறைமையினையுடைய தேவர்களெல்லாம் போற்றும் நன்மைபொருந்திய நதியுடன் முன்சொன்னகாரணத்தால் உண்டாகிய கோமதியென்னும் நதிவந்துசேர்தலா லுண்டாகுமோசை (இங்குக்கேட்கின்றவோசை) யென்றுசொல்ல, அவ்விடங்கடந்துபோனபின் தன்னிடத்தில் ஸ்நானஞ்செய்கின்றவர்களுடைய பிறவியை நீக்கத்தக்க பரிசுத்தமுள்ளபெருமையினையுடைய அந்தநதியைக் கண்டார்கள்—எ-று. (௫)

விழுமம்-எனற்பாலது விழும் என விகாரமாயிற்று.

சார்தொழுதிறைஞ்சக்கொத்ததுநதியாவதென்று ... ... *
வரமுனிதன்னையண்ணல்வினவுறமலருள்வைகும்... .... *
பிரமனன்றளித்தவென்றிப்பெருந்தகைக்குசனென்றோதும் ..*
அரசர்கோன்மனைவிதன்பாலளித்தவர்நால்வராகும்... ... ...*

(இ-பு.) இவ்வாறு அந்நதியினருகுசென்றவுடன் ஸ்ரீராமமூர்த்தியானவர் தேவர்களும் நமஸ்கரித்து வணங்குதற்குத்தக்க பரிசுத்தமுள்ள இந்நதிக்குள்ள காரணம்யாதென்று விசுவாமித்திரமுனிவரைவினவ தாமரைமலரினிடத்துவீற்றிருக்கும் பிரமதேவன் முற்காலத்திலீன்ற வெற்றியினையும் பெருந்தகைமைப்பாட்டினையுமுடைய குசனென்று சொல்லப்படுகின்றராசன் மனைவியினிடமாகப்பெற்ற புத்திரர்கள் நால்வராகும்—எ-று. (௬)

குசன்குசநாபன்கோதில்குணத்தினாதூர்த்தன்கொற்றத்... ...*
திசைகெழுவசுவென்றோதுமிவர்பெயரிவர்கடம்மிற் .. ... *
குசன்கவுசாம்பிநாயன்கொள்மகோதயமாதூர்த்தன் .. ... *
வசந்தமாரணியமற்றைவசுகிரிவிரசம்வாழ்ந்தார் ... ... *

(இ-பு.) குசன்-குசநாபன்-குற்றமில்லாதகுணத்தையுடைய ஆதூர்த்தன்-வெற்றியினால் புகழ்பெற்ற-வசு என்றுசொல்லப்பட்ட பெயர்களுள்ள இவர்களுக்குள் கவுசாம்பியென்னும்நகரத்தில் குசனும், மகோதயமென்னு நக

ரத்தில் குசநாபனும், வசந்தமுனியமென்னும் நகரத்தில் ஆதூர்த்தனும், கிரிவிரசமென்னும் நகரத்தில் வசு என்பவனுமிருந்து வாழ்ந்தார்கள்-எ-று. ()

அவர்களிற்குசநாபற்கையையிருபதின்மரஞ்சொற் ... ... *
றுவரிசமைந்தெரிவைநல்லார்தோன்றினர்வளருநாளில் ... ... *
இவர்பொழிற்றலைக்கணுபத்தெய்துழிவாயுவெய்தி ... ...*
கவர்மனத்தினனாயந்தக்கன்னியர்தம்மைநோக்கி ... ... ...*

(இ-பு.) அவர்களுக்குள் குசநாபனென்பவனுக்கு அழகியசொல்லையும் பவளம்போன்ற அதரத்தையுமுடைய நூறுபுத்திரிகள்பிறந்து வளருநாளில் ஒருநாள் உயர்ந்தவொருசோலையில் தோழியருடன்சென்றுவிளையாடிக்கொண்டிருக்கும்போது அவ்விடத்தில் வாயுதேவன்வந்து அவர்களை அபகரித்துக்கொள்ளவேண்டுமென்னுமனமுள்ளவனாய் அந்தக்கன்னியர்களைப்பார்த்து

கொடித்தனிமகரங்கொண்டான்குனிசிலைச்சரத்தாலுநொந்தேன்.*
வடித்தடங்கண்ணீரென்னைமணத்திரென்றுரைப்பவெந்தை... *
அடித்தலத்துரைத்துநீரோடளித்திடினணைதுமென்ன ... *
ஒடித்தனன்வெகுளிநைவீழ்ந்தாரொளிவளைமகளிரெல்லாம் ...*

(இ-பு.) ஒப்பற்ற மீன்கொடிபெற்றுள்ள மன்மதன்கருப்புவில்லை வளைத்து எவும் பஞ்சபாணங்களால் வருந்தினேன் - மாம்பிஞ்சின் பிளப்பினையொத்த கண்களையுடைய கன்னியர்களே யென்னைப்புணருங்களென்ன அவர்கள் எங்கள் பிதாவினுடைய திருவடியில் விண்ணப்பஞ்செய்துகொண்டு அவர் நீருடன்கன்னிகாதானஞ் செய்துகொடுத்தால் சேருகிறோமென்ன அந்தவார்த்தையைக்கேட்ட வாயுதேவன் கோபங்கொண்டு அவர்கள் முதுகை யொடித்தான் ஒடித்தவளவில் ஒளியுள்ள மணிவளையல் பூணப்பட்டிருக்கும் கைகளையுடைய அக்கன்னியர்களெல்லாரும் முதுகொடிந்து வீழ்ந்தார்கள்—எ-று. (௯)

சமீரணனகன்றபின்வார்த்தையலார்தவழ்ந்துசென்றே ... *
அமிர்துகுகுதலைமாழ்கியரசன்மாட்டுரைப்பவன்று ... ... *
னிமிர்குழன்மடவார்த்தேற்றிநிறைதவன்சூளிநல்குந் ... ... *
திமிரறுபிரமதத்தற்களித்தனன்றிருவனாரை... ... ... ...*

(இ-பு.) இவ்வாறுசெய்த வாயுதேவன் போய்விட்டபின் அந்தக்கன்னியர்கள் தவழ்ந்துசென்று குசநாபனென்னும் அரசனிடத்திற்சொல்ல, அவ்வரசன்-வளர்ந்த அளகத்தையுடையதன்பெண்களைத்தேற்றித் திருமகளையொத்த அந்தக்கன்னியரை நிறைந்ததவமுள்ள சூளியென்னுமுனிவர்பெற்ற ஆணவ இருள்நீங்கியபிரமதத்தனென்னுமுனிவருக்குக்கொடுத்தான்—எ-று. (௰)

சமிரணன்-விகாரம்-திமிரம்-எனற்பாலது-திமிரெனநின்றது.

அவன்மலர்க்கைக்கடண்டக்கூனிமிர்ந்தழகுவாய்த்தார்... ...*
புவனமூற்றுடையகோவும்புதல்வரில்லாமைவேள்வி ... .. *
தவர்களிற்புரிதலோடுந்தனைவறத்தழவிருப்பன் ... ... ... *
கவனவேகத்துரங்கக்காதிவந்துதயஞ்செய்தான். ... ... *

(இ-பு) அந்தப்பிரமதத்தமுனிவர் தாமரைமலர்போன்றகைகளாற்றீண்டியவளவில் அந்தக்கன்னியர்கள் கூனிமிர்ந்து அழகுபொருந்தினார்களிவ்வுலகமுழுவதையுந்தன்னதாகவுடைய குசநாபனென்னும் அரசன்புத்திரப்பேறில்லாமையால் முனிவர்களைக்கொண்டு புத்திரகாமேஷ்டி செய்தவளவிற் பெருமைபொருந்திய அவ்வேள்விக்குண்டத்தின்மத்தியிலதிவேகமுள்ள குதிரைப்படையினையுடைய காதியென்பவன்வந்து பிறந்தான்—எ-று. (௰௧)

சவனம்-வேகம்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அன்னவன்றனக்குவேந்தரசொடுமுடியுமீந்து ... ... ...*
பொன்னகரடைந்தபின்னைப்புகன்மகோதயத்தில்வாழு ... *
மன்னவன்காதிக்கியானுங்கவுசிகியென்னுமாது ... ... *
முன்னர்வந்துதிப்பவந்தமுடியுடைவேந்தர்வேந்தன் ... ...*

(இ-பு) குசநாபனென்னும் அரசன் அந்தக்காதியென்பவனுக்கு மகுடஞ்சூட்டித் தன் அரசாட்சியினையுங்கொடுத்துச் சுவர்க்கபதஞ்சேர்ந்தபின்பு மகோதயநகரத்தில் வாழ்கின்ற காதிமகாராசனுக்குக் கவுசிகையென்னும் பெண்முன்னும் பின்பு நானும்வந்து பிறந்தோம்—எ-று. (௰௨)

பிருகுவின்மதலையாயபெருந்தகைப்பிதாவுமொவ்வா ... ...*
இரிசிகன்றனக்குமாதையீந்தனனவருமந்த ... ... ... *
அருமறையவனுஞ்சின்னாளறம்பொருளின்பமுற்றி... ... *
விரிமலர்த்தவிசோன்றன்பால்விழுத்தவம்புரிந்துமீண்டான் .*

(இ-பு.) நாங்கள்பிறந்து வளருநாளில் எங்கள்பிதாவாகிய காதிமகாராசன் பிருகுமகாரிஷியின் புத்திரராகிய பெருந்தகைமையினையுடைய தன்பிதாவும் ஒப்பாகாரென்னத்தக்க தவவொழுக்கத்தையுடைய இரிசிகமகாரிஷிக்குக் கவுசிகியைக்கொடுத்தான் அம்முனிவர்சிலநாள் அறம்பொருளின்பமென்னுமொழுக்கத்தில்நின்று பின்பு அதனைவிட்டுத்துறந்து நல்லதவஞ்செய்து பிரமனிடத்திற்சென்றார்—எ-று. (௰௩)

காதலன்சேணினீங்கக்கவுசிகிதரிக்கலாற்றாள் ... ... ... *
மீதுறப்படரலுற்றாள்விழுநதிவடிவமாகி ... ... ... ...*
மாதவர்க்கரசுநோக்கிமாநிலத்துறுகணீக்கப் ... ... ... *
போதுகநதியாயென்றுப்பூமகனுலகுபுக்கான் ... ... *

(இ-பு) தன்கணவன் விண்ணுலகத்திற்செல்லவே கவுசிகியானவள் இவ்வுலகத்திலிருக்க மனம்பொறாதவளாய் மேன்மைபொருந்திய ஒருநதிவடிவங்கொண்டுகணவனுடன்விண்ணிற்செல்லலுற்றாள் அதைக்கண்ட இரிசிகமகாரிஷியானவர்நோக்கிப் பூலோகத்திலிருப்பவர்களதுதுன்பத்தைநீக்கும்பொருட்டு இந்த நதிவடிவமாகவேசெல்லென்றுசொல்லி அம்முனிவர்பிரமதேவனுலகத்தைச்சேர்ந்தார்—எ-று. (௰௪)

எம்முனாணங்கையித்தவிருநதியாயினளென்...... ... ...*
நம்முனிபுலக்கேளாவதிசயமிகவுந்தோன்றச்... ... ... *

ன ஆதிவராகமேயென்றுசொல்லத்தக்கவல்லமையுள்ள மாவலியென்றுசொ ல்லப்படுகின்றவொருதானவன் விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் த ன்வசப்படுத்திக்கொண்டான்—எ-று. (௰௮)

செய்தவர்வானவருஞ்செயலாற்று... ... ... *
நெய்த்தவழ்வேள்வியைமுற்றிடநின்றான் ... ...*
ஐயமிலசிந்தையனந்தணர்தம்பால்... ... ... *
வையமும்யாவும்வழங்கவிசைத்தான் ... ... ...*

(இ-பு.) செவ்விதான தவஞ்செய்துள்ள முனிவர்களும் தேவர்களும் செ ய்தற்கொண்ணுததாய் நெய் சொரியத்தக்க ஒருயாகஞ்செய்து முடிக்கச்சந் தேகமில்லாதமனமுள்ளவனு யெத்தனித்துப்பிராமணர்களுக்குப் பூதானமுத லியதானங்களெல்லாங்கொடுக்க உடன்பட்டான்—எ-று. (௰௯)

ஆயதறிந்தனர்வானவரந்நாண் ... ... ... ...*
மாயனைவந்துவணங்கியிரந்தார்... ... ... ...*
தீயவன்வெந்தொழிறீர்ணெநின்றார் ... ... ...*
நாயகனும்மதுசெய்யநயந்தான் ... ... ...*

(இ-பு.) மாவலியுடன்பட்டிருப்பதைத் தேவர்களறிந்து ஸ்ரீமந்நாராயண மூர்த்தி தவஞ்செய்துகொண்டிருக்கும் அந்நாளிலிங்குவந்து அக்கடவுளை வணங்கி அய்யனே கொடியனுகிய மாவலிசெய்யுந் தீமையைத் தீர்த்தருளு மென்று துதிசெய்துநின்றார்கள் யாவர்க்குமுதல்வனுகிய திருமாலும் அது செய்யத் திருவுளத்தில் விருப்பமுற்றார்—எ-று. (உ௰)

காலறுணித்துணைர்காசிபனென்னும் ... ... ...*
வாலறிவற்கதிதிக்கொருமகவாய் ... ... ..*
நீலநிறத்துநெடுந்தகைவந்தோர் ... ... ...*
ஆலமர்வித்தினருங்குறளானுன் ... ... ... *

(இ-பு.) அவ்வாறு விருப்பமுற்ற நீலநிறமுள்ள ஸ்ரீமந்நாராயணமூர்த்தி யானவர் மூக்காலங்களையுங் கூர்ந்தறியத்தக்க காசிபனென்கிற பரிசுத்தமான ஞானமுள்ளமுனிவருக்கும் அவர்பத்தினியாகிய அதிதியென்பவளுக்கும் ஒ ப்பற்ற புத்திரனுகிவந்து ஆலமரமடக்கிய வித்தையைப்போல அரிய வாமன ரூபமானுர்—எ-று. (உக)

மூப்புரிநூலினன்முஞ்சியன்விஞ்சை... ... ...*
கற்பதொர்நாவனனற்பவித்ரையன் ... ... ...*
அற்புதனற்புதரேயதியுந்தன்... ... .... ... *
சிற்பதமொப்பதொர்மெய்க்கொடுசென்றுன் ...*

(இ-பு.) மூன்றுபுரியாயிருக்கிற பூணூல்தரித்திருப்பவரும் முஞ்சிப்பு ல்லினாலரைஞாணிடத்தில் தரித்திருப்பவரும் வேதமோதுகின்றநாவையுடை யவரும் பவித்ரந்தரித்த கையையுடையவரும் அற்புதமானவருமா

இயவர்ஞானவான்கள் அறியும்படியான தன்னுடைய ஞானபதத்தைபொருந்தினதாகிய திருவுருவங்கொண்டுசென்றார்—எ-று. (௨௨)

அன்றவன்வந்ததறிந்துலகெல்லாம்... ... ... *
வென்றவன்முந்துவியந்தெதிர்கொண்டான்... ... *
நின்றனினந்தணரில்லைநிறைந்தோய்... ... ...*
என்றனினுய்ந்தவரியாரினியென்றான் ... ... *

(இ-பு) அந்நாளில் அந்தவாமனமூர்த்திவந்ததைத்திரிலோகங்களையும்வென்றவனாகிய மாவலியானவன் அறிந்து சந்தோஷித்து அவர்வருவதற்குமுன் எதிர்கொண்டுவணங்கித் தவம்நிறைந்தவரே யும்மைப்பார்க்கிலும்உயர்ந்தபிராமணர்களில்லை இத்தன்மையுள்ளதேவரீரைத்தரிசிக்கப்பெற்றேனாகையால் என்போலுயர்ந்தவர்களினி யாரிருக்கின்றார்களென்றான்—எ-று. (௨௩)

ஆண்டகையவ்வகைகூறவறிந்தோன்... ... ...*
வேண்டினர்வேட்கையின்மேற்படவீசி... ... *
நீண்டகையாயினிநின்னுழைவந்தோர்... ... ...*
மாண்டவரல்லவர்மாண்பிலரென்றான் ... ... *

(இ-பு.) மாவலியவ்வாறு சொல்லியவளவில் வாமன மூர்த்தியானவர் விரும்பிவந்தவர்கள் ஆசையினு மதிகமாகக்கொடுத்துப் புகழால் நீண்ட கையையுடையவனே யினிமேலும் உன்னிடத்தில்வந்தவர்களே மாட்சிமையடைந்தவர்களாவார்கள் வராதவர்கள்மாட்சிமையில்லாதவர்களென்றார்-எ-று. (௨௪)

சிந்தையுவந்தெதிரென்செய்கவென்றான்... ... *
அந்தணன்மூவடிமண்ணருளுண்டேல்... ... *
வெந்திறலாயதுவேண்டுமெனாமுன்... ... ...*
தந்தனனென்றனன்வெள்ளிதடுத்தான்... ... ..*

(இ-பு) வாமனமூர்த்தியானவரிவ்வாறுசொல்ல மாவலிமனமகிழ்ந்து எதிருத்தரவு நான்செய்யவேண்டியதென்னவென்றான் பிராமணனாகிய வாமனமூர்த்தியானவர் என்காலடியால் மூன்றடி நிலம்கொடுக்கிறதாயிருந்தால்அது வேநமக்கு வேண்டுமென்றுசொல்வதற்குமுன் மாவலியவ்வாறே கொடுத்தேனென்றான்-அதைக்கேட்டுக்கொண்டிருந்த சுக்கிரனானவன் மாவலியையேநோக்கிக்கொடாதேயென்றுதடுத்தான்—எ-று (௨௫)

கண்டதிறத்திதுகைதவமைய...... ... ... *
கொண்டனிறக்குறளென்பதுகொள்ளேல்... ...*
அண்டமுமுற்றுமகண்டமுமேனாள் ... ... *
உண்டவனாமுணர்ந்துகொளென்றான்... .... *

(இ-பு.) இறைவனே கண்டதன்மையுடைய இதுவஞ்சனை மேனிறமுன்னே வாமனனென்றெண்ணாதே அண்டங்களையு மற்று எல்லா உலகங்களையுமுன்னுண்ட ஸ்ரீமந்நாராயணமூர்த்தியென்று அறிந்துகொள்வாயாக எ-று

நீக்கிலையென்கைநிமிர்ந்திடவந்து... ... ...*
தனக்கியலாவனதாழ்வதுதாழ்வில் ... ... ...*
கனக்கரியானதுகைத்தலமென்னின் ... ... ...*
எனக்கிதன்மேனலமியாதுகொலென்றான்... ... *

(இ-ம்.) சுக்கிரன்சொன்னவார்த்தையை மாவலிகேட்டு ஐயா என்கைமேலாகும்வண்ணம் தம்முடையதகுதிக்கு ஏற்காதவகையையேற்கொண்டுமேகம்போலக்கருநிறமுள்ள ஸ்ரீ நாராயணமூர்த்தியினுடையகை தாழுமென்றால் எனக்கு இதனின்மேலாய நன்மையென்னிருக்கின்றது நீயிதனை நீக்கினிலையேயென்றான் —எ-று. (உஎ)

துன்னினர் துன்னலரென்பதுசொல்லார்... ... .. *
முன்னியநன்னெறிநூலவர்முன்னைத் .. ... . *
தன்னியதானமுயர்ந்தவர்கொள்க ... ... ... *
என்னினிவன்றனையொருவருயர்ந்தார் ... ... ... *

(இ-ம்.) நன்மார்க்கத்தைக்கருதியபெரியோர்கள் தங்களிடத்தில்வந்து கருதியதானங்களையயர்ந்தவர்கள் கொள்ளக்கடவர்களென்று கொடுப்பார்களேயல்லது தானங்கொள்ளவந்தவர்களை நோக்கி இவர்கள் சிநேகரென்றும் இவர்கள் பகைவர்களென்றும் சொல்லித் தடுத்துவிடார்களென்று சொல்லுவர்களாதலால் இவருக்கொப்பாக மற்றயாவர் உயர்ந்தவர்கள் —எ-று. (உஅ)

வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்... ... ...*
வள்ளியராகவழங்குவதல்லால் ... ... ... ... ... *
எள்ளுவவென்சிலவின்னுயிரேனும் ... ... ...*
கொள்ளுதரீந்துகொடுப்பதுநன்றால் ... ... .. *

(இ-ம்.) குருவேநீ வெள்ளியென்னும் பெயருடையையாதலால் இவ்வாறு எளியவார்த்தையைச்சொல்லினை மேலோர்கள் வள்ளியராகும்பொருட்டு இரப்பவர்களுக்குக் கொடுப்பதேயல்லாமல் சிலவற்றையிகழ்ந்து செய்வதென்ன ஒருவன் தன் இனிய உயிரினையேயாயினுமிரந்து பெற்றுக்கொள்ளுதற்கு நினைத்து அவ்வாறன்றித் தன்னுயிரையாயினுங்கேட்டால் கொடுப்பதே நன்று

மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா .. ... ... *
ஏந்தியகைகொடிரந்தவரந்தோய் .. ... ... ...*
வீந்தவரென்பவர்வீந்தவரேனும் ...... ... ... *
ஈந்தவரல்லதிருந்தவர்யாரே ... .... ... ... *

(இ-ம்) உலகத்திலிறந்தவர்களென்றுசொல்லப்படுகின்றவர்கள் இறந்தவர்களல்லர் ஐயனே மற்றயாவரென்னின் இறவாமலிருந்து கையேந்திக்கொண்டு இரப்பவர்களே யிறந்தவர்களென்று சொல்லப்படுகின்றவர்கள் இறந்தவர்களேயாயினும் இரந்தவர்களுக்குக்கொடுத்தவர்களல்லதிருப்பவர்கள்யார் யாருமில்லை —எ-று. (௩௰)

கையேந்திக்கொண்டு ஒருவனிடத்திற்சென்று இரப்பவர்கள் உயிரோடிருப்பவர்களேயாயினும் அவர்கள் இறந்தவர்களே இரப்பவர்களுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தவர்கள்

இறந்துவிட்டாலும் அவர்கள்புகழுடம்பு பெற்றவர்களாதலால் எந்நாளுமிருப்பவர்களேயென்பதுதாற்பரியம்.

ஒன்றுபுலகத்துயர்ந்தபுகழல்லால்,பொன்றுதுநிற்பதொன்றில், வசையொழியவாழ்வாரே வாழ்வாரிசையொழிய,வாழ்வாரேவாழாதவர் என்னுந் திருக்குறள்களாலுமுணர்க.

அடுப்பவரும்பழிசெய்குநருமல்லர் ... ... ...*
கொடுப்பவர்முன்புகொட்டலைநின்று... ... ..*
தடுப்பவரேபகைதம்மையுமன்னர் ... ... *
கெடுப்பவரன்னதோர்கேடிலையென்றான் .. ...*

(இ-ள்.) அடுக்கும்படி பரியபழியை யொருவனுக்குச் செய்கின்றவர்களும் அவனுக்குப்பகையாளிகளல்லர் இரப்பவர்களுக்குக்கொடுப்பவர்களை அதினின்று கொடுக்கவேண்டாவென்று தடுப்பவர்களே பகைவர்கள் - அவர்கள் தங்களையுங்கெடுத்துக்கொள்கிறவர்களாம் அதற்கொப்பாகியகேடுவேறில்லையென்றான் — எ-று. (௯௧)

ஒருவருக்கொருவர் கொடுப்பதைத் தடுப்பவர்கள் பாவத்தை அடைவார்கள் ஆதலால் - தம்மையுமன்னர்கெடுப்பவரென்றார்.

கட்டுரையிற்றமகைத்துளபோதே... ... ... ...*
இட்டிசைகொண்டறனெய்தருமயன்றோர் ... ... *
உட்டெறுவெம்பகையாவதுலோபம்... ... ...*
விட்டிடலென்றுவிலக்கினர்தாமே... ... ... ...*

(இ-ள்) வேதவாக்கியத்தின்படி தங்கள் பொருளுள்ளபோதே யிரப்பவர்களுக்குக்கொடுத்துப் புகழ்கொண்டு தருமம்பொருந்த மயனுமின்றவர்களின் உள்ளத்தைக்கெடுக்கும்பகையாவது உலோபகுணம் ஆதலாலதைக்குணமனைத்து விட்டுவிடத்தக்கதென்று விலக்கினார்கள் — எ-று. (௯௨)

வேறு.

எடுத்தொருவருக்கொருவரீவதனின்முன்னே ... *
தடுப்பதுநினைக்கிதழகோதகைவில்வெள்ளி... ...*
கொடுப்பதுவிலக்குகொடியோயுனதுசுற்றம் ... *
உடுப்பதுவுமுண்பதுவுமின்றிவிடுகின்றாய்.... ...*

(இ-ள்.) ஒருவருக்கொருவர் எடுத்துக்கொடுப்பதன் முன்னே தடுப்பது உனக்கழகோ தகுதியில்லாதவெள்ளியே கொடுப்பதை விலக்குகின்ற கொடியவனே உன்னுடையசுற்றத்தாரும்நீயும் உடுக்கப்படும்பொருளும் உண்ணப்படும்பொருளும் இல்லாது விடுகின்றாய் — எ-று. (௯௩)

கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ,முண்பதூஉமின்றிக்கெடும், என்னுந் திருக்குறளானுமுணர்க.

வேறு.

மூடியவிம்மொழியெலாமொழிந்துமந்திரி ... ...*
கொடியனென்றுரைத்தசொல்லொன்றுங்கொண்டிலன்
அடிபொருமுன்றுநீயளந்துகொள்ளென... ... *
நெடியவன்குறியகைநீரினீட்டினான்... ... ...*

(இ-ள்) மாவலியானவன் இந்தச்சொற்கள்முழுவதுஞ்சொல்லிச் சுக்கிரன் கொடியவனென்று அவன்சொற்களொன்றும் மேற்றுக்கொள்ளாமல் உம்முடைய காலளவையால் மூன்றடிநிலம் அளந்துகொள்ளுமென்று வாமனமூர்த்தியின்குறியகையில் நீரொடுகொடுத்தான்—எ-று. (௫௪)

கயந்தருநறும்புனல்கையிற்றீண்டலும் ... ... *
பயந்தவர்களுமிகழ்குறளன்பார்த்தெதிர் ... *
வியந்தவர்வெருக்கொளவிசும்பினோங்கினான் ... ... *
உயர்ந்தவர்க்குதவியவுதவியொப்பவே ... ... *

(இ-ள்) வாவியிலுண்டாகிய புனலானது தம்முடைக்கையிற்றீண்டினவளவில் ஈன்றவர்களும்பழிக்கத்தக்கவாமனமூர்த்தியானவர்முன் தம்மைப்பார்த்தெதிரில் அதிசயித்தவர்களும் அச்சங்கொள்ளும்படி பெரியோர்களுக்குதவிய உதவிபோல ஆகாயமளவும் வளர்ந்தோங்கினார்—எ-று. (௫௫)

நின்றகான்மண்ணெலாநிரப்பிப்புறஞ் ... ... *
சென்றுபாவிற்றிலைசிறிதுபாரெனு ... ... ... *
ஒன்றுவானகமெலாமொடுக்கியும்பரை ... ... *
வென்றகான்மீண்டதுவெளிபெறாமையே ... ... *

(இ-ள்) பூமியில்நின்ற திருவடியானது பூமிமுழுவதும்பார்த்து பூமிசிறியதென்று அப்புறஞ்சென்றுபார்த்ததில்லை வானத்திற்சென்ற மற்றொருதிருவடியானது பொருந்திய அவ்வானத்தையெல்லாம் தனக்குள்ளடக்கிக்கொண்டு விண்ணுலகைவென்று மேலேசெல்லுவதற்கு வெளியில்லாமையால் திரும்பிவிட்டது—எ-று. (௫௬)

உலகெலாமுள்ளடியடக்கிப்போரடிக் ... ... ... *
அலகிலாதவ்வடிக்கன்பன்மெய்பதாம் ... ... ... *
இலகுலாந்துழாய்முடியேகநாயகன் ... ... .. *
கிலகுலாத்தோளினுச்சிறியன்சாலவே ... ... ... *

(இ-ள்) கோதண்டத்துடன் விளங்கிக்கொண்டிருக்கும் புசங்களையுடைய ஸ்ரீராமனே யிலைகள்பொருந்திய துளசிமாலையைச்சூடியதிருமுடியையுடையதொப்பற்ற ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் பூமியெங்கும்பரவலைந்த திருவடியால் உயிர்களுக்குப் பழுதுநேரிடாவண்ணம் அவ்வுயிர்களையெல்லாம் உள்ளடியிலடக்கிக்கொண்டு மற்றொருதிருவடிக்கு அளவில்லாமையால் அன்புள்ளவனாகிய மாவலியின்சிரமே யவ்வடிக்களவாயிருந்து - அக்கடவுளோமிகுதியுஞ்சிறியன்—எ-று. (௫௭)

தாங்கேட்ட மூன்றடியி லிரண்டடிக்கிருந்தது மற்றோரடிக்களவில்லையே யென்ன அய்யனே யவ்வடிக்களவு அடியேன் முடிதானென்ன அம்முடியில் பாதத்தைவைத்து அவனைப்பாதாளலோகத்திலிருக்கும்படியழுத்திவிட்டாரென்பதுநிகழ்ந்தசரிதம்.

உரியதிற்றிறத்தென்றுலகமீந்துபோய் ... ... *
விரிதிரைப்பாற்கடற்பள்ளிமேவினான் ... ... ... *

கரியவனுலகெலாங்கடந்ததாளிணை... ... ... ...*
திருமகள்கரந்தொடச்சிவந்துகாட்டவே... ... *

(இ-பு.) தேவேந்திரனுக்குரியதென்று இவ்வுலகத்தைக்கொடுத்தருளிவிட்டுப்போய் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் உலகங்களையெல்லாங்கடந்ததம்முடைய இரண்டு திருவடிகளையும் பெரியபிராட்டியார் கருமைதிருக்கைகளால்சிவந்துகாட்டும்படி பரந்த அலைகளையுடைய திருப்பாற்கடலிலமர்ந்து யிலமர்ந்தருளினார்—எ-று. (௩௮)

ஆதலாலருவினையறுக்குமாரிய... ... ... ...*
காதலாற்கண்டவர்பிறவிகாண்குறார்... ... ...*
வேதநான்முறைமையால்வேள்விசெய்துற்றுவேற்... *
றிதலாதில்லைவேறிருக்கநீயாலதே ... ... ... *

(இ-பு.) தீர்த்தங்கரியதாகிய வினையையறுக்கும் ஸ்ரீராமனே இச்சோலை இத்தன்மையுடையதாதலால் இதனை யிச்சையுடன்கண்டவர்கள் மறுபடிபிறப்பெண்பதைக்காணார்கள் வேதசாஸ்திரமுறைமைப்படி யாகஞ்செய்கின்ற எனக்கு இருக்கும் பான்மையுடையதாகிய இடம் இதுவேயல்லாமல் வேறில்லையென்றறிவாயாக—எ-று. (௩௯)

என்றிருந்தியற்றுவேள்வியாகமியானெனு... ... *
நீண்டபூட்டமூவத்துநெறியினெய்திட்டபின் ... *
வேண்டுவகொண்டுநன்வேள்விமேவினன்... ... *
காண்டகுகுமரரைக்காவலேவியே... ... ... *

(இ-பு) அவ்வாறுசொல்லிமுனிவர் ஸ்ரீராமனைநோக்கிநானிவ்விடத்திலிருந்து வேள்விசெய்கின்றேனென்றுசொல்லிநீண்டதாகியமலர்முதலியவைகளையுடைய அவ்வனத்துநெறியிலெய்தி யாகத்துக்குவேண்டிய பொருள்களைச்சேகரித்துக்கொண்டுவந்து யாவருங்கண்டுமகிழத்தக்க சௌந்தரியமுள்ள அவ்விரண்டு இராசகுமாரர்களையுங் காவலாகவைத்துத்தான்செய்யும்யாகத்துக்குத்தொடங்கினார்—எ-று. (௪௰)

எண்ணுறுதற்காக்கரிதிரண்டுமூன்றுநாள்... ... *
விண்ணவர்க்காக்கியமுனிவன்வேள்வியை ... ...*
மண்ணினைக்காக்கின்றமன்னன்மைந்தர்கள் ... ...*
கண்ணினைக்காக்கின்றவிமையிற்காத்தனர் ... *

(இ-பு.) அவ்வாறுமுனிவராலேவப்பட்ட தசரதமகாராசன்புத்திரர்கள் நினைப்பதற்குஞ்செய்வதற்குமரிய தேவர்கள்பொருட்டுச்செய்கின்றவிசுவாமித்திரமுனிவருடையயாகத்தை அறுநாளுங்கண்களைக்காக்கும்இமைகள்போலக்காத்தார்கள்—எ-று. (௪௧)

காத்தனர்திரிகின்றகாளைவீரரின்... ... ... *
மூத்தவன்முழுதுணர்முனியைமுன்னி... ... *

(இ-பு.) வில்லும் பாணங்களும் வாளாயுதமும் நெருக்கிப் பிரகாசிக்கவும் பேரிமுதலிய பக்கவாத்தியங்கள் கோஷிக்கவும் வந்த பலசேனையானது ஒல் எனஒலித்தும் ஊழிமுடிவில் விரைவாகவந்தெழுந்த மேகமும்போன்றது

மேகம் மின்னலுடனும்,இடியுடனும்,வருவதுபோல சேனையும்வாள்முதலியபடைகளுடனும் வந்தது என்பது தாற்பரியம்.

கவருடையெயிற்றினர்கடித்தவாயினர் ... ... *
துவர்நிறப்பங்கியர்சுழல்கட்டீயினர் ... ... *
பவர்சடையந்தணன்பணித்ததீயவர் ... ... *
இவரெனவிலக்குவற்கிராமனகாட்டினன் ... ... *

(இ-பு.) பிரிவாகப்பொருந்திய பற்களையுடையவர்களும் உதட்டினைக்கடித்துக்கொண்டிருப்பவர்களும் சிவந்தநிறமுள்ளதலைமயிரினையுடையவர்களும் சுழலுகின்ற கண்களால் தீயைச்சொரியப் பட்டவர்களுமாகிய இவர்கள் நெருங்கிய சடையையுடைய விசுவாமித்திரர்சொல்லிய கொடியவர்களென்றிளையபெருமாளுக்கு ஸ்ரீராமர்காட்டினார்—எ-று. (௬௭)

கண்டவக்குமரனுங்கடைக்கண்டீயுக ... ... *
விண்டனை நோக்கித்தன்வில்லைநோக்கினன் ... ... *
அண்டர்நாயகவினிக்காண்டியீண்டவர் ... ... *
துண்டம்வீழ்வன வெனத்தொழுது சொல்லினான் ... *

(இ-பு.) அரக்கரைக்கண்ட இலக்குமணப்பெருமாள் கடைக்கண்ணில்நின்றும் தீப்பொறிசிதறும்படி ஆகாயத்தைநோக்கித் தன்வில்லையும் பார்த்துத் தேவர்கள்நாதனே யிப்பொழுது இவ்விடத்தில் அவர்கள் துண்டம்விழுவனவற்றைப்பாரென்று வணங்கிச்சொல்லினான்—எ-று. (௬௮)

தூமவேலரக்கர்தநிணமுஞ்சொரியும் ... ... *
ஓமவெங்கனலிடையுகுமென்றுன்னியத் ... ... *
தாமரைக்கண்ணனுஞ்சரங்களொடு ... ... *
கோமுனியிருக்கைசுற்றோர்கூடமாக்கினன் ... ... *

(இ-பு.) புகைகின்ற வேலேந்திய அரக்கர்களுடைய நிணமும் உதிரமும் ஓமாக்கினியில் சிந்துமென்றுகருதித் தாமரைமலர்போன்ற கண்களையுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் அம்புகளால் முனிசிரேஷ்டராகிய விசுவாமித்திரரிருக்குமிடத்தைபொருகூடமாகச்செய்தார்—எ-று. (௬௯)

நஞ்சடவெழுதலுநடுங்கிநான்மதிச் ... ... *
செஞ்சடைக்கடவுளையடையுந்தேவர்போல் ... ... *
வஞ்சனையரக்கரைவெருவிமாதவர் ... ... *
அஞ்சனவண்ணநின்னபயமியாமென்றார் ... ... *

(இ-பு.) ஆலகாலவிஷமானது கொல்லும்படி கடலில் எழுந்தபோது நடுங்கிப்பிறையணிந்த செஞ்சடையையுடைய பரமசிவனையடைக்கலமாகஅ

டைந்த தேவர்கள்போல அவ்வனத்திருக்கு முனிவர்களெல்லாரும் வஞ்சனை செய்கின்ற அரக்கருக்குப்பயந்து நீலநிறமுள்ள ஸ்ரீராமனை நாங்கள் உன்னடைக்கலமென்றார்கள்—எ-று. (௩௰)

கவித்தனன் கரதலங் கலங்கலீ ரெனச் ... ... ... *
செவித்தல நிறுத்தினன் சிலையின் தெய்வநாண் ... ... *
புவித்தலங் குருதியின் புணரியாக்கினன் ... ... *
குவித்தன னரக்கர்தஞ் சிரத்தின் குன்றமே... ... *

(இ-பு.) ஸ்ரீராமமூர்த்தியானவர் அம்முனிவர்களைநோக்கி நீங்கள் மனங்கலங்கவேண்டியதில்லையென்று கையமைத்துக் கோதண்டத்திலேற்றிய தெய்வத்தன்மையுள்ள நாணினை வலித்துத் தன்னுடைய காதளவு நிறுத்தி (அம்புகளைப்பவி) அரக்கர்கள் தலைகளையறுத்து மலைபோற்குவித்துப்பூமியை யுதிரக்கடலாக்கினார்—எ-று. (௩௧)

திருமகணாயகன் றெய்வவாளிதான் ... ... ... *
வெருவரு தாடகை பயந்தவீரர்கள்... ... ... *
இருவரி லொருவனைக் கடலி லிட்டதங் ... ... *
கொருவனை யந்தகபுரத்தி லுய்த்ததே...... ... *

(இ-பு.) இலக்குமிநாயகனாகிய ஸ்ரீராமமூர்த்தியானவர் ஏவிய தேவாஸ்திரமானது யாவரும் அஞ்சும்படியான செய்கையையுடைய தாடகைபெற்ற வீரர்களிருவரில் ஒருவனாகிய மாரீசனென்பவனைக் கடலில்விழச்செய்து மற்றொருவனாகிய சுவாகு என்பவனையமபுரத்திற்செலுத்திவிட்டது—எ-று.

மாரீசன்மேலேவிய அஸ்திரம்- காந்தாருவாஸ்திரம். சுவாகுவின்மேலேவிய அஸ்திரம் ஆக்கிநேயாஸ்திரம். மற்ற அரக்கர்மேலேவிய அஸ்திரம்- வாயுவியாஸ்திரம்.

துணர்த்தபூந் தொடையலான் பகழி தூவினன்... *
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலாற் ... *
பிணத்திடை நடந்திவர் பிடிப்ப ரென்றொரு ... .. *
உணர்த்தின ரொருவர்முன் னொருவ ரோடினார் ... *

(இ-பு) கொத்துவிட்ட பூமாலைசூடிய ஸ்ரீராமன் பாணங்களை யேவினான் அவைகள் கணப்பொழுதில் அரக்கர்களைக்கொன்று ஆகாயத்தை மறைத்து நிறைத்தமையால் இனி இவர்களிப்பிணத்தின்மேல் நடந்துவந்து நம்மைப் பிடித்துக்கொள்ளுவார்களென்று சொல்லிக்கொண்டு ஒருவர்முன் ஒருவராக ஓடினார்கள்—எ-று. (௩௨)

ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை ... ... ... *
கூடின குறைத்தலை குதித்துக் கூத்தினின்... ... *
றாடின வலகையு மையல் கீர்த்தியைப்... ... ... *
பாடின பரந்தன பறவைப் பந்தரே ... ... .. *

(இ-பு) இவ்வாறு ஓடின அரக்கர்களை யிடிபோல வெவ்விய அம்புகள்விடாது தொடர்ந்தன, கவந்தங்கள் குதித்துநின்று கூத்தாடின, பேய்கள் ஸ்ரீராமமூர்த்தியின் புகழினைப்பாடின, கழுகுமுதலிய பக்ஷிகள் பந்தல்போலப் பரந்தன—எ-று. (௩௩)

பத்தனைக்கிழித்தனபாத்தபூமழை ... ... *
அந்தரதுந்துமிமுழங்கினார்த்தன ... ... ... *
இந்திரன்முதலியவமரரீண்டினர் .. ... ... ... *
சுந்தரவில்லியைத்தொழுதுவாழ்த்தியே ... ...*

(இ-பு.) தேவர்களால் பொழியப்பட்டுப் பார்த்த பூமழையானது பறவைப்பந்தலைக்கிழித்தன, தேவதுந்துமி மேகம்போல முழங்கின, தேவேந்திரன்முதலாகிய தேவர்கள் ஆகாயத்தில்நெருங்கி யழகுள்ள ஸ்ரீராமமூர்த்தியை வணங்கிவாழ்த்தினார்கள்—எ-று. (௫௫)

வேறு.

புனிதமாதவராசியின் பூமழைபொழிந்தார் ... ... ... *
அனையகானத்துமரங்களுமலர்மழைசொரிந்த ... ... *
முனியுமவ்வழி வேள்வியைமுறைமையின்முற்றி ... ... *
இனியசிந்தையனிராமனுக்கினையனவிசைத்தான் ,. ... *

(இ-பு.) பவித்திரமுள்ள முனிவர்கள் ஆசீர்வாதமாகிய மழைபொழிந்தார்கள்- அத்தன்மையுள்ள வனத்துவிருக்ஷங்களு மலர்மழைபொழிந்தன, அவ்விடத்தில் விசுவாமித்திரமுனிவரும் யாகத்தை முறைமையாகநிறைவேற்றி இனியசிந்தையையுடையவராய் இராமமூர்த்திக்குஇவ்வித வுபசாரவார்த்தைகள்சொல்லினார்—எ-று. (௫௬)

பாக்கியம்மெனக்குளதெனநினைவுறும்பான்மை ... ... *
போக்கிநிற்கிதுவொருபொருளெனவுணர்கிலன்புவனம் ... ..... *
ஆக்கி மற்றவைபகிலமுமணிவயிற்றடக்கிக் ... ... ... ...*
காக்குநீயொருவேள்விகாத்தனைபெனுங்கருத்தே ... ... *

(இ-பு.) ஸ்ரீராமனே நீ இந்தக்காரியஞ் செய்ததைக் குறித்துமிகத்து எனக்குப்பாக்கியமுள்ளதாயிருக்கின்றதென்று நினைக்கின்றேனேயல்லாமல் அந்நினைவைவிட்டு உலகங்களையுண்டாக்கி யவைகளையெல்லா முன்னழகிய வயிற்றுக்குள்ளடக்கிக் காக்கும்நீயிந்தயாகத்தைக்காத்ததை யுனக்குப்பெரிதாக நினைக்கின்றிலேன்—எ-று. (௫௭)

என்றுகூறியபின்னரவ்வெழின்மலர்க்கானத் ... ... ... *
தன்றுதானுறைந்தருந்தவமுனிவரோடிருந்த ... ... ...*
குன்றுபோற்குணத்தானெதிர்கோசலக்குரிசில் .. ... ... *
இன்றியான்செயும்பணியெவ்கொல்பணியெனவிசைத்தான் ...*

(இ-பு.) இவ்வாறு முனிவர்கூறியபின்பு அழகுள்ளமலர்கள்நிறைந்த அவ்வனத்திலன்றுதங்கி யங்குள்ள அரியமுனிவருடனிருந்து மலைபோன்ற நற்குணங்களுள்ள விசுவாமித்திரமுனிவரைநோக்கி - தசரதமகாராசன் புத்திரராகிய ஸ்ரீராமர்இன்றுநான்செய்யும்பணியென்னவென்றார்-எ-று. (௫௮)

நற்குணங்களாவன- அறவுமெய்யுணர்வு அவாவின்மை முதலியனவாம். சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்றுகவுருவகஞ் செய்தார். குணஞ்சாதியொருமை-இதனைக்குணமென்னுங் குன்றேறிநின்றார் என்னுந் திருக்குறளாலறிக.

அரியபான்சொல்லினையதிற்கரியதொன்றில்லை ... ... ... *
பெரியகாரியமுள்ளவைமுடிப்பதுபின்னர் ... ... ... *
விரியும்வார்புனன்மருதஞ்சூழ்மிதிலையர்கோமான் ... ... *
புரியும்வேள்வியுங்காண்டிரெம்மொடுமென்றுபோனான் ... ... *

(இ-பு.) அருமையான காரியங்களாக நான்சொன்னதும் அப்படியே யுனக்கு அரியதானகாரியமொன்றுமில்லை. ஆனால் பெரியகாரியமிருக்கின்றன, அவைகளைமுடிப்பது பின்பேயன்றிஇப்போதல்லஆதலால்பாய்ந்து நீண்டநீர்வளமுள்ளவயல்சூழ்ந்த மிதிலைநகரிலுள்ளார்க்கரசனாகிய சனகமகாராசனுடைய வேள்வியைக்காணவேண்டும்புறப்படுவீராகவென்று சொல்லிச்சென்றார்.

௯-வது-வேள்விப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௪௨௨.

ஸ்ரீராமஜெயம்.

# பாலகாண்டம்.

## ௰-வது-அகலிகைப்படலம்.

அலம்புமாமணியாரத்தோடகில்கலைபுளின ... ... ... ... *
நலம்பெய்பூண்முலைநாளிளவஞ்சியாமருங்குற் ... ... ... *
புலம்புமேகலைப்புதுமலர்ப்புனையறற்கூந்தற் ... ... ... *
சிலம்புசூழுங்காற்சோணைமாநதிவையைச்சேர்ந்தார் ... ... *

(இ-பு.) அலைகின்ற பெரியமணிகளுடனும், சந்தனத்துடனும், அகில்கட்டைபொருந்திய மணற்குன்றாகிய இன்பத்தைத்தருகின்ற பூண்முலையினையு மிளமைபொருந்திய பூங்கொடியாகிய இடையினையும், புதுமலராகிய ஒலிக்குமேகலாபரணத்தையும், ஒருமணலாகிய அலங்கரிக்குங்கூந்தலையும், சிலம்புசூழுந்தாலையுமுடைய சோணையாறென்னு மாநதியிடத்திற்சேர்ந்தார்கள்

யாற்றினைக்குறிக்குமிடத்துச் சிலம்புசூழுங்காலென்றதனை மலையைச்சூழும் கால் என்றும், மாதனைக்குறிக்குமிடத்துச் சிலம்பாகிய அணிபொருந்திய காலென்றும், பொருள்கொள்க.—தனத்தில் மணிகளுடன் கலவையும் பூசுதல் பற்றியீண்டு மணிக்கலவைதோன்றக்கூறினர்.

நதிக்குவந்தவரெய்த்துமருணன்றனையனைக் ... ... ... ... *
கதிக்குமூர்த்துறுகலினமான்றேரொடுங்கதிரோன் ... ... ... *
உதிக்குங்காலையிற்றன்மைசெய்வான்றனதருவில் .. ... ... *
பொதிக்கும்வெம்மையைப்போற்றுவான்போற்கடல்குளித்தான்... *

(இ-பு.) அவர்கள் அந்நதியைக்கண்டு சந்தோஷித்து அப்புறஞ் செல்லும்போது அருணனென்னும் சாரதியினுடைய நயனகோசரத்துக்கு முன்னதாகச் செல்லுகின்ற குதிரைகட்டியதேருடன் சூரியன் உதயமாகும் காலத்தில் இவர்களுக்குக் குளிர்ச்சிசெய்யத் தன்னுருவத்தில் கொதிக்கும் வெப்பத்தை யாற்றுகின்றவன்போல மேற்கடலில் மூழ்கினான்—எ-று. (௨)

கறங்குதண்புனற்கடிநெடுந்தாளுடைக்கமலத் ... ... *
துறங்கொளுண்மலர்க்கோயில்களிதழ்க்கதவடைப்பப்... ...*
பிறங்குதாமரைவனம்விட்டுப்பெடையொடுகளியன் ... ... *
னுறங்குகின்றதோர்நறுமலர்ச்சோலைபுக்குறைந்தார் ... ...*

(இ-பு.) ஒலிக்கின்ற அலைகளையுடைய நீர்நிறைந்த தடாகத்திலுண்டாகி வாசனைநீடிக கொடிகளையுடையதாய்க் காலத்தில்மலரும் தாமரைப்பூவாகிய நல்லகோயில்களின் இதழாகியகதவுகள் மூடப்பட்டதினால் அத்தாமரைவனத்தைவிட்டுப்பெட்டைவண்டுகளுடன் களிப்புள்ள ஆண்வண்டுகளுறங்குகின்ற சோலையிற்சென்று தங்கினார்கள்—எ-று. (௩)

இனையசோலைமற்றியாதெனவிராகவன்வினவ... ... ... ... *
வினையெலாமறநோற்றவன்விளம்புவான்மேனாட்... ... *
டநயராணவர்சகிரங்கியேகாசிபன்றனது... ... ... ... ... ...*
மனையுளாடவம்புரிந்தனளிவணெனவலித்தான்... ... ... *

(இ-பு.) இந்தச்சோலையெத்தன்மையுள்ளதென்று இராகவமூர்த்தி வினவினவளவில் வினைகளெல்லாமொழியும்படி தவஞ்செய்த விசுவாமித்திரமுனிவர் சொல்லுகின்றார் முன்னாளில புத்திரர்களுக்காகத் துயரங்கொண்டகாசிபரிஷியின் பத்தினியாகிய திதியென்பவள் இவ்விடத்தில் தவஞ்செய்தாளென்று சொல்லினர்—எ-று. (௪)

அண்டகோளகைக்கப்புறத்தென்னையாளுடைய... ... ... *
கொண்டனீள்பதத்தெய்தியோர்விஞ்சைடர்கோதை... ... ...*
புண்டரீகமென்பதத்திலைப்புகழ்ந்தனள்புகழ ... ... ... *
வண்டறுமதுமாலைக்கொடுத்தனண்மகிழ்ந்து .... ... ..*

(இ-பு.) அண்டகோளகைக்கு அப்புறத்திலிராநின்ற என்னை யாட்கொள்ளும் மேகவண்ணக்கடவுளுடைய நீடியவைகுந்தத்தில் ஒருவித்தியாதரஸ்திரியானவள்சென்று செந்தாமரைபோன்ற திருவடிகளையுடைய பெரியபிரட்டியாரைப்புகழ்ந்தனள் அவ்வாறு புகழ்ந்தளவில் அத்திருமகள் வண்டுகள் நீங்காத தேனிறைந்த தன்பூமாலையை அவள்கையில்கொடுத்தாள்—எ-று ([illegible])

அன்னமாலையையாழிடைப்பிணித்தயனுலகங்... ... ... *
கன்னிமீடலுங்கசடறுமுனியெதிர்ந்தாளு... ... ... ... ... *
என்னையாளுடைநாயகிக்கிதையெடுப்பவளென் ... ... *
றன்னடாவினைவனைக்கிதின்றேத்தடியனையாள்... ... ... *

(இ-பு.) அந்தமாலையை வித்தியாதரஸ்திரீயானவள் தன் யாழினிடத்திலே கட்டி மீண்டுவரும்போது முக்குற்றம்நீக்கிய தூர்வாசமுனிவரெதிர்கண்டு என்னையடிமைகொள்ளும் பெரியபிராட்டியாருக்குத்தம்பாடுகின்றவளென்று [illegible] பவனுடைய பாதங்களைவணங்கிநின்று துதிசெய்தவளவில்-எ-று.()

உலகையாவையும்படைத்தளித்துண்டிடுமொருவன் ... ......*
இலகுமார்பகத்திருந்துபிரியாவையுமீன்ற .. ... ... ... *
திலகவாணுதல்சென்னியிற்சூடியதெரியல். ... ... ... *
அலகின்மாதவபெறுகெனவளித்தனளன்பால்... ... ... .....*

(இ-பு) உலகங்களையெல்லாம் படைத்துக்காத்து உண்டிடு[illegible]நின்ற ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் விளங்குகின்ற மார்பினிடத்திருந்து உலகங்களையெல்லாமீன்றருளிய பெரியபிராட்டியார் அளகபாரத்திற்சூடிய மாலையாகிய இதனை அளவில்லாத தவமுடையமுனிவனே நீர்பெற்றுக்கொள்ளுமென்று கிருபையுடன்கொடுத்தாள்.—எ-று. (எ)

திலகவாணுதல் அன்மொழித்தொகை. பதம்பிரிக்குமிடத்து திலகமணிந்த ஒளிபொருந்திய நெற்றியையுடையாளென்றுதல் கண்டுகொள்க.

தெய்வநாயகிசென்னியிற்சூடியதெரியல் ... ... ... ...*
ஐயபான்பெறப்புரிந்ததெத்தவமெனவாடி... ... ..... ...*
வெய்யமாமுனிசென்னியிற்சூடிவேவிலைபோய்...... ... *
உய்புமாறிதென்றுவந்துவந்தும்பர்நாடடைந்தான் ... ... *

(இ-பு.) அம்மாலையைப்பெற்றுக்கொண்ட தூர்வாசமுனிவர் தெய்வநாயகியாகிய பெரியபிராட்டியார் திருமுடியிற்சூடியமாலையை நான்பெற என்ன தவஞ்செய்தேனெனக்கூத்தாடித் தம்முடையசிரசிற்சூடிக்கொண்டு வினைகளெல்லாம்நீங்கி நாம் உய்யுமுறைமையிதென்று சந்தோஷித்துவந்து தேவர்நாட்டிற்சேர்ந்தார்.—எ-று. (அ)

ஐய-என்பது-வியப்பு-தூர்வாசர் தேவருலகிற்சேர்ந்தபோது இந்திரன் பவனிவருகின்ற சிறப்பினை இனி நான்கு செய்யுளாற் கூறுகின்றனர்.

பெய்புயன்முகில்வெள்ளியங்கிரியின்மீப்பிறழும் ... ... ...*
செய்யதாமரையாயிரமலர்ந்துசெங்கதிரோன் ... ... ... *
மொய்கொள்சோதியையிலச்சியமுறைமைபோன்றெழிலுரு...*
மெய்யினோடயிராவதக்களிற்றின்மேல்விளங்க ... ... ... *

(இ-பு.) மழைபெய்யுமேகமானது வெள்ளிமலையின்மேல் பிரகாசியாநின்ற ஆயிரஞ்செந்தாமரை மலர்களையலர்த்துகொண்டும் சூரியனுடைய நெருங்கிய கதிர்களையணிந்துகொண்டும் தோன்றுமுறைமைபோல விளங்குகின்ற உருவத்துடன் அயிராவதமேல்விளங்கவும்—எ-று. (௯)

நீலமேகம் அலர்ந்துகொண்டும், அணிந்துகொண்டும், வெள்ளிமலைமேல் தோன்றுதல்போலெனக்கூட்டுக. இந்திரனுடையநிறத்துக்கு மேகமும், ஆயிரங்கண்களுக்குச் செந்தாமரைமலரும், ஆபரணங்களுக்குச் சூரியகிரணங்களும், வெள்ளையானைக்கு வெள்ளிமலையும் உவமையாகக்கூறினமைகாண்க.

அரம்பைமேநகைதிலோத்தமையுருப்பசியனையர் ... ... *
[illegible] ... ... ... *

(இ-ள்) அரமடந்தையர் கற்பகவிருக்ஷங்களும் நவநிதிகளும் அமிர்தமுங் காமதேனுவும் தாவுகின்றவெள்ளைக்குதிரையும் அயிராவதமும் இவைமுதலியதொடர்ச்சிகளாகியபெரியபொருள்களில் ஒருபொருளுமில்லாமற்சமுத்திரத்தில் புகுந்து ஒளித்தமாத்திரத்தில் தேவர்களெல்லாரும்பயந்து திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்பமுதலியாருடையபகைவர்போல ஓடினார்கள்—எ-று. (௰௮)

வெய்யமாமுனி வெகுளியால்விண்ணகமுதலாம் ... ... *
வையமியாவையும்வறுமைநோய்நலிதரவானோர் ... ...
தையல்பாகனுஞ்சதுமுகக்கடவுளுங்கூடிச் ... ... ...*
செய்யதாமரைத்திருமறுமார்பனைச்சேர்ந்தார் ... ... *

(இ-ள்) கொடியதுர்வாசமுனிவர்சாபத்தால் தேவலோகமுதலாகியஉலகமெல்லாம் வறுமைநோயால் மெலிவதனால் விண்ணவரும் பார்வதிபாகனும் பிரமதேவனுங்கூடிச் செந்தாமரைமலரில் வீற்றிருக்குந் திருவுமறுவும் பொருந்தியமார்பினையுடையநாராயணமூர்த்தியினிடத்தில்அடைந்தார்கள்

வெஞ்சொன்மாமுனி வெகுளியால்விளைந்ததைவிளம்பிக்
கஞ்சநாண்மலர்க்கிழவனுங்கடவுளர்பிறரும் ... ... ...*
தஞ்சமில்லைநின்சரணமேசரணெனச்சலியா ... ... *
அஞ்சலஞ்சலென்றுலகெலாமளந்தோன் ...*

(இ-ள்.) வெவ்விதானசொல்லையுடைய துர்வாசமுனிவர் கோபத்தால் விளைந்தகாரியத்தைச்சொல்லிப்பிரமதேவனும் மற்றதேவர்களும்நாராயணமூர்த்தியைநோக்கி யெங்களுக்கு வேறேஆதரவில்லைதேவரீர்திருவடிகளே அடைக்கலமாகச்சேர்ந்தோமென்று விண்ணப்பஞ்செய்ய, அவர்களைத்தனித்தனியேநோக்கி அஞ்சவேண்டாம் அஞ்சவேண்டாமென்றுஉலகமெல்லாமளந்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தி திருவாய்மலர்ந்தருளினார்-எ-று. (௨௰)

மத்துமந்தரம்வாசுகிகடைகயிறடைதான் ... ... *
மெய்த்துசந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ள ... ... *
கொத்திரண்டுபால்வலிப்பவரோடதிகொடுத்து... ... *
கத்துவாரிதிமறுகுறவமிர்தெழக்கடைமின்... ... ... *

(இ-ள்.) ஸ்ரீநாராயணமூர்த்திசொல்லுகிறார், மந்தரகிரிமத்தாகவும், வாசுகி கடைகின்றகயிறாகவும், மென்மைபொருந்தியசந்திரன் அடைதூணாகவும், அமைத்துத்தேவர்கள் அசுரர்களென்ன வேறுவேறாகிய கூட்டம் இருபக்கத்திலுமிருந்து வலிப்பவர்களாய் ஒஷதிகொடுத்து ஒலிக்குஞ் சமுத்திரங்கலங்கவும் அமிர்தமுண்டாகவும் கடையுங்கள். எ-று. (௨௧)

ஒஷதி அமிர்தவல்லியாகிய காட்டுக்கொடிகள். அவை தானின்றபலவினைத்தனக்கேமுடிவாகவுடைய கொடிகளென்று கூறுவாருமுளர்.

யாமுபவ்வயின்வருதுதீர்கதுபெண்வெழுந்து ... ... *
போமினென்றருள்புரிதலுமிறைஞ்சினர்புகழ்ந்தார் ...*
[௨௨]

நாமயின்றெனக்குனித்தினர்நல்குரவொழிந்த... ... *
தாமெனும்பெருங்களிதுளக்குறதலாலமரர் .. ... ...*

(இ-ள்.) பாற்கடலினிடத்தில் வருவோம் நீங்கள்விரைவாக எழுந்துசெல் லுங்களென்று அருள்செய்தவளவில் தேவர்கள் வணங்கிப்புகழ்ந்து இனிந ம்முடைய வறுமையொழிந்தது பயமுமில்லையென்று பெருங்களிப்பு ஆ ட்பமித்தலால் கூத்தாடினார்கள். எ-று. (௨௨)

வருதும் என்பதில் விகுதி எதிர்காலங்காட்டி நின்றது.

மலைபிடுங்கினர்வாசுகிபிணித்தனர்மதியை ... ... ...*
நிலைபெறும்படிநட்டனரோடதிநிரைத்தார்... .... *
அலைபெறும்படிபயோததிகடைந்தனரவனி... ... *
நிலைதளர்ந்திடவனந்தனுங்கீழுறநெளித்தான் ... ... *

(இ-ள்.) ஸ்ரீநாராயணமூர்த்தி அருளியபடி மந்தரகிரியைப்பெயர்த்து அ தில்வாசுகியைக்கட்டிச் சந்திரனைத்தூணாகநிலைபெறும்படிநிறுத்தி ஔஷதிக ளையும்பரப்பி அலைதலுண்டாகத்திருப்பாற்கடலைக்கடைந்தார்கள் அப்போ து பூமிநிலைதளரும்படி ஆதிசேஷனும் பாதலத்தில்மிகவும் நெளித்தனன்.

திறல்கொளாமையாய்முதுகினின்மந்தரந்திரிய ...*
விறல்கொளாயிரந்தடக்கைகள்பரப்பிமீவலிப்ப... ... *
மறனிலாமுனிவெகுளியின்மடிந்தனவரவே... ... *
அறனிலாமனத்தடையலாநெடுந்தகையமைத்தான் ... *

(இ-ள்) அவர்களிவ்வாறு கடையும்போது தருமநெறியில்லாதமனத்தில் சேராத ஸ்ரீநாராயணமூர்த்தி பலம்பொருந்திய கூர்மாவதாரமாகிய முது கினிடத்தில் மந்தரகிரியானது சுழலத்தக்கதாக வெற்றிகொண்ட ஆயிரம் பெரியகைகளைப்பரப்பி மேல்வலிக்கவும், பாபமில்லாதமுனிவரால் ஒழி ந்தபொருள்களெல்லாமீட்டும்வர அமைத்தார். எ-று. (௨௪)

பாடபேதம்.

அறனிலாமனத்தடையலர்நெடுந்தகையமைத்தான் எனப்பாடமுண்டே னின் தருமமற்றமனத்தையுடைய மாற்றார்க்குநெடுந்தகையாகிய நாராயண மூர்த்தி ஆமையாகிக்கைகள்பரப்பிமந்தரந்திரியவும் மெய்வலிக்கவும், மடி ந்தனவரவும் அமைத்தனரெனப்பொருளுரைத்துக்கொள்க.

இறந்துநீங்கினயாவையுமெம்பிரானருளாற் ... ... *
பிறந்தவவ்வயிற்சுராசுரர்தங்களிற்பிணங்கச்... .. ...*
சிறந்தமோகினிமடந்தையாலவுணர்தஞ்செய்கை ... *
துறந்துமாண்டனராரமிர்தமரர்கடுய்த்தார்... ......*

(இ-ள்.) முன்கடலிற் சென்றிறந்த பொருள்களெல்லாம் நம்பெருமான் திருவருளாலுண்டாயின, அப்போது தேவர்களும், அசுரர்களும், (அதிலுண் டான அமிர்தத்தைக்குறித்துத்தம்மில்மாறுகொண்டனர்) அதைக்கண்டதிரு மால் மோகினிவடிவங்கொள்ள அந்தஅழகுள்ளமோகினியாலதால் அசுரர்கள்

தங்கள்செய்கைபொழிந்துமாண்டனர் அரிய அமிர்தத்தைத் தேவர்களுண்டனர்—எ-று. (உரு)

வெருவுமாலமும்பிறையும்வெவ்விடையவற்கீந்து ... ✽
தருவும்வேறுளதகைமையுஞ்சதமகற்கருளி... ... ...✽
மருவுதொல்பெருவளங்களும்வேறுறவழங்கித்... ...✽
திருவுமாரமுமணிந்தனன்சீதரமூர்த்தி ... ... ... ✽

(இ-ள்.) தேவர்கள் அஞ்சும்படி அக்கடலிலுண்டாகிய விஷத்தையும் பிறைமதியையும் விரும்புகின்ற விருஷபவாகனமுள்ளசிவனுக்குக்கொடுத்து கற்பகத்தருவையும் மற்றப்பொருள்களையும் இந்திரனுக்களித்துப்பொருந்திய தொன்மையுள்ள நிதிமுதலியவற்றைக் குபேரன்முதலிய பிறருக்கீந்துதிருமகளையும் கவுஸ்துவாபரணத்தையும் ஸ்ரீநாராயணமூர்த்தி தரித்துக்கொண்டனர்—எ-று. (உசா)

அந்தவேலையிற்றிதிபெருந்துயருழந்தழிவாள்... ... ✽
வந்துகாசிபன்மலரடிவணங்கியென்மைந்தர் ... ... ✽
இந்திராதியர்புணர்ப்பினாலிறந்தனரெனக்கோர்... ...✽
மைந்தனீயருளவர்தமைமடித்தலுக்கென்றாள்... .. ✽

(இ-ள்.) அப்போது (அசுரர்கள்தாயாகிய) திதியென்பவள் தன்புத்திரர்களைக்குறித்து மிகுந்ததுயரத்தைஅநுபவித்து வருந்துகின்றவளாய்... று காசிபரிஷியின் பாதமலரைவணங்கி என்மைந்தர்கள் இந்திரன் முதலிய தேவர்கள் செய்தவுபாயத்தினால் இறந்தார்கள் ஆகையால அத்தேவர்களைக் கொல்லும்பொருட்டு எனக்கொருபுத்திரனை நீர் அருள்செய்ய வேண்டுமென்றாள்—எ-று. • (உஎ)

இவள்காசிபர்பத்தினி அசுரர்களிவள்வயிற்றிற் பிறந்தமையால் தைத்தியரென்னும் பெயர்பெற்றனர்.

என்றுகூறலுமகவுனக்களித்தனமினிநீ .. ... ... ✽
சென்றுபாரிடைப்பருவமோராயிரந்தீர ... ... ...✽
நின்றுமாதவம்புரிதியேனிணைவுமுற்றுதியென்... ... .✽
றன்றுகூறிடப்புரிந்தனளருந்தவமனையாள் ... ....✽

(இ-ள்.) திதி இவ்வாறுசொன்னவளவில் காசிபர் அவளைநோக்கியுனக்குப் புத்திரனை அநுக்கிரகித்தோம் ஆயினும்பூமியினிடத்திற் போயிருந்து ஆயிரமாண்டு பெருந்தவஞ்செய்வையாகில உன்னெண்ணத்தை முடிக்குவை யென்றுசொல்ல அவளவ்வாறே இவ்விடத்தில் அருந்தவஞ்செய்தனள். ()

கேட்டவாசவனன்னவட்கடிமையிற்கிடைப்ப... ... ...✽
வாட்டமாதவத்துணைர்த்தவள்வயிற்றுறுமகவை ... ... ✽
வீட்டிடுவெபெழுகூறுசெய்திடுதலும்விம்மி...... ... ...✽
நாட்டநீர்தரமருத்தெனுநாமமுறவின்றான் ... ...... ✽

(இ-ள்.) அதனைக்கேள்வியுற்ற இத்திரன்மாறுருவங்கொண்டு அவளுக்கடி

மைத்தொழில்செய்கின்றவனையிருந்து அவள்செய்யுந்தவத்தில் சோர்வுநே ரிட்டகாலபதிந்து அவள்வயிற்றில்பொருந்திய சிசுவைக் கீழேவிழச்செய் தௌழுகூறுக்கினவளவில் அக்கூறுகள் அழுதகண்களில் நீர்சொரிய நோக்கி அவைகட்கு மருத்தென்னும்பெயர்கொடுத்தனள்—எ-று. (௨௯)

ஆயதிவ்விடமவ்விடமவிர்மதியணிந்த... ... ... ...*
தூயவன்றனக்குவமையிற்றோன்றியதொல்லை ... ... ...*
வாயுவும்புனற்கங்கையும்பொறுக்கலாவலத்த... ... ...*
சேய்வளர்ந்தருள்சரவணமென்பதுந்தெரித்தான் ... *

(இ-ள்.) அத்தன்மையுள்ளதாகியதிவ்விடம்அந்தஇடம்பிரகாசிக்கும்பிறை மதியணிந்தசிவனுக்கு உமையவளிடமாகத்தோன்றிய - பழமையாகியவாயு வும் நீருள்ளகங்கையும் தாங்கவொண்ணாத பலத்தையுடைய சுப்பிரமணியர் வளர்ந்தருளிய சரவணப்பொய்கை யென்பதனையும் தெரிவித்தார்—எ-று.

காலன்மேனியிற்கருகிருள்கடிந்துலகளிப்ப ... ... *
வேலவார்கவித்தேரொடுநிறைகதிர்க்கடவுள் ... ... *
மாவின்மாமணியுந்தியினயனொடுவந்த... ... ... *
மூலதாமரைமுழுமலர்முளைத்தெனமுளைத்தான் ... *

(இ-ள்.) இயமனுடைய நிறம்போலக்கறுத்த விருளைத்துரத்தி இவ்வுல கத்தையளிக்க நீலநிறமாகியகடலில் தேருடன் நிறைந்தகதிர்களுள்ள சூரிய ன் திருமாலுடையபெரிய அழகுள்ள நாபியினிடத்தில பிரமதேவனுடன் ஆ திதாமரையின் முழுமலர் முளைத்ததுபோலமுளைத்தான்—எ-று. (௩௧)

அங்குநின்றெழுந்தயன்முதன்மூவருமனையார் ... ... *
செங்கணேற்றவன்செறிசடைப்பழுவத்தினிறைதேன் ..... *
பொங்குகொன்றையீர்த்தெழுசலாற்பொன்னியைப்பொருவுங்
கங்கையென்னுமக்கரைபொருதிருநதிகண்டார். ... ... *

(இ-ள்.) அவ்விடத்திலிருந்து புறப்பட்டு அரி அரன் அயன் என்னுந் தி ரிமூர்த்திகளையும் ஒத்தவர்களாகிய இம்மூவர்களும் செங்கணுள்ள விருஷ ப வாகனக்கடவுளாகிய சிவனுடையநெருங்கிய சடைக்காட்டிலிருக்கும் நி றைந்ததேன்பொழிகின்ற கொன்றைமாலையையிழுத்துக்கொண்டுசெல்லு தலாற் காவிரிநதியை ஒப்பாகிய கங்கையென்னும் அக்கரையமோதுகின் றசிறந்த அந்தநதியைக்கண்டார்கள்—எ-று. (௩௨)

இந்தமாநதிக்குற்றுளதகைமையதியாவும் ... ... ... *
எந்தைகூறுகென்றிராகவன்வினவுறவெனையாண் ... *
மைந்தநின்றிருமாபுளாணயோத்திமாநகர்வாழ் ... ... *
விந்தைசேர்புயன்சகரனிம்மேதினிபுரந்தோன் ... ... *

(இ-ள்.) இந்தப்பெரிய நதிக்குப்பொருந்தியிருக்கின்ற பெருமையெல் லாம் என்னுதத்தையே சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமமூர்த்தி வினவுதலன் னைப்பாதுகாத்தவைசுந்தனே சிறந்த உன்மரபில்வந்தவனும் அயோத்தியாந

காத்தில் வாழ்ந்தவனும் செயலட்சுமி பொருந்திய புஜமுள்ளவனுமாகிய சகராசன் இவ்வுலகத்தை யாண்டுகொண்டிருந்தான்—எ-று. (௬௧)

விறல்கொள்வேந்தனுக்குரியவரிருவரில்விதர்ப்பை ...*
பொறையினல்கியபோசனையென்றொருபுதல்வன் ... *
பறவைவேந்தனுக்கிளையமென்சுமதிமூற்பயந்த... ... *
அறனிலமைந்தராறுபதர்மற்றஞ்சமானவன்சேய்... ...*

(இ-ள்.) வெற்றிபொருந்திய அவ்வரசனுக்குரிய மனைவியரிருவருளர்-அவருள் விதர்ப்பையென்பவள் கருப்பங்கொண்டு பெற்றபோசனையென்றொருபுத்திரனிருந்தான் கருடனுக்கிளையவளாகிய சுமதியென்னுமிளையமனைவி முன்பெற்றகருமவழியில் செல்லுதலில்லாத அறுபதினாயிரம்புத்திரர்களுமுளர் போஷணையென்பவனதுபுத்திரன் அஞ்சுமானென்பவன்-எ-று

திண்டிறற்புனைசகரனுந்தவயர்சேவகந்தான் ... ... *
கண்டுமூற்றிபவயமகம்புரிதலுங்கனன்று... ... ... *
வண்டுதுற்றதார்வாசவற்றுணர்த்தினர்வானோர்... ... *
ஒண்டிறற்பரிகபிலனதிடையினிலொளித்தான்... ... ...*

(இ-ள்.) மிக்கவெற்றிபுனைந்த சகராசன் தன்புத்திரர்களுடைய சௌரியத்தைக்கண்டு நிறைவேற்றிய அசுவமேதயாகம் செய்யவும் தேவர்கள்கோபங்கொண்டு வண்டுகள்நெருங்கிய மாலையணிந்த தேவேந்திரனுக்குச் சொல்லினார்கள் அவ்விந்திரன் சகரன்விட்ட மிக்கவலிமையுள்ள குதிரையைக்கபிலமுனிவரிடத்தில் கொண்டுபோயொளித்தான்—எ-று. (௬௨)

வாவுவாசிபின்சென்றனனஞ்சுமான்மறுகி... ...*
பூவிறேரிடமின்றியேநாடினன்புகுந்து ... ... *
தேவர்கோமகன்கரந்தமையறிந்திலன்றிகைத்து...*
மேவுதாதைதன்றாதையாலுணர்த்தினன்மீண்டு...*

(இ-ள்) தாவிச்செல்லும் அந்தக்குதிரையின் பின்சென்றவனாகிய அஞ்சுமான், குதிரையைக்காணாமையால் மனங்கலங்கி பூமியில்தேடாதவிடமில்லையென்னும்படி தேடினான் இந்திரன்வந்து ஒளித்துவைத்ததை அறியாதவனாய்த்திகைத்துமீண்டு தனக்குரியபாட்டனாகிய சகராசனிடத்திற் சொன்னான்—எ-று. (௬௩)

கேட்டவேந்தனுமதலையர்க்கம்மொழிகிளத்த ... *
வாட்டமீக்கொளச்சகரர்கள்வடவையின்மறுகி...*
நாட்டம்வெங்கனல்பொழிதரநானிலந்தடவித்... *
தோட்டுநங்கினர்புவியினைப்பாதலந்தோன்ற...*

(இ-ள்) (அஞ்சுமான்வந்துசொல்லியவார்த்தையைக்) கேட்டசகராசன் தன்புத்திரர்களாகிய சகரர்களுக்குச்சொல்ல, அவர்கள் மிகவும் சோர்வுந்து வடவாமுகாக்கினிபோலச் சினந்து கண்கள்வெப்பமுள்ள தீப்பொழிகளைக்

க்க பூமியெங்குந்தேடிக் காணுமையால் பூமியைப்பாதாள லோகந்தெரியும்படி அம்மண்ணினையெல்லாந்தோண்டியுண்டுவிட்டார்கள்—எ-று. ()

நூறியோசனையகலமுமாழமுநூறடங்கக்... ... *
கூறுசெய்தனரொன்பரால்வடகுணதிசையின் ... *
ஈறுமாதவக்கபிலன்பெனிவுளிகண்டெரியிற் ... ...*
சீறிவைதனர்செருக்கினர்நெருக்கினர்செறுத்தார்..*

(இ-ள்) நூறுயோசனை அகலமும் ஆழமுமாகப் பூமிமெலியும்படி தோண்டினார்களென்று சொல்லப்படுவர் வடகீழ்த்திசையில் மிகுந்த பெரியதவமுள்ள கபிலமுனிவனிடத்தில் குதிரையைக்கண்டு அக்கினியைப்போலச் சீறி நிந்தித்தார்கள் இறுமாப்புள்ளவர்களாயடர்ந்து கோபித்தார்கள்-எ-று

மூளுங்கொடுஞ்சினத்தருந்தவன்முனிந்தெரிவிழிப்பப்.. *
பூளைசூடிதன்னகையினிலெயில்பொடிந்தனபோல் ... *
ஆளுமைந்தராறயுதருஞ்சாம்பராயவிந்தார் ... ... *
வேள்விகண்டறல்வேந்தனுக்குரைத்தனர்வேசர் ... ... *

(இ·ள்.) மூளுகின்ற கொடியகோபத்தையுடைய கபிலமுனிவர் முனிந்து அக்கினிப்பார்வையாக நோக்கினவளவில் பூளைமலரைச்சூடிய ருத்திரமூர்த்தியினுடைய நகையினால் திரிபுரம்சாம்பலாய்ப் போய்விட்டதுபோல் உலகாளும்படியான அறுபதினாயிரம்புத்திரர்களும் சாம்பலாயிறந்தார்கள் அதைகண்ட தூதர்களோடி யாகஞ்செய்யும் சகரராசனுக்குச்சொன்னார்கள்—எ-று. (௧௧)

சாம்பல் சாம்பலான இறுதிப்போலியாய்நின்றது.

உழைத்துவெந்துயர்க்கூறுகாண்கிலனுணர்வொழியா... *
தழைத்துமைந்தனன்மைந்தனையவர்கழிந்தனரேல் ... *
இழைத்தவேள்வியின்றிழப்பதோவெனவவனெழுந்து. *
தழைத்தமாதவக்கபிலன்வாழ்பாதலஞ்சார்ந்தான் ... ...*

(இ-ள்) அதைக்கேள்விப்பட்ட சகரராசன் வருந்திநேரிட்ட துயரத்துக்கு ஒருமுடிவுகாணுதவனாய் அறிவயர்ந்து தனதுபௌத்திரனாகிய அஞ்சுமானை அழைப்பித்து அவர்கள் இறந்தாராயினும் இப்போது தொடங்கிய யாகத்தைவிட்டுவிடலாமோவென்றுசொல்ல அஞ்சுமானெழுந்து மிகுந்த தவமுள்ள கபிலமுனிவரிருக்கின்ற பாதாளலோகத்துக்குப்போனான்-எ-று

ஓகாரம் எதிர்மறைப்பொருள்தந்து நின்றது.

விண்டுநீங்கினருடலுகுமிறங்கல்வெண்ணீறு... ... *
கண்டுதன்னெனுமனத்தினன்கபிலமாமுனிதன் ... *
புண்டரீகமென்றாடொழுதெழுந்தனன்புகலக் ... ... *
கொண்டுபோகநின்னிவுளியென்றற்றதுங்குறித்தான்...*

(இ-ள்.) இறந்துபோனவர்களுடல் கெத்தியிருக்கிறசாம்பல்மலையைக்கண்டு நெருங்கியமனமுள்ளவனாய்க் கபிலமுனிவருடையமென்மையாகிய பாததா

மனையைத் தொழுதெழுந்துசொல்ல உன்குதிரையைக்கொண்டு செல்கவெ ன்றுசொல்லி நடந்தசெய்தியையும் தெரிவித்தான்—எ-று. (௪௧)

பழுதிலாதவனுரைத்தசொற்கேட்டலும்பரிவாற் ... ...*
றொழுதுவாம்பரிகொணர்ந்தவிசுரர்களுக்கீயா ... ...*
முழுதும்வேள்வியைமுற்றுவித்தரசனுமுடித்தான் .. *
எழுதுகீர்த்தியாய்மைந்தனுக்கரசியலீந்து .. ... ... *

(இ-ள்) குற்றமில்லாத அந்தமுனிவர் சொல்லியவார்த்தையை அஞ்சுமா ன்கேட்டவளவில் பரிவுடன்அவரைத்தொழுது தாவுகின்றகுதிரையைக்கொ ண்டுவந்து தேவர்களுக்குஅவிகொடுத்து நிலைபெற்றகீர்த்தியையுடைய ரா மமூர்த்தியே வேள்வியைப்பூர்த்திசெய்து தன்மைந்தனுக்கு அரசாட்சி யைக்கொடுத்துச் சகரராசனுஞ் சுவர்க்கஞ்சேர்ந்தான்—எ-று. (௪௨)

சகர்தொட்டலாற்சாகரமெனப்பெயர்தழைப்ப ... *
மகரவாரிதிசிறந்ததுமகிதலமுழுது... ... ... ...*
நிகரின்மைந்தனேபுரந்தனனிவனெடுமரபில் ... ...*
பகிரதன்னெனும்பார்த்திவன்வந்தனன்பரிவால்... ...*

(இ-ள்.) சகரர் தோண்டினமையால் சாகரமென்னும்பெயர்தழைக்க மகரமீனுள்ள சமுத்திரம்சிறப்படைந்தது அதற்குமேல் இவ்வுலகமுழுவதை யும் ஒப்பில்லாத போசனையென்னுமைந்தனே யாண்டனன் இவனுடைய பெரியமரபில் பகீரதனென்கிற ஒருஅரசன்பிறந்தான்—எ-று. (௪௩)

உலகமியாவையும்பொதுவறத்திகிரியையுருட்டி... ....*
இலகுமன்னவனிருந்துழியிறந்தமைவினவ ... ... *
அலகிறொன்முனியுரைத்திடக்கேட்டனனரசன் ... ... *
திலகமன்னுறவணங்கிநின்றொருமொழிசெப்பும்... *

(இ-ள்.) விளங்குகின்ற அந்தப்பகீரதமகாராசன் உலகமெல்லாம் பொது வென்பதின்றித் தன்னுடையதே யாகும்வண்ணம் ஆக்கினைச்சக்கிரஞ்செ லுத்தி அரசாட்சிசெய்துகொண்டிருக்கும்போது அவ்வரசன் சகரர்களிற ந்த முறைமையைக்குறித்துக்கேட்க அளவில்லாத பழமையாகிய வசிட்ட முனிவர் சொல்லக்கேட்டுத் தன்னெற்றித்திலகம் பூமியிற்படியும்படி வண ங்கிநின் றொருமொழிசொல்லுகின்றான்—எ-று. (௪௪)

கொடியமாமுனிவெகுளியின்மடிந்தவெங்குரவர் ...*
முடியநீணிரயத்தினின்மூழ்கிடுமுறைமை... ... ... *
கடியுமாறெனக்கருந்தவமதற்குறுகருமம்... ... ... *
அடிகள்சொற்றுகவென்றலுமந்தணனறைவான் ... ...*

(இ-ள்) பெரியகபிலமுனிவருடைய கொடியகோபத்தினாலிறந்த எமது முன்னோர்கள்முற்றவும் பெரியநரகத்தில் மூழ்கியிருக்கு முறைமையை நீக்கும்வழியும் அதற்கு அருந்தவஞ்செய்யுங் கருமத்தையும் தேவரீர் அரு ளிச்செய்யவேண்டுமென்றளவில் அம்முனிவர்சொல்லுகின்றார்—எ-று. (௪௫)

வையமாளுடைமன்னவர்மன்னவமடிந்தோர் ... ... *
உய்யநீடவமொழிவறுபகலெலாமொருங்கே... ... ... *
செய்யதாண்மலர்க்கிழவனைநோக்கிநீசெய்தி... .. ... *
நையலென்றிவிதுரைத்தனனவையறுமுனிவன் ... ... *

(இ-ள்.) இவ்வுலகத்தையாளுதலுடைய அரசர்க்கரசனே இறந்தவர்கள் பிழைக்கும்படி நெடுந்தவத்தை அநேககாலங்களெல்லாம் புதியசெந்தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவனைநோக்கி நீ நயமிக்கச்செய்வாயாக அவர்களைக்குறித்து நீவருந்தவேண்டுவதில்லையென்று குற்றமற்றவசிட்டமுனிவர் இனிமையாகச்சொல்லினர்—எ-று (௬௬)

ஞாலமியாவையுஞ்சுமந்திரன்றன்வயினல்கிக் ... ... .. *
கோலுமாதவத்திமகிரிமருங்கிணித்துறுகிக் ... ... ... *
காலமோர்பதினாயிரமருந்தவங்கழிப்ப... ... ... *
மூலதாமரைமுழுமுதற்கிழவன்முந்தினனே ... ... *

(இ-ள்.) (அவ்வாறுவசிட்டமுனிவர்சொல்லியவளவில்) பகீரதமகாராசன் உலகமுழுதும் சுமந்திரனிடத்தில் ஒப்புவித்துத் தவக்கோலங்கொண்டு இமயமலைச்சாரலிற்போய்ப் பதினாயிரம்வருஷம் அருந்தவமுடிக்க ஆதிதாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவர் முன்னின்றார்—எ-று. (௬௭)

நின்பெருந்தவம்வியந்தனனினைநீர்குரவர்... ... ... *
முன்பிறந்தனரருந்தவன்முனிவிறுதலினால்... ... ... *
மன்பெரும்புவியதனில்வானதிகடிதுறுகி .. ... ... *
எம்புதோயுமேலிருங்கதிபெறுவரென்றிசைத்தான் ... *

(இ-ள்.) உன்னுடையபெரியதவத்துக்கு நாம் சந்தோஷமுற்றனம் உன் பெரியோர்கள் கபிலமுனிவர் சாபத்தினால் முன்னமிறந்தபடியால் ஆகாயகங்கையானது நிலைபெற்றபூமியில் விரைவாகவந்து அவர்கள் எலும்பிற்படியுமானால் பெருமைபொருந்தியமோட்சத்தையடைவார்கள்-எ-று (௬௮)

மாகநன்னதிபுவியிடைவருகின்மற்றவடன் .. ... ... *
வேகமாற்றுதல்கண்ணுதற்கன்றிவேறரிதாற்... ... *
தோகைபாகனைநோக்கிநீயருந்தவந்தொடங்கென் ... *
ஏகினானுலகனைத்துமெவ்வுயிர்களுமீந்தான் ... ... *

(இ-ள்) எல்லாவுலகங்களையுமெல்லாவுயிர்களையும்படைத்தபிரமதேவனே (இவ்வாறுசொல்லியதுமன்றி) ஆகாயகங்கை லோகத்தில்வந்தால் அவளுடையவேகத்தை ஆற்றுதல் சிவனுக்கன்றி மற்றவர்களுக்கரியதாம் ஆதலால பார்வதிபாகனைநோக்கித் தவஞ்செய்யத் தொடங்கென்றேகினன்- எ-று ()

மங்கைபாகனைநோக்கிமுன்மொழிந்தனவருடந் .. *
தங்குமாதவம்புரிதலுந்தழனிறக்கடவுள்... ...... ... *
அங்குவந்துநின்கருத்தினைமுடித்துமென்றகன்றான் ... *
கங்கையைத்தொழக்கலையையாயிரங்கழித்தான் ... ... *

(இ-ள்) பார்வதிபாகனாகிய சிவனை நோக்கி[illegible]சொல்லிய பதினாயிரம்வருஷந்தங்கிய அரியதவஞ்செய்தவனாகிய நீ[illegible]கடவுள் அவ்வரசனுக்குப் பிரத்தியட்சமாகி உன்கருத்தின்படி[illegible]வந்தருளுமென்[illegible]று சொல்லிப்போயினான் அதன்பின்னர் கங்கையைத்தொழ ஐயாயிரம்வருஷம் கழித்தான்—எ-று. (௯௰)

ஒருமடக்கொடியாகிவந்துளதுமாதவமென் … … … *
பெருபுனற்கொடியினவள்வேகமாரிபொறுப்பார் … *
அரனைத்தசொல்லிநோதமற்றின்றுநீயதிர்த்து … *
பெருகுநற்றவம்புரியெனவரநதிபெயர்ந்தாள் … … *

(இ-ள்.) கங்கையானவள் ஒருபெண்வடிவமாகவந்து அரசனை நீசெய்யுந்தவமியாது (கங்கையைக்குறித்தென்றால்) அலைமோதும் நீருருவாகிய கங்கை வருவாளாயின் அக்கங்கையின் வேகத்தையார் பொறுப்பவர்கள் சிவன் பொறுத்துக்கொள்வதாகச்சொன்னானென்றால் அவர்சொன்ன[illegible] விரோதம் ஆதலால் இன்னமும் அவனைச்சிந்தித்துப் பெரிய நல்லதவத்தைச் செய்யென்று சொல்லிக் கங்கைசென்றாள்—எ-று. (௯௧)

கரந்தைமதியோடெருக்கலர்கூவிளங்கொன்றை … *
நிரந்தபொற்சடைநின்மலக்கொழுந்தினைநினையா … *
அரந்தையுற்றவனிரண்டாயிரமாண்டு … … *
புரிந்துநற்றவம்பொலிதரமலைமகள்புனிதன் … …*

(இ-ள்.) தன்முதாதையரைக்குறித்து வருந்தியபொருந்திய பகீரதன் கரந்தைப்பத்திரமும், பொன்னூமத்தம்பூவும், எருக்கம்பூவும், வில்வமும், கொன்றைமாலையும், நிறைந்தபொன்னிறமுள்ள சடாமகுடத்தையுடைய நின்மலக்கொழுந்தாகிய பரமசிவனைத்தியானித்து வருந்தி இரண்டாயிரத்தைஞ்ஞூறுவருஷம் நல்லதவம் பொலிவுபெறச் செய்யும்போது பார்வதிபாகனாகிய பரமசிவன்—எ-று. (௯௨.)

எதிர்ந்துநின்னினைவென்னெனவினவுற்றவெம்பெருமை *
அதிர்ந்துகங்கையீதறைந்தனளென்றலுமன்றுசேல … *
பிதிர்ந்திடாவகைகாத்துமென்றேகியபின்னை … … *
முதிர்ந்தமாதவமிரண்டாயிரமுடித்தான் … … *

(இ-ள்.) அவ்வரசனுக்குத் தரிசனமாகி யுன்வேண்டுகையாதென்ன, வணங்கி எம்பெருமானே! கங்காதேவியானவள் அதிர்ந்துவந்து இவ்வார்த்தையைச்சொல்லினளென்று விண்ணப்பஞ்செய்தவளவில் நீயஞ்சாதே (கங்கைநீரொருதுளியுஞ்) சிந்தாவகைகாக்கிறேமென்று சொல்லிப்போயினபின்பு இரண்டாயிரத்தைஞ்ஞூறுவருஷம் கங்கையைக்குறித்து அரியதவஞ்செய்தான்.()

பெருகுநீரொடுபூமியும்வாயுவும்பிறங்கு … … … *
சருகும்வெங்கதிரொளியையுந்துய்த்துமற்றவையும் … *

(இ-ள்.) வேதமுணர்ந்த முனிவர்கூட்டங்கண்டு சந்தோஷிக்கும்படியுள்ள
புனிதனாம் அவ்வரசன் அதைக்கண்டு வணங்கி முன்னடந்தவைகளைச்சொ
ல்ல (அதைக்கேட்ட முனிவரிரங்கி) நீகொண்டுபோவென்று தன்காதின்வழி
யேவிட்டார் (விட்டவளவில்) கங்கையானவள்குதித்து இறந்துபோனவர்க
ளுடல் உயிர்த்தசாம்பலிற்படிந்தாள்—எ-று. (௫௮)

நிரையமுற்றியசகரர்கணெடுங்கதிசெல்ல ... ... *
விரைமலர்ப்பொழிந்தார்த்தனர்விண்ணவர்குழாங்கள் *
முரசமுற்றியபல்லியமுறைமுறைமுழங்க ... ... *
அரசனப்பொழுதணிமதிலயோத்திமீண்டடைந்தான் *

(இ-ள்.) (கங்காநதி இவ்வாறு அந்தசாம்பலிற்படிந்தவுடன்) முன்நரகத்
தில் வீழ்ந்திருந்தசகரர்கள் வழிபாதபதவியிற்சேர்ந்தார்கள் அப்போது
தேவர்கூட்டங்கள் வாசனையுள்ள பூமழைபொழிந்து ஆரவாரிக்கவும் பேரி
கைமுதலிநிறைந்துள மற்றவாத்தியங்களும் முறைமுறையே கோஷிக்கவும்
பகீரதன் அழகியமதில்சூழ்ந்த அயோத்தியிற்சென்று சேர்ந்தான்-எ-று. (௫௯)
சொரிந்தனர்-என்பது- வினையெச்சமுற்று.

அண்டகோளகைப்புறத்ததாயிலங்கிறைந்த ... ... *
புண்டரீகமென்பதத்திடைப்பிறந்துபுயகமுறூர் ... ... *
கொண்டதீர்த்தமாய்ப்பகீரதன்றவத்தினாற்கொணர ... *
மண்டலத்துவந்தடைந்ததிம்மாநதிமைந்த ... ... *

(இ-ள்.) ஸ்ரீராமமூர்த்தியே இந்தமாட்சிமைபொருந்திய நதியானது பூர்
வம் அண்டகோளகைக்குப்புறத்திலிருந்ததாய் ஸ்ரீநாராயணமூர்த்தி உலகத்
தையளந்தபோது செம்மையாகிய அவர்திருவடித்தாமரையினிடமாகப்பி
றந்து பின்புபிரமதேவன் கமண்டலத்திற்கொண்ட தீர்த்தமாகிப் பகீரதன்
தவத்தினாற்கொண்டுவந்தமையால் பூலோகத்தில்வந்து சேர்ந்தது—எ-று.

சகரர்தம்பொருட்டருந்தவப்பெரும்பகறள்ளிப் ... .. *
பகீரதன்கொணர்ந்திடுதலாற்பகீரதியாகி... ... ... *
மகிதலத்திடைச்சன்னுவின்செவிவழிவரலா ... ...*
லிகரில்சானவியெனப்பெயர்படைத்ததித்தீர்த்தம்... ...*

(இ-ள்.) சகரர்கள் நிமித்தமாகப் பகீரதன் நெடுநாள் அரியதவஞ்செய்து
கழித்து இவ்விடத்திற்கொண்டு வந்தகாரணத்தினாற் பகீரதியென்னும் பெ
யருடையதாகிப் பின்பு சன்னுமுனிவருடைய காதின்வழியாகப் பூமியினி
டத்தில் வந்தகாரணத்தினால் ஒப்பில்லாத ஜானவியென்னும் பெயரும்பெ
ற்றது இந்தக்கங்காநதி—எ-று. (௬௰)

என்றுகூறலும்வியப்பினோடுவந்தனரிறைஞ்சு ... ... *
சென்றுதீர்ந்தனர்கங்கையைவிசாலைவாழிரசக் ... ... *
குன்றுபோற்புயத்தரசன்வந்தடியிணைகுறுக ... ... *
நின்றநல்லுணாவிளம்பிமற்றவ்வயினீங்கா... ... ... ...*

(இ-ள்.) இவ்வாறுவிசுவாமித்திரர் சொன்னவளவில் அதிசயத்துடன் சந்தோஷித்து அவ்விராமலக்ஷுமணர்கள் வணங்க அதற்குமேல் மூவரும் கங்கையை நீங்கிச் சென்றார்கள் ( அப்படிசெல்லும்போது ) விசாலையென்னும் நகரசமீபத்துப்பூங்கின்ற மகிமைபொருந்தியபுருஷனான ஒருஅரசன் எதிரில்வந்து பணிய அங்கிருந்து அம்மன்னவனுக்கு நல்லஉபசாரவார்த்தைகளைச்சொல்லி விடைகொண்டு அவ்விடம்நீங்கி—எ-று. (௬௨)

பள்ளிநீங்கியபங்கயப்பழனநன்னா ... ... ... *
வெள்ளவாளைகளைவுறுகடைசியர்மிளிர்ந்த ... ... *
கள்ளவாவெனவிங்கலைபடல்லையலெனக்கருதா ... ... *
அள்ளிநாறுநறுமகல்படலைமிதிலைநாடடைந்தார் ... ... *

(இ-ள்) சேக்கையைவிட்டெழுந்த நல்லநாரைகள் தாமரைகள்பொருந்திய வயல்களில் சிறப்புற்ற மீன்களைப்பறிக்கும் கடைசியருடைய பிரகாசியாநின்றமுகவடிவுபொருந்திய விளக்கமாகிய நீண்டகண்களின் நிழல்களைச்சேல்மீனென்றுகருதிப்போய்க்கொத்தி (அவையல்லாமையால்) நாணத்தைக்கொண்டபடியிராநின்ற விசாலமாகிய மருதநிலஞ்சூழ்ந்தமிதிலைநாட்டைச்சேர்ந்தார்கள்—எ-று. (௬௩)

வாள்களையென்றதனால் அவை குவளைமுதலியவெனக.

வரம்பிடைவாய்ச்சிறைமதகுகண்முழவொலிவழங்க ... ... *
அரும்புறாண்டலர்சோகங்களலர்விளக்கெடுப்ப ... ... *
நரம்பிரன்றந்தன்றொனகொணறுமலரியாழின் ... *
சுரும்புபாணசெய்யதம்பூங்கைநின்றுவேசோலை ... ... *

(இ-ள்) அளவில்லாதபெரியகுளங்களின் மதகுகள் முழவுபோல ஒலிக்கவும் அரும்புகின்றபுதிய மலர்களையுடைய அசோகமரங்கள் பூவாகிய விளக்குகளேந்தவும் நரம்பைப்போலொழுகாநின்ற தேன்துளிகளைக் கொண்டிருக்கின்ற நறியமலரினிடத்து யாழைப்போல் வண்டுகளிசைபாடவும் சோலையினிடத்து மயில்கள்நடனமாடும்—எ-று. (௬௪)

பட்டவாறுதன்மடந்தையர்பார்ப்பெறுந்தாதல் ... *
எட்டவாதரித்துழல்பவர்தயங்கள்வெறுப்ப ... ... ... *
வட்டநாண்மரையலரின்மேல்வடலிடமள்ளர் ... ... *
கட்டகாவியங்கட்கடைகழிப்பனகழனி. ... ... ... *

(இ-ள்.) பொற்பட்டமணிந்த ஒளிபொருந்திய நெற்றியினையுடைய மாதர்களின் பார்வையாகியதூண்டிலால் அவர்களைச்சேர விருப்பங்கொண்டு அங்குசஞ்சரித்துக்கொண்டிருக்கும் ஆடவர்களுடைய இருதயங்களை வெறுக்கும்படி வயலில் மள்ளர்கள் களைபறித்தெறிந்த குவளைமலர்கள் வட்டமாகிய காலத்தில் மலர்ந்ததாமரைமலர்மேற் படிந்திருந்து அம்மாதர்களுடைய கண்களைப்பழிக்காநின்றன—எ-று. (௬௫)

பார்ப்பு-எ-து-பார்வை-இங்கு-குவளைகள்-மாதர்கண்களினும் அழகுள்ளவையிருப்பதினால் அம்மங்கையர்களிடத்துண்டாகும் விருப்பம்நீங்கி ஆடவர்மனம்வெறுக்கின்றதெனக்கொள்க.

அவ்வுழிநீங்கி ஒருநாள் கௌதமரிஷிக்குப் பிரிவையுண்டாக்கிப் பொய்யில்லாத உள்ளத்தையுடைய அந்தக் கௌதமரிஷிவடிவங்கொண்டு அகலிகையினிடத்திற் சென்றான்—எ-று. (௭௫)

இந்திரன் சேவற்கோழியுருவமாய்க் கோணை கூவினதாகவும் அதைக்கேட்டு விடியற்காலமென்றெண்ணி முனிவர் ஸ்நானத்திற்காகப் போய்விட்டதாகவும் வழங்குகின்றது.

புக்கவளோடுங்காமப் புணரிமாதுவின் றேறல் ... .. *
ஒக்கவுண் டிருத்தலோடு முணர்ந்தன ளுணர்ந்தபின்னுந் ... . *
தக்கதன் றென்னவோராள் தாழ்ந்தன ளிருப்பத்தாழா ... ... *
முக்கணா னனையவாற்றன் முனிவனு முடுகிவந்தான் ... ... *

(இ-ள்) இவ்வாறுசென்று அவளுடன் நவமானபுணர்ச்சியின்பமான தேனைப் பொருந்த அநுபவித்துக்கொண்டிருக்கும்போது தன்கணவனல்லவென்று அந்தவொண்டொடியாள் அறிந்தபின்னும் இதுதகுதியல்லவென்று உணராதவளாயிசைந்திருக்கும்போது தாழ்வுபடாது திரிநேத்திரங்களுள்ள ருத்திரமூர்த்தியையொத்த கௌதமரும் விரைவில் வந்தார்—எ-று. (௭௬)

சாரங்கசாபமல்லாற் றடுப்பருஞ்சாபம்வல்ல ... ... ... *
வரந்தருமுனிவனெய்த வருதலும் வெருவிமாயா ... ... ... *
நிரந்தரமுலகினிற்கு நெடிப்பட்ட பழிபூண்டா னின்றான் ... ... *
புரந்தரனஞ்சியாங்கோர் பூசையாய்ப் போகலுற்றான் ... ... *

(இ-ள்) பாணம் எய்தற்கிசைவாகிய சாபம்போலல்லாமல் ஒருவராலுந் தடுப்பதற்கரிய சாபத்தில் வல்லவராகிய வரமுங்கொடுக்கத்தக்க அம்முனிவர் சமீபத்தில் வந்தவளவில் பயந்து அறியாமல் எப்போதும் உலகினிலிருக்கத்தக்க பெரியபழியைப்பூண்ட அகலிகையினின்றும் இந்திரனகன்று அவ்விடத்தில் ஒருபூனையாயோடிப்போகத் தொடங்கினான்—எ-று. (௭௭)

தீவிழிசிந்த நோக்கிச் செய்ததையுணர்ந்து செய்ய ... ... .. *
தூயவனவனை நின்கைச் சுடுசரமனைய சொல்லால் ... ... ... *
ஆயிரமாதர்க்குள்ள வறிகுறியுனக்குண்டாகென் ... ... ... *
றேயினனவையெலாம்வந் தியைந்தனவிமைப்பின்முன்னம் .. *

(இ-ள்) இந்திரன் செய்தகாரியத்தைக் கௌதமர் அறிந்து கண்களிற் றீப்பொறிசிந்தும்படி அவனை நோக்கி உன்கையிலிருக்கும் தீக்கணையை யொத்த தம்முடைய வாக்கினால் (இந்திரனே) மாதர்களுக்குள்ள அறிகுறி உன்னுடலில் ஆயிரமுண்டாகக் கடவதென் றேவினார் ஏவினமாத்திரத்தில் அவையெல்லாம் இமைப்பொழுதுக்கு முன்வந்து அவனுடலிற் பொருந்தின—எ-று. (௭௮)

எல்லையினாணமெய்த்தியாவர்க்கு நகைவந்தெய்தப் ... ... .. *
புல்லியபழிபிணைந்தம் புரந்தரன் போயபின்றை ... .. ... ...*
மெல்லியலாளை நோக்கி விலைமகளனைய நீயுங் ... ... ... *
கல்லியலாதியென்றான் கருங்கலாய் மருங்குவீழ்வாள் ... *

(இ-ள்) அளவில்லாத வெட்கத்தை அடைந்துகண்டவர்களெல்லாம் நகைக்கும்படி சம்பவித்தபழிப்புடன் இந்திரன்போனபின்பு அகலிகையைநோக்கி வேசையைபொத்தநீயும்கல்லினுருவமாகக்கடவையென்றுசபித்தார் அவ்வாறுசபித்தவளவில்) கருங்கல்லா யவ்விடத்து விழுகின்றவள்—எ-று. (எக)

பிழைத்தனபொறுத்தலென்றும்பெரியவர்கடனேயன்பார் *
அழற்றருங்கடவுளன்னாய்முடிவிதற்கருளுகென்னத் ... *
தழைத்துவண்டியிருந்தண்டார்த்தசரதராமனென்பான் ... *
கழற்றுகள்கதுவவிந்தக்கல்லுருத்தவிர்தியென்றான்... ... *

(இ-ள்) தீநிறமுள்ள பரமசிவனையொத்தவரே சிறியோர்செய்த பிழைபொறுக்கைஎன்றும் பெரியவர்கள் கடமையென்பார் ஆதலால் இந்தச்சாபத்துக்கொருமுடிவு அருளிச்செய்யுமென்று வேண்டிக்கொள்ள தழைத்துவண்டுகளிசைபாடும் குளிர்ந்தமாலையணிந்த தசரதராமனென்பவனுடையபாததூள்கள்பட இக்கல்லுருவம் நீங்குவையென்றார்—எ-று. (அஉ)

பெரியவர்கடனென்றதனால்-சிறியோர்பிழையென்வருவிக்கப்பட்டது.

அந்தவிந்திரனைக்கண்டவமரர்கள்பிரமன்முன்னா ... ... *
வந்துகோதமனைவேண்டமற்றவைதவிர்த்துமாற்றர் ... ... *
சிந்தையின்முனிவுதீர்ந்துசிறந்தவாயிரங்கண்ணாக்கத் ... ...*
தந்தமதுலகுபுக்கார்தையலுங்கிடந்தாள்கல்லாய் ... ... *

(இ-ள்) அந்த இந்திரனைக்கண்டதேவர்கள் பிரமதேவன் முன்னிலையிற்சென்று கௌதமரிஷியைவேண்டிக்கொள்ள அப்பெண்குறிகளாயிருந்தவற்றை நீக்கி அவர்தம்முடையமனதிலே நீங்காதகோபந்தவிர்த்து சிறந்த ஆயிரங்கண்ணாகும்படி அநுக்கிரகஞ்செய்தார் தேவர்கள் தங்கள்தங்களிடம்போய்ச் சேர்ந்தார்கள் அகலிகையானவள் கல்லுருவமாயிருந்தாள்- எ-று.

இவ்வண்ணநிகழ்ந்தவண்ணமினியிந்தவுலகுக்கெல்லாம் ... *
உய்வண்ணமன்றிமற்றோர்துயர்வண்ணமுறுவதுண்டோ ...*
மைவண்ணத்தரக்கிபோரின்மழைவண்ணத்தண்ணலேயுன் ...*
கைவண்ணமங்குக்கண்டேன்கால்வண்ணமிங்குக்கண்டேன்......*

(இ-ள்.) இவ்வாறு முன்னடந்தமுறைமை யினி இந்த உலகங்களுக்கெல்லாம் பிழைக்குந்தன்மையுண்டாவதேயன்றி மற்றோர் துயரமென்னுந்தன்மையுண்டாகுமோ (உண்டாவதில்லை) மேகநிறமுள்ள ஸ்ரீராமமூர்த்தியே! கருமையுள்ள அரக்கியினுடைய யுத்தத்தினுன் கைவல்லமையைக்கண்டேன் (அதுவுமன்றி) உனதுபாதத்தின்பெருமையை இவ்விடத்தில் கண்டேன்.

அண்ணல்- பெருமையிற்சிறந்தோன்.

தீதிலாவுதவிசெய்தசேவடிக்கரியசெம்மல் ... ... ... *
கோதிலாக்குணத்தான்சொன்னபொருளெலாமனத்திற்கொண்
மாதவனருளுண்டாகில்வழிபடர்படருறாதே ... ... [டு
போதநீயன்னையென்றுபொன்னடிவணங்கிப்போனார் ... *

(இ-ள்.) பாவமில்லாத உதவிசெய்த சேவடியையுடைய ஸ்ரீராமமூர்த்தியானவர் குற்றமற்றகுணத்தையுடைய விசுவாமித்திர முநிவர்சொல்லியபொருளையெல்லாமனதிற்கொண்டு அகலிகையையேநோக்கி தாயே! கௌதமருடைய கிருபையுண்டாயிருக்குமாகில் இனிதுன்பம் உண்டாவதில்லை நீரங்கருடலுவாயென்றுசொல்லி அவளுடைய பொலிவுள்ளபாதத்தை வணங்கிச்செல்றார்—எ-று. (௮௩)

அருந்தவனுறையுடன்னையனையவரனுகலோடும் ... ... *
விருந்தினர்தம்மைக்காணுமெய்ம்முனிவியந்தநெஞ்சன் ... *
பரிந்தெதிர்கொண்டுபுக்குக்கடன்முறைமுறையற் ... *
புரிந்தபின்காதிசெம்மல்புனிதமாதவனைநோக்கி ... ... *

(இ-ள்.) அரியதவமுள்ள கௌதமரிஷியின் ஆச்சிரமத்தில் அவர்கள்நெருங்கிப் போனபோது விருந்தினரைக்கண்டு மெய்ஞ்ஞானமுள்ள கௌதமரிஷி சந்தோஷசித்தமுடையவராய்ப் பரிந்து எதிர்சென்று அழைத்துக்கொண்டுபோய்ச் செய்யவேண்டிய உபசாரங்கள் பழுது நீங்கச்செய்தபின்னர் விசுவாமித்திரர் புனிதராகிய கௌதமரிஷியைப்பார்த்து.—எ-று.

காதிசெம்மல்-காதிராசன்புத்திரன் விசுவாமித்திரன்.

அஞ்சனவண்ணதான்றனடித்துகள்கதுவாமுன்னம் ... ... *
வஞ்சிபோலிடையாளமுன்னைவண்ணத்தாளாகிநின்றாள் ... *
நெஞ்சினுந்திமையிலாளைநீயழைத்திடுகவென்ன ... *
கஞ்சமாமுனிவனன்னமுனிவனுங்கருத்துட்கொண்டான் ... *

(இ-ள்.) கௌதமமுநிவரே! அஞ்சனம்போலுநிறமுள்ள இவ்விராமமூர்த்தியினுடைய பாததூள்சென்று படுவதற்குமுன் கொடிபோலுமிடையையுடையவளாகிய உம்முடையபத்தினி முன்னைவடிவினளாகிநின்றாள் இவளோ தன்மனமறிந்து குற்றஞ்செய்யாதவளாதலால் நீர் அழைத்துக்கொள்ளுமென்று விசுவாமித்திரமுநிவர்) சொல்ல, பிரமதேவனையொத்த கௌதமரிஷியுஞ்சம்மதித்தார்—எ-று. (௮௫)

குணங்களாலுயர்ந்தவள்ளல்கோதமன்கமலத்தாள்கள் .. ... *
வணங்கினன்வலங்கொண்டேத்திமாசறுகற்பின்மிக்க ... *
அணங்கினையவன்கையீந்தாண்டருந்தவரேடும்போக ... *
மணங்கிளர்சோலைநீங்கிமணிமதிற்கிடங்கைக்கண்டார்... ...*

(இ-ள்.) நற்குணங்களால் மேன்மைபெற்ற ஸ்ரீராமமூர்த்தியானவர்கௌதமரிஷியினுடைய பாததாமரைகளைவணங்கி வலம்வந்து துதித்து குற்றமற்ற கற்பினாலுயர்ந்த அகலிகையை அம்முநிவர்கையில் ஒப்புவித்து அவ்விடம்விட்டு ஸ்ரீராமலட்சுமணரும்விசுவாமித்திரமுநிவரும், அப்புறஞ்சென்று வாசனைவீசுகின்ற சோலைகளைக்கடந்துபோய் அழகிய மதில்சூழ்ந்த அகழியைக்கண்டார்கள்—எ-று. (௮௬)

அணங்கு-மாதர்பொதுப்பெயர்.

௧-வது-அகலிகைப்படலமுற்றிற்று.

(இ-ள்.) சூரியகிரணங்கள்மறையவும், ஆகாயமானது பாற்சமுத்திரத்தை ஒப்பாகவும், மிதிலைநகரத்து மாளிகைகளின்மேலே பெரிய வஸ்திரக்கொடிகள்நெருங்கி நிலைபெற்ற மேகக்கூட்டத்தைத் தடவுந்தோறும் நனைந்து அம்மேகத்தைப்போலச்சூழ்ந்த அகிற்புகைகள் படியுந்தோறும் உலர்ந்து ஆடப்பார்த்தார்கள் — எ-று. (௪)

நனைவன புலர்வன எ-ரு-முற்றுவினையெச்சம்.

ஆதரித்தமுதிற்கோலந்தோய்த்தவயவமமைக்குந்தன்மை .. *
யாதெனத்திகைக்குமல்லான்மதனற்குமெழுதவொண்ணாச் .. *
சீதையைத்தருதலாலேதிருமகளிருந்தசெய்ய ... ... *
போதெனப்பொலிந்துதோன்றும்பொன்மதின்மிதிலைபுக்கார்..

(இ-ள்.) விரும்பி அமிர்தத்தில்தூரியக்கோலைத்தோய்த்து அவயவங்களை எவ்வாறு சித்தரிக்கலாமென்று மயங்குவதேயன்றி மன்மதனாலும் எழுதவொண்ணாத சீதாபிராட்டியைத்தந்ததினாலே திருமகள் வீற்றிராநின்ற செந்தாமரைமலர்போல அழகுற்றுத்தோன்றும் பொன்மதில்சூழ்ந்த மிதிலைநகரத்திற்பிரவேசித்தனர் — எ-று (௫)

திகைக்குமென்பது, படர்க்கை ஆண்பாலில்வந்த செய்யுமென்னுமுற்று. மதனற்குமெழுதவொண்ணாவென்பது, உருபுமயக்கம்.

சொற்கலைமுனிவனுண்டசுடர்மணிக்கடலுந்துன்னி ... *
யற்கலந்திலங்குபன்மீனரும்பியவானும்போல ... ... *
விற்கலைநுதலினாருமைந்தரும்வெறுத்துநீத்த ... ... *
பொற்கலன்கிடந்தமாடநெடுந்தெருவதனிற்போனார் ... *

(இ-ள்.) தமிழ்க்கலைகளையுடைய அகஸ்தியமுநிவரால் உண்ணப்பட்ட ஒளியுள்ள மணிகள் பொருந்திய சமுத்திரம்போலவும்நெருங்கி இரவிற்சேர்ந்து பிரகாசியாநிற்ற பலவாகிய நட்சத்திரங்கள் உண்டாயிருக்கின்ற ஆகாயம்போலவும், ஒளிபொருந்திய மதிக்கலையையொத்த நெற்றியையுடைய மாதரும் ஆடவரும் மனம்வெறுத்து நீக்கிவிட்ட பொன்னாபரணங்கள் (கொள்வாரின்மையினால்) விழுந்தவண்ணமாகவே கிடக்கநின்ற மாளிகைகளையுடைய நெடியவீதியிற்போனார்கள் — எ-று. (௬)

கலை ஆகுபெயர். நீர்வற்றினகாலத்தில் மணிகள்விளங்கினமையால் முநிவனுண்ட கடலென உவமித்தது, இது செல்வப்பெருக்கங்கூறியது.

தாறுபாய்கரிகட்குன்றந்தடமதவருவிதாழ்ப்ப ... ... *
வாறுமாய்க்கலினமாவிலாழியாலழிந்தோராறுச் ... .. *
சேறுமாய்த்தேர்களோடத்துகளெழாவொன்றோடொன்று ...*
மாறுமாறாகிவாளாக்கிடக்கிலாமறுகிற்சென்றார் ... ... ...*

(இ-ள்.) அங்குசத்தாற் குத்தப்பட்ட அஞ்சாமையையுடைய மலையொத்த யானைகள் மிகுந்தமதநீராகிய அருவியைப்பொழிவதனால் கடிவாளம்பூட்டிய குதிரைகளின்வாயினின்றும் ஒழுகாநின்ற நுரையினால் அந்தஆற்றின்தன்மைமாறி வேறு ஓராறுபோலாக யுடனே சேறாகியும் தேர்களோடு வதி

னால் தாளாகியும் இவ்வாறு ஒன்றுடனொன்று மாறுபடுவதாகிய [illegible] வீதியிற் போனார்கள் — எ - று. (௭)

தண்டுதலின்றியொன்றித்தலைத்தலைசிறந்தகாதல் ... ... *
னுண்டபின்கலவிப்போரினுசிந்தமென்மகளிரேபோற் ... *
பண்டருமளவியார்தம்புலவியிற்பரிந்தகோதை ... ... *
வண்டொடுங்கிடந்துதேன்சோர்மணிநெடுந்தெருவிற்சென்றார்.

(இ-ள்) நீக்கமின்றிப்பொருந்தி இருவரிடத்தும் அதிகரித்த காமவின்பத்தை அநுபவித்தபின்பு அக்கலவிப்போரினால் இளைத்தமென்மைத்தன்மையுள்ள மாதர்களைப்போல இராகத்தையொத்த வசனத்தையுடைய மங்கையர்கள் ஊடலில் நீக்கிவிட்ட பூமாலைகள் வண்டுடனிருந்து தேன்துளிக்கும்படியாகிய அழகுள்ளநெடியவீதியிற்சென்றார்கள் — எ - று. (௮)

கலவியினாலிளைந்தமாதரை எடுத்துக்காட்டினமையால் நீக்கப்பட்டமாலைகள் வாடியிருக்கின்றனவென்பதாயிற்று.

நெய்திரணரம்பிற்றந்தமழலையினியன்றபாடற் ... ... *
றைவருமகரவீணைதண்ணுமைதழுவித்தாங்கக் ... ... *
கைவழிநயனஞ்செலக்கண்வழிமனமுஞ்செல்ல ... ... *
வையநுண்ணிடையாராடுமாடகவரங்குகண்டார் ... ... ... *

(இ-ள்) நெய்திரளும் நரம்புடன்தந்த மழலைச்சொல்லால் இயலுகின்ற இசைப்பாடலைத்தழுவிய மகரவீணையானது முழவநாதத்தைத் தழுவிநிற்கவும், அபிநயங்காட்டும் கையின்வழியே பார்வைசெல்லவும், கண்வழியே மனஞ்செல்லவும், (உண்டோவில்லையோவென்று) சந்தேகிக்கத்தக்க நுட்பமாகிய இடையினையுடையமாதர்கள் நடனஞ்செய்கின்றபொன்னாலாகிய நிருத்தசாலையைப்பார்த்தார்கள் — எ - று. (௯)

பூசலினெழுந்தவண்டுமருங்கினுக்கிரங்கிப்பொங்க ... ... *
மாசறுபிறவிபோலவருவதுபோவதாகி ... ... ... *
காசறுபவளச்செங்காய்மரகதக்கமுகுபூண்ட ... ... ... *
ஊசலின்மகளிர்மைந்தர்சிந்தையோடுலவக்கண்டார் .. ... *

(இ-ள்.) போருடன் மேலெழுந்தவண்டுகள் இடைக்காக இரக்கமுற்று ஏங்கவும், குற்றத்தைப்பொருந்திய பிறவியைப்போல வருகின்றதும் போவதுமாகிய குற்றம்நீங்கிய பவளம்போலச் செம்மைநிறமுள்ள காய்களையுடைய மரகதமணிபோன்ற கமுகமரங்களில் பிணிக்கப்பட்ட ஊசலினிடத்து மாதர்கள் தந்தங்கணவர்களுடைய மனத்துடன் ஆடிக்கொண்டிருப்பதைப்பார்த்தார்கள் — எ - று. (௰)

ஆடவர்மனம் தந்தமனைவியரிடத்துத் தப்பியிராதலின் சிந்தையோடுலவக் கண்டார் என்றது.

வரப்பறுமணியும்பொன்னுமாரமுங்கவரிவாலுஞ் ... ... *
சுரத்திடையகிலுமஞ்ஞைத்தோகையுந்தும்பிக்கொம்புங் ... *
குரப்பணைநிரப்புமள்ளர்குவிப்புறக்கரைகடோறும் ... *
பரப்பியபொன்னியன்னவாவணம்பலவுங்கண்டார் .. ... *

(இ-ள்.) அளவுநீங்கிய மணிகளும், பொன்னும், முத்துகளும், கவரிமிருகத்தின்வாலும், பாலைநிலத்தில் உண்டாகும் அகிற்கட்டைகளும், மயில்களின்கலாபங்களும், யானைத்தந்தங்களும், (ஆகிய இவற்றை) வரம்புகளை அணையாகநிரப்பிய மள்ளர்கள் குவிக்கும்படி கரைகளெங்கும் பரப்புகின்ற காவிரியையொத்த பல ஆவணங்களைப்பார்த்தார்கள்—எ-று. (௰௯)

குரம்பு-குரப்பு-என விகாரமாயிற்று.

வள்ளுகிர்த்தளிர்க்கைநோவமாடகம்பற்றிவார்த்த ... ... *
கள்ளனநரம்புவீக்கிக்கண்ணொடுமனமுங்கூட்டி ... .. *
வெள்ளியமுறுவற்றோன்றவிருந்தெனமகளிர்தந்த ... ... *
தெள்விளிப்பாணித்தீந்தேன்செவிமடுத்தினிதுசென்றார் ... *

(இ-ள்.) கூர்மையாகிய நகங்களுள்ள தளிர்போன்ற கையானது நோகும்படி முறுக்காணிகளைப்பற்றி ஒழுகாநின்ற மதுவைப்போல நரம்புகளை வலியுறுத்தி கண்களுடன் மனதையுஞ்சேர்த்து வெண்மைநிறமுள்ள தந்தங்கள் சிறிதுதோன்றும்படிவிருந்தாக மாதர்கள் தருகின்ற தெளிந்த இசையாகிய மதுரமுள்ள தேனைக்காதுகளினாலுண்டு இனிதாகப் போனார்கள்-எ-று.

விளிப்பாணி-எ-து இருபெயரொட்டுப்பண்பு.

கொட்புறுகலினப்பாய்மாகுலான்மகன்முடுக்கிவிட்ட ... ...*
மட்கலத்திகிரிபோலவயின்வயின்வருவமேலோர் .. ... *
நட்பினினிடையறுதஞானிகளுணர்வினொன்றாய்க் ... .. *
கட்புலத்தினையவென்றுதெரிவிலதெரியக்கண்டார் ... .. *

(இ-ள்.) சுழலுதலைப்பொருந்திய கடிவாளம்பூட்டிய தாவிச்செல்லுங்குதிரைகள் குயவன் விரைவாகச்சுழற்றிவிட்ட மண்பாண்டஞ்செய்யுங் கருவியாகிய சக்கரம்போல இடங்கடோறும் வட்டமாகச்சுழலுகின்றவை பெரியோர்களுடைய நட்பைப்போல இடையில் நீங்காதவைகளாயும் ஞானவான்களுடைய அறிவைப்போல ஒன்றாகியும், கட்பார்வைக்கு இத்தன்மையானவைகளென்று தெளிவில்லனவாய்த்தோன்றும்படிப்பார்த்தார்கள். ()

வட்டமாகச்சுழலுங் குதிரைகளைக்கண்டார்கள்-எ-து- மேலோர்நட்பு மத்தியிலேவிட்டு நீங்காமலிருப்பதுபோல வட்டமாகவருகின்றது, ஒருகுதிரையோடொன்று சுழலுவருகின்றவேகத்தினால இடை—வெளிதோன்றாமல கொள்ளிவட்டம்போல மெய்ஞ்ஞானிகளுணர்வு ஐம்புலன்வழிகளிற்சென்று கலங்காமல பிரமத்தைப்பற்றிய தன்மையைப்போலவேயொன்றாகவருதலால் ஞானிகள் உணர்வினொன்றாயெனவும், விரைவாகவருதலாலினைது வருகின்றதென்றுதெரியவொண்ணாமையால் தெரிவில தெரியக்கண்டாரெனவுங் கூறினார்.

வாளரம்பொருதவேலுமன்மதன்சிலையும்வண்டின் .. ...*
கேளொடுங்கிடந்தநீலக்கருங்கண்ணுஞ்செங்கிடையுங்கொண்டு......*
நீளிருங்களங்கநீக்கிநிரைமணிமாடநெற்றிச்... ... ... *
சாளரந்தோறுந்தோன்றுஞ்சந்திரவுதயங்கண்டார் ... ...*

* (இ-ள்.) ஒளிபொருந்திய அரத்தினால் அராவப்பட்ட வேலாயுதமும் காமன்வில்லும் வண்டின்கூட்டங்களோடு பொருந்திய நீலமலர்களும்

செங்கயற்றியுருட்டி வேற்படைபோன்ற நெடியகண்களையுடைய மாதர்கள் சூதாட்டம் ஆடும் பலஇடங்களையும் நோக்கினார்கள்-எ-று. (௧௭)

பங்கயங் குவளை யாம்பல்படர்கொடி வள்ளை நீலஞ் ... ... *
செங்கிடை தரங்கங்கெண்டை சினைவரால் வினையதேம்பத் .. ...*
தங்கள் வேறுவமையில்லாவவயவந் தழுவிச்சாலு ... ... *
மங்கையர்விரும்பியாடும்வாவிகள் பலவுங்கண்டார்... ... *

(இ-ள்) தாமரைமலர்களும் செங்கழுநீர்மலர்களும் செவ்வல்லிமலரும்படர்ந்தகொடிகளும் வள்ளைச்செடிகளும் நீலோற்பலமலர்களும் செஞ்சடையும் அலைகளுஞ் சேல்மீன்களும் சினைகொண்ட வரால்மீன்களுமாகிய இவைகள் நிறைய வேறோருவமையிலலாத தங்கள் அவயவங்களுடன் தழுவிக்கொண்டு மிகுந்தமாதர்கள் விருப்பத்துடன் ஆடுகின்ற பலதடாகங்களையுங் கண்டார்கள்—எ-று. (௧௮)

முகம்-கண்-வாய்-இடை காது-வயிற்றுமடிப்பு-அதரம்-கணைக்கால் இவைகள்மேற்கூறிய உவமானப்பொருள்களுக்குஉவமேயப்பொருளாகக்கொள்க.

இயங்குறுபுலன்களங்குமிங்குங்கொண்டேகவேகி ... ...*
மயங்குபுதிரிந்துநின்றுமறுகுறுமுணர்வினென்னப் ... ... *
பயங்களிற்கலவைச்சாந்தும்புணர்முலைச்சுவடுநீங்கா ... *
வயங்கெழுகுமரர்வாளாட்டாடிடம்பலவுங்கண்டார் ... ... *

(இ-ள்) பயிலுகின்ற ஐம்புலன்கள் பலவிஷயங்களிற்கொண்டு செல்லுகையால் அவைகளுடன்சென்றுமயங்கிச்சஞ்சரித்து நின்றுகலங்குதலைப்பொருந்துகின்ற அறிவைப்போலத் தோள்களில் கூட்டுவேர்க்கங்கள்சேர்ந்த சந்தனக்குழம்பும் (தம்மூ) னொத்த கொங்கைக்குறிப்பும் நீங்காத வெற்றிபொருந்தியவாலிபர்கள் வாள்விளையாட்டு ஆடும்பலஇடங்களையும்பார்த்தார்கள்

வெஞ்சினமுருவிற்றென்னுமேனியர்வேண்டிற்றீபு ... *
நெஞ்சினர்சன்கண்ணினெருப்புறுவனங்களன்னார் ... *
செஞ்சிலைக்கரத்தர்மாதர்புலவிசடிருத்திச்சேர்ந்த ... ... *
குஞ்சியர்சூழநின்றமைந்தர்தங்குழாங்கள்கண்டார் ... ...*

(இ-ள்) கொடியதானகோபத்தில் உருவிற்றென்றுசொல்லத்தக்க சரீரத்தையுடையவர்களும், இரப்பவர்களுக்குப்பொருளைக்கொடுக்காநின்றமனமுள்ளவர்களும், சிவனதுநெற்றிக்கண்ணினின்றுண்டாகுந்தீயினைப்பொருந்திவேகாதமன்மதனையொத்த அழகுள்ளவர்களும், செவ்வையாகியகருப்புச்சிலையேந்திய கையையுடையதத்தம் மனைவியரின்ஊடல்களை நீக்கிச்சிவந்தசிகையையுடையவர்களுமாய்ச்சூழ்ந்துநிற்கும், வாலிபர்களின்கூட்டத்தைப் பார்த்தார்கள்—எ-று. (௨௰)

வேறு.

பாகொக்குஞ்சொற்பைங்கிளியோடும்பலபேசி ... ... *
மாகத்தும்பர்மங்கையர்நாணமலர்கொய்யுந் ... ... ...*

தோகைக்கொம்பினன்னவர்க்கன்னநடைதோற்றுப் ... ...*
போகக்கண்டுவண்டினமார்க்கும்பொழில்கண்டார் ... ... *

(இ-ள்) (கருப்பஞ்சாறுகாய்ச்சும்) பாகினையொத்தமொழியினையுடைய பசியகிளிகளோடு பலவார்த்தைகள்பேசி சுவர்க்கலோகத்திலிருக்கும் அரம்பையாதிகள்வெட்கும்படி பூக்கொம்பானதுமயிற்சாயலையொத்தகொம்பனாகியமாதர்க்கு அன்னப்பட்சிகள் நடையினால் தோல்வியடைந்து போகப்பார்த்து வண்டுகளின்கூட்டம் ஆரவாரிக்கும்படியான சோலையைப்பார்த்தார்கள்—எ-று (உக)

உம்பர்க்கேயுமாளிகைபோலிநிழல்பாய ... ... ... *
இம்பர்க்கோன்றாநகர்நாட்டின்னெழில்காட்டிப் ... ... *
பம்பிப்பொங்கங்கைநிறைந்தபடமன்னன் ... ... *
அம்பொற்கோயிற்பொலிமதிசுற்றுமகழ்கண்டார்... ...*

(இ-ள்) தேவர்களிருப்பதற்குத் தகுதியாகப்பொருந்திய மாளிகைகளின் ஒழுங்காகியசாயையாய்வதினால் இவ்வுலகத்திலேகாணின்றதேவர்களுடைய நாட்டின் அழகைக்காண்பித்து அலைநெருங்கிப்பொங்குகின்றகங்கையைப்போல ஆழ்ந்திராநின்ற நால்வகைச் சேனையையுடைய சனகமகாராஜனின் அழகியபொன்னாகிய கோயிலையுள்ள மதிலைச்சூழ்ந்த அகழியைப்பார்த்தார்கள்—எ-று. (உஉ)

பொன் மாளிகையின் சாயல்நீரில் தோன்றுவதினால் பொன்னுலக மேல்வுலகத்தில்தோன்றுவதுபோற்காட்டி அரண்மனை மதிலைச்சூழ்ந்த அகழியைக்கண்டார்களெனக்கூட்டுக.

பொன்னின்சோதிபோதினினாற்றம்பொலிவேபோற் ... *
றென்னுண்டேனிற்றீஞ்சுவைசெஞ்சொற்கவியின்பம் ... *
கன்னிம்மாடத்தும்பரின்மாடேகழிபேடோ ... ... ......*
டன்னம்பாமூன்றுறைகண்டங்கடைகின்றார்....... ... ...*

(இ-ள்.) பொன்னினிடத்துள்ள பிரகாசத்தின் விளக்கம்போலவும், மலர்களிலிருக்கும் வாசனைப்பொலிவைப்போலவும், அழகும் நட்பும்பொருந்திய தேனிலிருக்கும் மதுரிக்கும் சுவையுள்ள செவ்வியசொல்லையுடைய செய்யுளின்பம்போலவும், கன்னிமாடத்தின் மேலிடத்திலிருந்த (அன்புள்ள) பெட்டையன்னத்துடன் ஆணன்னங்கள் கூடிக்கொண்டிராநின்றதுறையைநோக்கி அவ்விடத்தில ஒருபக்கமாய்ச் சென்றார்கள்—எ-று. (உங)

இனிச்சீதாபிராட்டி அத்துவந்ததையும் ஸ்ரீராமமூர்த்திகண்டதையுஞ்சொல்லுகின்றார்

செப்புங்காலைச்செங்கமலத்தோன்முதலியாரும் ... ... *
எப்பெண்பாலுங்கொண்டுவமிப்போருவமிக்கும் ... ... *
அப்பெண்டானேயாயினபோதிங்கினிவேறோர் ... ... *
ஒப்பெங்கேகொண்டெவ்வகைநாடியுரைசெய்வேம்... ... *

இ-ள்.) சொல்லுமிடத்தில் பிரமதேவன்முதலெல்லோரும் எந்தப்பெண்பாலையு மனதில்நாட்டிக்கொண்டு உவமிப்பவர்கள் உவமிக்கும்படியான

அந்தத்திருமகளே இங்கிருக்குஞ் சீதாபிராட்டியாயினபோது வேறே அயலில் ஒப்பு எவ்விடத்திற்கொண்டு எவ்வண்ணங்கருதிச்சொல்வோம்-எ-று ()

உமையாளொக்கும்மங்கையருச்சிக்கரங்குவித்து... ... ...*
கமையாண்மேனிகண்டவர்காட்சிக்களவைகாணா... .. ... *
இமையாநாட்டம்பெற்றிலமென்றாரிருகண்ணால் ... ... *
அமையாதென்றாரந்தரவானத்தவரெல்லாம்... ... ... *

(இ-ள்.) பார்வதியையொத்த (அழகுள்ள) மாதர்களெல்லவரும் உச்சியிற்கைகுவித்து வைத்துக்கொண்டுதொழத்தக்க குணநலமுள்ள சீதாபிராட்டியினுடையமேனியைக்கண்டவர்கள் பார்வை அம்மேனி அழகின் கரைகாணாமல் இமையாதகண்களைப் பெற்றிலமேயென்றார்கள், (இமையாநாட்டமுள்ள) அந்தரத்திலிருக்கும் தேவர்களெல்லாரும் இருகண்களால்அளவுபொருந்தாதென்றார்கள்—எ-று. (உரு)

வென்றம்மாலைத்தாரயில்வேலுங்கொலைவாளும்... ... ... *
பின்றம்மானப்பேர்கயலஞ்சப்பிறழ்கண்ணாள்... ... ... *
குன்றம்மாடக்கோவினளிக்குங்கடலன்றி... ... ... ... *
அன்றம்மாடத்துப்பரளிக்குமமுதன்னாள்... ... ... ... *

(இ-ள்.) அழகியமாலைவென்று வெற்றிமாலைபூண்ட கூர்மைபொருந்திய வேலும், கொலைசெய்வதற்கேதுவானவாளும், பின்னிட்டோடவும், பெரிய சேல்மீன்பயப்படவும், ஒளிவிடுகின்ற கண்களையுடைய சீதாபிராட்டி-மந்தரகிரியான தூணைச்சூழ்கின்றதினால் கடைந்துகொண்டு முன்கொடுத்த திருப்பாற்கடல்போலலையாமல் அன்று அந்தமாளிகையின் மேலிடம்அளித்தஅமுதத்தையொத்தவள்—எ-று. (உசா)

பெருந்தேரல்குற்பெண்ணிவளொப்பாளொருபெண்ணைத்... *
தருந்தானென்றாலன்றமலனின்னுந்தரலாமே ... ... ...*
அருந்தானந்தத்தேவரிரந்தாலமிர்தென்னு ... ... ... *
மருந்தேயல்லாதென்னினிநல்குமணியாழி... ... ... *

(இ-ள்.) பெரியதேர்த்தட்டினையொத்த அல்குலையுடைய இந்தச்சீதாபிராட்டியை யொப்பவளாகிய ஒருபெண்ணை பிரமதேவன் சிருட்டிக்க எண்ணினால் அவனாலும் இன்னுந்தரலாகுமோ (முன்னந்திருமகளாகிய இவளைத்தந்த) திருப்பாற்கடல் கொடுக்குமென்றால் தங்களிடத்திருக்கும் அமுதத்தைஅருந்திவிட்டுவந்து இன்னமும்வேண்டுமென்று தேவர்கள் இரப்பார்களாகில் அமுதத்தைக்கொடுக்குமேயன்றி வேறேயென்னகொடுக்கும்-எ-று

திருமகள் தன்னிடத்திருந்தமையால் எல்லாச்செல்வமுந்தந்தது அத்திருமகள் இங்குவந்துவிட்டமையால் அமுதமொன்றுமே தருமென்பதுதுணிவு.

அனையாண்மேனிகண்டபின்வண்டத்தாசாரும் ... ... *
வினையோர்மேவும்மேனகையாதிமிளிர்வேற்கண் ... ... *
இனையோருள்ளத்தின்னலினோர்தம்முகமென்னும் ... ... *
பனிதோய்வானின்வெண்மதிக்கென்னும்பகலன்றே... ... *

சிந்தையு நிறையு மெய்ந்நலனும் பின்செல... ...*
மைந்தனு முனியொடு மறையப் போயினான் ... *

(இ-ள்.) சொல்லிமுடிவுபெறாத சௌந்தரியமுள்ள ஸ்ரீராமமூர்த்தியை அணைதற்கில்லாமையால் சீதாபிராட்டியார் சித்திரித்த பாவைபோல அசைவற்றிருந்தார் ஸ்ரீராமமூர்த்தியோவெனில், பிராட்டியாருடைய மனமும் நிறையு மெய்ந்நலனுந் தன்பின்றொடர்ந்துவரும்படி விசுவாமித்திரமுனிவருடன் மறையச்சென்றார் — எ-று. (௩௯)

*நிறை-வசப்படாமல் அடக்கத்தக்கவற்றை உள்ளடக்கி 'கொண்டிருத்தல்-மெய்ந்நலமாவது-கண்ணுந் தோளும் முகமுமுதலாயின அவயவங்களின் அழகு. மனமும் நிறையும் மெய்ந்நலனும் பின்செல்லுதலாவது நாணமுதலியவையும் அழகும் போயின என்பது தாற்பரியம் — ஓவியப்பாவைபோன்றனளென்றது தொகுத்துக்கூறியவை தீயனவென்று வகுத்திசைத்தார். சிந்தையு நிறையுமே யண்ணல் பின்செல என்றும் பாடங்கூறுவாருமுளர்.*

பிறையெனு நுதலவள் பெண்மை யென்படு(ம்) .. .. *
நறைகமழலங்கலா னயனகோசர... ... ... *
மறைதலு மனமெனு மதத்தயானையி ... ... ...*
னிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே... ...*

(இ-ள்.) வாசனையானது பரிமளித்துக்கொண்டிராநின்ற மாலையைச்சூடிய ஸ்ரீராமமூர்த்தியானவர் ஜானகியம்மையினுடைய கண்பார்வைக்குத் தெரியாமல் மறைந்தவளவில் அச்சானகியம்மையின் மனமாகிய மயக்கமுள்ள யானையினால் நிறையென்கின்ற அங்குசம் நிமிர்ந்துவிட்டது (ஆகலால்) பிறையினையொத்ததென்று மொழியத்தக்க நெற்றியினையுடைய ஜானகியம்மையின் பெண்தன்மையாதுபடுமோ — எ-று? (௪௰)

*மதத்தயானை நெறிகடந்து செல்லாதவண்ணம் பாகன் அங்குசத்தைக் காதில்மாட்டி இழுக்கும்போது அதற்கும் அடங்காமல் அவ்வியானைசெல்லுமாயின் அங்குசமாகிய இரும்பின்வளைவு நிமிர்ந்துவிடுதல்போல ஸ்ரீராமமூர்த்தியின் பின்றொடர்ந்த மனத்தை நிறையென்பது அடக்கவும் அடங்காமற்சென்றமையால் அந்நிறை அழிந்ததென்பது தாற்பரியம்.*

*நிறையழியவே பெண்தன்மையாகிய-நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு-என்பனவையும் நிலைமாறினவென்பார், பெண்மையென்படுமென்றார்,*

மாலுறவருதலு மனமு மெய்யுந்த... ... ... *
னூலுறுமருங்குல்போ னுடங்குவாணெடுங் .. ... *
காலுறுகண்வழி புகுந்தகாதனோய் ... ... ...*
பாலுறுபிரையெனப் பரந்ததெங்குமே...... .. *

(இ-ள்.) ஆசையானது பொருந்தும்படி வந்தவளவில் தன்னுடைய நூலிழையையொத்த இடைமெலிவதுபோல மனமும், சரீரமும், மெலிகின்ற ஜானகியம்மையினுடைய நெடிய நீர்க்காலொத்த கண்வழியாக உள்ளே நுழைந்த காமநோயானது பாலிற்பொருந்திய பிரையைப்போல உள்ளெங்கும்பரவிற்று — எ-று. (௪௧

நோமுறு நோய்நிலை நுவலகிற்றிலள் ... ... *
ஊமரின் மனத்திடை யுன்னிவிம்முவாள் ... ... *

காமனு மொருசரங் கருத்தி லெய்தனன்... ... *
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே... ... *

(இ-ள்) (இவ்வாறு காமநோய்பிறந்தவளவில்) வருந்துவாள் தனக்குப் பொருந்திய நோய்த்தன்மையை ஒருவருடனும் சொல்லாதவளாய் ஊமைகள் போலத் தன்மனதில் நினைத்துக்கொண்டு வசனப்படுகின்றாள் இப்படியிருக்க, வேகாநின்ற தீயினிடத்தில் விறகிட்டதுபோல மன்மதனும் தன் பஞ்சபாணங்களிலொன்றாகிய தாமரைமலர்ப்பாணத்தை அவள் கருத்தில் அழுந்தும்படி எய்தினான் — எ-று. (௬௨)

இந்தப்பாணம் காமசிந்தனையுண்டாக்குந் தன்மையுடையது இதனால் சீதாபிராட்டிக்கு ஆசை அதிகரித்ததென்பது கருத்து.

நிழல்விரி குண்டைமதனி னெய்யிடா... ... ... *
அழல்விடா மிளிர்ந்திரு மயிலொள் கண்ணினாள் .... *
சுழல்விரி கூந்தலுந் துகிலுஞ் சோர்தரத் ... ... *
தழல்விடு வல்லியே போலச் சாம்பினாள்... ... ... *

(இ-ள்.) நெய்பூசாமலும், நெருப்பிற்காய்ச்சாமலும், கூர்மைபெற்று விளங்காநின்ற ஐந்துமலரம்புகளுண்டாகுமாயின் அதனைப்பொறுப்பதாய் ஒளிவிடுகின்ற வுடலத்தின் வழியில் சென்றுலாவும்படியான கண்களையுடைய சீதாபிராட்டி சுருட்டி முடித்திராநின்ற அளகமும், வஸ்திரமும், நெகிழும்படி நெருப்பிலிட்ட பூங்கொடிபோலவாடினாள் — எ-று. (௬௩)

தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமும்... ... ... *
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும் .. ... ... *
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும் ... ... *
வழங்கிய கடலென வறியளாயினாள்... ... ... *

(இ-ள்.) ஒலிக்காநின்ற மேகலாபாரமும், நிறையுஞ் சங்குவளையல்களும், மழுங்கியமனமும், அறிவும், அழகும், இழந்த சீதாபிராட்டி தேவர்கள் கடைந்தபொழுதில் தன்னிடத்திலிருந்த பொருள்களையெல்லாம், அந்தத்தேவர்களுக்குக்கொடுத்துவிட்ட திருப்பாற்கடல்போல வறியவளாயினாள்-எ-று. (௬௪)

கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற ... ... *
நலங்குழை தரநகின் முகத்தினை யுண்டு ... ... *
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரப்... ...*
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினார்.. *

(இ-ள்) ஆபரணங்கள் குழைந்து நெகிழ்ந்தவும், நெடியநாணமுதலானவைகளும், மனத்தினிடத்தைவிட்டு நீங்கவும் நன்மையானது கெடவும் அனத்தினிடத்தில் மன்மதபாணத்தைப் பொருந்தி (வேட்கையானத்தினால்) வருந்துகின்ற மானைப்போல உயிர்வருந்திச் சோரவும், இருபக்கங்களிலும் பொன்னாலாகிய குழையணிந்த மயில்போன்ற சாயலையுடைய சீதாபிராட்டியை அருமையாக உள்ளே கொண்டுபோனார்கள் — எ-று. (௬௫)

சொரிந்தனநறுமலர்சுறுக்கொண்டேறின ... *
பொரிந்தனகலவைகள்பொறியிற்சித்தின ... *
எரிந்தவெங்கனல்சுடவிழையிற்கோத்தநூல்... ...*
பரிந்தனகரிந்தனபல்லவங்களே ... ... ... *

(இ-ள்.) சயனத்திற்பரப்பிய வாசனையுள்ளமலர்கள் சுறுக்கொண்டுஉடலில் தைத்தன, கலவைச்சந்தனக்குழம்புகள் பொரிந்தனவாய்ப்பொறிகள்போல உதிர்ந்தன, (உடலிற் காய்ந்தெழுகின்றகாமாக்கினிசுவாலையினால் ஆபரணங்களில கோத்திராநின்ற நூல்கள் அற்றன, மஞ்சத்திற்பரப்பிய துளிர்கள் கரிந்தன—எ-று. (௫௦)

தாதியர்செவிலியர்தாயர்தவ்வையர்... ... ...*
மாறுயரழுந்தினர்விழுந்துமாழ்கினர் ... *
யாதுகொலிதுவெனவெண்ணந்தேற்றலர் ... ...*
போதுடனையிலிநீர்சுழற்றிப்போக்கினர் ... ...*

(இ-ள்.) தாதிமார்களும், செவிலித்தாயர்களும் தாய்மார்களும் தமக்கைகளும் மிகுந்த துயரங்கொண்டவர்களாய்விழுந்து அழுதார்கள் இது என்னகாரணமென்று கருத்தைத்தெளியாதவர்களாய் மலர்களுஞ் சாதமுங்கலந்த ஆலாத்தி நீரைச்சுற்றி திருஷ்டிதோஷங்கழித்தார்கள்—எ-று. (௫௧)

அருகினின்றசைக்கின்றவாலவட்டக்காய் ... ...*
எரியிடை மிகுத்திடவிழையுமாலையுங் ... ... *
கரிகுவதீருவகனல்வகாட்டலால் ... ... ... *
உருகுபொற்பாவையுமொத்துத்தோன்றினள் ... *

(இ-ள்.) (சேடிமார்) அருகிலேநின்று அசைக்கலானுண்டாகிய ஆலவட்டக்காற்றானது விரகாக்கினியை அதிகரிக்கப்பண்ணுவதனால் ஆபரணங்களும், பூமாலைகளும், கரிகின்றவைகளும், தீய்கின்றவைகளும், அழலுகின்றவைகளுமாகத்தோன்றுகையால், சீதாபிராட்டி உருகாநின்றபொற்பிரதிமையையொத்துத்தோன்றினாள்—எ-று. (௫௨)

அல்லினைவகுத்ததோரலங்கற்காடெனும்... ...*
வல்லெழுவல்லவோர்மரகதப்பெருங்... ... ...*
கல்லெனுமிருபுயங்கமலங்கண்ணெனும் .. ... *
வில்லொடுமிழிந்ததோர்மேகமென்னுமால் ... *

(இ-ள்.) ஒப்பற்றபூமாலையணிந்திராநின்றகாடென்னும்அவருடையகேசமானது இருளைக்கொண்டுவகுத்ததென்றுசொல்லுவள், அன்றியும் அவருடைய இரண்டுபுஜங்களும், வலியஎழுவாகிய தூணல்ல, பெரியமரகதமலைபோல்வனவென்று சொல்லுவள் கண்களானவை தாமரைமலர்கள்போன்றனவென்றுசொல்லுவள் - வில்லுடனே பூமியில்வந்த மேகமேயென்றுஞ்சொல்லுவள்—எ-று. (௫௩)

நெருக்கியுட்புகுந்தருநிறையும்பெண்மையும்... *
உருக்கியென்னுயிரொடுமுண்டுபோனவன் ... *
பொருப்புறழ்ந்தோள்புணர்புண்ணியத்தது ... *
கருப்புவில்லன்றவன்காமனல்லனே... ... ... *

(இ-ள்.) நெருக்கி என்னுள்ளத்தில் நுழைந்து அருமையாகிய நிறையினையும் பெண்தன்மையினையும், என்னுயிரையும் உருக்கி கிரகித்துக்கொண்டு போனவருடைய மலையையொத்த புயத்தைப்புணரும்படியான புண்ணியத்தையுடையது கரும்புவில்லல்ல, ஆகையால்மன்மதனல்ல—எ-று. (௫௪)

சௌந்தரியத்தினால் மன்மதனேயென்றெண்ணி அவர்தோளிற்பொருந்திய வில்லானது மூங்கில்வில்லானதினால் மன்மதன் அல்லவென்று தெளிந்தார் அவன்தோள்புணர் புண்ணியத்தது என்பதினால் தனக்கந்தப்புண்ணியமில்லையே யென்றெண்ணங்கொண்டாளென்பது குறிப்பெச்சம்.

பெண்வழிநலனொடும்பிறந்தநாணொடும் ... ... *
எண்வழியுணர்வுநானெங்குங்காண்கிலன் ... ... *
மண்வழிநடந்தடிவருந்தப்போனவன் ... ... *
கண்வழிநுழையுமோர்கள்வனேகொலாம் ... *

(இ-ள்.) பெண்பிறப்புக்குரியநலமும் நான் உண்டானகாலத்தே தோன்றியநாணத்தையும் என்னுடையநிறையினையுடைய அறிவினையும், நான் எவ்விடத்துங்காணாதவளாயிருக்கின்றேன் ஆகலால் மண்ணினிடத்தில் நடந்து அருமையாகிய தன்னுடைய பாதங்கள் வருந்தும்படிசென்ற அந்த ராஜகுமாரன் கண்ணின்வழியாக நுழையத்தக்க ஒப்பற்றகள்ளனோ—எ-று (௫௫)

இளமையில் தன்னைவிட்டுப்பிரியாத நாண்முதலானவை இப்போது இல்லாமையினாலே அவர்கிரகித்துக்கொண்டுபோய் விட்டாரோவென்று எண்ணுகின்றாளென்பது தாற்பரியம்.

இந்திரநீலமொத்திருண்டகுஞ்சியுஞ் ... ... *
சந்திரவதனமுந்தாழ்ந்தகைகளுஞ் ... ... ...*
சுந்தரமணிவரைத்தோளுமேயல ... ... *
முந்தியென்னுயிரையம்முறுவலுண்டதே... ...*

(இ-ள்.) இந்திரநீலரத்தினத்தையொத்து கறுத்தஅவருடையகேசமும் பூரணசந்திரனையொத்த முகமும் (முழங்கால்வரையில்) தாழ்ந்தகரங்களும் சௌந்தரியமுள்ள நீலமலையையொத்தபுயங்களும்அல்ல,இவைகள்உண்ணுதற்கு முன்னதாகஅழகிய புன்னகையானது என்னுயிரை கிரகித்துக்கொண்டது—எ-று. (௫௬)

படர்ந்தொளிபரந்துயிர்பருகுமாகமுன் ... *
தடந்தருதாமரைத்தாளுமேயல ... ... ...*
கடந்தருமதங்கலுழ்களிநல்யானைபோ ... ...*
னடந்ததுகிடந்ததென்னுள்ளநண்ணியே ... ... *

(இ-ள்.) (எனதுள்ளத்திற் பொருந்தியிருக்கின்றதுயாதெனில்) பரந்து

விரிமலர்த்தென்றலாம்வீசுபாசமும் ... ... *
எரிநிறச்செக்கருமிருளுங்காட்டலால் ... ... *
அரியவட்கனறருமந்திமாலையாங் ... ... ... *
கருநிறச்செம்மயிர்க்காலன்றோன்றினான் ... *

(இ-ள்.) மலர்ந்தபூவின் மணத்திற்படிந்து வருகின்ற தென்றற்காற்றாகி யவீசுகின்ற பாசக்கயிறும் தீநிறமாகிய செம்மேகத்தையும் இருளையுங்காட்டுதலினால் அரியவளாகிய ஜானகியம்மைக்கு அப்போது வெப்பத்தைத்தருகின்ற அந்திமாலையாகிய கருநிறமுஞ் செம்மயிருமுள்ள எமன்றோன்றி னான் — எ-று. (௬௨)

தென்றல்வீசுதலாலும் மாலைப்பொழுதுவந்தமையாலும்மிகுந்தவருத்தமுண்டாவதுணர்க

மீதுறைபறவைபாம்பரற்றயங்கிழ்விளி ... ... *
ஓதமென்சிலம்பொடுமுதிரச்செக்கரும் .. *
பாதகவிருள்செய்கஞ்சுகமும்பற்றலாற் ... ...*
சாதகமென்னவுந்தவழ்ந்தமாலையே ... ... *

(இ-ள்) மேலேயொலிக்காநின்ற பட்சிகளாகிய பறையும், இரைந்தொலிக்காநின்ற சமுத்திரமாகிய சிலம்பும், செவ்வானமாகிய இரத்தமும், பாதகம் போன்ற இருளாகியசட்டையும் பொருந்தியிருப்பதினால்அம்மாலைப்பொழுதானது பூதம்போலவுமிருந்தது—எ-று. (௬௩)

மாலைக்காலம் காவிற்சிலம்பணிந்து கருஞ்சட்டை தரித்துக்கொண்டு பறைசாற்றும் பூதம்போன்றது.

வேறு.

கயங்களெனுங்கனறேய்ந்துகடிநாண்மலரின்விடயம்பூசி... ... ...*
இயங்குதென்றன்மன்மதவேளெய்தபுண்ணினிடைநுழைய ... ... ...*
உயங்குமுணர்வுநன்னலமுமுருகிச்சோர்வாளுயிருண்ண ... .. ...*
வயங்குமாலைவானோக்கியிதுவோகூற்றின்வடிவென்றாள் ... ... ... *

(இ-ள்.) குளங்களாகிய அக்கினியில்மூழ்கியும், மலர்களின் வாசனையாகிய விஷத்தைப்பூசிக்கொண்டும் உலாவுகின்ற தென்றற்காற்றானது மன்மத வேளேவிய பாணத்தினாலுண்டாகிய புண்ணில்நுழைவதினால் வருந்துகின்ற உணர்வும் நல்லநலமும் அழிந்துசோர்கின்ற ஜானகியம்மை தன்னுயிரைக்கவரும்படி விளங்குகின்ற மாலைப்பொழுதுநிறைந்த ஆகாயத்தை நோக்கியிதுதானோஇயமன்வடிவமென்றுகூறினாள்—எ-று. (௬௪)

கடலோமழையோமுழுநீலக்கல்லோகாயாநறும்போதோ... ... ...*
படர்பூங்குவளைநாண்மலரோநீலோற்பலமோபானலமோ...... ... ...*
இடர்சேர்மடவாருயிருண்பதியாதோவென்றுதளர்வாண்முன் ... .. *
மடல்சேர்தாராணிறம்போலுமந்திமாலைவந்ததுவே ... ... ... ... *

(இ-ள்.) சமுத்திரமோ மேகமோ பெரிய நீலமலையோ நறிய காசாம்பூவோ பரந்தபுதியபொலிவுள்ளகுவளைமலரோ நீலோற்பலமலரோ கருநெய்தற்பூவோ இவைகளில் துன்பம்பொருந்திய மாதர்களுடைய உயிரைக்

ரகிப்பது எதுவோவென்று தளர்கின்ற சீதாபிராட்டியின் எதிரில் பூமடல் சேர்ந்த மாலையினையணிந்த ஸ்ரீராமமூர்த்தியின் நிறம்போலும் அந்திப் பொழுது வந்தது—எ-று. (௬௫)

கடல்முதலாக இங்கு எடுத்துக்கூறிய பொருள்களெல்லாம் ஸ்ரீராமமூர்த்தியினிறம் போன்றிருக்கின்றவைகளாயினும் அவைகளில்சிறந்தபொருள் எதுவோவென்று விருதுவாய்ப் போன்று ஸ்ரீராமமூர்த்தியின் மேனியைப்புகழ்ந்தானென்பது கருத்து.

மைவானிறத்துமீனெயிற்றுவல்லுடையுயிர்ப்பின்வளர்செக்கர்ப் ... ... ... ∗
பைவாயந்திப்படவரவேயென்னுமாலைத்துப்பகைத்தியால் ... ... ... ∗
எய்வானொருவன்கைஓயானுயிருமொன்றேயினியில்லை ... ... ... ∗
உய்வானுதவிப்பழிபூணவுன்றேயுனக்குப்பகையுண்டோ ... ... ... ∗

(இ-ள்.) ஆகாசமாகிய கருமைநிறத்தையும், நட்சத்திரங்களாகிய பற்களையும், வாடைக்காற்றாகிய சுவாசத்தையும் மிகுந்தசெவ்வானமாகிய படத்தையும், பொருந்தியமாலைப்பொழுதாகிய சர்ப்பமே நீயென்னகாரணத்தினாலே சூழ்ந்துவந்து பாய்கின்றாய்? பட்டபாணங்களை ஏவுகின்ற மன்மதனொருவனோய்கின்றானில்லன்; எனக்கு உயிரொன்றேயன்றி இனிவேறோருயிருமில்லை; நான்இவ்விதத்திலாவாது பிழைக்கும்படியிருக்க, நீயிந்தப்பழிபூணுவதற்கு உனக்கும் எனக்கும் பகையுண்டோ? இல்லையே—எ-று. (௬௬)

எனக்குள்ள ஒருயிரைவாங்க மன்மதன்பிரயோகித்திருக்கிறான்.

நீயெந்த உயிரை வாங்குதற்குப்பிரவேசிக்கிறாயென்று கூறினானென்பது கருத்தாயினும், உயிருமொன்றேயினியில்லையென்று கூறினானென்பது தாற்பரியம்.

நீலநிறமாகத்தோன்றுகின்ற எல்லைவரையில் ஆகாயமென்று பெரியோர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

மாலைக்காலமாவது பகற்காலமும் இராக்காலமும் சேருங்காலம்.

மருள்மாலையென்பதற்குப் பகலும் இரவும் தம்முள்வேறுபடாதவென்றும் பரிமேலழகியாருரையானுணர்க.

இனி இருளைக்குறித்துச் சொல்லுகின்றது.

ஆலமுலகிற்பரந்ததோவாழியிளந்ததோவவர்தம் ... ... ... ... ∗
நீலநிறத்தையெல்லோருநினைக்கவுருவாய்நிரம்பியதோ ... ... ... ∗
காலனிறத்தையஞ்சனத்திற்கலந்துகுழைத்துகாயத்தின் ... ... ... ∗
மேலுநிலத்துமெழுகியதோவினைக்குமிருளாய்விளைந்ததுவே ... ... ∗

(இ-ள்.) ஆலகாலவிஷமானது உலகிற்பரவினதோ! சமுத்திரமானது இளங்குமாரனாகிவியாபித்ததோ! அவருடைய நீலநிறத்தை எல்லாரும் நினைப்பதினாலே அது இவ்வண்ணமாய் நிரம்பியதோ! யமனுடைய நிறத்தை மையிலிட்டுக் கலந்து குழைத்து ஆகாசத்தின்மேலும், பூமியினிடத்தும், பூசப்பட்டதோ? துன்பத்தையுண்டாக்காநின்ற இருளாய்விளைந்தது—எ-று. (௬௭)

இவ்விருளும் துன்பம்விளைத்தலால் ஆலமுதலியபொருள்களை எடுத்துக்கூறினான்.

வெளிநின்றவரோபோய்மறைந்தார்விலக்கவொருவர்தமைக்காணேன் ... ∗
எளியள்பெண்ணெனிரங்காதேயெவ்வியாமத்திருளே ... ... ... ∗
ஒளியம்பெய்யுமன்மதனுமுனக்கிம்மாயமுரைத்தானோ ... ... ... ∗
அளியேன்செய்தவினையேயன்றிலாகியதோ ... ... ... ... ∗

(இ-ள்.) வெளியில்நின்றவரோ சென்றுமறைந்தார் அவ்வாறுசெல்லவொட்டாமல் விலக்குதற்கு ஒருவரையுங்காணாமல் வருந்துகின்றேன் - இந்தப் பெண் எளியளென்று இரக்கமுறாமல் இராப்பொழுதில் ஒளித்துநின்று பாணங்களை எவுகின்ற மன்மதன் இந்தமாயத்தையுனக்குப்போதித்தானோ ஒருவராலளிக்கப்படுந் தன்மையையுடையநான்செய்த தீவினையே நீயிந்த அன்றிற்பட்சியுருவமாகவந்தாயோ—எ-று. (௬௮)

ஆண்டங்கனையாளினையநினைந்தழுங்கும்வேலையகல்வானத் ... ... ... *
தீண்டநிமிர்ந்தபெருங்கோயிற்சிகாமணியின்வேதிகைவாய் ... ... *
நீண்டசோதிநெய்விளக்கம்வெய்யவென்றங்கவைநீக்கித் .. ... ... *
தூண்டல்செய்யாமணிவிளக்கின்சுடராலிருளைப்பகலசெய்தார் ... ...*

(இ-ள்.) அந்தவிடத்தில் சீதாபிராட்டியார் இவ்வாறு பலவாக எண்ணிவருந்துகின்றபோது அகன்ற ஆகாயத்தை யளாவும்படி உயர்ந்தபெரியமாளிகையில் சந்திரகாந்தத்தினால் செய்யப்பட்ட மேடையினிடத்திராநின்ற மிகுந்தபிரகாசமுள்ள நெய்த்தீபங்கள் வெப்பமுள்ளவைகளென்று அவைகளை நீக்கிவிட்டுத் தூண்டுதல் செய்யவேண்டாத மாணிக்கதீபங்களால் இருள்நீங்கிப் பகல்போல விளங்கும்படிசெய்தார்கள்—எ-று. (௬௯)

மேல் சந்திரோதயங்கூறுகின்றார். உதயகிரியில் சிந்தூரஅருவிவிழுந்த சிந்தூரக்காற்றிற்பிறந்து பநிருசதுர்யுகம்கிடப்பேறின முழுமாணிக்கம் இருளைக்கெடுக்கும் இதனைஅருகே இருள்பருகும் அருமணியென்னுஞ் சிந்தாமணியாலும் நச்சினார்க்கினியார் எழுதியிருக்கின்றவுரையினாலுங்கண்டுகொள்க. இது அரசியல்.

பெருந்திண்ணெடுமால்வரைநிறுவிப்பிணித்தபாம்பின்மணித்தாம்பின் .. *
விரிந்ததிவலையுதிர்ந்தமணிவிசும்பின் மீனின்மேல்விளங்க ... ... *
அருந்தவமரர்கலக்கியநாளமுதநிறைந்தபொற்கலசம் ... ... ... *
இருந்ததிடைவந்தெழுந்ததெனவெழுந்ததாழிவெண்டிங்கள் ... ... ...*

(இ-ள்.) மிகுந்த பலத்துடன் உயர்ந்ததாகிய பெரியமந்தர கிரியைமத்தாகநாட்டி அதிற்கட்டியவாசுகியென்னும் பாம்பாகியமணிகள் பொருந்தியகயிற்றினால் பாந்தநீர்த்துளிகளுடன் சிந்தியமணிகள் ஆகாயத்தில்பிரகாசிக்காநின்ற நட்சத்திரங்களினும்அதிகமாய்விளக்கும்படி தேவர்கள்உண்ணுதற்காகத் திருப்பாற்கடலைக்கலக்கியநாளில் அதனிடத்திலிருந்த அமுதம்நிறைந்த பொற்கலசமானது மேலேவந்தெழுந்ததுபோல சமுத்திரத்தினிடத்தில் வெண்மையாகியசந்திரன் உதயமாயிற்று—எ-று. (௭௰)

மணித்தாம்பிற் கட்டியதெனக் கூட்டுக.

வண்டாயபனுண்மறைபாடமலர்ந்ததொருதாமரைப்போது ... ... *
பண்டாலிலையின்மிசைக்கிடந்துபாருநீரும்பசித்தான்போல் ... ...*
உண்டானுந்திக்கடல்பூத்தவோதக்கடலுந்தான்வேறோர் ... ... ... *
வெண்டாமரையின்மலர்பூத்ததொத்ததாழிவெண்டிங்கள் ... ... ...*

(இ-ள்.) சமுத்திரத்தினிடத்து உதயமாகிய சந்திரன் பின்னும் எதனையொத்ததென்னில், பழைய ஆலிலையினிடத்துப் பள்ளிகொண்டு பசியுள்ள

வண்ணமாலைகைபரப்பியுலகைவளைந்தவிருளெல்லா ... ... ... ... *
முண்ணவெண்ணித்தண்மதியத்துதயத்தெழுந்தநிலாக்கற்றை ... *
விண்ணுமண்ணுந்திசையனைத்தும் விழுங்கிக்கொண்டவிறனன்னீர்ப் .. *
பண்ணைவெண்ணெய்ச்சடையன்றன்புகழ்போலெங்கும்பரந்துளதால் ...*

(இ-ள்.) அழகுள்ளமாலைப்பொழுதாகிய கையைப்பரப்பி உலகத்தை வளைந்துகொண்ட இருளையெல்லாம் கெடுக்கும்படி குளிர்ச்சிபொருந்திய சந்திரவுதயத்தில் உண்டாகிய நிலாக்கற்றையானது பரந்தநல்லநீர்வளமுள்ள வயல்கள்சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப்பமுதலியாருடைய புகழானது விண்ணுலகம் மண்ணுலகம் திக்குகள் என்னும் இவைகளையெல்லாம் தன்னுளடக்கிக்கொண்டு எங்கும் பரந்திருப்பதுபோல பரவியிருக்கின்றது—எ-று. (௭௪)

நிலாக்கற்றை யெங்கும்பரந்ததெனக்கூட்டுக.

நீத்தமதனின்முளைத்தெழுந்தநெடுவெண்டிங்களெனுந்தச்சன் ... ...*
மீத்தல்கரங்களவைபரப்பிக்குவெண்ணிலவாம்வெண்சுதையாற் ... *
காத்தகண்ணன்மணியுந்திக்கமலநாளத்திடைப்பண்டு... ... ... ... *
பூத்தவண்டம்பழையசென்றுபுதுக்குவானும்போன்றுளதால் ... ...*

(இ-ள்.) (இவ்வாறு சந்திரகிரணம் எங்கும்பரந்தது எத்தன்மைத்தெனில்) நீருள்ளதாகிய சமுத்திரத்தினிடத்தில் உதயமாயெழுந்தமிகுந்தவெண்மைநிறமுள்ள சந்திரனென்கிற தச்சன்-மேன்மேல் தனதுகைகளைப்பரப்பி மிகுந்தவெண்ணிலவாகிய வெண்சுதையினாலே உலகங்களை ரட்சியாநின்ற ஸ்ரீநாராயணமூர்த்தியினுடைய அழகியநாபியிலிராநின்ற தாமரைநாளத்திடமாக முன்னொருகாலுண்டாகிய அண்டமானது பழமையாயிருக்கின்றதென்றுகருதி அதுபுதிதாகும்படிசெய்கின்றவனாகியுமொத்திருக்கின்றது—எ-று (௭௫)

கரம்-கிரணம்-கை.

நீங்காமாயையவர்தமக்குநிறமொவ்வாமற்புறமேபோய் ... ... ...*
ஏங்காநிற்கவெறிகடற்குமெனக்குங்கொடியையானாயே .... ... *
ஓங்காநிற்கவிருளாய்வந்துலகைவிழுங்கிமேன்மேலும் ... ... ...*
வீங்காநின்றகருநெருப்பினிடையேயெழுந்தவெண்ணெருப்பே ... *

(இ-ள்) ஓங்குகின்ற இருளுருவமாய்வந்து உலகமனைத்தையுமறைத்துமேன்மேலும் அதிகரிக்காநின்ற கருநெருப்பினிடத்திலெழுந்த வெண்ணெருப்பே நீங்காதமாயையுடைய அவருக்குநிறத்தினால் ஒப்பாகாமையினால் உலகத்துக்குப் புறம்பாகப்போய் ஏங்கிக்கொண்டிராநின்ற அலைவீசுங்கடலுக்கும் எனக்கும் கொடியையாயினை—எ-று. (௭௬)

சந்திரோதயகாலத்திற் சமுத்திரமானது அதிகவோசையினையும் உடையதாதலினால் கடலுக்குங்கொடியையாயினை யென்றுகூறினார்.

வேறு.

கொடியையல்லைநீயாரையுங்கொல்கிலாய் ... ... *
மடிவிலின்னமுதத்தொடும்வந்தனை ... ... ... *

தாயரிற்பரிசேடியர்தாதுகு... ... ... ... ...*
வீயரித்தளிர்மெல்லணைமேனியிற் ... .. ... *
காயெரிக்கரியக்கரியக்கொணர்ந் ... ... ...*
தாயிரத்தினிரட்டியடுக்கினார் .. ... ... ... *

(இ-ள்.) தாய்மார் பரிவதுபோற் பரிகின்ற தோழிமார்கள் தாதுகள் சிந்துகின்றமலர்களையும், செம்மைநிறமுள்ள தளிர்களையும், மெல்லிய படுக்கையில் சீதாபிராட்டியின் மேனியிலுண்டாகிய வெதுப்புடன் அவீரகாந்தியால் கருகுந்தோறும் கருகுந்தோறும் கொண்டுவந்து இரண்டாயிரந்தரம் அடுக்கினார்கள்-எ-று. (அக)

கன்னிநன்னகரிற்கமழ்சேக்கையுள் ... ... ...*
அன்னமின்னனையாயினளாயவள்... .. ... ... *
மின்னின்மின்னியமேனிகண்டானென... ... *
சொன்னவண்ணலுக்குற்றதுசொல்லுவாம்... .. *

(இ-ள்.) கன்னிகாமாடத்தி லிருக்கும் பரிமளிக்கின்ற மஞ்சத்திலே ஸ்ரீசீதாபிராட்டி இவ்வண்ணம் இருந்தனள் அவ்விருந்தவளது மின்னலைப் போலவிளங்கிய மேனியைக் கண்டானென்று சொல்லப்பட்ட சக்கிரவர்த்தித்திருமகனுக்குப்பொருந்திய செய்கையை இனி உரைக்கின்றோம் எ-று.

கமழ்சேக்கை என்பது- வெள்ளொக்கலர். செஞ்செவியர் என்பனபோல மலர்ச்சேக்கையென்பதைக் குறிப்பானுணர்த்திற்று.

ஏகிமன்னனைக்கண்டெதிர்கொண்டவன்... ... *
ஓகையோடுமினிதுகொண்டுய்த்திடப் .. ... *
போகபூமியிற்பொன்னகரன்னதோர் ... .. *
மாகமாடத்தவரவைகினார்... .. ... ... *

(இ-ள்) (அவ்விடம்விட்டுச்)சென்று ஜனகமகாராசனைக்கண்டு அவ்வரசன் சந்தோஷத்துடன் எதிர்கொண்டு இனிமையாய் அழைத்துப்போய்ச் செல்லவிடச்சென்று போகபூமியிலிருக்கும் பொன்னகரை யொத்ததாகிய உயர்ந்த ஒருமாளிகையில் அவர்கள் தங்கினார்கள்—எ-று. (அரு)

வைகுமவ்வழிமாதவமியாவுமோர் .. .. ...*
செய்கைகொண்டுநடந்தெனத்தீதறு... ... ... *
மொய்கொள்வீரன்முளரியந்தாளினான்... ... *
மெய்கொண்மங்கையருண்முனிமேவினான்... .. *

(இ-ள்.) அங்கிருக்கும்போது பெருமைபொருந்திய தவமெல்லாம் ஒருவடிவங்கொண்டு நடந்ததுபோலக் குற்றமற்ற பராக்கிரமங்கொண்ட ஸ்ரீராமமூர்த்தியின் தாமரைமலர்போன்ற பாதத்தினால் சாபம்நீங்கிச் சரீரம் பெற்ற அகலிகையின் மைந்தராகிய சதாநந்தமுனிவர்வந்தார்—எ-று. ()

வந்தெதிர்ந்தமுனிவனைவள்ளலுஞ் ... ... *
சிந்தையாரவணங்கலுஞ்செந்நெறிர் ... ...*
அந்தமில்குணத்தானெடுதாசிக... ... ... *
டந்துகோசிகன்றன்மருங்கெய்தலும் ... ... *

(இ-ள்.) இவ்வாறு விசுவாமித்திரர்சொல்ல, முடிவில்லாத வலியதவவலைமையாகிய சதானந்தர் தவத்தாற்சிரேஷ்டரோ உமதனுக்கிரகம் இப்போது இருக்குமேயாயின் அரியபொருள்யாதாமிந்த வெற்றிவீரர்களாகிய ஸ்ரீராமலட்சுமணர்களுக்கு என்றுஞ்சொல்லி மேலும்—எ-று. (௮௯)

எள்ளிற் பூவையுமிந்திர நீலமும்...... ... ... *
அள்ளல்வேலையுமம்புதசாலமும் ... ... ... *
விள்ளுங்காவியுடைப்பானலுமேவுமெய் .. ... ...*
வள்ளறன்னைபதிமுகநோக்கியே... ... ... *

(இ-ள்.) எள்ளுதலில்லாத காயாமலரும், இந்திரநீலரத்தினமும், சேறு (முதலியவைகளை முதலியவை கலக்கும்) கடலும் மேகபடலமும் மலரும் பலரினையுடைய கருங்குவளையும் (தாமேசாதிரிசியத்தை) அவாவும் திருமேனியையுடையத்தபெரியோனாகிய அவ்விராமபிரானை (அவரது) பதிமுகத்தினை நோக்கி.

நறுமலர்த்தொடைநாயகநானுனக் ... ... *
கறிவுறுத்துவென்கேளிவ்வருந்தவன் ... ... *
இறைமைபெட்புவிக்கிறிப்பல்லாண்டெலா.... ...*
முறையினிற்புரந்தேயருண்முற்றினன் ... *

(இ-ள்.) நறுவியமலரானமைந்த மாலையணிந்த நாதனே; யான் நினக்குத்தெரிவிப்பேன்கேளாய், இந்த அரியதவத்தினராகிய விசுவாமித்திரரானவர் இராசாவாகப்பூமியின்கண் அநேககாலமாய்த் தருமமுறைப்படி அரசாண்டு அருணிறைந்தவராகி—எ-று. (௯௧)

ஈறில் பல்லாண்டெலாமெல்பது அநேககாலமாய் என வினையுரியாக் கொள்ளப்பட்டது, ஏகதேசமொத்துளது, பெரும்பான்மைவரும், பரிச்சேதம் இடையாது இவைவேலசமும் இல்லை. அசரியந்தருவேன் என்கின்ற உலகியல் வழக்குகண்டுணர்க.

அருண்முற்றினன் என்பது-முற்றுவினையை மேலைப்பாட்டினுஞ்சென்றனன் என்பதொடு முடிந்து வினையெச்சமாக்குக.

அரசின்வைகியறனினமைந்துழி... ... .... *
விரசுகானிடைச்சென்றனன்வேட்டைமேல் ... *
உரைசெய்மாதவத்தோங்குவசிட்டனும் ... ... *
பரசுவானவன்பாலணைந்தானரோ... ... ... *

இ-ள்.) இராச்சியத்திலிருந்து தருமபரிபாலனத்தின்கண் நின்றபோது வேட்டையின்பொருட்டு நெருங்கியகாட்டிலே சென்றனர் (அங்கே பிரமரிஷியென்றெல்லாராலுங்) கீர்த்திபண்ணப்படுகின்ற மகத்தான தவங்களில் உயர்ந்துள்ள வசிஷ்டராகிய பரமசிவனிடத்துக்கிட்டினார்—எ-று. (௯௨)

அரோ-அசைச்சொல். உரைசெய்மாதவத்து என்னுமிடத்தே பிரமரிஷிகட்கென்றெடுத்துக்கூறப்பட்ட தபோவிசேஷங்களி லென்றுமாம்.

வேறு.

அருந்ததிகணவன்வேந்தற்கருங்கடன்முறையினாற்றி ... ... *
இருந்தருட்குறிபென்னவிருந்துழியினிதுதீர்ச்சே... ......*

பணித்ததுபுரிவெனென்றுப்பார்த்திவனெழுந்துபொங்கிப் *
பிணித்தனன்சுரபிதன்னைப்பெயர்வுழிப்பிணியைவீட்டி......*
மணித்தடந்தோளிற்குக்கொடுத்திலோமறைகளியாவுங்... *
கணித்தவெம்பெருமவென்னக்கலைமறைமுனிவன்சொல்வான் *

(இ-ள்.) சொன்னதைச் செய்வேனென்று அரசன் எழும்பிக்களித்து ஆச்சுரபியைப் பிடித்துக்கட்டிக்கொண்டு புறப்படும்போது அக்கட்டியகட்டினையறுத்துக்கொண்டு வேதம் யாவற்றையுமோதி நிலையறிந்த எம்பெருமானே அழகியவிசாலமாகிய தோளையுடைய விசுவாமித்திரற்கு (என்னை) கொடுத்துவிடுகின்றாயோவென்றுகேட்க, கலைஞானங்களையும் வேதநூல்களையுமுணர்ந்தமுனிவர் (வசிஷ்டர்) சொல்லுவார்—எ-று. (கஎ)

கொடுத்திலெனியானேமற்றைக்குடைகெழுவேந்தன்றானே...*
பிடித்தகல்வுற்றனன்னைப்பெருஞ்சினங்கதுவநெஞ்சோ ....*
டிடித்தெழுமுரசம்வேந்தன்சேனையையாமேயின்று... ... *
முடிக்குமென்னலுமென்றுமொய்ம்மயிர்சிலிர்த்ததன்றே. *

(இ-ள்.) நானோ கொடுக்கின்றேனில்லை அந்தவெற்றிக்குடையுடைய ராசன் தானேயென்னைப்பிடித்துப்புறப்பட்டதெனச்சொல்ல, கயங்கோபங்கதித்து ஆத்திரத்துடனே இடியிடிக்காலென்ன, இடித்தெழும்பும்யுத்தபேரியுடைய ராசனது சேனையை நானே இப்போழ்து ஈறுகாண்பேன்பார் என்று (இந்தச்சுரபிக்கு) உடம்பின்மயிர்சிலிர்த்தது—எ-று. (கஅ)

பப்பரரெயினர்சீனர்சோனகர்முதலபல்லோர்... .... ...*
கைப்படையதனின்றுங்கபிலைமாட்டுதித்துவேந்தன் ... *
றுப்புடைச்சேனையாவுந்தொலைவுறத்துணித்தவோடும் ... *
வெப்புடைக்கொடியமன்னன்றனயர்கள்வெகுண்டுமிக்கார்....*

(இ-ள்.) சிலிர்த்தமாத்திரத்தில் அந்தக்கபிலையினிடத்துநின்றும் பப்பரர் மறவர் சீனர் சோனகர் முதலிய பல (வலியமிலேச்ச) கணங்கள் தத்தங் கையகத்துக்கொண்ட ஆயுதங்களுடனே பிறந்துவந்து வேந்தனுடைய வல்லமைபொருந்திய சேனைகள்யாவற்றையும் முழுதுமற மடித்துவிட்டதன் மேல் கோபங்கொண்ட கொடிய விசுவாமித்திரருடையகுமாரர்கள் ஆக்கிரமித்து(மிகுந்தார்) மேல்வீழ்ந்தார்—எ-று. (க௯)

பப்பரர் - பப்பரதேசத்தவர், இமயத்துவடக்கின்கணுள்ளார், தந்தாரியருளொருசாரார், இப்பெருமுகலந்தொரு குழுஉவாயினர், சீனர் இக்காலத்தே படைவலத்துநாலலரேனும் அக்காலத்தாண்மையிற் சிறந்திருந்தனர், இப்பொழுது பப்பரராசனுக்கடங்கிய அரசியலுடையோர், சோநகர் யவனருளொருசாரார், இவரை மகபமதியராயுணர்கின்றமை இந்நாட்டுவழக்கம்பற்றி, இமமிலேச்ச சனங்கட்கு வரலாறு புராணத்தால் வேறுகாட்டிக்கொள்வாருமுளர், இன்னவையவிசேஷங்களை இராமாயண சம்பிரதாயத்துள் விரித்துரைக்குதும்.

சுரபிதன்வலியிதன்றுங்கருதிநாலுணரவல்ல... ... ... *
வரமுனிவஞ்சமென்றுமற்றவன்சிரத்தையின்னே ... .... *

ரும் எதிரோர்ந்து தன்னைருகேகிட்டிய அவ்வஜ்ரத்தை விழுங்கிப்பொலிந்திருந்தனர்- அவரது பொலிவுள்ள திருமேனியெங்கும் போர்ப்படையானது வலிகெட்டுத் தீப்பொறிகள்சிதற—எ-று. (௩௧)

கண்டனரசன்காளுக்கலைமறைமுனிவர்க்கெல்லாந் ... ... *
திண்டிறல்வலியுந்தேசுமுளவெனச்சீரிதம்மா... ... *
மண்டலமூழுதுங்காக்குமொய்ம்பொருவலியன்றென்று ... *
ஒண்டவம்புரியவெண்ணியும்பர்கோன்றிசையையுற்றான் ... *

(இ-ள்.) அதனை விசுவாமித்திரர்கண்டார் அவ்வாறுகண்டு அந்தக்கலைகளைக்கொண்ட வேதமுனிவர்களுக்கெல்லாம் திண்ணிய திறல்கொண்ட வலிமையும் பிரமதேஜஸ்உளவென்றுமே இதுசிறந்தது-உலகமுழுமையுங்காப்பாற்றுகின்ற வல்லமை ஒருவலிமையல்லவென்று ஒள்ளியதவத்தைப்போய்ச்செய்யவெண்ணி இந்திரன்திசையைச்சேர்ந்தார்—எ-று. (௩௨)

இப்பலம் க்ஷத்திரியபலம்- பிரம்மதேஜோபலம் - என்கிற வால்மீகி ப்ரோக்தத்தை இவ்விஷயத்தில் பழமொழிபோல் வழக்கினிடத்துக்கூறுவாருமுளர்.

மாண்டமாதவத்தோன்செய்கவலைபோமனத்தினெண்ணிப் .. *
பூண்டமாதவத்தனாகியரசர்கோன்பொலியநீர்மை ... ......*
காண்டலுமமரர்வேந்தன்றனக்குறாகருத்திறேடுந் ... ... *
தூண்டினனரம்பைமாருட்டிலோத்தமையெனுஞ்சொன்மானை

(இ-ள்) இராசாதிராசனாகிய விசுவாமித்திரர் மாட்சிமைமிகுந்ததவத்தை வசிஷ்டமுநிவர்செய்து காட்டிய வல்லமைச்செயலையே தம்முடையமனதிலெண்ணி மகத்தாயதபசுகளைப்பண்ணும்படி மேற்கொண்ட சங்கற்பத்தினராகி இருந்தகாரியத்தைக் கண்டவுடனே இந்திரன் உள்ளநிளஞ்சியகருத்துக்கொண்டு (அரம்பைமாதரென்னப்படும்) தெய்வஸ்திரீகளுக்குள்ளே திலோத்தமையென்கிற புகழ்மிகுந்த மான்போன்றவளை தூண்டிவிட்டான்—எ-று. (௩௩)

அன்னவன்மேனிகாணுவனங்கவேள்சரங்கள்பாயத் ... ......*
தன்னுணர்வழிந்துகாதற்சலதியினழுந்திவேந்தன் ... ... *
பன்னரும்பகறீர்வுற்றுப்பருணிகர்தெரிந்தநூலி .. ... *
னன்னயமுணர்ந்தோனாகிநஞ்செனக்கனன்றநக்கான் ... *

(இ-ள்.) அவளுடைய உடம்பின் மேனியைக்கண்டதனால் மன்மதனுடைய பாணங்கள்பாய அதனால் தம்முடைய அறிவுகெட்டுக் காமக்கடலினுள்ளே அமிழ்ந்திப்போய் விசுவாமித்திரர் சொல்லரிய பகலநந்தந் தொலைத்துத்தெளிவுடையோர் ஆய்ந்தோதிய சாஸ்திரத்தின் நல்லபொருளைத்தெரிந்தவராகி ஆலாலத்தைப்போல அழன்றநகைசெய்தார்—எ-று. (௩௪)

விண்முழுதாளிசெய்தவினையெனவெகுண்டுநீபோய் ... *
மண்மகளாதியென்றுமடவறான்னையேவிக் ... ... ...*
கண்மலர்சிவப்பவுள்ளங்கறுப்புறக்கடிதினேகி ... ... *
எண்மரின்வலியனாயமன்றிசைதனையுற்றான் ... ... *

(இ-ள்.) தேன்பொருந்திய மென்மையாகிய மலராற்கலந்த மாலையை யுடையானே, நீ அரசனோடுஞ்சென்று வேள்விச்சாலையைச்சேர்ந்து இம்மந்திரங்களை ஆராய் (அப்பொழுது) தேவர்களும் பிரமனும் சிவனும் வந்துசேர்வர் திர்த்திருந்த வேள்வியும் முற்றுப்பெறும் உனதுயிர்க்குமுடிவு உண்டா காதென்றுசொல்லி அச்சிறுவன் துதித்துக்கொண்டே நீக்கிப்போனான்.()

வேள்வியும் என்னும் இறந்தது தழீஇய எச்சவும்மை. விசுவாமித்திரரெச்சக்குறிப்பு பழிச்சு என்னும் முதனிலைத்தொழிற்பெயர் பொருளைப்பெயர்த்தென்னும் வினைக்கு அடைமொழிப்பொருளாக வேற்றுமைசெய்தது,

மறைமுனியுரைத்தவண்ணமகத்துறைமைமற்றதனைச் ... ... *
சிறையுறுகலுழனன்னஞ்சேமுகற்பிறவுமூறும் ... ... *
இறைவர்தொக்கமரர்சூழவிளவற்றன் னுயிருஞ்வேந்தன் ... ... *
மூறகருமகமுங்காத்தார்வடதிசைமுனியுஞ்சென்றான்..... *

(இ-ள்) அச்சிறுவன் கௌசிகமுநிவர் கூறியவாறே வேள்வித்துறையில் மந்திரத்தை ஆராய, சிறைவளப்பத்தையுடைய கருடனும், அன்னமும், இடபமுமுதலிய பிறவற்றையும், ஊருகின்ற இறைவர்கள், தேவர்கள் சூழும்படி சேர்ந்து அச்சிறுவனுடைய உயிரையும், அரசன் வேதமுறைப்படிசெய்த யாகத்தையும் காத்தார்கள். வடதிசைக்கண் கௌசிகமுநிவருஞ்சென்றார்.()

வடாதிசைமுனியுநண்ணிமலர்க்கரநாசிவைத்தாங் ... ... *
கிடாவுபிங்கலையாணையவிதயத்துடெழுத்தொன்றெண்ணி . *
விடாதுபல்பருவநிற்பமூலமாமுகடுவிண்டு ... ... ... *
நடாதிருட்படலமூடச்சலித்தனதலமூந்தாவி... ... .. *

(இ-ள்.) இக்கௌசிகமுநிவரும் வடதிசையைச்சேர்ந்து தாமரைமலர் போன்றகரத்தை நாசியின்மீது வைத்து இடகலை பிங்கலையினூடு அடங்க இதயத்தில் மூலமாகிய ஓரெழுத்தைத் தியானித்து அந்நிலையைவிடாமல் பலநாள் நிற்கப் பெருமைதங்கிய மூலமுகடுவிரிந்து தடுக்கப்படாமல் இருட்பிழம்பு தாவிப்போர்த்தலினால், புவனங்கள்யாவும் நடுங்கியன-எ-று.()

வடாதிசை என்பது-எதுகைநோக்கி நீட்டியது. அன்றிவடாது என்னும் வினைக்குறிப்புப்பெயரின் ஈறுதொக்கதெனினுமமையும். வடாதிசைமுநியும் நண்ணி என அநுவதித்தார், இத்திசையென்றமே தாங்கருதியதவம்பேறு பெறுதற்கிடனாய்நிற்றலின்.

இடாவென்னும் வடமொழி சந்திக்கலாவெண்மதி தயாவிறெழ தண்ணளி யென்பன போல ஐகாரமாகத்திரியாது வந்தது உ-சாரியை.

வேறு.

எயிலெரித்தவன்யானையுரித்தநாள் ... ... ... *
பயிலுறத்துரிபோர்த்தநன்பண்பெனப் ... *
புயல்விரித்தெழுந்தாலெனப்புகைவ ... ... *
குயிலுறுத்திக்கொழும்புகைவிம்மவே ... ... *

(இ-ள்) திரிபுரத்தையெரித்தவன் யானையையுரித்தநாளில் பழகுதலைப்பொருந்துவித்து அச்சருமத்தைப்போர்த்த நல்லதன்மையைப்போலவும், மேகங்கள்விரிந்து எழுந்ததைப்போலவும், அத்தவசிகுச்சபுகை, உலகத்தில்அழுந்

(இ-ள்.) அந்தச்சொற்களைக் கேட்டமிந்தமுநிவர் தலையைவணங்கி இரண்டுசோங்களையுங்குவித்துத் தாங்கருதிய நல்வினைப்பயன் கிடைத்ததென்றுகளிப்பிலுயர்ந்தார் பின் அங்குவந்ததேவர்கள் தத்தம் இடத்துக்குச்சென்றனர்-எ-று. (௱௩௯)

ஈதுமுன்னர்நிகழ்ந்ததிவன்றனை ... ... ...*
மாதவத்துயர்மாண்புடையாரிலை ... ... ... *
நீதிவித்தகன்நன்னருளோர்ந்தனிர் ... ... ... *
யாதுமக்கரிதென்றனனிறிலான் ... ... ...*

(இ-ள்.) இச்செய்திமுன்னடந்தது இவர்மட்டிலே பெருமையாகியதவத்திறலே உயர்ந்த பெருங்குணத்தையுடையாரில்லை, நீதியுள்ள மெய்ஞ்ஞானத்தையுடைய இவரது அருளைப்பெற்றீர்கள் எதுஉடக்கு அருமையையுடையதுளதென்றுமுடிவில்லாத ஆநந்தத்தையுடைய சதானந்தன்-எ-று. (),

நீதிவித்தகன்-சுட்டுப்பொருட்கண்வந்தது.

என்றுகோதமன்காதலன்கூறிட ... ... ...*
வென்றிவீரர்வியப்பொடுவந்தெழா ... ... *
ஒன்றுமாதவன்றொடுதொங்கிய ... ... ...*
மின்றையேத்திப்பெயர்ந்தனன்றன்னிடம் ... *

(இ-ள்.) கௌதமருடையபுத்திரன்,என்று இவ்வாறுசொல்லவெற்றியையுடைய சக்கரவர்த்தித்திருமகனும்,இளையபெருமாளும்,அதிசயத்தோடுகளித்தெழுந்துபெருந்தவத்தைப்பொருந்தினோனுடையபாதங்களைவணங்கி, நின்றபின்,சதாநந்தமுநிவன் இவர்களைத்துதித்துத்தன்னிடஞ்சேர்ந்தனன்.

அருங்கேடன்,கொடிச்செவலோய்,என்பனபோல அவ்விகுதியை ஒன்றென்பதனோடு புணர்க்க.

முனியுந்தம்பியுமொய்ம்முறையாற்றமக் ... ...*
கினியபள்ளிகளெய்தியபின்னிருட் ... ... *
கனியும்போல்பவன்கங்குலுந்திங்களுந் ... ... *
தனியுந்தானுமத்தையலுமாயினான்... ... ...*

(இ-ள்.) விசுவாமித்திரரும்,தம்பியும்,முறைமையால் தமக்குநெருங்கிய இனிய பள்ளிஅறைகளைச்சேர்ந்தபின் இருட்பழத்தையும் ஒப்பவராகியஸ்ரீராமபிரான் இராவுஞ்சந்திரனும் தன்தனிமையும் அச்சானகி பிராட்டியுமானான் எ-று. (௱௪௰)

கனியும் போல்பவனென்னும் உம்மை கடல் -மழை -இன்னவற்றையும் போல்வானெனப் பொருடரவின் ஆக்கவும்மை. தானுந்தேரும் பாகனும்வந்தென னலனுண்டான் என்பதுபோலத் தினைவிரவித் தலைமைபற்றி ஒருமைமுடிபேற்றது. இவ்வாறு கூறலால்தான்பிராட்டிபக்கல் அடைந்தவிரகத்தால் வேறுதுணையின்றி இராவாலும், திங்களாலும் சானகியி னுருவெளித் தோற்றத்தாலும்-வருந்தினனென்பது கருத்து.

விண்ணினீங்கியமின்னுருவிம்முறை ... ...*
பெண்ணின்னலம்பெற்றதுண்டேகொலோ ...*
எண்ணினீதெனநிதியேனிரு ... ... ... *
கண்ணினுள்ளுங்கருத்துள்ளுங்காண்பெனால் ... *

(இ-ள்) (தன்னிருக்கையாகிய) மேகத்தினின்றும் நீங்கிய மின்னலுருவமானது இவ்வாறு பெண்ணினது நல்லஇலக்கணங்களை அடைந்ததுண்டோ ஆராயுமிடத்து இத்தன்மையதல்லதென்று அறியேன் (அவ்வுருவத்தைப்புறத்தில் இரண்டுகண்களினும் அகத்தில் எல்லைதவினுளளுங்காணு நின்றேன்-எ-று. (௩௪௰)

காண்பெனென்பதில் எதிர்காலவிடைநிலை விண்மீதிருட்பாய் மண்மீதுழல்வாய் விரசுவார்முநிவர் விண்ணவரியக்கர் விஞ்சையர்முதலினோருலாசெய்வார் என்பனபோலத் தொழிலிடையறாத் தன்மையையுணர்த்திற்று.

கொல்-டு-என்பன அசைநிலை இதனைவடநூலார் வாக்கியாலங்காரமென்பர்,

வள்ளற்சேக்கைக்கரியவன்லவருறும் ... ... *
வெள்ளப்பாற்கடல்போன்மிளிர்கண்ணினான்......*
அள்ளற்பூமகளாருங்கொலோவென ... ... *
உள்ளத்தாமரையுள்ளுறைகின்றதே ... ... ...*

(இ-ள்.) வெள்ளரவப்பள்ளியில் கரிய திருமேனியையுடைய இறைவன் தங்கும்வெள்ளமாகிய பாற்கடலைப்போலப் பிரகாசியாநின்றகண்ணையுடையாள்என்னுடைய உள்ளமென்னுந் தாமரைமலரில்வந்திருத்தலால் சேற்றில் விளைகின்ற தாமரைமலரில் எழுந்தருளிய திருமகளோ-எ-று. (௩௪௧)

வள்ளலென்பது பண்பையுணர்த்திநின்றது வள்ளற்பெரும்பசுக்கள் என்னும்பாசுரத்தின்வியாக்யானத்தாலுமுணர்க கொல என்பது ஐயப்பொருட்டு ஓ ஈற்றசை.

அருளிலாளெனினும்மனத்தாசையால் ... ...*
வெருளுநோய்விடக்கண்ணின்விழுங்கலாற் ... *
றெருளிலாவுலகிற்சென்றுநின்றுவாழ் ... ... *
பொருளெலாமவள்பொன்னுருவாயவே... ...*

(இ-ள்.) என்பால் கருணையில்லாளாயினும் நான் அவள்பாற்கொண்டமனத்தாசையினாலும் அஞ்சுகின்ற நோயைத்தரும் விடம்போன்ற நேத்திரங்களினால் என்னை அவள் விழுங்கலாலும் உண்மையறிவில்லாத உலகத்தில்திரிந்தும் நின்றும் வாழ்கின்ற எல்லாப்பொருள்களும் அவளுடைய அழகிய உருவாயின-எ-று. (௩௪௨)

அஞ்ஞானத்தையே பெருக்குதலின் தெருளிலாவுலகென்றார் இவ்வாறு சடகோபரும் இருடருமா ஞாலமென்றருளிச்செய்தனர்.

பூணுலாவியபொற்கலசங்கனென் ... ... ...*
எணிலாகத்தெழுதலவென்னினும் ... ... ...*
வாணிலாமுறுவற்கனிவாய்மதி... ... ... ...*
காணலாவதோர்காலமுண்டாங்கொலோ ... ... *

(இ-ள்.) பூண்கள்அமைந்த பொன்னுலியற்றிய கலசங்கள்போன்ற கொங்கைகள் என்னுடைய பெருமையில்லாத மார்பின்கண் தடவுதலில்லவாயினும் (ஆனால்) ஒளிநிலாவிய முறுவலமைந்தகனிபோன்ற வாயையுடைய முகமாகிய மதியைக்காணக்கூடியதாகிய ஓர்காலமும் இனிஉண்டாகுமோ.

காலமென்பதன்கண் உம்மைதொக்கது,

யையுடைய செந்தாமரைகள் மலராகிய முகங்கண்மலர, செந்தசூரியன் அழுந்திய இருளாகிய உலாவுகின்ற புள்ளியமைந்தமுகத்தையுடைய யானையினது சருமமாகிய போர்வையைப்போர்த்த உதயகிரியென்கின்ற சிவனது நெற்றியைக் கிழித்தநேத்திரம்போல உதித்தான்-எ-று. (௱௰)

விசையாடற்புனம்படாவிக்குராயிதிப்பவுதயகிரிவிரிந்தநனி ... ... ... *
பசையாகவரையவர்கைநறைமலருநிறைபுனலும்பரந்தபாய ... ... *
அசையாதநெடுவரையின் முகடுதொறுமிளங்கதிர்சென்றணைந்தவேய்போ
நிசையாருமதகிரியைச்சிந்தூரமப்பியபோற்சிவந்தமாதோ ... ... [ன்

(இ-ள்.) வேகத்தையும்வெற்றியையுமுடையபச்சைநிறமுள்ள குதிரைகள் குளம்புகளினால் மிதித்தவிடமேலே உதயகிரியில் (உண்டாகி) பரந்தநுகள்கள் நனையும்படி அந்தணர்கள துகையால் தூவுகின்ற தேன்பொருந்திய மலரும்,நிறைந்தநீரும்,பரவிப்பாயாநிற்க அசைதலில்லாதநெடியமலைகளின் சிகரங்கள்தோறும் இளங்கதிர்கள்போய்ப்படிய,(அம்முகடுகள்) சூரியன்றிக்குகளை ஆளுகின்ற மதயானைகளுக்கு சிந்தூரத்தை அப்பியன போலச்சிவந்தன-எ-று. (௱௰௧)

பண்டிவருங்குறிபகர்ந்துபாசறையிற்பொருள்வயினிற்பரிந்துபோன ... *
வண்டுதொடர்நறுந்தெரியலுயிரனையகொழுநர்வரமணித்தேரோடுங் ... *
கண்டுமனங்களிசிறப்பவொளிசிறந்துமெல்வகலுங்கற்பினூர்போற் ... *
புண்டரிகமுகமலரவகமலர்ந்துபொலிந்தனபூம்பொய்கையெல்லாம் ... *

(இ-ள்.) பிரிதற்குமுன்னமே குறித்தகாலத்தைச்சொல்லிப் பாசறையினிடத்தும்பொருளினிடத்தும்விரும்பிச்சென்றவண்டுகள் தேனுண்ணத்தொடர்கின்ற நலமாகிய மாலையணிந்த தம்முயிரையொத்த நாயகர் தேர்க்கண்ணே வர,அதைக்கண்டு மனங்களிப்புமிக, அழிந்த மாமைநிறமிகுந்து மறைதலைநீங்கிய கற்புடையமாதர்போலப் பொலிவுள்ள தடாகங்களெல்லாந்தாமரைமலராகிய முகங்கள் மலர உள்ளேகளித்து விளங்கின-எ-று. (௱௰௨)

ஒடுவுருபு-ஏழாவதன்கண்வந்தது.

எண்ணரியமறையிற்றுநின்னரர்களிசைபாடவுலக்மேத்த ... ... *
விண்ணவருமுனிவர்களும்வேதியருங்கரங்குவிப்பவேலையென்னு ... *
மண்ணுமணிமுழவதிரவானரங்கினடம்புரிவாளிரவியான ... ... ... *
கண்ணுதல்வானவன்கனகச்சடைவிரிந்தாலென விரிந்தகதிர்களெல்லாம் ..*

(இ-ள்.) அளவிடலரிய வேதங்களினால்கின்னரர்கள் இசைபாடவும்,உயர்ந்தோர் துதிக்கவும்,தேவர்களும் முனிவர்களும் கைகூப்பவும், சமுத்திரமென்னு மார்ச்சனையமைந்த அழகியமுழவம் ஒலிக்கவும் ஆகாயமாகிய சபையில் நர்த்தனஞ்செய்கின்ற ஒளிபொருந்திய சூரியனாகிய நெற்றிக்கண்ணையுடைய கடவுளினது பொன்னிறமாகிய சடைகள் விரிந்தாற்போல விரிந்தனகிரணங்களெல்லாம்-எ-று. (௱௰௩)

ஒடு உருபு கருவிப்பொருட்டு,

கொல்லாழிநீத்தங்கோர்குனிவயிரச்சிலைதடக்கைக்கொண்டகொண்டல் ... *
எல்லாழித்தேரிரவியிளங்கரத்தாலடிவருடியனந்தறீர்ப்ப ... ... ...*
அல்லாழிக்கரைகண்டாயிரவாய்மணிவிளக்கமழலுஞ்சேக்கைத் ... ...*
தொல்லாழித்துயிலாதேதுயராழிநெடுங்கடலுட்டுயில்கின்றானே... ....*

(இ-ள்.) (தன்னடியார்பக்கலில் தவறுசெய்வோர்களைக்) கொல்லுகின்ற சுதரிசனத்தைநீக்கி அவ்விடத்திலொப்பற்ற வளைகின்ற திண்ணியகோதண்டத்தைப் பெருமையாகிய கையில்தாங்கிய மேகம்போன்றவனும் ஆயிரம்வாய்களையுடைய மாணிக்கத்தீபங்கள் எரிகின்ற அரவணையின்மேல் பழமையாகிய பாற்கடலில் துயிலாமல் துன்பமென்னும் ஆழ்ந்ததாகிய நெடியகடலில் உறங்குகின்றவனுமாகிய சக்கிரவர்த்தித்திருமகன் ஒளிபொருந்திய ஒற்றைவண்டிலையுடையதேரின்மேல் வருகின்றசூரியன் இளங்கிரணங்களினால் திருவடிகளைத்தடவி நித்திரையைநீக்க இராவாகிய சமுத்திரக்கரையைக்கண்டான்-எ-று. (ாஙுச)

துயிலாநின்ற உயர்ந்தோரை ஏனையோர் எழுப்பவேண்டின் பாதங்களை வருடவேண்டுமென்பது அறநூற்றுணிவாதலின் இரவிகரத்தாலடிவருடி அனந்தறீர்ப்பவென்றார்.

ஊழிபெயர்ந்தெனக்கங்குலொருவண்ணம்புடைபெயரவுறக்கநீத்த ... *
சூழியானையினெழுந்துதொன்னியமத்துறைமுடித்துச்சுருதியன்ன ... *
வாழிமாதவற்பணிந்துமனக்கினியதம்பியொடும்வம்பின்மாலை ... ...*
தாழுமாமணிமௌலித்தார்ச்சனகன்பெருவேள்விச்சாலைசார்ந்தான் *

(இ-ள்.) ஸ்ரீராமபிரான் ஊழிகாலஞ்சென்றாற்போல இராவானது ஒருவாறு தன்னிலையினின்றும் செல்லுதலால் நித்திரைநீங்கிய பட்டமணிந்த யானையைப்போல எழுந்து பழமையாகிய அநுட்டானவகைகளைமுடித்து வேதத்தையொத்த விசுவாமித்திர முநிவனைவணங்கி மனத்துக்கு இசைந்த தம்பியுடனே வாசனைபொருந்திய மாலைகள்தொங்குகின்ற பெரியமணிகளழுத்தியமுடியையும், மாலையையும் அணிந்த சனகமகாராசனுடைய பெரியயாகசாலையை அடைந்தான்-எ-று. (ாஙுரு)

வாழி- அசைச்சொல்.

முடிச்சனகர்பெருமானுமுறையாலேமறைவேள்விமுற்றிச்சுற்று ... *
பிடிக்குரலின்முரசியம்பவிந்திரன்போற்சந்திரன்றோய்கோயிலெய்தி..*
யெடுத்தமணிமண்டபத்துவெண்டவத்துமுனிவரொடுமிருந்தான்மைந்தர
வடித்தகுனிவரிசிலைக்கைமைந்தனுந்தம்பியுமருங்கினிருப்பமாதோ ... [ர்

(இ-ள்.) முடியை அணிந்த சனகமகாராசனுக்கு அரசனும் விதியின்படி வேதத்திற்சொல்லிய யாகத்தைமுடித்துச்சுற்றிலும்இடியோசையையுடைய பேரிகள்ஒலிக்கச்சந்திரன்தவழ்கின்றதன்னிருப்பிடத்தில்இந்திரனைப்போலச்சேர்ந்து உயர்க்கட்டிய இரத்தினமண்டபத்துப்பசுமையாகிய மாலையணிந்த குற்றமறச்செய்த வளைகின்ற கட்டமைந்த வில்லைத்தாங்கிய கரத்தையுடைய ஸ்ரீராமபிரானும் இளையபெருமாளும் தன்பக்கலிலிருக்க மதிக்கின்ற தவத்தையுடைய முநிவர்களோடு இருந்தான்-எ-று. (ாஙுசா)

முநிவரொடு மிருந்தானென்னும் [illegible] புருடயாரிசைருட்கள்வந்தது.

வென்றெடுத்தநிலையினருமிகல்புரிந்தவிவர்குலத்தோர் ... *
தோன்றலைப்பண்டிந்திரன்காண்விடையேறாய்ச்சுமந்தானும்.

(இ-ள்) இந்திரன், தனக்கு வெல்லுதற்கரிய அசுரர்களது தலைகளைத் துணித்து எனதுகற்பகநாட்டைத் தரக்கூடுமோவென்று குறையிரப்ப அவனுக்குவரங்கொடுத்து அதற்கிசைந்து தாங்கியநிலையையுடையவனாய் அவ்வசுரரோடு போர்புரிந்த இவர்களுடையமரபின் ஓரரசனை முன்னர் இந்திரனும் ரிஷபமாய்ச்சுமந்தான் அவனை ஆராய்ந்து பார்-ககுத்தசக்கரவர்த்தி.()

தானும், என்பதின் உம்மையை இந்திரனென்னும்பெயரோடுகூட்டுக.

அரசனவன்பின்னோனையென்றுமளப்பரிதால்... ... ...*
உரைகுறுகநிமிர்கீர்த்தியிவர்குலத்தோனொருவன்காண்... .*
நரைதிரைமூப்பிவையாற்றியிந்திராதியர்சாமல்... ... ... *
திரைகடலைநெடுவரையாற்கடைந்தமுதுகொடுத்தானும். ... *

(இ-ள்.) அவ்வரசனுக்குப் பின்வந்தவர்களை என்றும் அளவிடுதல் அரிது, இந்திரனும் நரைதிரைமூப்புமரணமாகிய இவைகளை ஒழித்துச் சாவாதவாறு ஒலிக்கின்ற பாற்கடலை நெடியமலையினால் கடைந்து அமுதுகொடுத்தவனும் சொல்சுருங்க மேற்செல்லுகின்ற கீர்த்தியையுடைய இவர்கள் குலத்தாராகிய ஓரரசன்காண்-எ-று. (ச)

கருதலரும்பெருங்குணத்தோரிவர்முதலோர்கணக்கிறந்தோர்.
திரிபுவனமுழுதாண்டுசுடர்நேமிசெலநின்றோர்...... ... *
பொருதுறைசேர்வேலினாய்புலிப்போத்தும்புல்வாயும் ... *
ஒருதுறையினீருண்ணவுலகாண்டோனுளனொருவன் ... .. *

(இ-ள்.) போர்செய்கின்ற வகையைச்சேர்ந்த வேலையுடைய -சனகமகாராசனே மூன்றுலகங்களையும் முழுமையும் ஆண்டு ஒளியையுடைய சக்கரஞ்செல்லும்படி நின்ற அரசர்கள் முதலாயினோர் உயர்ந்த குணத்தையுடையோராகிய இவ்வரசர் அளவிலார் (அவர்நிற்க) ஆண்புலியுமானும் நீர்நிலைகளினொருதுறையிலே நீரையுண்ண உலகத்தை ஆண்டவன் ஒருவனுண்டு.

புல்வாய்-அன்மொழித்தொகை.

மறைமன்னுமணிமுடியுமாரமும்வாளொடுமின்னப் ... ... *
பொறைமன்னும்வானவருந்தானவரும்பொருமொருநாள்...*
விறன்மன்னர்தொழுகழலாயிவர்குலத்தோன்விற்பிடித்த ...*
அறமென்னவொருதனியேதிரிந்தமராபதிகாத்தோன் ... *

(இ-ள்.) வெற்றியரசர்தொழுகின்ற பாதங்களையுடையவனே, சிற்பநூலிற்சொல்லிய இலக்கணமமைந்த இரத்தினமுடிகளும், மணிமாலைகளும், வளையாயுதங்களும், ஒளிசெய்யப் பொறுமையமைந்தசுரர்களும், அசுரர்களும், போர்செய்கின்ற ஒருநாள் இவர்குலத்து ஓரரசன் வில்லைத்தாங்கிய தருமக்கடவுளைப்போலத் தனியேதிரிந்து (அவ்வசுரர்களை ஒடுக்கி) விண்ணுலகத்தைக்காத்தான்-எ-று. (ரு)

மறைஎன்பது-தபதியரல்லார்க்கு மறைக்கப்பட்டமையிற் சிற்பநூற்குக் காரணப்பெயர்ப் பகுபதமாய்அஃதுணர்த்திய இலக்கணத்துக் கிண்டாயினமையின் ஆகுபெயர்.

முயற்கறையில்மதிக்குடையா யிவர்குலத்தோன் முன்னொருநாள்
செயற்கரியபெருவேள்வியொருநூறுஞ்செய்தமைத்தான் [ன்

(இ-ள்.) முயலாகிய களங்கமில்லாத சந்திரனையொத்த குடையையுடையானே இவர்குலத்தோனாகிய வோரரசன் முன்னே கயல்மச்சங்களையுடைய கடல்சூழ்ந்தவுலகெல்லாமுமுள்ளங்கை நெல்லிக்கனியைப்போலத் தன் னுணைக்குள்ளடக்கி வேதத்திற்சொல்லிய தருமத்தினெறியினது முறைமையினு லிந்திரனுக்கு மிடரைச்செய்யப்பிறராலியற்றற்கரிய அச்சுவமேதம் நூறுஞ்செய்துமுடித்தான்—எ-று. ககுத்சக்கரவர்த்தி. (௰)

வேதம்-அபௌருஷேயமாதலின் அதுசொல்லியநெறியை இயற்கைநெறியென்றார். இயற்றியெனவினைக்குறை காரியப்பொருட்டு.

சந்திரனைவென்றானுமுருத்திரனைச்சாய்த்தானுந் ... ... *
துந்துவெனுந்தானவனைச்சுடுசரத்தாற்றுணித்தானும் ... *
வந்தகுலத்திடைவந்தரகுவென்பான்வரிசிலையாற் ... ... *
இந்திரனைவென்றுதிசையிருநான்குஞ்செருவென்றான் ... ...*

(இ-ள்.) சந்திரனைவென்றவனு முருத்திரனைப்போரிலோடச்செய்தவனுந் துந்துவென்கிற அசுரனை (பகைகோட்டைச்) சுடுகின்ற பாணத்தினாற் றுணித்தவனும்பிறந்த விவர்கள்குலத்திற் றோன்றிய ரகுவென்பவன் வரிந்தசிலையினு லிந்திரனைவென்று எட்டுத்திக்கினுள்ளவர்களையும் யுத்தத்திற்செயித்தான்—எ-று. (௰க)

ரகுவென்ன வடமொழிப்பிறந்தவாறே கூறினர். இவ்வாறு ராசமாபுரிரவிகுலதிலகனைச் சிந்தாமணியாரும் கூறுதல்காண்க.

வில்லென்னுநெடுவரையால்வேந்தென்னுங்கடல்கலக்கி ... *
எல்லென்னுமணிமுறுவலிந்துமதியெனுந்திருவை ... ... *
அல்லென்னுந்திருநிறத்தவரியென்னவயனென்பான் ... ...*
மல்லென்றுந்திரள்புயத்துக்கணியென்னவைத்தானே ... *

(இ-ள்) இவர்குலத்தயச்சக்கரவர்த்தியென்பவன் வில்லென்கின்ற நெடிய மந்தரகிரியாற்பகைவேந்தர்களென்னுங்கடலைக்கடைந்து ஒளியென்னு மழகியநகையையுடைய இந்துமதியென்னுந் திருமகளையிராவென்னுந் திருநிறத்தையுடைய திருமாலைப்போல மல்யுத்தத்தினுருவமென்னுந்திரண்ட புயத்தினிடத் தாபரணத்தைப்போலவைத்தான்—எ-று. (௰உ)

எல்-ஆகுபெயர்,

அயன்புதல்வன்றயரதனையறியாதாரில்லையுவன் ... ... ... *
பயந்தகுலக்குமரரிவர்தமக்குள்ளபரிசெல்லா ... ... ... *
நயந்துரைத்துக்கவேறநான்முகத்துக்குமரிதாம்ப ... ... *
வியந்துவைத்தகடைத்தலையாட்டானதிந்தவடிகேளாய் ... ... *

(இ-ள்.) பலவாத்தியங்களை முழக்குகின்ற தலைவாயிலையுடையானே அயச்சக்கரவர்த்தியினுடைய புத்திரனாகிய தசரதச்சக்கரவர்த்தியையறியாதவர்கள் (ஒருவரு மில்லை) யவன் பெற்றுபிறந்தகுமாரர்களாகிய விவர்கள்பாலுள்ள அந்தகலியாண குணங்களாகிய சத்தியைவிரும்பிப் புகழ்ந்துரையேறப் பி

னே மன்மதன் (அந்தச்சக்கரவர்த்தித் திருமகனுடைய வடிவழகைக்கண்டு) செம்பொன்னாபரணத்தை அணிந்த மங்கைமார்களுடைய சிந்தைகளின்மீதாறு மலரம்புகளெய்து மெல்லிய ஆயிரங்கருப்புவில்லை ஒடித்தான்.

வரிவில்லென்றதனால் மெல்வில்லென்பதுபெற்றாம். எனவே மங்கையர்கள் அவனுடைய அழகைக்கண்டு வேட்கையிருந்தனரென்பதுகுறிப்பெச்சம்.

காணுநெறிக்குச்சிலைகால்வலிதென்பார் ... ... *
நாணுடைநங்கைநலங்கிளர்செங்கேழ் .. ... .. *
பாணியிவன்படர்செங்கைபடாதேல் ... ... ... *
வாணுதல்சீதையும்வாழ்விலளென்பார் ... ... *

(இ-ள்) சிலர் நீண்டவில்லானது கால்வன்மையையுடையது பாருமென்பார்கள் சிலர் நாணத்தையுடைய நங்கையினது நன்மைமிகுந்த செந்நிறம் வாய்ந்தகையில இப்புருஷோத்தமனுடைய அகன்றசெங்கை பொருந்தாதாயின் ஒளிபொருந்தியநெற்றியையுடையசீதையும் இனிவாழ்விலளென்பார்கள் —எ-று. (௨௮)

சிலைகால்வலிதென்பது- கண்ணுந்தோளும் முலையும்பிறவும், பன்மைசுட்டிய சினைநிலைக்கிளவி, பன்மைகூறுங் கடப்பாடிலவே, தம்வினைக்கியலு மெழுத்தலங்கடையே, என்னுஞ் சூத்திரத்தில்-ஒருமையாமொழிக்கதலென்பதனாற் போந்தமைக்கு. வாணுதல் சீதையென்பது. அல்வழியெல்லா முறழெனமொழிபவென்னுஞ்சூத்திரத்தில் எல்லாமென்பதனால் இயல்பாயிற்று.

கரங்கள்குவித்திருகண்கள்பனிப்ப ... ... *
இரங்கினிதிச்சிலையேற்றிலனாயின் .. ... ... *
நரந்தைநறைக்குழனங்கையுநாமும் ... ... *
முருந்தெரியிற்புகமூழ்குதுமென்பார் ... ... *

(இ-ள்.) சிலர்(தத்தங்குலதெய்வங்களைச்சிந்தித்துக்) கைகளைக்குவித்து இரண்டுகண்களிலும் நீர்துளிக்கப் பெருமைபெற்ற மதத்த யானையையொத்த இப்புருஷோத்தமன் இவ்வில்லை நாணேற்றுவிடில்கத்தூரியணிந்தமணமமைந்த கூந்தலையுடைய பெண்ணிற்சிறந்த சீதையும்நாமும் (சேர்ந்தாமைக்) கொல்லுகின்ற எரியில் உடல்புகமூழ்குவோமென்பார்கள்-எ-று. (௨௯)

வள்ளன்மணத்தைமகிழ்ந்தனனென்றால் ... ... *
கொள்ளெனமுன்புகொடுப்பதையல்லால் ... ... *
வெள்ளமணைத்தவன்வில்லையெடுத்திப் ... ... *
பிள்ளைமுனிட்டதுபேதைமையென்பார் ... *

(இ-ள்.) சிலர்நம்முடையவள்ளலாகிய சனகமகாராஜன் (சீதையினது) திருக்கலியாணத்தை விரும்பினவனானால் நீகொள்ளென்று எதிரே (இப்புருஷோத்தமனுக்கு) கொடுப்பதையல்லாமல் கங்கையைச்சடையில் அடக்கிய சிவனதுவில்லையெடுத்து இப்பிள்ளைமுன் வலியாயென்று வைத்தது அறிவிலாமையென்பார்—எ-று. (௩௰)

ஞானமுனிக்கொருநாணிலையென்பார் ... ... *
கோணிவனிற்கொடியாரிலையென்பார் ... ... *

மாணவனிச்சிலைகால்வளையானேல் ... ... ... *
பூணணைத்தவள்பேறிலளென்பார் ... ... ... *

(இ-ள்.) சிலர், (வில்லின்பொருட்டு இப்பிள்ளையை அழைத்தவராகிய) மெய்ஞ்ஞானமுநிவனுக்குச் சிறிதுநாணமுமில்லையென்பார்; [illegible] இச்சனகனைப்பார்க்கிலும் கொடுமையுடையோர் [illegible], பெருமையையுடைய ஸ்ரீராமபிரான் இவ்வில்லை இரண்டு [illegible] வளைக்கானாயின் பருத்தகொங்கையையுடைய பெண்ணாகிய சானகி பாக்கியமில்லாளென்பார்கள்—எ-று. (௫க)

கோன்-என்பதில் னகரம்பால்காட்டும் விகுதியன்றுசாரியை. சிலைகால்- என்பது- முறையேமுதலுஞ் சினையுந்தொக்கதொகையாகலின் முதற்கண் இரண்டாவதும் சினைக்கண் ஏழாவதும் விரிக்க. எனவே இரண்டாம்வேற்றுமைத் தொகையாதலின்வலியியல்பாயிற்று. ஐ-முதன்முன்னைவரிற்கண்ணென்வேற்றுமைசினைமுன்வருதறெள்ளிதென்ப.

தோகையரின்னனசொல்லிட நல்லோர் ... ... *
ஓகைவிளம்பிட வும்பருவப்ப ... ... ... *
மாகமடங்கலுமால்விடையும்பொன் ... ... ... *
நாகமுநாகமுநாணநடந்தான்... ... ... ... ...*

(இ-ள்.) மயிற்சாயல்போலும் சாயலையுடையாராகிய அங்குள்ள ஸ்திரீயர்கள் இவ்வண்ணமானசொற்களைச்சொல்லாநிற்க (செய்கை[illegible]களில்) நல்லோர்கள் சந்தோடவசனங்களைச்சொல்லத் தேவர்கள்களிக்க உயர்ந்தசிங்கமும்பெருமையாகிய இடபமும்பொன்மலையும் மதயானையும்கண்டு நாண வில்லினருகே நடந்தான்—எ-று. (௫உ)

ஆடகமால்வரையன்னதுதன்னைத்.......... ... ...*
தேடருமாமணிசீதையெனும்பொற் ... ... ...*
சூடகவால்வளைசூட்டிடநீட்டும் ... ... ... *
ஏடவிழ்மாலையிதென்னவெடுத்தான்... ... ... *

(இ-ள்.) உயர்ந்தமேருமலையையொத்த வில்லைத் தேடக்கிடையாத சிறந்தமணியையொத்த சீதையென்னும் பொன்னாலாகிய கடகத்தையும் வெண்மையுள்ள வளையையும் அணிந்தகரத்தையுடையாளுக்குத் தரிக்கக் கொடுக்கும் இதழ்கள்விரிந்த பூமாலை இதென்று கண்டோர்சொல்ல (ஸ்ரீராமபிரான்) அநாயாசமாகத் தனதுஇடதுகரத்தால் எடுத்தான்—எ-று. (௫௩)

மாமணிசீதை, வடமொழிச்சந்தி.

தடுத்திமையாமலிருந்தவர்தாளின் ... ... ... *
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார் ... ... ...*
கடுப்பினின்யாருமறிந்திலர்கையால் ... ... ... *
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார் ... ... ... *

(இ-ள்.) (காட்சியைத்) தடுக்க இமைத்தலில்லாதவர்களாய் அங்கிருந்தவர்கள்யாவரும் (சக்கரவர்த்தித்திருமகன்) தனதுதிருவடிப் பெருவிரலால் (அவ்வில்லின்குதையை) மிதித்ததையும் நாணைநுனியில் பூட்டினதையும்

தெல்லியன்மதியன்மன்னரூகத்தியரெழிலிதோன்றச் ... *
சொல்லியபருவநோக்குந்தோகையினாடினாரே ... ... ...*

(இ-ள்) வேல்கிடந்ததையொத்த கண்களமைந்த பகற்காலத்தும் தன்றன் கைதிரியாதுலவுகின்ற மதிபோன்றமுகத்தியர்கள் அறிஞர் கூறியகார்தோன்றுகின்ற காலத்தைநோக்குகின்ற அம்மயில்களைப்போலக் களிப்பாற்றோன்றுகின்ற முறுவல் விட்டுவிட்டொளிசெய்யக் காதணிகள் இடைவிடா தொளியையும்வீச (வீதிகளில்) ஆடினார்கள்-எ-று. (௩௮)

உண்ணறவருந்தினாரிற்சிவந்தொளிர்கருங்கண்மாதர் ... ... *
புண்ணுறுபுலவிநீங்கக்கொழுநரைப்புல்லிக்கொண்டார் ... *
வெண்ணிறமேகமென்மேல்விரிகடல்பருகுமாபோல் ... *
மண்ணுறுவேந்தன்செல்வம்வறியவர்முகந்துகொண்டார் .. *

(இ-ள்,) உண்ணுகின்றமதுவை உண்டவருடைய கண்களைப்போலச் சிவந்து ஒளிர்கின்ற கருங்கண்களையுடைய மாதர்கள்மனவருத்தம்பொருந்திய புலவியானது (களிப்பின்மிகுதியால் நீங்க நாயகரைத்தழுவிக்கொண்டார்கள் வெள்ளைநிறமாகியமேகங்கள் மேலுமேலும் விரிந்தகடல்நீரை உண்ணுதல்போல வறியவர்கள். அப்பூமிக்குத்தகுந்த, சனகமகாராசனுடைய பொருள்களைமொண்டுகொண்டார்கள் எ-று. (௩௯)

வயிரியர்மதுரகீதமங்கையரமுதகீதம்... ... ... ... ... *
செயிரியர்மகரயாழின்றேன்பிழிதெய்வகீதம் ... ... ... *
பயிரியர்வேயிங்கீதமென்றிவைபருகிவிண்ணோர் ... ... *
உயிருடையுடம்புமெல்லாமோவியமொப்பநின்றார் ... ...*

(இ-ள்) வயிரியரென்போர் பாடுகின்ற இனிமையாகிய இசையும்மங்கைப்பருவத்தையுடைய வேசையர்கள் பாடுகின்ற அமுதகீதஇனிமைபோலும் இனிமையாகிய இசையும் செயிரியரென்போர்வாசிக்கின்ற மகரயாழினது இனியதேனினது இனிமைபோலும் இனிமையாகியதெய்வத்தன்மையமைந்த இசையும் பயிரியரென்போர் ஊதுகின்றவேய்ங்குழலினது இசையும் ஆகிய இவற்றைச் (செவியாகியவாயா)லுண்டு தேவர்கள் உயிரையுடையவுடம்புமுழுமையும் (அந்தகாரத்துக்குச்) சித்திரத்தையொக்க அசைவற்றுநின்றார் எ-று. (௪௰)

ஐயன்வில்லிறுத்தவாற்றலாணியவுமரர்நாட்டுத் ... ... ...*
தையலாரிழிந்துபாரின்மகளிரைத்தழுவிக்கொண்டார் ... *
செய்கையின்வடிவினாடல்பாடலிற்றெளிதறேற்றார்... ... *
மையரிநெடுங்கணோக்கமிமைத்தலுமயங்கினின்றார்... ... *

(இ-ள்.) இராமபிரான் வில்லைமுறித்த தோளின்வலியைக் காணும்பொருட்டுத் தேவருலகத்துத்தையலார்கள் இழிந்துசெய்கையினாலும்வடிவினாலும் ஆடல்பாடல்களினாலும் பூலோகத்துப்பெண்களைத் தெளியாதவர்களாகித்தழுவிக்கொண்டார்கள் மையெழுதிய செவ்வரிபடர்ந்த நீண்டநோக்கமையகண்கள் இமைகொட்டலும் மயங்கிநின்றார்கள்-எ-று. (௪௧)

(இ - ள்.) கலைகள்நிறைந்த சந்திரனது உதயத்தைக்கண்ட நீலநிறமாகிய நெடியகடலை யொத்தனவாகிக் கொட்டுகின்ற பேரிமுதலியதோற்கருவிகள் முழங்கத் தேர்களும், யானைகளும், வெற்றியமைந்தகுதிரைகளும், (பகைவரது) உயிரைப்பொருந்திய வேல்போன்ற கண்களையுடைய மங்கையர்களும், ஆடவர்களும், அநேகமாகக்கூடி விரைவாக வழியிற்செல்லச் சக்கரவர்த்தியினுடைய பட்டணைவியாகள் செல்வார்கள்-எ-று. (சுசு)

இந்த உவமையுருபிடை யடியாகப்பிறந்த வினைக்குறிப்புமுற்று. பறைசாதியொருமையா கவிரிந்தொன்றொருமைவினைகொண்டது. தோற்கருவியாகிய பறைமட்டுங்கூறவே இனமாகிய ஏனைக்கருவிகளும் அவைப்பனெனக்கொள்க. தாமென்பது-கட்டுரைச்சுவைபடநின்றது.

பொய்கையங்கமலகானிற் பொலிவதோரன்னமென்னக் ... *
கைகையர்கோன்பயந்தகனிகையரீட்டம்பொங்கி ... ...*
ஐயிருநூறுசூழ்ந்தவாய்மணிச்சிவிகைதன்மேற் ... ... *
மெய்ப்படமங்கையருநாணத்தேனிசைமுரலப்போனாள் ... *

(இ-ள்.) தடாகத்திலே மலர்ந்த தாமரைமலர்க்காட்டில் விளங்குவதாகிய ஒப்பற்ற அன்னப்புள்ளைப்போலக் கேகயநாட்டார்க்கு அரசனாகிய உதாசித்து என்பவனுடைய புத்திரியென்னும் கைகேசியானவள் ஆயிரம்பாத்தையர்களது கூட்டம் களிப்புமிகுந்து சூழ்ந்த குற்றமில்லாத மணிகளழுத்தியசிவிகையின்மேல் தெய்வமங்கையர்களும்நாணத் தேன்போலும் இசையையுடைய கருவிகள் ஒலிக்கப்போனாள்-எ-று. (சுஎ)

பாவை காதல்பற்றிவந்தது இசைபண்பாகுபெயர்.

காரணமின்றியேயுங்கனலெழவிழிக்குங்கண்ணூர் ... ... *
வீரவேத்திரக்கார்தாழ்ந்துவிரிந்தகஞ்சுகத்துமெய்யார் ... *
தாரணிபுரவிமேலார்தலத்துளார்தடித்தசொல்லர் ... *
ஆரணங்கனையமாதராடிமுறைகாத்துப்போனார் ... ... *

(இ-ள்) காரணமென்பதொன்று இல்லாமலுந்தீப்பொறி உண்டாகவிழித்துப்பார்க்கின்ற கண்களையுடையார் வீரமமைந்த பிரம்படிகளையுடையார் தாழ்ந்துவிரிந்த சட்டையணிந்த மெய்யையுடையார் (சிலர் கிண்கிணி மாலையணிந்த குதிரையின்மேலிருப்பவர் (சிலர் பூமியில்நடப்பவர் உரத்த வோசையாகிய சொல்லையுடையார் ஆகிய அரியதெய்வத்தை யொத்தமாதர்கள் (கைகேயியினுடைய) பாதங்களைத் தத்தமக்குத்தகுந்த முறைமைப்படி காத்துப்போனார்கள்-எ-று (சுஅ)

விரிமணித்தார்கள்பூண்டவேசரிவெரிநிற்றோன்றும் ... .*
அரிமலர்த்தடங்கணல்லாராயிரத்திரட்டிசூழக் ... ... *
குருமணிச்சிவிகைதன்மேற்கொண்டவின்மின்னிதென்ன ...*
இருவரைப்பயந்தநங்கையாழிசைமுரலப்போனாள்... ... *

(இ-ள்.) ஒளிவிரிகின்ற கிண்கிணிமாலைகள்பூண்ட கோவேறுகழுதைகளின் முதுகில் எதிர்விளங்குகின்ற செவ்வரிபடர்ந்த குவளைமலர்போலும் விசாலமாகிய கண்களையுடைய இரண்டாயிரமாதர்கள்சூழ்ந்துவர நன்னிறத்தையுடைய நீலமணிகளாலமைந்த சிவிகையின்மேல் மேகத்தில்மின்னலிவ்வுரு

வமென்றுசொல்ல இருவரைப்பெற்ற சுமத்திரையானவள் யாழிசை யொலிகைப் போனாள் எ-று. (சுசு)

மணியென்னும் பலபொருளொருசொல்லீண்டுசிலேடையணியையுணர்த்திற்று.

செங்கையின் மஞ்ஞையன்னஞ் சிறுகிளி பூவைபாவை ... ... *
சங்குறைகழித்தவல்லை சாமரைமுதலதாங்கி .. ... ... ... *
இங்கிவைதெண்ணூர்க்காலிவ் வேழுநீர்வளாகத்தின்னின் ... ... *
மங்கையரில்லையென்னமடந்தையர்மருங்குபோனார்... ... *

(இ-ள்.) இங்கல்லாமல் ஏழுகடல்சூழ்ந்த பூமியில் இனிமங்கையர்களில்லையென்னும்படி செங்கைகளில் மயில்களும், அன்னங்களும், சிறுகிளிகளும், நாகணவாய்ப்புட்களும், பிரதிமைகளும், உறையினின்றும் சங்கையெடுத்தாற்போன்ற சாமரைகளும் முதலியவற்றை ஏந்திக்கொண்டு கன்னிகைமாதர்கள் (அச்சுமித்திரைக்கு) அருகேசென்றார்கள்-எ-று. (சுஎ)

வளாகம் பண்பாகுபெயர்.

வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்முகத்தைவெண்மதியமென்று *
கொள்ளையிற்சுற்றுமீன்கள்சூழியலனையதூர்த்தி ... ... *
தெள்ளரிப்பாண்டிபாணிச்செயிரியரிசைநடஞ்சிந்த ... ... *
வள்ளலைப்பயந்தநங்கைவானவர்வணங்கப்போனாள்... ... *

(இ-ள்.) ஆகாயத்தில் உலாவுகின்ற விண்மீன்கள் வெண்மையாகிய பற்களையுடைய இலவமலர்போன்ற செவ்விய வாயையுடைய முகத்தை வெண்மையாகிய மதியென்றுகருதி மிகுதியாக மொய்த்ததையொத்த பலமணிகளாலமைத்த சிவிகையிலேறி, தெளிவாகிய வண்டினிசையையொத்தபாண்டியென்னும் பண்ணையும் இசைப்பாட்டையும் பாடுகின்ற செயிரியர்கள் இசையாகிய தேனைத்துளிக்க, கேட்டுக்கொண்டு ஸ்ரீராமபிரானைப்பெற்ற கௌசலையானவள் தேவர்கள் வணங்கச்சென்றாள்-எ-று. (சுஅ)

இறைவனைப்பெறலால் நங்கையென்றும் வானவர்வணங்கப் போனாளென்றுங் கூறினார்.

கூனொடுகுறளுஞ் சிந்துஞ் சிலதியர்குழாமுங்கொண்ட ... ... *
பானிறப்புரவியன்னப்புள்ளெனப்பாரிற்செல்லத் .. ... *
தேனொடுமிஞிறும்வண்டுந் தும்பியுந்தொடர்ந்துசெல்லப் ... *
பூநிறைகூந்தன்மாதர்புடைபிடிநடையிற்போனார்... ... *

(இ-ள்.) கூனர்களோடு குறளர்களும் சித்தர்களும் தோழியர்களது கூட்டமும் ஏறிய வெண்மையாகிய நிறமமைந்த குதிரைகள் அன்னப் புள்ளைப் போலப்பூமியில் மெல்லநடந்துசெல்ல, பெண்வண்டுகளுடனே மிஞிறும், வண்டுகளும், தும்பிகளும், தொடர்ந்துசெல்லும்படி மலர்மாலைகள் நிறைந்த கூந்தலையுடையமாதர்கள் (கௌசலையின்) இருபுறத்திலும் பெண்யானையைப்போல நடந்துசென்றார்கள்-எ-று. (சுகூ)

கூன்முதலியமூன்றும் ஆகுபெயர். மிஞிறும், தும்பியும், வண்டு விசேடம்.

சூட்டினின்மணியிற்பொன்னிற்சுடர்மரகதத்தின்முத்தின் ... *
ஒப்பறவமைத்தபைம்பூணோவியம்புகழவேறி ... ... ... *

மீது போர்கொண்டுசெய்து சுபமுகூர்த்தமாகிய நல்லவேளையில் புறப்பட்டுப்போனான் எ-று. (௭௩)

நாளென்பது முதலாகுபெயர்.

இருபிறப்பாள ரெண்ணாயிரர்மணிக்கலசமேந்தி ... ... *
அருமறைவருக்கமோதியறுகுநீரளித்துச்சூழ .. ... ... *
வரன்முறைவந்தார்கோடிமங்கலமழலைச்செவ்வாய்ப் ... *
பருமணிக்கலாபத்தார்பல்லாண்டிசைபாடப்போனான் .. ...*

(இ-ள்.) பூசுரர்கள் எண்ணாயிரம்பேர் மணிகளாலமைந்த கலசங்களையேந்தி அருமையாகிய வேதவாக்கியங்களை உச்சரித்து அறுகம்புல்லால் நீரைத் தூவிக்கொண்டு வரலாற்றின் முறைமைப்படி (எதிரேவந்தார்கள்) மழலைச் சொல்லையுடைய சிவந்தவாயையும் பருத்தமணிகள் கோத்த கலாபத்தையுமுடைய ஒருகோடி சுமங்கலிமாதர்கள் பாடுகின்ற பல்லாண்டென்னுமிசை எங்கும்வியாபிக்கப்போனான் -எ-று. (௭௪)

இருபிறப்பாளரென்றது சன்ம கன்மங்களை நோக்கி.

கண்டிலனென்னையென்பார்கண்டனனென்னையென்பார் ... *
குண்டலம்வீழ்ந்ததென்பார்குறுகரிதினிச்சென்றென்பார் ... *
உண்டுகொலெழுச்சியென்பாரொலித்ததுசங்கமென்பார் ... *
மண்டலவேந்தர்வந்துநெருங்கினர்மயங்கவென்பார் ... ... *

(இ-ள்.) (அரசர்களிற்சிலர் சக்கரவர்த்தி) என்னைக்கண்டிலனென்பார்கள் (அதுகேட்ட சிலர்) என்னைக்கண்டனனென்பார்கள் (சிலர் காதிலணிந்த) குண்டலம் வீழ்ந்ததென்பார்கள். (சிலர்) இனி அரசனருகேசென்று நெருங்குதலரிதென்பார் (சிலர்) புறப்பாடுண்டோவென்பார்கள். (அதுகேட்டசிலர்) சங்கம் ஒலித்ததென்பார்கள். (சிலர்) பூமியிலுள்ள வரசர்கள் வந்து (கண்டோர்) மயங்க நெருங்கினார்களென்பார்கள்-எ-று. (௭௫)

*இச்செய்யுள் சக்கரவர்த்தியினுடைய பெருமிதத்தை யுணர்த்திற்று. கண்டிலனென்னை யென்பார் கண்டனனென்னையென்பார் என்பனவற்றிற்கு முறையே பார்த்திலன் என்னை யென்பார் பார்த்தனன் என்னை என்பார் எனப் பொருள்கூறிமுடிக்கும். குண்டலம் வீழ்ந்ததெனவே சிறிதிடமுமின்றி நெருங்கினரென்பது குறிப்பெச்சம். கொல்-ஐயம்.

பொற்றொடிமகளிரூரும்பொலன்கொடார்ப்புரவிவெள்ளஞ் *
சுற்றுறுகமலம்பூத்ததொடுகடற்றிரையிற்செல்லக் ... ... *
கொற்றவேன்மன்னர்செங்கைப்பங்கயக்குழாங்கள்கூப்ப ...*
மற்றொருகதிரோனென்னமணிநெடுந்தேரிற்போனான் ... *

(இ-ள்.) பொற்றொடியணிந்த மகளிர்கள் ஏறுகின்ற பொன்னாலமைந்த தாரணிந்த குதிரைக்கூட்டம்சுற்றிலுஞ்சூழ்ந்ததாகத் தாமரைமலர்கள் பூத்த தோண்டிய கடலினது அலைகளைப்போல இருபுறத்திலும் செல்லாநிற்க, வெற்றியமைந்த வேலையுடைய அரசர்கள் சிவந்த கைகளாகிய தாமரைமலர்க்கூட்டங்களைக் குவியாநிற்க வேறொரு சூரியனைப்போல மணிகளாற்செய்த நெடியதேரின்மேல் போனான்-எ-று. (௭௬)

கைப்பங்கயங்கள் குவிதலின் மற்றொரு கதிரோனென்றார்.

ஆர்த்ததுவிசும்பைமுட்டிமீண்டகன்றிசைகளெங்கும் ... ...*
போர்த்ததங்கொருவர்தம்மையொருவர்கட்புலங்கொளாமை *
சேர்த்தருசெறிந்தசோடித்திரைநெடுங்கடலையெல்லாந் ... .*
ஆர்த்ததுசகரரோடுபகைத்தெனத்தூளிவெள்ளம் ... ... *

(இ-ள்) (தன்பரிவாரங்கள் செல்வதினால் எழுந்த) தூளிக்கூட்டம் நிறைந்தது போகவழிபெறாமல் மேலுலகைமுட்டி மீண்டு அகன்ற திசைகளெங்கும்போர்த்தது அத்திசைகாப்பாளர் ஒருவரையொருவர் பார்க்கக்கூடாமற் கனத்தது அடர்ந்தது தோண்டிய சகரர்களோடு பகைத்தாற்போல ஓடி அலைகளையுடைய நெடியகடலையெல்லாம் தூர்த்தது-எ-று. (எஎ)

ஆர்த்ததுமுதலிய வினைமுற்றுச்சொற்கள் பலவடுக்கித் தூளிவெள்ளமென்னும் பெயரோடுமுடிந்தது.

சங்கமுட்டிணைபங்கொம்புந்தாளமுங்காளத்தோடு ... ... *
மங்கலபேரிசெய்தபேரொலிமழையையோட்டத் .. ... ...*
தொங்கலுங்குடையுந்தோகைப்பிச்சமுஞ்சுடரையோட்டத் .*
திங்கள்வெண்குடைகண்டோடத்தேவருமருளச்சென்றான் ....*

(இ-ள்.) சங்கங்களும் வெய்ங்குழல்களும் ஊதுகொம்புகளும் சிறுசின்னத்தோடு சுமங்கலத்திற்குரியபேரிகளும் செய்த பேரோசையானது மேகத்தைப்பயந்தோடச்செய்யவும் பீலிக்குஞ்சங்களும் குடைகளும்மயில்வாலினாலமைத்தகுடைகளும் சூரியகிரணத்தைநீங்கச்செய்யவும் சந்திரன்தன்னூடிமேல் நிழலைச்செய்யுங் குடையழகைக்கண்டு ஓடவும் தன்வைபவத்தைக்கண்டு இவனிந்திரனோவென வானவரும் மயங்கவுஞ்சென்றான்-எ-று. (எஅ)

மந்திரகீதவோதைவலம்புரிமுழக்குமோதை ... ... ...*
அந்தணராசியோதையார்த்தெழுமுரசினோதை ... ... *
கந்துகொல்களிற்றினோதைகடுங்கையர்கவிதையோதை ... .*
இந்திரதிருவன்செல்லவெழுந்தனதிசைகளெல்லாம் ... ... *

(இ-ள்.) இந்திரனது செல்வம்போன்றசெல்வத்தையுடைய சக்கரவர்த்தி செல்லாநிற்க வேதமந்திரகீதங்களின் ஓசையும் வலம்புரிச்சங்கங்களின் ஓசையும் அந்தணர்கள்கூறும் ஆசியினது ஓசையும் ஆரவாரித்தெழுகின்ற முரசுகளினது ஓசையும்தறியைமுறிக்கின்றயானைகளின் ஓசையும்பாடகர்கள்பாடுகின்றமங்கலப்பாட்டின் ஓசையும் எல்லாப்பக்கங்களிலுமுண்டாயின. ()

நோக்கியதிசைகளெல்லாந்தன்னையேநோக்கிச்செல்ல ... ...*
வீக்கியகழற்கால்வேந்தர்விரிந்தகைம்மலர்கள்கூப்பத் ... ...*
தாக்கியகளிறுந்தேரும்புரவியும்படைஞர்தாளும் ... ... *
ஆக்கியதூளிவிண்ணுமண்ணுலகாக்கப்போனான் ... ... ...*

(இ-ள்.) தான்பார்த்த திக்குகளிலுள்ளோர்களெல்லாம் தன்னையே நோக்கிச்செல்லவும் கழலைக்கட்டிய கால்களையுடைய வேந்தர்கள் பரந்த கைகளாகிய மலர்களைக்குவிக்கவும் ஒன்றோடொன்று தாக்குகின்ற யானைகளின் கால்களும் தேர்களின் சக்கரங்களும், குதிரைகளின் குளம்புகளும், காலாள்க

காதுபின்னிட—நிவந்த-உயர்ந்தன—ஆவி-(தம்மேலெழுநியசந்தனத்தொட்டியிலுலரும்படி) அகிற்புகையை—வேட்டன-வேண்டின—வரி-கட்டமைந்த—சிலை-கரும்புவில்லையுடைய—அனங்கன்-மன்மதனுருவத்தை—மேற்கொண்ட-மேற்புறத்திற்கொண்டன—(ஆகிய) பூவை-நாகணவாய்ப்புள்ளின்சொல்போன்ற—வாய்ச்சியர்-சொல்லையுடையமாதர்கள்—முலை-கொங்கைகளை—சிலர்புயத்தொடும்-சிலஆடவர்களது புயங்களோடும்—பூட்ட-அணைக்க—* கோவை-தொடர்ச்சியை—ஆர்-பொருந்திய—வடம்-ஆலமரத்தினது—கொழுங்கவடு-செழுமையாகியபணைகள்—ஒடிதர-ஒடிய—நிவந்த-உயர்ந்தன—ஆவி-தடாகத்தை—வேட்டன-விரும்பின—வரிசிலையனங்கன்-வரிசிலையையுடைய அனங்கனையொத்த ஆடவனை—யேற்கொண்ட-(தந்தம்) முதுகிற்கொண்டன—(ஆகிய) சிலமா-சிலயானைகள்—தேவதாரத்தும்-தேவதாருவினிடத்தும்—சந்தினும்-சந்தனமரத்தினிடத்தும்—பூட்டின-கட்டப்பட்டன—எ-று. (க)

முலைசிலர்புயத்தொடும் பூட்டவென்றது யானைகளின்மேலிருக்கிற மாதர்களை ஆடவர்கள் தங்கைகளைநீட்டி யிறக்குங்கால் தம்புயங்களில் அம்மாதர்களது கொங்கைகள் தாக்குதலை. அனங்கன் ஆகுபெயர்.

நேரொடுங்கலிற்பகையினை நீதியால்வெல்லுஞ் ... ... *
சோர்விடம்பெறாவுணர்வினன் சூழ்ச்சியேபோல ... ... *
வாரொடுந்தொடர்கவட்டொடுமராமரக்குவட்டை... ... *
வேரொடுங்கொடுகிரியெனநடந்ததோர்வேழம் ... ... *

(இ-ள்.) ஒருயானை வஞ்சனையின்றி அடங்குதலில்லாத பகைவனை நீதியால் வெல்லுகின்ற, மறப்பு இடத்தைப்பெறாத அறிவையுடையானது ஆராய்ச்சியைப்போல (தான்) வாரினாலே கட்டுண்டபணையையும் மராமரத்தினது வளாரையும் வேருடன்கொண்டு மலைநடந்ததும்போல நடந்தது-எ-று. (உ)

மராமரத்தை வேரொடுங்கொடென்றது கவட்டொடு மராமரக்குவட்டை வேரொடுங்கொடென்றது தன்னைப்பிணித்த கவட்டையிறுத்துத் தீனுணற்பொருட்டுமராமரக்குவட்டைமுறித்து அவ்வளவிலமையாது அம்மரத்தையே பறித்துச்சென்றதென்பதுணர்த்துதற்கு. வெல்லுமென்னுங்காரியப்பொருட்டாய்வந்த பெயரெச்சம் தன் காரணமாகிய சூழ்ச்சியென்னும்பெயர்கொண்டது. வாரொடுமென்பதில் ஒடுவேற்றுருபு கருவிப்பொருட்டு. கவட்டொடு இசைநிறை.

இரண்டதாணெடுஞ்செறிபணைமருதிடையொடியப் ... ... *
புரண்டுபின்வரவுரலொடுபோனவன்போல ... ... ... *
வுருண்டுகாறொடர்பிறகிடுதறியொடுமொருங்கே ... ... *
இரண்டுமாமரமிடையிறநடந்ததோரியானை ... ... ... *

(இ-ள்.) ஓர்யானை திரண்ட பாரமான நெடிய அடர்ந்த பணைகளையுடைய மருதமரங்கள் முறியும்படி புரண்டுபின்வர, உரலோடு (அம்மரங்களுக்கு) இடையேசென்ற கண்ணபிரான்போல, இரண்டுமாமரங்கள் ஒருங்காக முறியும்படி உருண்டு பின்வருகின்றகாலைத் தொடர்ந்ததறியோடு (அம்மரங்களுக்கு) இடையேநடந்தது-எ-று. (ங)

தாணெடுமெருதென்பது அளவுப்பண்புச்சொல்லுஞ் சினைச்சொல்லு முதற்சொல்லும் முறைமையங்கிவந்த மரபுவழுவமைதி.

கதங்கொள்சீற்றத்தையாற்றவாளினியனகழறிப் ... ... *
பதங்கொள்பாகனுமந்திரியொத்தனன்பன்னூல் ... ... ... *
விதங்களாலவன்மெல்லெனமெல்லெனவிளம்பும் ... ... *
இதங்கள்கொள்கிலாவிறைவனையொத்ததோரியானை ... ... *

(இ-ள்) கொண்ட கோபத்தையும் சீற்றத்தையும் ஆற்ற இனியவாகிய குறிப்புரைகளைச்சொல்லிப் பக்குவத்தில் (இசைந்துவரக்) கொள்ளுகின்றபாகனும் அமைச்சனையொத்தனன் ஓர்யானை (ஏற்குமாறு) நானாவகைகளால் அவ்வமைச்சன் பலநூல்களினின்றுமெடுத்து மெல்லென மெல்லெனக்கூறும (உறுதிபயக்கும்) நற்பொருள்களை ஏற்றுக்கொள்ளாத அரசனையொத்தது-எ-று. (௪)

சீற்றம் சிறிதுபொழுது நிகழ்வதாகியசினம் அடுக்கு-அச்சப்பொருட்டு.

மாறுகாணுமகாய்நின்றுமழையெனமுழங்குந் ... ... ... *
தாறுபாய்கரிவனகரிதண்டத்தைத்தடவிப் ... ... ... *
பாறுபின்செலக்காலெனச்செல்வதுபண்டோர் ... ... *
ஆறுபோகியவாறுபோமாறுபோன்றதுவே ... ... ... *

(இ-ள்.) பகைகாண்பதாகிநின்று மேகத்தைப்போல முழங்குகின்ற இருப்புமுள்பாய்கின்ற ஒருயானையானது வனகளிற்றினது சென்றவழியைக் கரதலால் பரிசித்துக்கொண்டு பருந்துகள் பின்தொடர்ந்துவரக் காற்றைப்போலச்செல்லுவது முன்னே ஓராறுசென்றவழியிற்போகின்ற ஆறுசெல்வதையொத்திருந்தது-எ-று. (௫)

பாறுபின்செலச்செல்வது எனவே போர்க்கஞ்சாது பகைவரை வெற்றிகொள்வது என்பது குறிப்பெச்சம். மணத்தால் உணர்ந்து செலவதாகலிற் றடவியெனஞர்.

பாத்தயானையிற்பதங்களிற்படுமதநாறக் ... ... ... *
காத்தவங்குசநிமிர்ந்திடக்கால்பிடித்தோடிப் ... ... ... *
பூத்தவேழிலம்பாலையைப்பொடிப்பொடியாக்கிக் ... ... *
காத்திரங்களாற்றலத்தொடுந்தேய்த்ததோர்களிறு ... ... *

(இ-ள்.) ஓர்யானையானது அணியாகப்பகுத்துக்கட்டிய யானைகளினுடைய வரிசைகளில மிகுந்தமதநாற்றம் நாறத்தன்னைக்காத்திருந்தபாகன்கைஅங்குசமானது நிமிர்ந்திட மணத்தைவிடாது மோந்துசென்று மலர்ந்த ஏழிலம்பாலை என்னுமரத்தைப் பொடிப்பொடியாக முன்னங்கால்களால் தரையோடு தேய்த்தது-எ-று. (௬)

காலாருபெயர் அடுக்குமிகுதிப்பொருட்டு.

அலகிலானைகளனைகமுமவற்றொருடுமிடைந்த ... ... ... *
திலகவாணுதற்பிடிகளுங்குருளையுஞ்செறிந்த ... ... *
உலவைநீர்வனத்தூதமெயொத்ததவ்வூகத் ... ... ... *
தலைவனேயொத்துப்பொலிந்ததுசத்திரசயிலம் ... ... *

(இ-ள்.) நீரலைகள் நிரைக்கப்பட்டனபோல நீண்டதிரைச்சீலைகளை நிரைத்தார்கள் கடல்கள் நிரைக்கப்பட்டனபோல அங்காடிகள் நிரைத்தார்கள் மேகங்களினது அணியைப்போல யானைகளைச் சோலைகளிடத்தில் நிரைத்தார்கள் காற்றுகள் நிரைக்கப்பட்டனபோலக் குதிரைகளை நிரைத்தார்கள்-எ-று.

ஆர்கலி- வினைத்தொகை நிலக்களத்துப் பிறந்தவன் மொழித்தொகை. கொண்டல் கோடை வாடை தென்றல் எனும் பகுப்புண்மைநோக்கி மாருதமென்பதற்குக் காற்றுகளெனப் பன்மையாகப் பொருள்கூறப்பட்டது.

நடிக்குமயிலென்னவருநவ்விவிழியாரும் ... ... ...*
வடிக்குமயில்வீரருமயங்கினர்திரிந்தார் ... ... ... ...*
இடிக்குமுரசக்குரலினெங்குமுரல்சங்கின் ... ... ... ...*
கொடிக்களினுணர்ந்தரசர்கோநகரடைந்தார் ... ... *

(இ-ள்.) நடிக்கின்றமயில்களைப்போல வருகின்ற மான்பார்வையையொத்த பார்வையையுடைய மங்கையரும் வடிக்கின்ற கைவேலையுடைய வீரர்களும் மருண்டு திரிந்து (இடியைப்போல) ஒலிக்கின்றமுரசங்களினது ஓசையாலும் எங்கும்பரவ ஒலிக்கின்றசங்குகளினோசையாலும் கொடிகளினாலும் உணர்ந்து (தத்தம்) அரசர்களது மனைகளையடைந்தார்கள்—எ-று. (௰௫)

மிதிக்கநிமிர்தூளியின்விளக்கமறுமெய்யைச் ... ... *
சுதைக்கனுரையைப்பொருவுதூசுகொடுதூய்தா ... ... *
உதிர்த்தனரிளங்குமரரோவியரிலோவம் ... ... ... *
புதுக்கினரெனத்தருணமங்கையர்பொலிந்தார் ... ... *

(இ-ள்) கால்கள்மிதித்து நடக்கமேலெழுந்த தூளியினால் பொலிவிழந்தமெய்யின்கண், அமுதத்தினிடத்துண்டாகிய நுரையையொத்த மெல்லிய வெள்ளைத்துகிலால் இளங்குமரர்கள் சுத்தமாக(அத்தூளிகளை) உதிர்த்தார்கள் (அதனால்) சித்திரக்காரர்களைப்போலச் சித்திரங்களைப்புதுக்கினார்களெனக்கண்டோர்சொல்லஇளமையாகியமங்கையர்கள்மாசின்றிவிளங்கினார்கள்

தாருயர்தடக்கிரியிழிந்துதரைசேருங் ... ... ... ...*
கோளரியெனக்கரிகொள்கொற்றவரிழிந்தார் ... ... *
பாளைவிரியொத்துலவுசாமரைபடப்போய் ... ... ...*
வாளெழுநிரைத்தபடமாடமவைபுக்கார் ... ... ... ...*

(இ-ள்.) பெருமையாகியமலையினின்று இழிந்து தரையில் சேரும்வலியமைந்த சிங்கத்தைப்போல முன்னங்கால்களுயர்ந்த யானைகளின்மேலேறிய அரசர்களிழிந்தார்களாகி விரிந்தகமுகம்பாளையையொத்துலாவுகின்ற சாமரைகளது காற்று (தம்மிருபுடையிலும்) படப்போய் ஒளிவீசும்படி முறைப்படவமைத்த படத்தினாற்செய்த வீடுகளிற் புகுந்தார்கள்-எ-று. ()

தூசினொடுவெண்படமுடைக்குடில்கடோறும் ... ... *
வாசநகைமங்கையர்முகங்கண்மழைவாணிற் ... ... ... *
காசின்மதியின்கதிர்வழங்குநிழலெங்கும்... ... ... ... *
வீசதிரைவெண்புனல்விழுங்கியதுபோலும் ... ... ...*

(இ-ள்.) தூசிகளே வெண்மையாகிய படத்தினாலமைத்த சிறவீடுகள் தோறும் மங்கையர்களது இயற்கைமணமமைந்த சிரிப்பையுடைய முகங்கள் மேகமுலாவுகின்ற ஆகாயத்திற் பொருந்திய சந்திரனது குற்றமில்லாத கிரணங்களுக்கொப்பாக வழங்குகின்ற ஒளியினால் (அக்குடில்களுக்கு) எப்புறத்திலுங்கட்டிய திரைச்சீலைகள் வெண்மையாகிய நீரால் கவர்ந்ததை யொக்கும்-எ-று. (௰௯)

தூசுபடங்களாலமைத்தனவாயினும் வேற்றுமைநயத்தால் உடைமையாக்கித் தூசினுே வெண்பட முடைக்குடில்களென்றார். நகைக்கியற்கைவாசம் குலக்கொடிமாதர்வாய் முகநாறுவவெனக் கூறியதனானுணர்க. திரைப்புரையில் நோக்குகின்றமங்கையர்களது சந்திரனைப்போன்ற முகத்தின தொளியும் நகையொளியும் திரையைச்செறிந்துருவிப் பரந்தவின் அது அத்திரைகளை நீர்கவர்ந்ததுபோலுமென்பதுகருத்து.

மண்ணுறவிழுந்து நெடுவாலுறவெழுந்து ... ... ... *
கண்ணுதல்பொருந்தவருகண்ணனிலவருங்கார் ... ... *
உண்ணிறநறும்பொடியைவீசியொருபாகம் ... ... *
வெண்ணிறநறும்பொடிபுனைந்தமதவேழம் ... ... ....*

(இ-ள்.) மண்ணிற்பொருந்தவிழுந்து நெடியவாலைப்பொருந்த நிமிர்ந்து தன்னுடலின் கரியநிறத்தை முழுமையுமறைத்த வெண்ணிறமாகிய நறியபொடியைஉதறிவிட்டு ஒருபாகத்தில் வெள்ளியநிறத்தையுடைய நல்ல பொடியைஉதருமதற் றரித்தமதயானை நெற்றிக்கண்ணையுடையசிவன் (தன் மேனியினொருகூற்றில்) பொருந்தவருகின்ற இறைவனைப்போலவரும்-எ-று.

கண்ணுதல் - இரண்டாம்வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்தவன்மொழித் தொகை. இறைவனுமேனியில் கண்ணுதல் பொருந்துதல் கம்பாந்தத்தில். இதனை வலந்தனன் திரிபுரமெரித்தவனெனனும் பாகரவியாக்கினத்தில் விவரமாய்க்காணலாம். ஈணடு ளாட்பிற்பெருரும்.

தீயவரொடொன்றியதிறத்தருநலத்தோர் ... ... ... .*
ஆயவரையந்நிலையறிந்தனர்துறந்தாங் ... ... ... ...*
கேயவருநுண்பொடிபடிந்துடனெழுந்தொன் ... ... *
பாய்பரிவிரைந்துதறிநின்றனபரந்தே ... ... ... ...*

(இ-ள்.) ஒள்ளியபாய்கின்றபரிகள்,தீயவர்களோடுநட்புப்பொருந்திய திறத்தையுடைய (மாறுதலரிய) நல்லறிவினோர் (குணச்செய்கைகளை) ஆய்ந்து அறிந்தவர்களாகி அப்போதே அத்தீயவர்களைத்துறந்தாற்போலப்பொருந்தவருகின்ற நுண்ணிய புழுதியிற்படிந்து புரண்டு உடனேயெழுந்து விரைந்து உதறிப்பரவிநின்றன-எ-று. (௨௰)

ஆயென்னுமுதனிலை இறந்தகாலவினை யெச்சப்பொருடந்தது.

மும்மைபுரிவன்கயிறுகொய்துசெயன்மெய்ம்பாற் ... *
றம்மையுமூணர்ந்துதளைகண்டுவிளைகின்ற ... ... ... *
அம்மையினெடிம்மையையறிந்துநெறிசெல்லுஞ் ... *
செம்மையவரொன்னநனிசென்றனதுரங்கம் ... ... ... *

(இ-ள்.) செயன்மெய்ம்பால்-ஞானநூல்களைக்கற்ற அறிவின்வலியால்— மும்மைபுரி-மூன்றுவிருப்பமாகிய—வன்கயிறு- வலியகயிற்றை—கொய்

து-அறத்து—தம்மையுமுணர்ந்து-(இறைவனுக்குண்டமை) யெனத்தம்மையுமறிந்து—தாகண்டு-உலகினியற்கையையுணர்ந்து—விளைகின்ற-அதன்பற்றுவிடற்குவிளைகின்ற—அம்மையினோடு-மறுமைப்பயனோடு—இம்மையை-இம்மைப்பயனை—அறிந்து-தெரிந்து—நெறி-ஞானவொழுக்கத்தில்—செல்லும்-நடக்கின்ற—செம்மையவரென்ன-ஞானநிலையையடையாரைப்போல—துரங்கம்-குதிரைகள்—செயன்மொய்ம்பால் - போர்த்தொழின்முதலியபயிற்றியசெயலின்வலியால்—மும்மைபுரி-(தம்மைக்கட்டிய) மூன்றுபுரியாகிய—வன்கயிறு-வலியகயிற்றை—கொய்து - அறுத்து—தம்மையுமுணர்ந்து-தம்வலியையுமறிந்து—தாகண்டு - தளையையும் நோக்கிக்கொண்டு—விளைகின்ற - விளைகின்றனவாகி—அம்மையினோடு-செல்லுமவ்விடத்தில் தம்வயமாயிருத்தற்கேதோடு—இம்மையை- இவ்விடத்து ஒருவர்வயத்திலிருத்தற்காக்கத்தை—அறிந்து-தெரிந்து—நெறி- வழியில—நனிசென்றன-மிகுதியுஞ்சென்றன—எ-று (உக)

செம்மையவர்க்குச்செயல்-எ-து-ஈண்டு சிறந்தகற்றற்செயலை. செயலென்னுங்காரணம் அறிவென்னும் அதன்காரியத்தின்மேனின்றது.

விழுந்தபனியன்னதிரைவீசுபுனைதோறுங் ... ... ... *
கழங்குபயின்மங்கையர்கருங்கண்மிளிர்கின்ற ... ... *
தழங்குகழிசிந்தியதாம்பயிறாக்கத் ... ... ... ... *
தெழுந்திடைபிறழ்ந்தொளிர்கொழுங்கயல்களென்ன ... *

(இ-ள்.) (விண்ணினின்றும்) விழுந்தபனியையொத்த நுண்ணியதிரைச் சீலைகளை நீளக்கட்டிய குடில்கள்தோறும் அம்மனைக்கழங்குகள் விளையாடுகின்ற மங்கையர்களது கருங்கண்கள் மிகவும் (தம்மை) எறிகின்ற அணியாகப்பொருந்தியஒலிக்கின்றகடலலைகளில் துள்ளி அவற்றினிடத்தேபிறழ்ந்து ஒளிர்கின்றகொழுமையுள்ள கயல்மீன்களைப்போலப்பிரகாசிக்கின்றன. ()

நுண்ணிழைச்சீலையாகிய திரையாதலால் பனியுவமிக்கப்பட்டது.

வெள்ளநெய்வாரியறவீசியுளவேனுங் ... ... ... ...*
இள்ளவெழுகின்றபுனல்கேளிரின்விரும்பித் ... ... ...*
தெள்ளுநபுனலாறுசிறிதேயுதவுகின்ற ... ... ... ... *
உள்ளதுமறாதுதவும்வள்ளலையொத்த ... ... ... ...*

(இ-ள்.) தெளிந்தநீரையுடையஆறுகள் (அரசர்களுக்கும் அவர்கள்பரிவாரங்களுக்கும்) வெள்ளமாகியமிகுந்த நீரைமுழுமையுங்கொடுத்தனவாயினும் தோண்டுதலினால் சுரக்கின்றபுனலையும் சிறிதேயுதவுகின்றன (அதனால் இரப்போரை) உறவினரைப்போலவிரும்பித் தம்பாலுள்ளபொருளை மறாக்காமல் உபகரிக்கின்ற வள்ளலையொத்தன-எ-று. (உஉ)

அரசர்களும் சேனைகளும் முகந்துண்ணநீர் வற்றியனவென்பது கருத்து.

துன்றிநெறிபங்கிவிளங்கவுழலோடு ... ... ... ... *
மின்றிரிவெண்மணியாரமிளிர்மார்பர் ... ... ... *
மன்றன்மணநாறுபடமாடனுழைகின்றார் ... ... ... *
குன்றின்முழைதோறுநுழைகோளரிகளொத்தார் ... ...*

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப் ... *
பற்றியவளைந்ததென்னப்பரந்துவந்திறுத்தசேனை .. ... *
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொப்பளுர்வந் ... ...*
துற்றவர்காணலுற்றமலைநிலையுரைத்துமன்றே ... ... .. *

(இ-ள்.) பூமியைச்சுற்றிய கடல்களெல்லாம் சுடர்மணிகளையுடைய மேருமலையைச் சுற்றிக்கொள்ள வளைந்ததுபோலப் பரவிவந்து இறங்கின சேனைகளும் அங்குவந்து சேர்ந்தவர்களாகிய அரசர்களும் அவர்கள் மனைவியர்களும் இராசகுமாரர்களும் இராசகுமாரத்திகளும் எங்கேயும் பார்க்கத்தொடங்கிய மலையினது நிலைமையைச்சொல்லுவாம்-எ-று. (௬௩)

பம்புதேன்மிஞிறுதும்பிபரந்திசைபாடியாட ... ... *
உம்பர்வானகத்துநின்றவொளிவளர்தருவிசேருங் ... ... [கு
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோடு
துய்ப்பிகளுபிரேயன்னதுணைமடப்பிடிக்குநல்கும் ... ... *

(இ-ள். மேலாகிய சுவர்க்கத்தில் நிலைபெற்ற ஒளியையுடைய வளர்கின்ற தருக்களில் ஓங்கியகொம்புகளை நெருங்கிய பெண்வண்டுகளும் மிஞிறுகளும் தும்பிகளும்பரவி இசைகளைப் பாடியாடப் பருமையாகிய கைகளை நீட்டிக் களிறானவொடித்துத் தந்தங்களையுடைய யானைகள் தமதுயிரையொத்த துணையாகிய இளமையமைந்த பிடிகளுக்குக்கொடுக்கும்-எ-று. (௬௪)

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர்க்குவளையன்ன ... *
கண்மலர்க்கொடிச்சியார்க்குக்கணித்தொழிற்புரியும்வேங்கை. *
உண்மலர்வெறுத்ததும்பிபுரியமேலுயர்வுநாகு ... ... ... *
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே ... ... ...*

(இ-ள்.) பண்போலுஞ்சொல் உண்டாகின்ற பவளம்போன்ற செவ்விய வாயையும் குளிர்ச்சிபொருந்திய குவளைமலரையொத்த கண்களாகிய மலர்களையுமுடைய குறிச்சியர்களுக்கு வேங்கைமரங்கள் மணஞ்செய்காலமிதுவெனப் பூத்தலாகிய கணிதத்தொழிலைச்செய்யும் (தாம்பூத்து) உண்ட மலர்களை வெறுத்த தும்பிகள் புன்னைகளினது பசியமேலைத் தருகின்ற தண்ணியமலர்களென்று (பசியநிறமாகிய) ஆகாயத்தின்கணுள்ள தாரகைகளில் தாவும்-எ-று.

மீனெனும்பிடிகளோடும்விளங்கும்வெண்மதிநல்வேழம் ... *
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குழிப்பாயுந் ... ... *
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்மூரி ... *
வானீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ... ... ...*

(இ-ள்) தாரகைகளென்னும் பிடிகளோடு விளங்குகின்ற வெள்ளியசந்திரனாகிய நல்லமதயானை வளைவாகிய உயர்ந்த இருபுறத்துமுள்ளதாகிய தந்தங்களை நீட்டி (இருமலைக்) குத்துதலினால் குழிப்பாய்கின்ற தேனொழுகுகின்ற மடையைத்தடுத்துச் செந்தினைப்புனத்தையுடைய குறவர்கள் நீர்வளப்பத்தையுடைய ஆகாயகங்கைநீரைப்பாய்ச்சி மலைநெற்பயிரை வளர்ப்பார்கள்-எ-று.

குறவர்க்கு-ஜுவனத்திலும் செந்தினை சிறந்ததென்பார் அதனை யடையாளிக்கூறினார்

மெங்கும் விளங்காநிற்கும்-எ-று. (௪௧)

ஊடல்-எ-து-கூடாதவர்களாகி உரையைமறுத்திருத்தல். மந்தாரம்-எ-து- ஐந்தருக்களிலொன்று.

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக் ... ... ...*
கூந்தலங்கமுகின்பாளைகுழலின்றொடொப்புக்காண்பார் ... ...*
ஏந்திழையாரம்பைமாதரெரிமணிகடகம்வாங்கிக்... ... ...*
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார் ...*

(இ-ள்) மாந்தளிரையொத்த மேனியையுடைய குறத்தியர்கள், மந்தார மாலையைத்தரித்துக் கூந்தற்கமுகின்பாளைகளைத் தங்கூந்தலோடு உவமைகாண்பார்கள் அணிகளைத்தாங்கிய அரம்பைமாதர்கள் (பாரமெனக் கழற்றியெறிந்த) எரியினது செவ்வொளியையொத்த ஒளியையுடைய செம்மணிக் கடகங்களையெடுத்துக் காந்தள்மலர்களிற்பூட்டித் தங்கைகளோடு ஒப்புக்காண்பார்கள்-எ-று. (௪௨)

பாரமெனக் கழற்றியெறிந்தவென்பது-ஏந்திழையென்பதற்கியையவந்த இசையெச்சம். ஒடு உருபு ஒப்புப்பொருட்டு,

சரம்பயில்சாபமென்னப்புருவங்கடம்மிறை... ... ...*
நரம்பினோடினிதுபாடிநாடகமயிலோடாடி... ... ... *
அரம்பையர்வெறுத்துநீத்தவவிர்மணிக்கோவையார ... ...*
மரம்பயில்கடுவன்பூணமந்திகண்டுவக்குமாதோ ... ... *

(இ-ள்.) அம்புபொருந்தும் வில்லைப்போலப் புருவங்கள் தம்மில் துடிக்க யாழினோடு மாறுபடாமல் இனிமையாகப்பாடி மயிலோடு நாடகமாடி வெறுத்து நீக்கிய விளங்குகின்ற மணிமாலையையும் முத்துமாலையையும் மரங்களிற்பயிலுகின்ற கடுவன் பூண்டுகொள்ளப் பெண்குரங்குகண்டு களிப்படையும்-எ-று. (௪௩)

சரம்பயில்சாபம்-வடிவுதொழில்களைப்பற்றிவந்தவுவமம். நரம்பு-சினையாகுபெயர். ஒடு உருபிரண்டும் ஒருவினைக்கிளவிக்கண்வந்தன.

சாந்துசாய்தடங்கடோறுந்தாதுராகத்திற்சார்ந்த ... ... *
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலும்... ... *
காந்தினமணியின்சோதிகதிரொடுங்கலந்துமூசச் ... ... *
சேந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமாதோ ... *

(இ-ள்) சந்தனமரங்கள்(தழைந்து) சாய்ந்தமலைச்சாரல்கள்தோறுமுள்ள இலத்தகாவிக்கற்களில் சார்ந்த கூந்தலையுடைய அழகியபிடிகளெல்லாம் குங்குமச்சந்தனத்தை அணிந்தனபோலும் ஒளியைவீசுகின்ற மணித்திரளினது சோதியானது சூரியகிரணத்தோடு கலந்து மொய்ப்பதினால ஆகாயத்தினிடம் எந்நாளும் செவ்வானத்தையொத்திருக்கும்-எ-று. (௪௪)

தாதுராகம்-எ-து-தவரிசிகள் பரசுராமன் என்பனபோல வடமொழிச்சந்தி,

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முச்சிகஞ்சிந்தி ... ...*
மலைமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான ....... *

அலகில்பொன்னலம்பொருஞ்சார்ந்துவீழருவிமாலை ... *
உலகளந்தவன்றன்மார்பினுத்தரீயத்தையொத்த... ... ...*

(இ-ள்.) பூமிதேவிக்கு அணிகளைப்போலத் தோன்றக்கிரணங்களையுடைய ரத்தினங்களைவரிசையாகச்சிந்தி உமைக்கு நாயகனாகிய சிவனுடைய சென்னியிலவந்துசேர்ந்து அங்குருந்துவீழ்கின்ற சங்கையையொத்திருக்க,வரம்பில்லாதபிருந்தபொற்றுகளால்நிரம்பிச்சந்தனத்தைக்சார்ந்து (அம்மலையினின்றும்)வீழ்கின்ற அருவிகளினதுமாலைகள் உலகைத்திருவடியாலளந்த இறைவனதுமார்பில் விளங்குகின்ற உத்தரீயத்தையொத்தன-எ-று. (௬௫)

கோடிலாநாகப்போதொடிலவங்கமலருங்கூட்டிச்... ... *
சூடுவார்களிவண்டோச்சித்தூநறுந்தேறலுண்பார் ... ... *
கேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும் ... .... ... *
பாடலாலூடனீக்கும்பரிமுகமாக்கள்கண்டார் ... ... *

(இ-ள்.) அம்மலையில் கிளைகள் அடர்ந்த புன்னையினது மலர்களோடு இலவங்கமலரையும் சேர்த்துத்தொடுத்துச் சூடுகின்றமாதர்களும் உண்டு களித்தவண்டுகளை ஓட்டித் தூய்மையாகிய நல்லதேனைப் பருகுகின்ற மாதர்களும் இசைநூலிற்கூறு மிலக்கணத்தோடு மாறுபடும் குற்றமில்லாத மகரயாழைப்போலக் கின்னரமிதுனங்கள் பாடுகின்ற பாட்டினால் ஊடல்நீங்குகின்ற குதிரைமுகம்போலு முகத்தையுடைய மக்களைக்கண்டார்கள்-எ-று()

கின்னரங்களினாண் பெண்களொன்றையொன்று பிரிதலில்லனவாகலிற் கின்னரமிதுனமென்றார்.

பெருங்களிறேயுமைந்தர்பேரெழிலாகத்தோடு ... ...[டே
பொருந்துணைக்கொங்கையன்ன பொருவில்கோங்கரும்பின்மா
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டுந்தங்கள் *
கருங்குழற்களிக்குப்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார் ... *

(இ-ள்) பெருமையாகிய களிற்றை ஒத்த மைந்தர்களது விசாலமாகிய அழகிய மார்பொடுதாக்குகின்ற இரண்டாகியகொங்கைகளை ஒத்த உவமையைப்பெறுத கோங்குமரங்களினரும்புகளிடத்தில் தம்மிடையைப்போலத்துவளுகின்ற பூங்கொம்பினிடத்திருந்த இளமையாகிய பெண்வண்டும் தங்களுடைய கருங்குழலில் களிக்கும்வண்டுகளும் புதுமணம் புணரக்கண்டார்கள்-எ-று. (௬௬)

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்சுனைமூடிப்புக்க ......*
கடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினார்தம்... ... ...*
வடத்தொடுத்தகூசைமாசினீர்நனைப்பநோக்கிக் ... ... *
கடகத்தையெறிந்துதம்மிற்கருங்கழல்வீரர்நக்கார் ... ...*

(இ-ள்) பளிக்குப்பாறையாகிய இடமென்றுகருதி பரந்தசுனையில்விரைந்து புகுந்த,அணிந்தநுதலணியானது தாமரைமலரையொத்த ஒளியமைந்த முகத்தையுடைய மங்கையர்களது மேலுத்தரீயத்தோடு இடையிலுடுத்த தூசைமாசில்லாத அச்சுனைநீர்நனைக்கப் பெருமையாகிய வீரக்கழலையணிந்த வீரர்கள் அதைப்பார்த்து (படிகத்தின்றலத்துக்கும் மாசில்நீரையுடைய

சுனைக்கும் வேற்றுமையுணராமல்) தங்கடங்களையெறிந்து (அறிந்துகொ ண்டு) தங்களுக்குள்ளே நகைத்தார்கள்-எ-று. (௪௮)

பூவணைபலவுங்கண்டார்பொன்னரிமாலைகண்டார் ... ... *
மேவருங்கோபமன்னவெள்ளிலைத்தம்பலங்கண்டார்... ... *
ஆவியினினியகொண்கர்ப்பிரிந்தறிவழிந்தவிஞ்சைப் ... *
பாவையர்வைகத்திந்தபல்லவசயனங்கண்டார்... ... ... *

(இ-ள்.) மலர்ச்சயனங்கள் பலவற்றையுங்கண்டார்கள் பொன்னரிமாலைக ளைக்கண்டார்கள் இந்திரகோபத்தினது செந்நிறம்போன்ற பெருமையுடை தலரிய வெற்றிலைத் தம்பலத்தைக்கண்டார்கள் தம்முயிரினுமினிக்க இனிமை யாகிய நாயகரைப்பிரிந்ததினால் அறிவழிந்த வித்தியாதர மங்கையர்கள் படுக்கக்கருதிய தளிரால மைத்த சயனங்களைக்கண்டார்கள்-எ-று. (௪௯)

பூவணைமுதலியன ஒரிடத்தேகண்டிருப்பதுபோல் தனித்தனிப் பெயரிலைகொடுத்தாக்கூறினார்

பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப் .. ... ... *
மீனவெய்முலையினிட்டபெருவிலையாரமாடத்... ... ... *
தேன்மூரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட ... ... *
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார் ... ... ... *

(இ-ள்.) நீலோற்பலம்போன்ற கண்கள்பிறழவும் பவளம்போன்ற வா யில்நகைப்புத்தோன்றவும் பெருமையாகி விருப்பத்தைத்தருகின்ற கொங் கைகளிலிட்ட மிக்கவிலையையுடைய முத்துவடங்களசையவும் வண்டுகள் ஒ லித்துக் கூந்தலிற்சுழலவும் (செவிகளில்) சிறந்தமணிகளிழைத்த குண்டல ங்களசையவும் தேவர்களுடைய மனைவியர்களாடும் மணம்வீசுகின்ற ஊஞ் சலைக்கண்டார்கள்-எ-று. (௫௰)

சுந்தரவானமாதர்துவரிதழ்ப்பவளவாயும்... ... ... ... *
அந்தமில்கரும்புந்தேனுமின்றிறமுண்டல்குலிற்கும்... *
பைந்தொடிமாதர்கைத்தோர்பசையிலையென்னவிட்ட .. *
மைந்தரினீத்தகிந்தேன்வள்ளங்கள்பலவுங்கண்டார்... ... *

(இ-ள்.) சுவர்க்கத்திலுள்ள அழகியமங்கையர்களது சிவந்த இதழையுடை ய பவளக்கிண்ணம்போன்றவாயும் பின்னர்வரம்பிலலாதகரும்புகளும் பெ ண்வண்டுகளும் மின்றுகளும்உண்டு அல்குலைப் பொருட்கு விலைப்படுத்து கின்ற பசும்பொன்னாற்செய்த வளையணிந்த கணிகையர்கள் சிறிதுபொரு ட்பசையும் இல்லையென்றுவெறுத்துப் பற்றுவிட்ட ஆடவர்களைப்போலநீ க்கிய தித்திப்பாகிய நறுங்கிண்ணங்கள் பலவற்றையுங்கிடக்கக் கண்டார்கள்

பவளம்-கருகுபெயர்.

அற்பகலைக்குஞ்சோதிப்பளிக்கறையமளிப்பாங்கர்... ... *
மற்பகமலர்ந்ததின்டோள்வானவர்புணர்ந்தகோலம்... ... *
சொற்பகைதுகளினர்தங்கலவியின்வெறுத்துநீத்த ... ... *
கற்பகமீன்றமாலைகலெருடுங்கிடப்பக்கண்டார்... ... ...*

ளும்-- மார்தோள்-மங்கையர்களுடையதோளை—மாணும்-ஒக்கும்—வேழமும்-மூங்கில்களும்—நாகமும்-புன்னைமரங்களுமுள்ளன. (௫௫)

திமிரமாவுடற்குங்குமச்சேதகத் ... ... ... *
திமிரமாவொடுஞ்சந்தொடுத்தேய்க்குமால் ... ...*
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார் ... ... *
அமரமாதரையொத்ததவ்வாரமே ... ... ...*

(இ-ள்.) (சேனையிலுள்ள) திமிரம்-இருள்போன்ற—மா-நிறமமைந்தயானைகள்—உடல்-தம்முடலில்—குங்குமச்சேதகம்- குங்குமச்சேற்றலெழுதியகோலத்தை—திமிர - பொருந்தும்படி—மாவொடும்-மாமரங்களோடும்—சந்தொடும் - சந்தனமரங்களோடும்—தேய்க்கும் - உராயும்—அமரமாதரை-தெய்வமங்கையர்களை—ஒத்து -உருமுதலியவற்றலொப்பாகி—ஒளிர்-ஒளிர்கின்ற—அம்-அழகிய—சொலார்-சொல்லையுடைய அரசமங்கையர்கள்—அமர-தங்குதலினால்—மாதரை- (அம்மலையைச்சார்ந்த) பெரியநிலமானது—அவ்வாரம்-அந்தச்சுவர்க்கத்தை—ஒத்தது- ஒத்திருந்தது. (௫௬)

வேள்விமுதலியவற்றலடையு மருமையுடைத்தாகலி னவ்வாரமென்றார்.

போரவாவொடுமாசுணம்போரவே... ... ... *
போரவாவொடுமாசுணம்போரவே... ... ... *
ஆரவாரத்திரைடுமருவியே ... ... ... ...*
ஆரவாரத்திரைடுமருவியே... ... ... ... *

(இ-ள்.) போரவாவொடு-(நீருட்குளிக்க) பேராசையால்—மாசுணம்-பெரும்பாம்புகள்—போர-இடம்விட்டுப்பெயரவும்—வே-மூங்கில்கள்—போரவும்—ஆவொடு - ஆச்சாமரங்களும்—மா- பெருமையாகிய—சுணம்-(குறைத்தியரிடித்த) பராகமும்—போர- போரவும்—ஆரவாரத்திரைடு - பேரோசையோடு—ஆர-நிரம்ப—ஆரத்தின்-முத்துகளை—மருவி-கலந்து—ஊரும்-ஒழுகாநிற்கும்—அருவி-அம்மலையருவி—எ-று. (௫௭)

அவாவொடுவென்பது-ஏதுப்பொருட்டு. ஆவொடுவென்பது-மாசுணத்தொடுவென வாராமையால் எண்ணுப்பொருட்டன்று இசைநிறைப்பொருட்டு.

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம் ... ... *
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை... ... ...*
அகிலுமாரமுமாரவங்கோங்குமே ... ... ... *
அகிலுமாரமுமாரவங்கோங்குமே ... ... ...*

(இ-ள்.) புகலும்- (உருஆற்றல்முதலியவற்றல்) எடுத்துக்கூறும்—வாள்-ஒளியமைந்த—அரி-பொன்னிறவண்டுகள்மொய்த்த—கண்ணியர்- மலர்மாலையணிந்தஆடவர்களது—பொற்புயம்- பொன்னணியணிந்தபுயங்களில்—வாள்-வாளையொத்த—அரி-செவ்வரிவாய்ந்த—கண்ணியர்- கண்களையுடையமங்கையர்களது—பூண்முலை-பூணணிந்தமுலைகள்—புகலும்- சேரலும்—அகிலும்-அகிற்றேய்வையும்—ஆரமும்- முத்துவடமும்—ஆர-நிரம்ப—அங்கு-அப்புயமுலைகளில்—ஓங்கும்-சிறக்கும்—அகிலும்-அம்மலையினிடமெ

(இ-ள்) பெருகுகின்ற தேனையுண்ணும் பூவின்மொய்த்த மிஞிறென்னும் வண்டுகளைப்போல மங்கையர்களும் ஆடவர்களும் எங்குங்கூடி அந்தவுயர்ந்தபெருமையாகிய மலையின தெல்லாவிடங்களிலுந்தங்கி நீங்காதவர்களாகித் தாமினிதாக விளையாடுவார்—எ-று. (௬௪)

வண்டுகள்மலராகளிற்சென்று தேன்பருகுமாறுபோல அம்மலைவளங்களை ஆங்காங்குச் சென்று நுகர்ந்தனரென்பதுகருத்து.

இறக்கமென்பதையெண்ணிலெண்ணுங்கால் ... *
பிறக்குமின்பமேதாரெழுபதாதலாற் ... ... *
மறக்கமெய்தியதூயவரோயென ... ... ...*
மறக்கிற்றிலரன்னதன்மாண்பெலாம் ... ... *

(இ-ள்) இறந்துகயெனச் சொல்லப்படுவதை எண்ணினால் அதனைப்பற்ற துன்பத்தைப்பிறப்பிக்குமென்ப தாதலால் எண்ணாராகி விண்ணுலகத்தில் இன்பத்தையடைந்த தவத்தூய்மையுடையார்போல (அம்மலையிலுஇன்பங்களைநுகர்ந்து) அதனது வளப்பங்களையெல்லாம்மறந்திலர்—எ-று. (௬௫)

மாண்பு- குணவாகுபெயர் பிழையது என்பதில் ஐ-பகுதிப்பொருள் விகுதி.

வேறு.

மஞ்சார்மலைவாரணமொத்துவானிலேறிம் ... ... *
வெஞ்சாலையுடைக்கிரணங்களம்மீதுபாயும் ... ... *
பஞ்சானனமொத்ததுமற்றதுபாயவேறுஞ் ... ... *
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெககர்வானம் ... *

(இ-ள்.) மேகங்கள்நிறைந்த அத்தயமலை யானையையொத்தது ஆகாயத்திலேகவிந்து செல்லுகின்ற வெவ்வியகிரணங்களையுடைய சூரியன் மேற்றிசையில் அவ்யானைமேல் பாய்கின்றசிங்கத்தையொத்தது செவ்வானம் அதுபாய்வதினால் மேலேசிதறிய சிவந்த இரத்தத்தைப்போல விளங்கியது—எ-று. (௬௬)

திணியார்கிளைமாமரமியாவையுஞ்செக்கர்பாயத் ... *
தணியாதநறுந்தளிர்தந்தனபோன்றதாழ ... ... *
அணியாரொளிவந்துநிரம்பவிளங்குமெங்கு ... ... *
மணியாலியன்றம்மலையொத்ததம்மையில்குன்றம் .... *

(இ-ள்.) திண்மையமைந்த கிளைகளையுடையமாமரங்களெல்லாம் (தம்மேல்) செவ்வானொளிபாய்வதினாலே குறைவில்லாத நல்லதளிர்களைத் தளிர்த்தனபோன்று தழைத்துநிற்க, அழகுநிறைந்த அவ்வொளிபாய்ந்து நிறைவதினால் குற்றமில்லாதஅம்மலை உருமுழுமையும் செம்மணிகளால் விளைந்தமலையையொத்தது—எ-று. (௬௭)

கண்ணிற்கினிதாகிவிளங்கியகாட்சியாலும் ... ... *
எண்ணற்கரிதாகியிலக்குசிரங்களாலும் ... ... ... *
வண்ணக்கொழுஞ்சத்தனச்சேதகமார்பணிந்த ... *
அண்ணற்கரியோன்றனையொத்ததவ்வாசில்குன்றம் ...*

(இ-ள்.) குற்றமில்லாத அம்மலைபார்வைக்கு இனிமையையுடையதாகி விளங்கிய தோற்றமுடைமையானும் கணக்கிடலுக்கு முடியாததாகி விளங்குகின்றசிகரங்களுடைமையானும் (செவ்வரியொளிதன்னம்மலைபாய்கின்றமையானும்) அழகியசெழுமையாகிய சந்தனக்குழம்பை மார்பிலணிந்த உயர்வாகிய கரியமேனியையுடைய இறைவனையொத்திருந்தது—எ-று. (௬௮)

சந்தனச்சேதக மார்பணிந்தவென்றதனால் மேலைச்செய்யுளிற் கூறியசெக்கரணியாரொளியென்பது ஈண்டுந்தந்துரைக்கப்பட்டது.

உண்ணும்முயிரும்மனையாரொருவர்க்கொருவர் ... *
தேனும்பிஞ்சிறுஞ்சிறுதும்பியும்பம்பிபார்ப்ப ... *
ஆனையினமும்பிடியும்மிகலாளியேறும் ... ... ... *
மானுங்கலையும்மெனபால்வரைவந்திழிந்தார் ... ... *

(இ-ள்.) ஒருவருக்கொருவர் உடலுமுயிரும்போன்ற ஆடவர்களும் மங்கையர்களும், (தாமணிந்தமலர்களில்மொய்த்திருந்த) பெண்வண்டுகளும் பிஞ்சிறென்னும் வண்டுகளும் சிறிய தும்பிகளென்னும் வண்டுகளும் நெருங்கி யாரவாரிக்கும்படி ஆண்யானைக்கூட்டமும் பெண்யானைக்கூட்டமும் வலியமைந்த ஆண்சிங்கக்கூட்டமும் பெண்மான்கூட்டமும் ஆண்மான்கூட்டமும்போலப் பெருமையாகிய மலையினின்றும் வந்திழிந்தார்கள்—எ-று.

இனமென்பதனைப் பிடிமுதலியவற்றோடுங்கூட்டுக. வரம்பிலாப் பெருந்திரளாகச் சூழ்ந்துயிழிகின்றமையின் ஒருவரையொருவர் பிரிந்தவருஞ்சிலநளரென்பார் இகலாளியேறுமென்றார் இகலாளியேறுமெனச் சிறந்தவாடவர்களைக் கூறவே பிரிந்தபெண்பாலாருமுளரென்பது தானேவந்தியைதலிற் கூறாராயினார். அன்றி அச்சம் நாணம்பயிர்ப்புடையராகலிற் பெண்பாலார்க்குச் சிங்கத்தையுவமைகூறல் மரபன்மையினெனக்கோடலுமொன்று.

கால்வானகத்தேருடைவெய்யவன்காய்சுடுங்கட் ... *
கோன்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்கோளரிம்மா ... *
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேழிருந்த ... ... *
மால்யானையீட்டமெனவந்துபரந்ததன்றே ... ... *

(இ-ள்) ஆகாயத்தின்கணுலவுகின்ற ஒற்றைச்சக்கரமமைந்த தேரையுடைய சூரியனாகிய கோபிக்கின்ற அஞ்சாமையையுடைய அப்புகளைச்சிதைக்கின்ற கிரணங்களாகிய மெல்லியபிடரி மயிரைவாய்த்த கொல்லுகின்றசினத்தையுடைய திண்ணிய ஆண்சிங்கம் மேற்றிசைக்கணுள்ள மலையின்மேலேறிவசித்தலினால் தனித்திருந்த மதமயக்கத்தையுடையயானைக்கூட்டம்போல மிக்கஇருள்வந்து (உலகில்) பரவியது—எ-று. (௭௰)

கால்வானகத்தேருடை வெய்யவன்அரிமாவென்பதற்குக் காவின்கண் வெண்மையாகிய நகங்களினது அழகையுடையசூரியனாகிய ஆண்சிங்கமெனப்பொருள்கூறினும் பொருந்தும்.

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும் ... ... ... *
அந்தாரசர்க்கரகன்றனனீகவ்வுள்ள ... ... ... *
நந்தாதொலிக்குநாலைப்பெருவேலையெல்லாஞ் ... *
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்தவன்றே ... ... *

(இ-ள்) குறையாதொலிக்கின்றபேரொலியையுடையபெரியகடல்களிலே

லையை (சிலதியர்கொடுக்க) வாங்கி அணிந்துகொள்ளுகின்ற கொங்கைகளையுடையாராகிய அகிற்புகையால் (சந்தனக்கொய்யில் மூழ்கியவற்றை) உலர்த்து நல்லார்கள் குளிர்ச்சியமைந்த தேன்பொருந்திய மலர்மாலையை வெறுத்து மணம்நெருங்கிய இதழையுடைய கருமுகைமாலையை அணிகின்றார்களும் இவைபோல்வன பிறசெய்கின்றாருமாயினார்—எ-று. (௬௫)

புதுக்கொண்டவேழம்பிணிப்போர்புனைபாடலோதை. *
மதுக்கொண்டமாந்தர்மடவாரின்மழற்றமோதை ...*
பொதுப்பெண்டிரல்குல்புனைமேகலைப்பூசலோதை ...*
கதக்கொண்டயானைகளியாற்களிக்கின்றமோதை ... *

(இ-ள்.) (அம்மலையினிடத்தில்) புதுமையாகப் பிடித்தயானைகளைக் கட்டுவோராது புனைபாடலோசையும் மதுவுண்டமக்கள் தம்மனைவியரிடத்தில் பேசுகின்ற வோசையும் வேசையர்கள் தம்மல்குலில் அணிகின்ற மேகலையினது பூசலாகியவோசையும் சினங்கொண்டயானைகள் மதவெறியாற் செருக்குகின்ற வோசையும் பிறவோசைகளும் ஆங்காங்கு எழுந்தன—எ-று. ()

பிணிப்போராது பாடலென்பது ஆறுவதுவினைமுதற் பொருண்மையின்கண் வந்தகாரகம் புனைபாடலென்பது- வேழங்களைத் தறியிற்கால்பூட்டும்பாட்டு பாடல்கருவியாகலிற் புனையென்னும் வினைத்தொகைகாரியப்பொருட்டு- இந்நாலோதையும் பிறவோதையும் எழுந்தனவென்பார் பயனிலை கொடுத்துக்கூறாது அவாய்நிலையான்முடித்தார்.

உண்ணாவமுதன்னகலைப்பொருளுள்ளலுண்டும் ...*
பெண்ணாரமுதமனையார்மனவூடல்பேர்த்தும் ...*
பண்ணுறுபாடல்செவிமாந்திப்பயன்கொளாடல் ...*
கண்ணுறவினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே ... ...*

(இ-ள்.) உண்ணப்படாத அமுதத்தையொத்த நூல்களிலமைந்த உண்மைப்பொருள்களை ஐயம்விபரீயமின்றிச் செவியாலுண்ணவும் பெண்களில் பெறுதலரிய அமுதத்தையொத்த நாயகிமாருடையமனத்தினிகழ்ந்த ஊடலைநீக்கியும் பண்ணோடிசைந்த பாடலாகியநறவைச் செவியாற்பருகியும் பாடலின்பொருள்கொண்ட நடனத்தைக் கண்களால் இனிமையாகநடத்தவும் இராவானதுபோயது—எ-று. (௬௭)

கலைப்பொருள்- சாதியொருமையாகலி னுள்ளதென ஒருமைவந்தது- உள்ளதுண்டென்றதினால் ஐயம்விபரீயமின்றி யென்பதுவருவிக்கப்பட்டது. பண்ணெனவேறு கூறினமையிற் பாடலென்றதொழிற்பெயர்சொற்றொடருக்காய் அதுசொற்றொடரின்பொருளுக்கானமையி னிருமடியாகுபெயர். பாடலாடற்கின மாகலினும்மைகொடுத்துப் பிரிக்காதுமாந்தியென்றும்பாடலின்றியமையாதாகலிற் பயன்கொளாடலென்றுங் கூறினார். பாடலின்பொருள்கொண்ட நடனமாவது பாடற்பொருளின்படி காட்டும்பாவனையோடு கூடியநடனம்.

௰௫-வது-வரைக்காட்சிப்படலமுற்றிற்று.



# ய௫-வது-பூக்கொய்படலம்.

மீனுடையெயிற்றுக்கங்குற்கனகனைவெகுண்டுவெய்ய ... ... *
கானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித் ... ... *
தானுடையுதயமென்னுந்தமனியத்தறியுணின்று ... ... ...*
மானுடைமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். *

(இ-ள்.) விண்மீன்களாகிய பற்களையுடைய இராவாகிய இரணியனைக்கோபித்துக் காய்ந்துபோலும் அடர்ச்சியையுடைய கதிர்களென்னும் ஆயிரங்கரங்களை நீட்டித் தானுடைத்தாகிய உதயகிரியென்னும் பொற்றூணினின்று மானுடவியல்புடைய சிங்கப்பெருமான்போல உதித்தனன் ஒளிசெய்கின்ற சூரியன்—எ-று. (௧)

வெய்யோன்றோன்றினனென்பதில் வெய்யோனென்று மெஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாய்வந்தது. தோன்றினன் போலுமென்பன தந்நிலையினின்றும் பெயர்ந்தனவொரைப் பொருடரலிற் றன்வினையேயாம்.

முறையெலாமுடித்தபின்னர் மன்னனுமூரித்தேர்மேல் ... *
இறையெலாம்வணங்கப்போனனெழுந்துடன்சேனைவெள்ளங் ..
குறையெலாஞ்சோலையாகிக்குழியெலாங்கழுநீராகித்... ... *
துறையெலாங்கமலமானசோணையாறடைந்ததன்றே... ... *

(இ-ள்.) நித்தியகடன்களையெல்லாம்முடித்தபின் சக்கரவர்த்தியும் வலிய மைந்ததேர்மேல் அரசர்களெல்லாம் வணங்கப்போனான் சேனைவெள்ளம் எழுந்து அவனைப்பிரியாமல், தான் பாயாதொழிந்தவிடங்களிலெல்லாஞ் சோலைகளையுடையதாகிப் பள்ளமானவிடங்களிலெல்லாம் செங்கழுநீர்களையுடையதாகித் துறைகளிலெல்லாம் கமலங்களையுடையதான சோணையாற்றை அடைந்தது—எ-று. (௨)

மன்னனுமென்பது இறந்ததுதழீஇய வெச்சவும்மை. சேனைவெள்ளமென்பதுவெய்யோனென்பதுபோலவந்தது.

அடைந்தவணிறுத்தபின்னரருக்கனுமும்பர்ச்சேர்ந்தான்......*
மடநடையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமும் .. ... *
குடைந்துவண்டுறையுமென்பூக்கொய்துநீராடவைகித் ... *
தடங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார் ... *

(இ-ள்.) அவ்விடத்தடைந்து தங்கியபின் சூரியனும் ஆகாயத்திடையிற் சேர்ந்தான் மனைவியர் கூட்டங்களோடு அரசர்களும், இராசகுமாரர்களும் வண்டுகள் குடைந்து தங்குகின்ற மெல்லியபூக்களைக் கொய்து நீராடுதற்குரிய இலவாத குளங்களும் மடுக்களுஞ்சூழ்ந்த தண்ணிய நறுவிய சோலையைச் சார்ந்தார்கள்-எ-று. (௩)

திண்சிலைப்பருவமாகச்செயரிக்கருங்கண்பாந் ... .. ... *
புண்சிலசெய்வதொன்றுபோலவன்போன்றமஞ்ஞை ... ... *
பண்சிலம்பணிவாயார்ப்பநாணிறுப்பறந்தகின்னா... ... *
ஒண்கிலம்பாரிப்பமாதரொதுங்குதோறுதுங்குமன்னம்... *

அம்மாதர்களது கரஸ்பரிசமாத்திரையின் ஓரறிவுயிருந் தாழுமாயின் ஐயறிவுமுடையா ரன் வணங்காதாரிலரென்ப தாகருத்து. சொரிதலென்பது தாழ்தற்றொழிலோடொழிந்து நின்றது; இது தாழுமென்பதனோடு மியையும். இனிச் சொரிந்தென்பது தாழ்தற்றொழிலோடொழிந்த வெளி விகழ்காலமயநிறந்தது.

அம்புயத்தனையன்னாரம்மலர்க்கைதீண்ட... ... ... *
வம்பியலலங்கற்பங்கிவாளரிமருளுங்கோளார்... ... ......*
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்... ... *
கொம்புகடாழுமென்றல்கூறலாந்தகைமைத்தன்றே .... *

(இ-ள்.) தாமரைமலரி லெழுந்தருளிய திருமகளையொத்த மங்கையர்கள் அழகிய மலர்போன்ற கைகளாற்றீண்டுதலால், மணந்தங்கிய மாலையணிந்த சிகையையுடைய ஒளிபொருந்திய சிங்கங்கள் தம்மினமென மயங்குகின்ற தன்மையையுடைய ஆடவர்களது புயங்களாகியமலைகள் நெருங்கித்தாழ்வன தளிர்த்த மலர்களையுடைய மெல்லிய கொம்புகள் தாழுமென்று சொல்லுதல் எடுத்துக்கூறுதலாகிய தன்மையதாமொருபொருளன்று-எ-று. (௮)

வாளரிமருளுங்கோள்-எ-து-நடை-மெய்வலி போர்க்கஞ்சாத் தறுகணென்பனவற்றை. ஓ-எதிர்மறை.

நதியினுங்குளத்தும்பூவாநளினங்கள்குவளையோடு ... ... *
மதிநுதல்வடிவிற்பூப்பநோக்கியமாலைதும்பி... ... ... *
அதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா ... ... *
புதியனகண்டபோதுவிடுவரோபுதுமைபார்ப்பார் ... *

(இ-ள்.) நதிகளிலுங் குளங்களிலும் பூவாத தாமரைமலர்களைக் குவளைமலர்களோடு மதியையொத்த நுதலையுடைய பூங்கொடிகள் மலர அவற்றை நோக்கிய அணியாகவருகின்ற தும்பிகள் அதிசயத்தையடைந்து புகுந்து மொய்த்தன, புதுமைபார்க்கும் விருப்பமுள்ளோர் புதியனவற்றைக் கண்டபோதுவிடார் (ஆதலால்) ஓட்டவும்போகா-எ-று. (௯)

உலந்தருவயிரத்திண்டோளொழுகிவாரொளிகொண்மேனி ...*
மலர்ந்தபூந்தொடையல்மாலைமைந்தர்பான்மயிலினன்னார் ..*
கலந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாராய் ... ... *
புலந்தவர்போலநின்றவுளசிலபூத்தகொம்பர்... ... ... *

(இ-ள்.) திரண்ட கல்லினழகைத்தருகின்ற உறுதியாகிய திண்ணியதோள்கள் நேர்மையாகி நீண்ட ஒளியைக்கொண்ட மேனியையுடைய மலர்ந்தபூத்தொடுத்தலமைந்த மாலையைத்தரித்த தந்நாயகர்பால் மயிலையொத்தாராகிய இணங்கிய மங்கையர்கள் போல, பூத்தகொம்புகளிற் சிலதுவண்டுவளைந்தன கூடியுங்கூடுதலில்லாத மாதர்களைப்போலச்சில அப்பூக்கொய்கின்ற மங்கையர்கைகளில்வாராமல் நிமிர்ந்தனவாகியுள்ளன-எ-று. (௰)

தொடையலென்பது விகுதிமேல் விகுதிபெற்றதொழிற்பெயர் இதனைத்தொழிலாகு பெயராக்கொண்டு தொடையன்மாலையென்பதைத்தொடையலாகிய மாலையெனப் பண்புத்தொகையாக்குணுமமையும்;

பூவெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவளநோக்கி ... *
யாவையாங்கணவர்கண்ணுக்கழகிலவென்றெண்ணிக் ... *

# பூக்கொய்படலம்.

கோவையும்வடமுநாணுங்குழைகளுங்குழையப்பூட்டிப் ... *
பாவையர்பனிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார் ... *

(இ-ள்.) பாவையர்கள்தாம் மலர்களையெல்லாங் கொய்து கொள்வதினால் பொலிவிலாதனவாகித் துவளாநிற்க அதைநோக்கி இவைகள் கணவர்களுடையகண்களுக்கு ஒத்தன்மையனவாகத் தோன்றுநிற்கும் அலங்காரமிலனவென்றுகருதி (தாம்பூண்டிருந்த) மணிமாலையையும் முத்துவடத்தையும் பொன்னூணையும்குண்டலங்களையும் துவளும்படிப்பூட்டிக் கவிர்ந்தமெல்லிய பூக்களையுடையகொம்புகளை நோக்கினவர்களாகிவிரும்பிநிற்பார்கள் -எ-று.

நம்மிழவுநோக்காது கணவர்களிப்பேதங்களிப்பாகக்கொள்ளுதல் கற்புடையோரொழுக்காதலிற் பூப்பறித்த கொம்புகளுக்குத் தம்மணிகளைப்பூட்டிப் பரிந்துநின்றனரென்பது கருத்து.

துறும்போதினிற்றேன்றவைத்துண்டுழறும்பியீட்ட .... *
நறுங்கோதையோடுநணைசின்னமுநீத்தநல்லார் ... ... *
வெறுங்கூந்தன்மொய்க்கின்றனவேண்டலவேண்டுபோதும் .. *
உறும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே... ... ... *

(இ-ள்.) அடையத்தக்கபோகங்களையெல்லாம்மிக்க இன்பமுண்டாயவிடத்திலேயே நுகர்வார்கள் ஆதலால் மிதித்து மலரச்செய்து அடர்ந்தபோதுகளிலுள்ளதேனை உண்டு அவற்றைப்பிரியாமலுழலுகின்ற தும்பிக்கூட்டங்கள் தாம்விரும்புதற்குரிய போதுகளையும் வேண்டாதனவாகி நறுவியமாலையோடு தண்ணியசின்னங்களையும்நீக்கிய கற்புமுதலிய நல்லியற்கையுடையமங்கையர்களது வெறுமையாகிய கூந்தல்களைமொய்க்கின்றன-எ-று. (௰௨)

அன்றீற்றே-தேற்றம்.

மெய்ப்போதினங்கைக்கணியன்னவன்மென்பளிங்கில் ... *
பொய்ப்போதுதாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி ... *
இப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்... *
கைப்போதினோடுநெடுங்கண்பனிகாரநின்றாள்... ...... *

(இ-ள்.) மென்மையாகிய தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளுக்கு அணிமையொத்த சிறந்த அழகையுடையாள் நெய்த்தபளிங்கில் விளையாடற்குரிய போதைத்தாங்கிவிளங்குகின்ற தனதுமெய்யினிழலைநோக்கி ஒருமங்கையெனக்கருதி) இப்பாவையானவள் எம்முடைய நாயகனுக்கு உயிரையொத்தவளாவாளென்றுகருதிக் கையிற்றாங்கிய போதுவீழ நெடியகண்ணீரொழுகநின்றாள்-எ-று. (௰௩)

இப்பாவையைத் தன்னாயகன் கண்ணுறினுயிற் றன்பாற்கொண்ட வேட்கையொழியுமெனவும் அவ்வழகின்சிறப்புத்தனக்கில்லையெனவுங்கருதி யழுதனளென்பதுகருத்து: பொலிகின்றவென்னும் பெயரெச்சம் மேனியென்னும்பெயர்கொண்டது காருதல் வினைபோதுக்கில்லையேனும் வீழ்தலனதாகலின் ஒடுவுருபு வேறுவினையுடனிகழ்ச்சிக்கண்வந்தது. தன்றேவுயிர்த்தோழியையயுமளப்படுத்தி யெங்கோனென்றாள்.

கோளுண்டதிங்கண்முகத்தாளொருகொங்கோர்மன்னன்... *
றோளுண்டமாலையொருதேர்வையைச்சூட்டநோக்கித் ... *

தாருண்டகச்சாற்றலையுண்டமுலைக்களவி ... ... ...... *
வாருண்டகண்ணின்மழையுண்டெனவாரநின்றாள் ... ...... *

(இ-ள்.) இராகுக்கோளால் (ஒருபுறத்தே) கவரப்பட்ட திங்கள்போலு முகத்தையுடையாளாகிய ஒருபூங்கொம்பையொத்தவள், ஓராசன் தன்தோளிலணிந்தமாலையைத்தன் மனையாளாகிய ஒருமயிலன்னாளுக்குச்சூட்டாநிற்க அதைக்கண்டு தானையுடையகச்சினால்தடையுண்டமுலைகள்மேல்வாளையொத்தலையுண்டகண்களில்மழையுண்டென்றுசொல்ல நீர்த்துளியொழுகநின்றாள்.

இதுபோழ்துஇவ்வாறு என்கணவன் சூட்டப்பெற்றிலேனெனக் கவன்றாளென்பதுகருத்து. அன்றியோர்மன்னன் தன்மனைவியரிருவருள் தன்னருகிருந்தாளுக்குத்தோள்மாலையைச் சூட்டச் சேய்மைக்கணிருந்தவளேக்கியதுபொருளாகிக்கவும்ந்தனளெனினுமொக்கும். சூட்டவென்றதனால் அருகிருந்தாளென்பதும்நோக்கியென்றதனால் சேய்மைக்கணிருந்தாளென்பதும் பெறப்பட்டன. கோளென்றதுசடைக்குருவகமாகலின் ஒருபுறத்தவெனப் பதுவருவிக்கப்பட்டது.

மயில்போல்வருவாண்மனங்காணியகாதன்மன்னன் ... ... *
செயிர்தீர்மலர்க்காவிலோர்மாதவிச்சூழல்சேரப் ... ... *
பயில்வாளிறைபண்டுபிரிந்தறியாள்பதைத்தாள் ... ... *
உயிர்நாடியொல்குமுடல்போலலமந்துழன்றாள் ... ... *

(இ-ள்.) (தன்பால்) மயில்போலவருபவளது மனநிலையையறியும்படி அவள்பாற் காதலையுடையமன்னனவன் குற்றநீங்கியமலர்களையுடைய சோலையில் குருக்கத்திமரத்தைசூழ்ந்திருக்கிற ஓரிடத்தில் ஒளிந்துகொள்ளச் சிறிதும்முன்னேபிரிந்தறியாமலுடனுறைபவளாகிய அம்மங்கைதுடித்து உயிரைநாடித்தளருமுடல்போலச்சுழன்றுதிரிந்தாள்-எ-று. (௰௫)

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற ... ... *
நெய்தாவும்வேலானொடுநெஞ்சுபுலந்துநின்றாள் ... ... *
எய்யாதுநின்றமலர்நோக்கியெனக்கிலீண்டக் ... ... ... *
கொய்தீதியென்றோர்குயிலைக்கரங்கூப்புகின்றாள் ... ... *

(இ-ள்.) மைதங்கியகருமையாகியகண்களில் சிவப்புமிகுதியும்வந்துதோன்றும்படி நெய்பூசிய வேலையுடைய நாயகனிடத்தில் நெஞ்சுளுடிநின்று ஓர்மாது தனக்கெட்டாமல் நின்றமலர்களை நோக்கி இவற்றையானடையயாதொருதுணையுமில்லாவெனக்குக்கொய்துதாவென்று ஒருகுயிலுக்குக்கைகூப்புகின்றாள்-எ-று. (௰௬)

தலைவனோடு புலந்துநின்ற புலவியால் தன்னைப்பிரிந்தோனாகவைத்து அவனொடுவிராங் கந்தோன்ற எனக்கீதியெனக்கைகுவித்தனளென்பதுகருத்து. யாதொருதுணையுமில்லேனென்பது எனக்கெனுஞ்சொல்லாற்றலாற்போந்தபொருள்.

செம்மாந்ததெங்கிளநீரையொர்செம்மலேந்தி ... ... *
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன ... ... *
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றொரேழை ... *
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள் ... ... *

(இ-ள்.) உயர்ந்துவளர்ந்து நின்றதென்னமரத்தினது இளநீர்களைஒராட வன்னோக்கிவியந்துஇவைமங்கைப்பருத்தையுடையார்களது கொங்கைகளை ஒப்பாகுமென்றுசொல்ல (அவன்பக்கலிருந்த) நாயகியாகிய ஒருமங்கையா னவள் அந்தமாதர்களுடைய கொங்கைகளுக்கு இவையொப்பாயிருக்கின்றன வென்று கலுழ்ந்து உள்ளேகொதித்துப் புறத்தே முகம்வெயர்த்து வெம் மையாக மூச்செறிந்தாள்—எ-று. (௰௭)

தன்கொங்கையாகுமென்னாது மங்கையர் கொங்கைகளாகுமென்றுரைகலிற் பிறர்பால் வேட்கையுளானெனக்கருதிக்கலுழ்ந்து அவனைவெறுத்தனளென்பதுகருத்து. அவன் மங்கை யரெனக்கூறியது பிறர்பால்வேட்கையானன்று சாதிப்பன்மையானென்பார் இவளையேழை யென்றார்,

போரொன்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்.
மாரன்னனையான்மலர்கொய்திருந்தானைவந்தோர் ... .. *
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப ... ... ...*
ஆரென்னலோடுமனலென்னவுயிர்த்துயிர்த்தாள் ... ... *

(இ-ள்.) மேகம்போன்ற கூந்தலையுடைய குயிலையொத்த சொல்லாளாகி யஓர்மங்கைவந்து, போருளதெனக்கூற (கேட்டு) பூரிக்கின்ற மலையையொ த்த பொலனணிகொண்ட திண்ணியதோள்களையுடைய மதனையொத்தவனா கிய மலர்பறித்திருந்தகணவனைக்கண்மூடாநிற்க, அவன்யாரென்றுவினவலு ம் அவன்பாலையம்பிறந்து தீப்போலசினந்தாள்-எ-று. (௰௮)

அவன் ஆரென்றுரைகலின் நம்போல இவன்மாட்டு விளையாட்டயருமுரிமையுடையார்ப லருளரெனவுயிர்த்துச் சினந்தாளென்பதுகருத்து, உயிர்த்தாளெனக் காரணத்தைக் காரிய மாகவுபசரித்தார்,

ஊற்றூர்நறைநாண்மலர்மாதரொருங்குவாசச் ... ... *
சேற்றால்விளையாதசெந்தாமரைக்கைகணீட்டி... .. ... *
ஏற்றார்க்குதவானிடையேந்தினனின்றொழிந்தான் ... ...*
மாற்றானுதவான்கடுவச்சையன்போலொர்மன்னன் ... .. *

(இ-ள்.) மறுக்கான் கொடானாகிய கடுங்குணத்தையுடைய உலோபனைப் போல ஓரரசன் நறுமணமமைந்தசேற்றால் விளைவையடையாத செந்தாம ரைபோலுங்கைகளை ஒருமிக்கநீட்டி ஏற்றவர்களாகிய தன்மாதர்களுக்கு, ஊற்றமைந்த தேனையுடைய புதியமலர்களை (இனியமுகத்தனாய்) உதவானா க அவ்விருவருக்கும் இடையே ஏந்தினவனாய்நின்றானேயன்றி வேறொன்று ஞ்செய்திலன்-எ-று. (௰௯)

உவமையில் மாற்றானென்றதற்கேற்பப்பொருளில் இனியமுகத்தனென்பதுவருவிக்கப் பட்டது. பன்மாதரிடையென்னாது மாதரிடையென்றதனால் இருவரென்பது பெறப்பட்டது. தான்கொணர்ந்த நாண்மலர்களைப் பகுத்துச் சமன்செய்து ஒருங்குதருவானாயினும் என் னை மற்றவளோடொத்தாளாகக்கருதினனன்றி என்னைச்சிறந்தவளாகக்கருதிலனென இருவரு ந்தனித்தனி மாறுபட்டு ஊடுவாராகலானும் அதுகாரணமாகத்தானாயினும் அன்னது பெறு வானாகலானு மிங்ஙனஞ்செய்தானென்பதுகருத்து. நின்றொழிந்தானென்பதில் ஒழியென்னு ம்விகுதி ஒருதலையென்னும்பொருடரலின் நிற்றலேயன்றி வேறுசெய்திலனென்பது வருவிக் கப்பட்டது.

தைக்கின்றவேனோக்கினனோ டுயிரன்னமன்னன் ... ... *
மைக்கொண்டகண்ணுளெதிர்மாற்றவள் பேர்விளம்ப ... *
மெய்க்கொண்டநாணைந்தலைக்கொண்டிடவிம்மிமென்பூக் ... *
கைக்கொண்டுமோந்தாளுயிர்ப்புண்டுகரிந்தவன்றே ... *

(இ-ள்.) மார்பிற்றைக்கின்ற வேல்போலும் நோக்கத்தையுடைய ஒருமா னினதுயிரையொத்த அரசன் அவ்வஞ்சனத்தைக்கொண்ட கண்ணாளுக்கெதி ரே மாற்றவளுடைய பேரைக்கூறுநிற்க, (அதனால்) மெய்ம்மையாககொண் டநாணமானது தலைகொள்ள விம்மாநின் றலைவிய பூக்களைக்கையிற்கொ ண்டு மோந்தாள் அப்பூக்கள் அவ்வுயிர்ப்பின்வெம்மையுண்டுகரிந்தன-எ-று.

ஓர்மன்னன் மாற்றாள்பாற்கொண்ட வேட்கையினாலோ அன்றிச் சோர்வினாலோ அவ ளுள் பேர்கூறுநிற்கக்கேட்ட ஓர்மங்கையானவள் நம்முயிர்போல இவனையாங்கருது மன்பு செய்தொழுகாநிற்க இவன் அவள்பால் மிக்கவேட்கையனென்க்கருதித் தானிதுகாறுஞ் செ ய்தொழுகிய அன்பு முதலியவற்றைப்பற்றி நாணித்தன்பொய்யொழுக்கத்தால்வருந்தித்துவை த்தானெனக்க ஊழ்ந்து அவன்பாலூடினளென்பதுகருத்து. மைக்கொண்டகண்ணாளென்பது சுட்டுப்பொருளதாய்நின்றது. மென்பூக்கை: கொண்டு மோத்தல்விருப்பானன்றே யாதலி னீண்டுப்பூவென்பது கருத்தில் வழிச்செயப்படுபொருள்.

திண்டோரசனொருவன் குலத்தேவிமார்கம் ... ... *
ஒண்டாமரைவாண்முகத்துண்மிளிருண்கணெல்லாங் .. ... *
கண்டாதரிப்பத்திரிவான்மதங்கவ்வியண்ணை ... ... ... *
வண்டாதரிப்பத்திரிமாமதவானையொத்தான் ... ... ... *

(இ-ள்) திண்ணியதோளையுடைய அரசனாகிய ஒருவன் குலத்திற்விவாகஞ் செய்த தன்தேவிமார் பலருடைய ஒள்ளியதாமரைமலர்போன்ற ஒளியமை ந்தமுகங்களில் விளங்குகின்ற மையுண்ட கண்கள்யாவும் (தன்சுட்டழகை) கண்டு அன்புகொள்ளத்திரிவான் அவன்மதத்தை வாய்நிரம்பக்கொண்டுண் ணும்படி வண்டுகள் ஆதரித்துத்திரிகின்றமதத்தையுடையபெரியயானையை யொத்தான்-எ-று. (௨௧)

உண்கணெல்லாமென்றவிற் பலரென்பது பெறப்பட்டது.

சந்திக்கலாவெண்மதிவாணுதலாடனக்கும் ... ... ... *
வந்திக்கலாகுமடவாட்கும்வகுத்துநல்கி .. ... ... *
நிந்திக்கலாகாவுருவத்தினனின்றபோழ்துஞ் ... ... *
சிந்திக்கலாபமயிற்கண்கள்சிவந்துபோனார் ... ... ... *

(இ-ள்.) தான்கொய்துவந்தமலர்களைச்சந்திப்பொழுதில் விளங்குகின்ற கலையையுடைய பிறைமதிபோன்ற ஒளியமைந்தநெற்றியையுடையஒருநா யகிக்கும் (அருந்ததியும்) வந்தனைசெய்யத்தக்க கற்புடைய மற்றொரு நாய கிக்கும் சமனாகப்பகுத்துக்கொடுத்து (வடிவிலக்கணங்கூறு நூலோரால் குற் றங்கூறலில்லாத வடிவையுடைய அரசன் மற்றொன்றுஞ் செய்யாதுநின்ற போதும் (அவ்விருவரும் அம்மலர்களையேயன்றி) பலமணிகள்கோத்த இ ருபத்தொரு வடமாகிய கலாபத்தையுமறுத்துச்சிந்தி வேல்போலுங் கண்க ள்சிவந்து சினங்கொண்டுபோனார்கள்-எ-று. (௨௨)

னுந்தன் கைப்படையேயன்றி வேறுதுணைவேண்டாது முட்டின்றி எளிதின்முடிக்குமாற்ற லுடையானென்பாள் மறவிக்கூறும்வன் கதிர்வேலானெனவும் வருதலையாணித்தலின்றலை நீயேனுமவனுழை நச்சேறற்கு விழைந்திலையோவென்றாட்கு அவன் ஊடணிகழ்தற்குற்றம்புரிந்தானாகயானேசேறலாகாதியன்றென்பாள் இடையேவந்தெனவும அவனைப்பிரிந்தவழி யெற்றைக்குக்கோலமியந்தன்னையென்றாட்கு அவன் கண்டுமகிழ்ந்து என்னைப்புல்லுமாறன்றிவேறன்றென்பாள் உறவெனவும் தானப்பலகால் நீருடிந்துவண்டவருத்தமும் அதனருமையுந்தோன்ற இச்கோலமெனவுமப்பலபேசிப்பயனென்னையாணிதுபோழ்து அவனைமுயக்கப்பெற்றேனாயினுயிர்வாழ்க்கை வேண்டேனென்பாள் பெற்றிலனென்று உடன்வாழ்விப்பிறவிக்கொல்லேனெனவும் அவன்கண்டு மகிழ்ப்பெருமையிற் பயனிலது மிழிந்ததுமாமென்பாள் என்செய்வுஇப்பேரணியெனவுங்கூறிதசல்கூறிய மெய்ப்பாடுதோன்றத் தானணிந்திருந்த மணியணிமுதலியவீந்துவிடுவோளாயினள். வனமைகாரணவாகுபெயர் பேரணியென்பதுகுறிப்பு.

வஃகிப் பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக் ......*
கம்பிக்குந்தந் நுண்ணிடைநோவக்களிவாரும் ... ... *
பைம்பொற்கிண்ணம்மெல்விரலூங்கிப்பயிற்கின்ற .. *
கொம்பிற்பிள்ளைகிள்ளையொளிக்கக்குழைவாரும் ..... *

(இ-ள்.) கச்சினின்றும் அடங்காது புறத்தே தோன்றுகின்ற கொங்கைகளைச்சுமக்கும் வலியில்லாமல் நடுங்காநிற்கும் தம்முடைய நுண்ணிடையானது நடக்குந்தோறும் நோவாநிற்பதினால் அயர்வாரும் தம்மொழியிரியாதுகூறுகின்ற கிளிப்பிள்ளைகள் பூங்கொம்புகளி லொளித்துக்கொள்வதினால் (உவைவமைந்த) பசும்பொன்னாற்செய்த கிண்ணங்களை மெல்லிய விரல்களிலேதாங்கி மனங்கலவாரும்—எ-று. (உ௮)

தன்னைக்கண்டாண் மென்னடைகண்டாடமர்போலத் ... *
துன்னக்கண்டோ தோழமைகண்டாடுணையென்றாள் ... *
உன்னைக்கண்டா ரொன்றுவர்பொல்லாதுடுநீயென் ... *
றன்னக்கன்னிகைகாடையளிப்பழைமைவாரும் ... ... *

(இ-ள்.) தன்னைக்கண்டு மென்மையாகிய நடையைக்கண்டுசிலதியர்போலப்பிரியாதுதொடரக்கண்டு (அதனால்) நட்பின்றன்மையைக்கண்டு உயிர்த்தோழியென்றுகூறி உன்னைக்கண்டவர்கள் இகழ்வார்கள் அதுபொல்லாது நீஉடுத்துக்கொள்ளென்று அன்னமாகியகன்னிகைக்கு ஆடைகொடுப்பவர்களும்—எ-று. (உ௯)

குலமங்கையர்களாதலிற் றமரொன்பது பெயரிற்பிரிந்த வாளொழிமிகுசொல். அன்னமென்பதுசாதியொருமை. கன்னியென்பதுஇணைவழூவமைதி முற்படக்கிளத்தல் செய்யுளுளுரித்தேயென்பவாகலிற் சுட்டுப்பொருளதாய்நின்றதன்னென்பது முற்படக்கிளக்கப்பட்டது. கண்டாள் என்றுளென்பன பன்மையிலொருமைவந்தவழூவமைதி. என்னை - அமைவார் யாவரும் தன்னைக்கண்டு மென்னடைகண்டு துன்னக்கண்டு தோழமைகண்டு துணையென்று ராகவின் கண்டாளென்றுளென்னுமொருமை யமைவாரென்னும்பன்மையோடு தனித்தனிச்சென்று கூடுதலின் வழூவின்றேனுமீற்றுப்பன்மைபற்றிவழூவமைதியாயிற்று. நச்-ம்- மெல்வருமிரண்டு செய்யுண்முடிபுகளுமன்ன,

பாலொக்குஞ்சொன்னுங்கலையாடன்படால்குல் .. *
ஆகக்கண்டோராடரவாமென்றயனண்ணுத் ... ... *

தோகைக்கஞ்சிக்கொம்பிறொதுங்கித்துணைநீன்ற ... *
சாகைத்தங்கைக்கண்கள்புதைத்தேதளர்வாரும் ... *

(இ-ள்.) பாகையொத்த நுண்ணியகலையையுடையாள் தன்னுடைய பாதத்த அல்குலை நோராகக்கண்டு ஆடுகின்ற ஓர் பாம்பெனக்கருதி, அருகேசேர்கின்ற மயிலுக்கஞ்சிப் பூங்கொம்புபோலநடந்து மலர்களமலர்ந்த பூங்கொம்புகளில் (மறைந்து) தங்கைகளால் கண்களை மூடித்துன்புறுவாரும்-எ-று.

பொன்னேதேனேபூமகளேகாணெனையென்றுத் ... *
தன்னேரில்லாளங்கொருகொம்பிற்றழைமூழ்கி ... ...*
இன்னேயென்னைக்காணுதிநீயென்றிகவித்தந் ... ... *
நன்னீலக்கண்கையின்மறைத்துநகுவாரும் ... ... *

(இ-ள்.) அச்சோலையினிடத்தில் தனக்கொப்பில்லாள் பொன்னையொத்தவளே தேனையொத்தவளே பூமகளையொத்தவளேயென்னைப்பாரென்று சொல்லிக் கொய்யன்மரத்தின் மிக்க தழைகளில் நுழைந்து இப்போதே நீயென்னைக்காணுயென்று பகைத்துத்தம்முடைய மிகுதியுங்கருமையாகிய கண்களைக்கைகளினால்மூடி நகைப்பாருய்—எ-று. (௫௧)

பகைத்தலாவது-விளையாட்டயர்வதிற்றம்மாற்றலை வியந்துகூறிமுரணிநிற்றல். பொன் தேன் பூமகள் என்பன வுவமவாகுபெயர்கள் காண்காணுதிநீயெனபனவுமவமூவமைமி,

வில்லிற்கோதைநாணுறப்பிக்கோரிலவங்கம்... ... ...*
புல்லிக்கொண்டதாமரைமென்பூமலர்தாங்கி ... ... *
அல்லிற்காதைமாதர்முகப்பேரரவிந்தச் ... ... *
செலவக்கானிற்செங்கதிரொன்னத்திரிவாரும்... ... ...*

(இ-ள்.) (இடக்கையிற்றாங்கிய) வில்லில் நேர்மையாகிய நாண்பொருந்த இலவங்கமலாகளை (சுற்றிலும்) சேர்த்துக்கொண்டமெல்லிய தாமரையினது ஒருபூவாகிய மலரை(வலக்கையில்)தாங்கிஇருள்போலுங்கூந்தலிப்மாலையணிந்த தம்மாதர்களது முகங்களாகிய பொலிவமைந்த பெரிய தாமரைமலாக காட்டில் செங்கதிர்போலத்திரிவாரும்—எ-று. (௫௨)

தாமரைமலர்தாங்கியென்றதனுல் தந்தேவிமாரகத்தேகாமவேட்கைதோன்றவும்முகப்பேரரவிந்தக் கானிற்செங்கதிரொன்னவென்றதனுல் அதுபுறத்தேதோன்றவும் ஆடவர்கள் திரிந்தார்களென்பதுகருத்து.அல்லென்பது இருளுக்காகுபெயராயதுகுழலுக்குருவகமாயது*

செய்யிற்கொய்யுஞ்செங்குமுதஞ்செஞ்சிலையொன்றுங் *
கையிற்பெய்யுங்காமனுநாணுங்கவினூர்த ... ... *
மையற்பேதைமாதர்மிழற்றுமழலைச்சொற்... ... ...*
றெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும் ... *

(இ-ள்.) வயல்களிற் கொய்த செங்குமுதமும் செம்மையாகிய வில்லொன்றும் கைகளில்வைத்த காமனும் நாணுகின்ற அழகையுடைய ஆடவர்கள் பேதைத்தன்மையுடைய தம்மாதர்கள் மையலால் (குறிப்பாகச்) சொல்லுகின்ற குதலைச்சொற்களை வேதங்களையும் செல்லுதற்குரியகலைகளையுமாராய்வதுபோல ஆராய்வாரும்—எ-று. (௫௩)

பெய்யுமென்னும்பெயரெச்சம் கவினுமென்னும்பெயர்கொண்டது. குழுகமென்றதற் கேற்பவைபவலென்றார். தெய்வப்பாடலென்பது அடையடுத்த தொழிலாகுபெயர்- தெரிவா ரெனககாரியநதைக்காரணமாகவுபசரித்தார்.

சோலைத்துய்ப்பெனக்குழலாகத்தொடைமேவுங் .. .. *
கோலைக்கொண்டமன்மதவாயன்குறியுய்ப்ப ... *
நீலத்துண்கண்மங்கையர்குழநிரையாவின் ... ... *
மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும் ... ... *

(இ-ள்) அச்சோலையின்கண் வண்டுகளின்றொகை மெல்லிய குழலோசை யாகத் தொடைமேவிய கோலைக்கொண்ட மன்மதனாகிய கோவலன்குறியிற் செலுத்தலினால் மாலைப்போதிலே நீலநிறமமைந்த (மை) உண்ட கண்களை யுடைய மங்கையர்கள் கூட்டமாகியபசுக்களைப்போலச்சூழ்ந்துவரப்பெரு மையாகிய இடபங்கள்வருவதுபோல வருவாருமாயினர்—எ-று. (௬௪)

நம்பிகருத்தாவாகுபெயர் குழல் கருவியாகுபெயர் இது இடவாகுபெயரெனினுமொ க்கும் தொடைமேவுங் கோலென்பது மன்மதனுக்கு நாணியில்மேவிய அம்பெனவு மாயு தமாந்த மாலமேவிய ஆக்நரந்துங் கோலெனவும் பொருள்கொள்க தீரிவாருமென்பது முத லெனவாருமென்பது இருக்கின்ற பன்னிருவினைமுற்றுகளினுமிற்ப்பு தொழிற்றலைமையுணர் தலைபெற்றியெதிர்வாயிற்று இதுக இறப்பே யெதிர்வேயென்னுந் சூத்திரத்தானைமைக்க ன்னும இவைபோல்வன பிறசெயவாரு முளவென்பார் அவாடநிலையான்முடித்தார்.

வேறு.

ஊக்கமுள்ளத்துடையமுனிவரகற் ... ... ... *
காக்கலாவதுகாமன்கைவில்லெனும்... ... ... ... *
வாக்குமாத்திரமல்லதுவெயிற் ... ... ... .. *
பூக்கொய்வாள்புருவககடைபோதுமே ... ... ... *

(இ-ள்.) கொடிகளில பூக்கொய்கின்ற ஒருத்தியினது புருவத்தின்கடை யே(தவவொழுக்கங்களை அழிக்க) வல்லதாகும் (ஆதலால்) உள்ளத்தில் ஊக்க முடைய முனிவர்களால் காத்தலுக்குத்தக்கது காமனுடையகையிற்பிடித்த வில்லென்று சிறப்பித்துச்சொலலுஞ்சொல்மாத்திரமுள்ளதன்றி (ஒழுக்க மின்றென்பதாம்)—எ-று. (௬௫)

ஊக்கம்தாமமிட்ட காமவின்ப முதலியவற்றிற்குச்சலியாதுநிற்குந்தன்மைஇது இசுதி க்கட் கூறுக ந்க் கருத்தெவ்வையோவெனின் ஐம்புலவேட்கையைத்துறவா விலவறத்தோர் அம்மங்கையர் களது உருமுதலியவற்றை வேட்டாராகவிதாகாறுங்கூறியதொருவியப்பன்று காண்டாராயின் முற்றுந்துறந்த முனிவர்களும் வேட்பரென்பதுதோன்றற்கென்க எனவே அம்மங்கையர்களியாவருங் மிக்ககட்டழகுடைய ரென்பதுகருத்து. போதுமேயென்றதிலே காரத்தைக் கடையென்பதனோடுகூட்டுக இதுபிரிநிலை. பகைவருக்கமாறனுட்காமஞ்சிறந்த தொனருகவிற் காக்கலாவது காமன்கைவில்லென்றார்.

நாறுபூங்குழனன்னுதல்புன்னைமேல் ... ... ... *
ஏறினன்மனத்தும்பர்சென்றேறினள் ... ... ... *
ஊறுஞானத்துயர்ந்தவராயினும் ... ... ... *
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ ... ... ... ... *

(இ-ள்.) பெருகுகின்ற ஞானத்தையுடைய முனிவர்களாயினும்பெருமை சேர்ந்தகொங்கைகளையுடையமாதர்களைப்பற்றிவருமாசையைவெல்லார்கள்

(ஆதலால்) மணக்கின்ற பூமாலையணிந்த கூந்தலையும் நல்லநெற்றியையு முடையாள் புன்னைமரத்தின்மேல் ஏறின நாயகனுடைய மனத்தின்மேல் சென்றேறினாள் — எ-று. (௩௬)

உம்மை-சிறப்பு. மாதர்காரணவாகுபெயர். நன்னுதல் மனத்தும்பர்சென்றேறுதலாவது நாயகிபால்வைத்த வேட்கையடங்காது அவனையேகருதுதல்,

சினையின்மேலிருந்தானொருத்தேவரால் ... ... ... *
வினையவும்மரியாள்வனப்பின்றலை ... ... ... ... *
நினைவுநோக்கமுநீக்கலன்கைகளால் ... ... ... *
நனையுந்தான்முறியுங்கொய்துநல்கினான் ... ... ...... *

(இ-ள்.) மலர்கொய்தற்காக) கிளையின்மேலிருந்த ஓராடவனானவன், தேவர்களாலும், எழுதவரிய உருவத்தையுடைய நாயகியினது அழகினிடத்தில் வைத்தஎண்ணத்தையும் பார்வையையும் மறக்காதவனாகிக் கைகளால்அரும்புகளையும் புதியதளிர்களையுங்கொய்து ஈந்தான் — எ-று. (௩௭)

வினையவுமென்பதன்கட் சிறப்பும்மையைத் தேவராலுமெனக்கூட்டுக.

வண்டுவாழ்குழலாள்முகநோக்கியோர் ... ... ... *
தண்டுபோற்புயத்தான்றடுமாறினன் ... ... ... ... *
உண்டுகோபமென்றுள்ளத்துணர்த்தவ ... ... *
டொண்டைவாயிற்றுடிப்பொன்றுசொல்லவே ... .. *

(இ-ள்.) கதாயுதம்போலும் புயங்களையுடைய ஓராடவன் வண்டுகள் (சேர்ந்து) வாழ்கின்ற கூந்தலையுடைய மங்கையினது முகத்தை நோக்கி அவளது கொவ்வைக்கனியையொத்தவாயில் துடித்தலொன்றும் கோபமுண்டென்றுசொல்லத் தெரிந்து உள்ளம்நிலைகுலைந்தான் — எ-று. (௩௮)

தண்டுபோற்புயத்தானெனவே வலியதோளனெனப் பொருள்படுதலாலிற் றல்தோண்மாலையை ஒருதொகைக்குச்சூட்டி வந்தானாகலவேண்டும் ஆகவே அவனுடைய தோள்பட்டதாகுக்கு மயங்கும்வேட்கையானவள்வாயுறைபெறுவானெண்ணிக்கருத்துதல் வழிச்செல்கின்றனனாகவின் மற்றையவுடற்குறிப்புகளையுணர்ந்திலனெனப் பார் துடிப்பொன்றுசொல்லவென்றார். இனித்தென்றற்பொருளேற்கனும்மைவிகாரத்தாற்றொக்கது.

ஏயுந்தன்மையர்வேறியலாரெலாந் ... ... ... ... *
தூயதண்ணிழற்சோலைத்துறுமலர் ... ... ... *
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை... ... .. *
பாயுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினார் ... ... *

(இ-ள்) (இவ்வாறு) அமைந்த இயற்கையுடையாரும் இதுபோலும் பல்வேறுதன்மையுடையாருமெல்லாம் தூயதாகிய, தண்ணிய நிழலைத் தருகின்ற சோலையின்கண் அடர்ந்தமலர்களைக் (கொய்து) அணிகின்ற செய்கையை வெறுத்தவர்களாகிப்போய் வெள்ளிய திரைகள் (அலையில்) பாய்கின்ற இனிய புனல்விளையாட்டை மேவினார்கள் — எ-று. (௩௯)

இ-வது-பூக்கொய்படலமுற்றிற்று.

[௪௨]

பொற்றொடித்தளிர்க்கைச்சங்கம் வண்டொடுபுலம்பியார்ப்ப *
எற்றுநீர்குடையுந்தோறுமேந்துபேரல்குனின்றுங் ... *
கற்றைமேகலைகணீங்கிச்சிறடிகவ்வக்காலிற் ... ... *
சுற்றியநாகமென்றுதுணுக்கத்தாற்றுடிக்கின்றாரும் ... *

(இ-ள்.) வளைகள் (கூந்தலில்மொய்த்த) வண்டுகளோடுபுலம்பியாரவாரிக்கும்படி பொன்னாலாகிய தொடியணிந்த தளிர்போலுங்கைகளால் நீரை எறியாநின்று மூழ்குந்தோறும் உயர்ந்த பெரிய அல்குலி லிருந்து கற்றையாகிய மேகலையின் மணிவடங்கள்நீங்கிச்சிறிய அடிகளைக்கவ்விக்கொள்ளுதலால் காலில் நாகங்கள் சுற்றியவென்றுகூறி அச்சத்தாற் றுடிக்கின்றவருமாயினார் இவைபோல்வன பிறசெய்வாருமாயினார்—எ-று. (௰௧)

செய்பூவென் வாய்பாட்டு எற்றாகுறுக்கலாயிற்று எறியாநின்றுகுடைதலாவதுஒருத்தி ஒருத்திமேலெறியாநின்று அவள்தம்மேலெறியாமுன்னர் நீருள்மூழ்குதல். இதைச்செய்துமுதலியவற்றில்தொழிற்றன்மை யுணர்த்துதலபற்றி இறப்பு நிகழ்வாயிற்று-இதுவினை யெச்சகாலமயங்குதல் வரையாரென்னுஞ் சூத்திரத்தானமைக்க இவ்வாறு இறப்பு, எதிர்வுநிகழ்வுமாய்வருவதை ஒருபொருண்மை குறியாதுவருமென்பாருமுளர்.

குடைந்துநீராடுமாதர்சூழாம்புடைசூழவாழித் ... ... *
தடம்புயம்பொலிபவண்டோர்தார்செழுங்கழற்கனின்றான் ... *
கடைந்தநாண்மூழிதோந்கடலிடைவந்துதோன்று ... *
மடைந்தையர்சூழநின்றமந்தரம்போலமாதோ ... ... *

(இ-ள்.) கடைந்தநாளி லமுதத்தோடு பாற்கடலில்வந்துதோன்றியதெய்வமங்கையர்கள்சூழநிற்க இடையேநின்றமந்தரமலைபோல, நீரில்மூழ்கியிளையாடுகின்ற மாதர்களதுகூட்டம் பக்கத்தில் சூழ்ந்துநிற்க அங்கதமணிந்த பெருமையாகிய புயங்கள்விளங்கும்படி அத்தடத்தினிடத்து மாலையைக் கெழீஇய ஓரரசன்நின்றான்—எ-று. (௰௨)

ஆழி-பண்பாகுபெயர் கெழுவென்பதுவேற்றுமைகுறித்த பொருள்வயில்வந்தசாரியை

தொடியுலாங்கமலச்செங்கைத்தூநகைத்துவர்த்தசெவ்வாய்க் ..*
கொடியுலாமருங்குலல்லார்சூழதொழுகுரிசினின்றான் ... *
கடியுலாங்கடல்வேலிக்கண்ணகன்காணியாற்றுப் ... ... *
பிடியெலாஞ்சூழநின்றபெய்மதயானையொத்தான் ... *

(இ-ள்) வளையணிந்ததாமரைமலர்போன்ற செங்கையையும் தூய்மையுடையபுன்சிரிப்பையமைந்த மிக்கசிவப்பாகிய வாயையும் பூங்கொடியைப்போலத்துவளாநின்ற இடையையுமுடையமாதர்களதுகூட்டத்தில் ஓரரசனின்றான் (அவன்) மணம்பொருந்தியசாமரைவேலியமைந்தஇடமகன்றகாட்டாற்றிற் பெண்யானைகளெல்லாம் சூழும்படி இடையேநின்ற மதம்பெய்கின்ற ஆண்யானையையொத்தான்—எ-று. (௰௩)

பல்லின்றூய்மை அதன்காரியத்தொழின்மேலேற்றப்பட்டது.

கானமாமயில்களெல்லாங்களிகெடக்களிக்குஞ்சாயற் ... *
சோனைவார்குழலினார்தங்குழாத்தொருதோன்றனின்றான் .... *

வானயாறதனை நண்ணிவயின்வயின்விளங்கித்தோன்று ... *
மீனெலாஞ் சூழநின்றவிரிகதிர்த்திங்களொத்தான் ... ... *

(இ-ள்.) (அங்குள்ள) சோலையில்வசிக்கும் பெருமையாகிய மயில்களெல்லாஞ் செருக்குக்கெடும்படி செருக்குகின்றசாயலையுஞ்சோனைமழைபோன்ற கூந்தலையுமுடைய மங்கையர்களதுகூட்டத்திலொருமன்னனின்றான் (அவன்) ஆகாயகங்கையை நெருங்கி (விண்ணில்) பலவிடத்தே விளங்கித் தோன்றும் மீன்களெல்லாஞ் சூழும்படி (இடையே) நின்றவிரிந்தகதிர்களையுடைய சந்திரனையொத்தான்—எ-று. (௰௪)

மேவலார்தகைமைத்தல்லால்வேழவிற்றடக்கைவீரற் ... ... *
கேவலாங்காட்டுகின்றவிணைநெடுங்கண்ணோரேழை ... ... *
பாவைமார்பயந்தகோலப்பண்ணையிற்பொலிவாள்வண்ணப். *
பூவெலாமலர்ந்தபொய்கைதாமரைபொலிவதொத்தாள் ... *

(இ-ள்.) செங்கரும்பாகிய வில்லைப்பிடித்தபெருமையாகியகையையுடைய மன்மதனுக்கு விரும்புதலாகிய தன்மையையுடையதுமன்றி (அவனுடைய) ஏவற்றொழிலெல்லாவற்றையுங்காட்டுகின்ற (தம்முள்) ஒத்த வடிவினவாகிய நெடியகண்களையுடைய ஓர்பெண்ணானவள் சிலதியர்கள் கூடியமைத்த அழகியகூட்டத்தில் விளங்குவாள் (அவள் நானாவிதமாகிய) நிறமமைந்தமலர்களெல்லாம்மலர்ந்தபொய்கையில் தாமரைமலர் பொலிவதையொத்தாள்—எ-று.

பயந்தவென்பது இலக்கணை. தகைமைத்தென்பதன்கண் எதிரதுதழீஇய எச்சவும்மையும் எல்லாமென்பதன்கண் இறந்ததுதழீஇயதுமெனு முற்றுப்பொருட்படநின்றவும்மையும் விகாரத்தாற்றொக்கது. தகைமைத்தென்பது பன்மையின்கணொருமைவந்த வழுவமைதி. உருபுகடுக்குமுதலுருபுகளைநோக்கிப்பொருள்கூறலே மரபாகலின், வீரற்குமேவலார்தகைமைத்து கண்ணென்பதற்குக் காதற்பொருளும் வீரற்கேவலாங்காட்டுகின்ற கண்ணென்பதற்குச் சிறப்புப்பொருளுங்கொள்க. அனுவாயமனத்தையுமெய்யவலாதுக்கேவலாங்காட்டலிற் சிறப்பாயிற்று.

மிடலுடைக்கொடியவேலேயென்னவாண்மிளிர்வவென்னச்... *
சுடர்முகத்துலவுகண்ணோர்தோகையர்சூழநின்றாள்... ... *
மடலுடைப்போதுகாட்டும்வளர்கொடிபலவுஞ்சூழக் ... *
கடலிடைத்தோன்றுமெல்பூங்கற்பகவல்லியொத்தாள்... ... *

(இ-ள்.) வலியுடைய கொடியவேல்களென்னவும் விளங்குவனவாகிய வாள்களென்னவும் ஒளியமைந்தமுகத்தில் பிறழ்கின்ற கண்களையுடைய ஓர்மாது சிலதியர்கள்சூழநின்றாள் (அவள்) மடல்களையுடையபோதுகளைமலர்ந்து வளர்கின்ற கொடிகள்பலவுஞ்சூழும்படி பாற்கடலில்தோன்றியமெல்லியபூக்களையுடைய கற்பகத்தில்வளர்கிற காமவல்லியையொத்தாள்—எ-று (௰௫)

தேரிடைக்கொண்டவல்குறெங்கிடைக்கொண்டகொங்கை .. *
ஆரிடைச்சென்றுங்கொள்ளவொண்ணிலாவழகுகொண்டாள்... *
வாரிடைத்தனமீதாடமூழ்கினாள்வதனைநீர் ... ... ... *
நீரிடைத்தோன்றுந்திங்கணிழலெனப்பொலிந்ததன்றே ... *

(இ-ள்.) தேர்த்தட்டில் (மெய்ப்பழகைக்) கொண்ட அல்குலையும், இளநீரி

ல் (மெய்ப்பழகைக்) கொண்ட கொங்கைகளையும், (அழகிற்சிறந்தோராகிய) யாரிடத்துஞ்சென்று அடையக்கூடாத அழகையுங்கொண்டவள் மாரிலடங்கியகனங்கள் மேலேதோன்றும்படி மூழ்கினாள் (அவளுடைய மேலேதோன்றுகின்ற முகம் நீரிலே தோற்றுகிற குற்றநீங்கிய சந்திரவிம்பம்போல விளங்கியது—எ-று. (யஎ)

மலைகடந்தபுயங்கண்மடந்தைமார் ... ... ... *
கலைகடந்தகலல்குலுந்தாம்பட ... ... ... *
முலைகடந்துமுன்முந்திநெருங்கலா ... ... ...*
னிலைகடந்துபரந்ததுநீத்தமே ... ... ... *

(இ-ள்.) (ஆடவர்களது) மலைகளைவென்ற புயங்களும் மாதர்களது ஆடையைக்கடந்தகன்ற அல்குல்களும் தாம் (ஒன்றோடொன்று தாக்கும்படி) கொங்கைகளும் (மற்றையவயவங்களினும்) முற்பட்டுத் தத்தமக்குள் நெருங்குவதினால் அம்மடுவினது) நீர்தன்கரையைக்கடந்து பரவியது—எ-று. (யஅ)

ஏனையவுறுப்புகளினும் முற்படுமென்றமை திரண்டு பருத்தவுருவினவாகலினத்தலைமைபற்றி யவற்றினெருக்கத்தை நீத்தநிலைகடப்பதற்குக்காரணமாக்கிக்கூறினர்.

செய்யவாய்வெளுப்பக்கண்சிவப்புற ... ... *
நெய்யுராகமழியத்துகினெகத் ... ... ...*
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலாற் ... ...*
பொய்கைகாதற்கொழுநரும்போன்றவே ... .*

(இ-ள்.) சிவந்தவாய் வெளுக்கவும் கண்கள்சிவக்கவும் நெய்யொடு கலந்த செம்பராகம் அழியவும் உடுத்த ஆடை அவிழவும் தொய்யிலணிந்த பெருமையாகிய கொங்கைகளையுடைய மங்கையர்கள் மூழ்குவதினால் அத்தடாகமானது விருப்பமுள்ள நாயகர்களையும்போன்றது—எ-று. (யகூ)

கொழுநருமென்பது இறந்தது தழீஇயவெச்சவும்மை,

ஆனதூயவரோடுறைதினர் ..... ... ... *
ஞானநீரவராகுவர்நன்றரோ... ... ... .. *
தேனுநாவியுந்தேக்கிலாவியு ... ... ...*
மீனுநாறினவேறினிவேண்டுமோ ... ... .*

(இ-ள்.) (இயற்கையிலேயன்றிக் கல்விகேள்விகளினாலும்) அமைந்த தூய அறிவினரோடு பிரியாது பயின்றவர்கள்மிகவும் அறிவில் தன்மையையுடையவர்களாகுவர் (இதுபோலவே) அவ்வாடவரும் மங்கையரும் மூழ்கிய மடுநீரால் பயில்கின்ற மீன்களும், தேன்மணமும் கத்தூரிமணமும் மிகுந்த அகிற்புகைமணமும் நாறின (அவர்களது மிகுதியைக்கூறுதற்கு) இனி வேறுவேண்டுவதில்லை—எ-று. (உய)

நன்றென்னுங்குறிப்புச்சொல் பெரிதென்னும்பொருடந்து வினையெச்சமாய்நின்றது. ஞானநீரவராகுதனன்றோவெனப்பாடமோதுவாருமுளர்.

மிக்கவேந்தர்தமெய்யணிசாந்தொடும் ... ... *
புக்கமங்கையர்குங்குமப்போர்த்தலால்... ... *

ஒக்கநீலமுகிற்றலைபோடிய ... ... ... ...*
செக்கர்வானகமொத்ததத்தீம்புனல் ... ... *

(இ-ள்.) வேந்தர்களுடைய உடலினின்று மழிந்த மிகுந்த குங்குமசந்தன த்தோடு (நீராடப்) புகுந்தமங்கையர்களணிந்த குங்குமத்தேய்வை மேலே பாந்துதோன்றலால் அத்தீம்புனலானது நீலநிறமாகிய மேகத்தினிடத்தில் மாறுதலில்லாதுபரவிய செவ்வானையொத்தது—எ-று. (௨௧)

காதலுண்டநறுங்கலவைக்களி ... ... ... *
ஆதமுண்டதடங்களுநீங்கலாற் ... ... ...*
பாகடுத்தமுக்கனிவாய்ச்சியர் ... ... ... *
வேகடஞ்செய்மணியெனமின்னினார்... ... ...*

(இ-ள்.) தம்மெய்யணிந்தனவாகிய அகிற்சந்தனமும் நன்மையாகிய கல வைச்சேறும் முழுமையுநீங்குதலினால் சருக்கரைப்பாகைப்பாகதத முக் கனியையொக்க குளிர்ச்சியாகிய சொல்லையுடையமாதர்கள் வேகடஞ்செய் தமணிகளைப்போலவிளங்கினார்கள்—எ-று (௨௨)

பாயரித்திறலான்பசுஞ்சாந்தினாற் ... ... ...*
தூயபொற்புயதலுட்பொதிதூக்குறி ... ... *
மீயரிதலுவெருக்கவொர்மெல்லியல் ... .. *
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே ... ... ... *

(இ-ள்.) பாய்கின்ற சிங்கத்தைபொத்த திண்மையையுடையநாயகன் தன துகுற்றமற்ற பொன்னணியணிந்த புயத்தில் ஈரமாகிய சந்தனத்தினால் நிர ம்பவெழுதிய தூய்மையாகிய தொய்யிற்குழம்பை அழித்துத் தூய்மையாக் குதலினால (அதனைக்கண்ட) ஓர்மெல்லியதன்மையையுடையாளது செவ்வரி யையுடைய கருமையாகியகண்கள்சிவந்தன—எ-று. (௨௩)

பசுமை வெண்மையென்னும் பண்புகள் வண்ணப்பண் புணர்த்தாது முறையே ஈரத் தையும இன்மையையுமுணர்த்திவந்தன தான் அன்பின்வரைந்த தொய்யிலை யழித்தலாற்ற ன்மாட்டன்பிலனென ஊடினாளென்பதுகருத்து. கண்கள்சிவத்தலுக்கு உலகறிகாரணமொ ழித்துத் தூக்குறிவெருததாலகிய வேறொருகாரணம வெளிப்படவந்தமையின் வியாவலையெ ன்னுமணி.

கதம்பநான்விரைகள்ளவிழ்தாதொடுந் ... ... *
ததும்புபூந்திரைத்தண்புனல்சுட்டதால் ... *
நிதம்பபாரத்தொர்நேரிழைகாமத்தால் ... ...*
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே ... *

(இ-ள்.) பெருத்த அல்குலையும் ஒத்தஅணிகளையுமுடைய ஒருபெண்ணா னவள் காமத்தால்வெதும்புகின்றாள் அவளுடலினுண்டாகிய வெப்பம்வெம் மைமூட்டுவதினால் பரிமளப்பொடியும் புதியசாந்தும் தேனும் உதிர்ந்தபூ ப்பராகமுமாகிய இவற்றினால்நிறைந்த பொலிவாகிய அலைகளையுடையதண் ணியநீருஞ்சுட்டது— (எ-று)

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நேரிழைவினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்தவ ன்மொழித்தொகை.

புள்ளிமானனையார்முகம்போல்கிலா ... ... ... *
துள்ளிநாணியொளிப்பனபோன்றவே ... ... *

(இ-ள்.) (தந்நிலையினின்றும்) தள்ளப்பட்டு ஓடி அலைகள் போவதும்வருவதுமாயிருப்பதினால் தெளிவாகியநீரில் முழுகுகின்ற செந்தாமரை மலர்கள் புள்ளிமானையொத்தமாதர்களது முகங்களை ஒவ்வாமல் (தம்மிழிவைக்) கருதி நாணப்பட்டு ஒளிப்பனபோன்றன—எ-று. (௨௯)

இனையமெய்த்தியிரும்புனலாடிய ... ... ... *
வினைகருங்குழன்மைந்தருமாதரும் ... ... *
அனையநீர்வறிதாகவந்தேறினார் ... ... ... *
புனைநறுந்துகில்பூண்டுநிந்தாங்கினார் ... ... *

(இ-ள்) இச்சுன்மையனவாகிய செய்கைகளை யடைந்து பெருமையாகிய நீராடிய அணிந்தபெரிய வீரக்கழலையுடைய ஆடவர்களும்மங்கையர்களும் மேற்கூறியவந்த தன்மையதாயடைந்தடுவானதுவறியதாகநீங்கிக்கரையைச் சேர்ந்து நறுமணமுற்ற நல்லதுகிலையும்மிக்க அணிகளையுந்தரித்தார்கள்-எ-று.

தாங்கினரென்றமையாற் றுகிலணியிலவற்றானன்றி யியல்பாய அழகுடையாரென்பதும் பூவின்மெல்லியரென்பதும் பெறப்பட்டன.

மேவிறுத்திரிந்தார்க்கத்தவிக்குநீர் ... ... *
தாவுதண்மதிதன்னொடுந்தாரகை ... ... ... *
ஓவுவானமுமுண்ணிறைதாமரைப் ... ... *
பூவெலாங்குடிபோனதும்போன்றதே ... ... *

(இ-ள்.) இரத்தியாடினவர்களாகி நீங்கிக்கரையில்நின்ற மைந்தர்களுக்கும், மங்கையர்களுக்கும், அந்தமிக்கநீரையுடையடுவானது தவழ்கின்ற தண்ணியசந்திரனும விண்மீன்களும் நீங்கிய விண்ணையும் தன்னுள்ளே நிறைந்ததாமரையலர்களெல்லாம் (நீங்கி) மூடிப்போய்விட்டதையும்போன்றது-எ-று.

மானிகர்நோக்கியர்மைந்தரொடாடிய ... ... *
ஆனநீர்விளையாடலைநோக்கினான் ... ... ... *
தானுமன்னதுகாதலித்தானென ... ... ... *
மீனவேலையைவெய்யவனெய்தினான் ... ... *

(இ-ள்.) சூரியன், மான்போலும்நோக்கத்தையுடையமாதர்கள் ஆடவர்களோடுமுழுகுகிறதக்கநீர்விளையாட்டைநோக்கினவனாகித்தானுமவ்விளையாட்டைவிரும்பினான்போல மீன்களையுடையசமுத்திரத்தை அடைந்தான்-எ-று.

ஆற்றலின்மையினாலழிந்தேயுந்தம் ... ... *
மேற்றுமன்னர்தம்மேல்வரும்வேந்தர்போல் ... *
ஏற்றுமாதர்முகங்களொடெங்கணுந் ... ... *
தோற்றசந்திரன்மீளவுந்தோன்றினான் ... ... *

(இ-ள்.) வலியில்லாமையினாலே தோல்வியையே யடைந்தும் தம்மோடு பகைமையையுடைய அரசர்மேல் (போர்குறித்து) வரும்அரசர்களைப்போல (முன்னாள்களிலெல்லாம்) இம்மாதர்களுடைய முகங்களோடு எதிர்நின்று எங்குந்தோற்ற சந்திரன்மீளவுந்தோன்றினான்—எ-று. (௩௩)

எங்கணுமென்றது நகரத்தையுமஃதொழிந்தவிடத்தையும்.

நீர்விளையாட்டுப்படலமுற்றிற்று.



# ௰௬-வது-உண்டாட்டுப்படலம்.



வெண்ணிறநறைநிறைவெள்ளமென்னவும் ... *
பண்ணிறஞ்செறிந்திசைபரந்ததென்னவும் ... *
உண்ணிறைகாமமிக்கொழுகிற்றென்னவுந் ... *
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே ... *

(இ-ள்.) வெண்மையாகிய நிறத்தையுடைய மதுவினது நிறைந்தவெள்ளம்பரந்ததுபோலவும் இசையானது உருவைப்பெற்று உலகத்திற்பரவியது போலவும் எல்லாவுயிர்களினதுள்ளத்தில் நிறைந்த காமமானது மிகுந்து புறத்தே யொழுகியதுபோலவும் தண்மைநிறைந்த நெடியநிலா எங்குந் தழைத்தது—எ-று. (க)

இது உவமக்கிளவிபெற்றுவந்த வந்துத்தற்குறிப்பணி. அணிவிளக்கம்-கூ-புனைபொருளைப்பண்பாற்பிறிதிற் பொருந்துவனவுறக்கிளந்த தற்குறிப்பெனப்படும். அதுதான், சாதிகுணந்தொழின்முறைமையின் மையினுங் குணந்தொழிலினு முறையுறையாமையினுஞ் சொருபமேசாப் பயனுக்குறிப்பினும்பொருளேயெடுத்துரைத்தொண்ணூற்றுமே. உவமக்கிளவியுடைமையக்கிளவியுமதனைவிரிக்கும்பிறவுமன்னே,

கலந்தவர்க்கினியதோர்களஞ்சுமாய்ப்பிரிந் ... *
துலந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன் ... ... *
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய் ... *
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே ... *

(இ-ள்) பிரியாதமங்கையராடவர்களுக்கு இனிதாகிய ஒப்பற்றகள்ளுமாகிப் பிரிந்துவாடினவர்களுக்கு உயிரைவருத்துகின்ற விடமுமாகிப் பிரியாதிருந்து ஊடினவர்களுக்கு உதவிசெய்கின்ற வியப்பாகிய தூதுமாகி மன்மதன் வேண்டுதலினால் நெடியநிலாப்பரந்தது—எ-று. (உ)

இருவரிடத்தும் நோக்கநின்று காமவேட்கை தூண்டுகின்றதாகலிற் கூறியதாதாயிற்று. இது நிலாவென்னுமொருபொருளின்கண் விடயவேற்றுமையாற் பல்பொருள்களைச் சார்த்திக்கூறினமையிற் பலபடப்புனைவணி. அணி-ம்.

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாங் ... ... *
கூறுபாற்கடலையேயொத்தகுன்றெலாம் ... *
ஈறிலான்கயிலையையிணைந்தவெல்லினி ... *
வேறுநாம்புகல்வதுநிலவின்வீக்கமே ... ... *

(இ-ள்.) (நிலவுபரந்ததலினால்) ஆறுகளெல்லாம் கங்கை நதியைப்போலவேயாயின மற்றைக்கடல்களெல்லாம் சிறப்பித்துச் சொல்லுகின்ற பாற்கடலையேயொத்தன மற்றைக்குன்றுகளெல்லாம் சிவனுடையகைலையையே ஒத்தன, ஆதலினால்) நிலவினதுபெருக்கத்தைக்குறித்து இனிவேறே யாம் எடுத்துக்கூறுவதுயாது—எ-று. (௩)

நிலாவென்றது வானவர்களை அமரர்களென்பதுபோலவந்த உபசாரவழக்கு,

கள்ளருந்திசைகளோடியாரும்புலையங் ... *
கொள்ளைவெண்ணிலவினாற்கோலங்கோடலான் ... *

உரையாநின்றுளென்றது உணர்த்துகின்றுளென்றமையி னினியவனென்றது உவந்திமொழிகளை ஆகவே நீ பிறர்க்கின்றுருவறிறை றேற்பகவிற்செய்யிற் பிரபகல்லவயின்று செயநான்பாற்றுவெருமெனவும். இன்றுசெய்யப்பட்டார் யாற்றுறை யியக்கயுமொறுகாற்க டிஞான்கூடுமெனவு முணராது, யான்கணவன்பாலாடியகாலத்தும் அவனைப்பிரிந்தகாலத்தும்பெ றிலமெவழிந்து வருந்தினே யினி அது செய்யாது நலலொழுக் [illegible] ளொழுகுமெனவ இப்பேரன்னவற்றையுணர்த்தினு ளென்பதுகருத்து. கள்ளினுள்ளாலென்பது உருபுமயக்கம்.

அழிகின்றவறிவினுலோபேதைமையாலோவாற்றிற் ... ... ... ...*
சுழிபொருந்திநின்றதன்னவுந்தியாடுபெசெந்தேன் ... ... ... ... *
பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புனைத்துக்கீழ்வந் ... ... *
திழிகின்றவொழுக்கிலாமைநறவெனவுள்ளத்தேற்றுள் ... ... ... *

(இ-ள்.) ஆற்றில் பொருந்திநின்றதாகிய சுழியையொத்த உந்தியையுடையாளொருத்தி தூயசெந்தேனைப்பொழிகின்ற மலர்மாலையால் வேய்ந்த பந்தரைத்தொளைத்துக் கீழ்வந்திழிகின்ற யொக்கிலாமையைத் தன்னறிவு அழியாநின்றமையாலும் (இயற்கையாகிய) பேதைமையாலும் நறவென்று உள்ளத்திலேற்றுள்—எ-று. (௰௫)

ஒலிரண்டும் எண்ணும்பொருள அன்றிஐயப்பொருளவாகிஅறிவு அழியாநின்றமையினுலோ பேதையினுலோ எற்றுளெனினு மமையும்.

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை ... ... ...*
இன்னமுதனையதீஞ்சொலிடைதடுமாறிப்பென்ன ... ... ... ... *
வன்னமேகலையநீங்கிமலர்க்கோதையைகுள்குழ்ந்தாள் ... ... ...*
பொன்னரிமாலைகொண்டுபுரிகுழல்புனையலுற்றுள் ... ... ... ... *

(இ-ள்) மின்போலத்துவளாநின்ற இடையையுடையாளாகிய ஒருத்தி (தான்பேகின்ற) வெள்ளையாகிய இனிய அமுதத்தையொத்த மதுரச்சொற்கள் (களிமயக்கால்) இடையேதடுமாறுதற்போல நாவுதிரளமைந்த சிறந்த மேகொழிலாடையைக்களைந்து மலர்மாலையை அல்குலில் சூழவிட்டாள் பொன்னரிமாலையைக்கையிற்கொண்டு புரிவாகிய குழலிய புனைந்தாள்—எ-று.

பின்னர் அல்குல் சூழ்ந்தாளென்பதுறுல் மேகலையென்னும் பலபொருளொருசொல் ஈண்டு ஆடையென்னும் பொருளைத்தந்தது. அல்குல் சூழ்ந்தாளென்பது இடக்காட்சிகல்.

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி ... ... ...*
விண்மதிமதுவினசைவீழ்ந்ததென்றொருத்தியன்னி ... ... ... *
உள்மகிழ்துணைவனேடுமேநாள்வெய்யமைநீங்கித் ... ... ... ... *
தண்மதியாயின்யானுந்தருவெனிந்றறவையென்றுள் ... ... ... *

(இ-ள்.) கள்நிறைந்தமணிவள்ளத்திலே களிக்கின்ற தன்முகத்தைநோக்கி விண்ணிலுள்ள மதியானது மதுவின்ஆசையால் வீழ்ந்ததென்றொருத்தி நினைத்து உள்ளமகிழ்கின்ற நாயகனோடு யான் ஊடுநாளில் வெப்பத்தை நீங்கித் தண்ணியமதியாவாயாயின் இந்நறவையானும்தருவேன்—எ-று. (௰௬)

எள்ளொத்தகோலமூக்கினேத்திரைமயொருத்திமுன்கை ... ... ... *
தள்ளத்தன்னறவைவெல்லாந்தவிசிடைபுகுத்தாற்றேள் ... ... *

உள்ளத்தின்மயக்கத்தன்னுளுட்புறத்துண்டென்றெண்ணி ... ... *
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள் ... ... ...

(இ-ள்.) எள்மலரையொத்த அழகிய மூக்கையும் உயர்ந்த அணிகளையுமுடைய ஒருத்தி, முன்னையானது தன்னிய நறவையெல்லாம் தள்ளாநிற்பதினால் தவலில் சிந்தியும் அறியாளாகி தன்னுள்ளத்தின் மயக்கத்தால் உட்புறத்தினுண்டென்றுகருதி கின்னத்தைத்திருப்பியெடுத்து மணிநிறமமைந்த இதழில்வைத்தாள்—எ-று. (௰அ)

வான்றனைப்பிரிதலாற்றுவண்டினம்வச்சைமாக்கள் ... ... ... ... *
ஏன்றவர்நிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்ப ... ... ... ... *
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனனுகரநாணி .. ... .. ... ...*
ஊன்றியகழுநீர்நாளத்தாலொருத்தியுண்டாள் ... ... ... *

(இ-ள்.) மதுவள்ளத்தின்மேல் ஆகாயத்தையும்பிரிதலையாற்றாதவண்டுக்கூட்டங்கள், உலோபர்களிடத்திலிரக்கையையேற்று அவர்களுடையநிதியத்தைவிரும்பியயாசகர்கள்போல ஆரவாரியாநிற்கத் தேனைத்தருகின்றகமலம்போன்றசெவ்வாயைத்திறந்தவளாகி உண்ணக்கூசி (வள்ளத்தில்) ஊன்றிய செங்கழுநீரினது உட்டொளையையுடைய தண்டினால் ஒருத்தியுண்டாள்.—எ-று.()

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவியோட ... ... ... ...*
வள்ளுறைகழித்தவாள்போல்வரியுறவயங்குகண்ணாள் ... ... ... *
கள்ளுறையலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள் ... ... ... *
உள்ளுறையன்பனுண்ணானென்னநறவுண்ணலெண்ணாள் ... ... ... ...*

(இ-ள்.) புட்கள்வசிக்கின்ற தாமரைமலர்களையுடைய வாவியின்கணுள்ள பொருதற்குரியகயல்மீன்கள் பயந்தோட வாராலமைத்த உறையினின்றும் உருவியெடுத்த வாளைப்போலச் செவ்வரிபொருந்தவிளங்குகின்றகண்ணாள் தேன்றங்கிய மலரையணிந்த மெல்லிய கூந்தலையுடைய களித்த இளமையாகிய மயிலையொத்தாளாகிய ஒருத்தி தனதுள்ளத்தினுறைகின்ற தன்மாட்டன்புள்ளநாயகன் பருகானென்று தான் நறவைப்பருகலை நினையாள்.எ-று.()

உண்ணான் உண்ணலென்பன பசிப்பிணிதீர ஆகாரப்படும்பொருளெல்லாமுணவெனப்படுமாதலிற் பொதுவினையாயின.

வேறு.

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல் ... ...*
ஏற்றிவாளெயிறுகளதுக்கியின்றளிர் ... ... *
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு ... ... *
சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாளினே ... ... *

(இ-ள்.) சினமாகிய ஓரபிநயத்தைத் தெரிவிக்கின்றாளைப்போல ஒருமாதானவள் (கள்மயக்கால்) கூற்றொடுமாறுபடுகின்ற கண்கள்சிவக்கவளைவாகிய புருவங்களை மீது செல்லநெரித்து ஒளியமைந்த பற்களால் இதழைக்க

டித்து இனியமாந்தளிர்க்கு மயக்கைத்தருகின்ற கைத்தலங்களை (நீட்டி) ம றியாநின்றாள்.—எ-று. (உக)

காரியத்தைக் காரணமாகவுபசரித்துச் சிற்றமாமயிரயமென்றார், சிற்றம் அபிநயத்தா லுணர்த்தப்படுவதாகலிற் காரியமாயிற்று.

துடித்தவான் றுவரிதழ்த்தொண்டைத்தூநிரைக்... *
கடித்தவாலெயிறுகள் துக்கிக்கண்களால ... ... *
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்வாய் ... *
பொடித்தவேர்புறத்துறுநறவம்போன்றதே ... *

(இ-ள்.) துடித்தமிக்க சிவப்புடைய இதழாகிய கொண்டைக்கனியை, தூய நிரையைக்கொண்ட வெள்ளியபற்களால் கடித்துக் கண்களால் கூர்மையுடைய வெவ்விய உதிரந்தோய்ந்த வேலைபோலவிழிக்கின்ற மாதர்களது வாயிலரும்பிய வேர்வை(சுரந்து)புறத்தே சிந்துகின்ற மதுவையொத்தது.

கனித்திரள்தழ்பொழிசெம்மைகண்புக ... ... *
நினைப்பதொன்றுரைப்பதொன்றுடையோர்நேரிழை *
தனிச்சுடர்தாமரைமுகத்துச்சாபமும்... ... *
குனித்ததுபனித்ததுகுருவித்திங்களே ... ... *

(இ-ள்.) திரண்ட இதழானது முதிர்ந்து பொழிகின்ற சிவப்பு கண்களிற் சேராநிற்க நினைப்பதொன்றும் சொல்வதொன்றுமாகிய ஒருநிலையில்லாத கணிகையரது ஒப்பற்று ஒளிசெய்கின்ற தாமரையையொத்த முகத்தில் புருவமாகிய வில்லும் வளைந்தது நெற்றியாகியபிறைச்சந்திரனும் வியர்த்தது.—எ-று.

இறந்ததுதழ்ந்திய வெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது குவளையைப் பனித்ததுமாம் காரியத்தோடு காரணத்துக்கொற்றுமையுடைமையிற் றன்வினையேயாமருளித்தப்பட்டது.

இலவிதழ்த்துவர்விடவெயிறுதேனுழ ... ... *
முலையிணைக்கச்சொடுகலையுமூட்டற ... ... *
அலைகுழல்சோர்தரவசதியாட்டலாற் ... ... *
கலவிசெய்கொழுநருங்கள்ளுமொத்தவே ... *

(இ-ள்.) இலவமலர்போலும் இதழானது செந்நிறத்தைவிடவும், பற்கள் (தாம் பின் உண்ணுகின்றதாகிய) தேனைச் சிந்தவும், முலையிரண்டுங் கச்சுடனே உடையிலுடுத்த துகிலும் இசைத்தகட்டவிழவும் கூந்தல்களாகிய கூந்தல் சோர்ந்து விழவும் அசதியென்னும் விளையாட்டைச் செய்வதினால் புணர்ச்சி செய்கின்ற கணவர்களுங் கள்ளும் ஒத்தன.—எ-று. (உ௪)

கொழுநருங்கள்ளுமொத்த என்பது சிறப்பாற்றிணை விரவி யஃறிணைமுடிபேற்றது.— இப்படலத்தாற் கூறப்படுவன உண்டாட்டிற் கின்றியமையாத கள்ளுண்ணலும் அதனாலுநிகழுங் காரிய வினையுமேயாகலாற் கள்சிறப்பாயிற்று. கொழுநருங்கள்ளு மிவ்விரண்டுமொவ்வொன்றாம் ஒருதொழிலவனுங் கிழவியுங்காண்ப என்றாற்போல வொருகாற் செயப்படுபொருளாகச் செயபொருளாயுநின்றது. இவ்வாறன்றிக் கொழுநரையுங் கள்ளுமொத்தனவென முன்னையதுசார்புசிறப்புமையாகவும் பின்னையதிழிவு சிறப்புமையாகவுங்கொண்டு பொருளுரைத்தல்லவிரண்டனுளொன்றுகூற வேனையதன்பொருள் தானேயுந்தியையுமாகலின் வேறு கூறவேண்டாகூறலாய் முடியுமாதலாற்பொருந்தாது. இது எதுவுவமையணி. த-ர்.

பாடினளொருத்திதன்பாங்குளார்களோ ... *
டினதுவைசெயாளுள்ளத்துள்ளதே........ *

(இ-ள்) ஒருத்திநாயகன்பால் தான்ஊடினது உள்ளத்திலுள்ளது அதைத்தன் பக்கலுள்ளவர்களோடு சொல்லாளாகி மூறுக்காணியைப்பற்றிசஅருதி கூட்டி மகரமீன்போன்ற வீணையை இதழ்கள் விரிந்த தாமரையலர்போன்ற கைகளைக்கத்தொட்டுப்பாடினாள்—எ-று. (௬௨)

நாயகன்புரிந்த குற்றத்தைத் தன் பாங்குளார்களோடுரைசெயினவர்கள் தன்பால்வைத்தஅன்பின்மிகுதியா லவனைக்குற்றங்கூறுவாரென அஞ்சி அதுபுறத்தேதோன்றுதவண்ணம்இவவாறுபோதுபோக்கினளென்பது கருத்து.

குழைத்தபூங்கொம்பனாளொருத்திகூடலை... ...*
இழைத்தனளவ்வவளிட்டபோதெலாம் ... *
பிழைத்தலுடனங்கவேள்பிழைப்பிலம்பொடும்...*
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டென்னவே ... *

(இ-ள்.) தளிர்த்த பூங்கொம்பையொத்தவளாகிய வொருத்தி கூடல்களைச்சுழித்தனள் அவை அவள் சுழித்தகாலமெல்லாம் தவறுதலும் அநங்கனாகிய மன்மதனது தப்புதலில்லாத அம்புபடவே வருந்தினாள் உயிருண்டென்னும்படி உயிர்த்தாள்—எ-று. (௬௩)

அம்புகருவியாய்நின்று, உழைத்தகாலையி லுடனிகழ்ந்தமையின் ஒடுவுருபு கருவிப்பொருண்மேல்வந்த வுடனிகழ்ச்சிப்பொருட்டு.

பந்தணிவிரலினளொருத்திபையுளாள்... ... *
சுந்தரனொருவன்பாற்றூதுபோக்கினாள் .. ...*
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினாள்... ...*
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தநாட்டமே... ... *

(இ-ள்.) பந்தணிகின்ற விரலையுடையாளாகிய ஒருத்தி பிரிவினாலாகிய துன்பத்தையுடையாளாகி அழகனாகிய ஒப்பில்லாநாயகன்பால் (தோழியை) தூதுபோக்கினாள் (அவன்) அவன்வந்தானென்றுகூற வாயிலையடைத்து மறுத்தனள் கண்கள் சிவந்தன அத்தலைவியினுடைய எண்ணத்தை யாம்தெளியோம்—எ-று. (௬௪)

தான்விரும்பித் தூதுபோக்கி அவன்வந்தபின் வெறுத்துக் கடையடைத்தமையிற்சிந்தனைதெரிந்திலமென்றாராயினுந் தூதானன்றி தன்விருப்பத்தால் வந்திலனெனக்கணவனோடு துனிகொண்டனளென்பதுகருத்து.

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்... ... ...*
சித்தமுண்டொருத்திக்குதன்பன்றேர்கிலான்...*
பொய்த்ததோர்மூரியானிமிர்ந்துபோக்குவாள்...*
எத்தனையிறந்தனகடிகையின்றென்றாள்... ...*

(இ-ள்.) ஒருத்திக்கு (சிலதியர்கள்) பூக்களாலமைத்த அணையினிடத்து ஊடலைநீக்கும்படி எண்ணமுண்டு அதை அவளிடத் தன்புள்ளநாயகன் தெரிந்திலன் (தெரியாதுசும்மாவிருக்கவே) பொய்ம்மையுடையதாகிய ஓர்மூரி

ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்... ... *
வாட்டொடாழிமைந்தற்கோர்பங்கைக்கொங்கையே *

(இ-ள்) (புயங்களிலுமார்பிலும்) அப்பியசந்தனம் வெந்து உலருகின்ற காமவெப்பத்தையுடையானாகிய வாளினது போர்த்தொழிலில்வல்ல ஒருமடவனுக்கு ஒர் மங்கையினுடைய கொங்கைகள், நீதிதவறாத அரசுசெய்து காவலையுடைய நல்லொழுக்கமுடைய அந்தணர்கள் பட்டாபிடேகஞ்செய்கின்ற புண்ணியதீர்த்தம் நிறைந்த கலசங்களே என்னலாயின — எ-று. (௩௯)

உலருமென்னும்பெயரெஞ்சுகிளவி காரியப்பொருட்டு,

பயிருறுகிண்கிணிபரந்தமேகலை ... ... ...*
வயிரவான்பூணணிவாங்கிநீக்கினாள்... ... ... *
உயிருறுகலைவன்பாற்போகவுன்னினாள் ... ...*
செயிருறுதிங்களைத்தீயநோக்கினாள் ... ... *

(இ-ள்) ஒருத்தி ஒலி செய்தலால்) தான்பயிர்ப்பை அடைகின்ற கிண்கிணியையும் பரந்தமேகலையையும் வயிரமணியாலமைத்த உயர்ந்த பூண்களையும் மற்றையணிகளையும் (அவ்வவ்வுறுப்புகளினின்றும்) வாங்கிநீக்கினாளாகி உயிரினுமினிய தலைவன்பால் போகநினைத்து (தன்போக்குக்குத்தடைசெய்கின்ற) குற்றமமைந்த சந்திரனைத் தீயும்படிச் சினந்து நோக்கினாள் - எ-று. (௪௰)

தீயநோக்கினாளெனவே திங்களேநீயுதித்துக் காமவேட்கையைத் தூண்டித் தலைவன்பாற்சேரல நயக்கச்செய்து பிறர்க்குப் புலப்படாவண்ணஞ் சேறற்குநேரே நிலாவெறித்துத் தடுத்தி இங்ஙனஞ் செய்தற்குரிய தன்மையுளையோவென்பது குறிப்பெச்சம்.

ஏனுயிர்வன்மையையென்னென்றோதுவாய் ... *
ஆலையின்மென்கரும்பனையனொருத்தற்காங்கொரு... ... *
சோலைமென்குயிலனாள்சுற்றிவீக்கிய ... ... *
மாலையைநிமிர்ந்திலவயிரத்தோள்களே ... ... *

(இ-ள்) அங்கு ஆலையினுட்பட்ட மெல்லிய கரும்பையொத்தவனாகிய ஒருவனுக்குச் சோலையில்வசிக்கின்ற மெல்லிய குயிலையொத்த ஒருத்தி சுற்றிக்கட்டிய மலர்மாலையை, அவனுடைய பூணணிந்த தோள்கள் அடங்கியிருந்தனவேயன்றி நிமிர்ந்தில (ஆதலால், அவனேற்றுக்கொண்ட (மாலையான்று) இந்தவன்மையை யாதென்றுயாம் நினைக்கக்கடவோம் — எ-று. (௪௧)

பிரிந்து காமவெம்மையால் நொந்தானென்பார் ஆலைமென் கரும்பனையனென்றுமவன் பட்டகாமவிடாயை ஒருவாறுதணிக்காநின்றது இவள்சொல்லென்பார் ஒருத்திக்குச் சோலை மென்குயிலனாளென்றுங் கூறினர். ஊடனீக்கஞ்செய்யுமுகமாகக் கட்டியமாகவணியமாலையை வயிரத்தோள்கள் நிமிர்ந்திலவாயின. தன் கொங்கைகளைத் தழுவுதற்குரியன தோள்களாதலிற்பிரிவின்குற்றமவற்றின்மேற்சார்த்தியவற்றை வீக்கினாள்போலும்.

சோர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவான் ... *
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினான் ... ... *
காரிகையிவளவள்கருத்தைநோக்கியோர் ... ... *
பூவரியந்தெரியலான்விழிநோக்கினான் ... ... *

(இ-ள்.) சோர்ந்த கூந்தலையுடைய ஒருத்தி தன்வருத்தத்தைத் தெரிவிக்கும்படி (கண்ணையிமையாது நின்று) மன்மதனை நோக்கி ஓர் மாதைக் காதலின் காரிகையாகிய இம்மாது அத்தலைவியினுடைய கருத்தை யறிந்து மனமகிழ்ந்த அழகிய மாலையையணிந்த ஓர் மன்னனது வீட்டை நோக்கினாள்-எ-று.

சோர்குழலொருத்தி ஓர்மாதின் முகத்தைநோக்கவும் மலர்கருத்தை இவள் தெரிந்து கொண்டு கணவன்பால்சென்று அவனைக்கொணர்ந்து வருவேனென்னும் கருத்தோடு அடியசெய்யலாகிய வேரியந்தெரியலான் வீடுநோக்குதல்புரிந்து விடைகொடுத்தலின் நட்பவணி (ஆ-ர்) (அ-ர்.)

> இலங்கெழுவாட்கையோர் செம்மல்பாலொரு ... ... *
> கலங்குழா மயிலனாள்கடிதுபோயினள் ... ... *
> மலங்குழறவமோ மாலைதான்கொலோ ... ... *
> அலங்கலோர் கொலோவழைத்த தூதரோ ... ... ... *

(இ-ள்.) இலங்கெழும் வாளைத்தாங்கிய கையையுடைய ஓரரசன்பால் அணிகலங்களையுடைய மயிலையொத்தவளொருத்தி தூதும் போக்காமல் தானே விரைந்து போயினாள் கணவனிடத்தில் அழைத்த தூதர் யார் மனத்தை குழையச்செய்கின்ற நறவமோ மாலையோ [illegible] அறியோம்.

அழைத்ததூதர் நறவமோ மாலைதான்கொலோ அனங்கனோவென்பது உயர்வினுவமத்திணைவழுவமைதி.

> தொகுதருசாசற்றுத்தோற்றசீற்றத்தோர் ... ... *
> வகிர்மதி நெற்றியாண்மழைக்கணுவியர் ... ... *
> துகிலுமுற்றதென்னொற்றறு பொற்றவ ... ... *
> னகிலுநக்கணொடு நீங்கினாள் ... ... ... ... *

(இ-ள்.) பகுத்தமதியையொத்த நெற்றியையுடைய ஒருமங்கை, நிறைந்த காதலின் பொருட்டுத் தோன்றிய கோபத்தினால் [illegible] அகிலிற் றும் நீராற் குளிக்கலும் நாயகனாகிய அரசன் [illegible] நேரிட்டதென்று கூறி நகைத்தலும் நகைசெய்தாளாகிநாணமுற்று நீங்கினாள். [illegible]

ஆற்றகுப்பைகள் என்றும்போலத் தோற்ற சீற்றமெனை இறந்தகாலங்காட்டு மென்பது தொகுத்தது.

> பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய ... ... *
> கைத்தலநீக்கினள்கருத்தினீக்கலள் ... ... ... *
> சித்திரம்போன்றவச்செயலோர்தோன்றற்குச் ... *
> சத்திரமார்பிடைத்தைத்தத்தொத்ததே ... ... ... *

(இ-ள்.) பொய்யினிடத்ததாகிய மருங்குலையுடையாளொருத்தி தன்னெஞ்சத்தினின்று நீக்கிலள் (புறத்தே) தழுவிய கையை நீக்கினள் சித்திரம்போன்ற அசைதலில்லாத அவள்செய்கையானது ஓரரசனுக்குச்சத்திரமென்னும் படையானது தன்மார்பிலே தைத்ததை ஒத்தது—எ-று.

கணவன்கருத்தை யறியுமாறு கைத்தல நீக்கலும் இதபோது அல்பாலுளதாகிய மையாதெனவருந்தினனென்பதுகருத்து. சத்திரம்-எ-து-கைவிடாப்படை.

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப் ... *
புல்லியகையினள்போகிறாளெனச் ... ... ... *
சொல்லுவானுமுற்றநாணுஞ்சொல்லலள் ... ... *
எல்லையில்பொழுதெலாமிருந்துவிம்மினாள் ... ... *

(இ-ள்) மெல்லிய தன்மையுடையாளாகிய ஒருத்தி தான்விரும்புகின்ற தோழியைத் தழுவிய கைகளையுடையாளாகித் தானும்போவமென்று சொல்ல இசைவாள் (உடனே) சொல்லமிகுதியும் நாணுவாள் அதனைச் சொல்லாள் அளவில்லாத காலமெல்லாம் (இவ்வாறு செய்யாநின்று) விம்மினாள்-எ-று.

எண்டப்பொழுதென்றது அவள்சொல்லலுற்ற சமயங்களை. பலமுறைசெய்தசெயலின் தொல்லையில்லாமையை அச்செயல்நிகழ்ந்தபொழுதின் மேலேற்றிஎல்லையில்பொழுதென்றார்.

ஊறுபேரன்பினளொருத்திதன்னுயிர் ... ... *
மாறிலாக்காதலன் செலவைமற்றொரு ... ... ... *
நாறுபூங்கோதையாளவிலநாணுவாள் ... ... ... *
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினாள் ... ... ... *

(இ-ள்) பெருகுகின்ற மிக்க அன்பினளாகிய ஒருத்தி, தனக்கு உயிர்வேறில்லாத அன்புடையானாகிய நாயகன் பிரிந்துசென்றதை மற்றொருமணக்கின்ற மலரையணிந்த கூந்தலையுடையாளிடத்து (சொல்லவந்து) சொல்லநாணுவாளாகி வேறுவேறாகிய சிலமொழிகளை மிகுதியுஞ்சொல்லினாள்-எ-று.

உருத்தெரிதன்மையவுயிருமொன்றதாம் ... ... *
அருத்தியுமத்துணையாயநீரினார் ... ... ... ...*
ஒருத்தியுமொருத்தனுமுடம்புமொன்றெனப் .... *
பொருத்துவாரெனப்புல்லினாரரோ ... ... ... *

(இ-ள்.) உருவந்தோன்றாத் தன்மையையுடைய உயிரும் ஒன்றேயாம் (ஒருவர்பாலொருவர்வைத்த) விருப்பமும் அவ்வளவென்னுந்தன்மையாகிய ஒருத்தியுமொருத்தனும் உடம்பும் ஒன்றென்னும்படி பொருந்தச்செய்வார்போல (ஒருவரை ஒருவர்) தழுவினார்கள்—எ-று. (௪௮)

வெதிர்பொருதோளினளொருத்திவேந்தன்வந் ... *
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல ... ... *
மதிமுகக்கதுமெனவணங்கினாளது ... ... ... ...*
புதுமையாகலினவற்கச்சம்பூத்ததே ... ... ... *

(இ-ள்.) மூங்கிலையொத்த தோளினளாகிய ஒருத்தி நாயகனாகிய அரசன் தன்னிடத்தேவந்து சந்தித்தலும் (விருப்பத்தால்) தன்மனமெழுந்து முன்னே செல்லாநிற்கத் தானெழுந்துசெல்லாது சந்திரன்போன்றமுகத்தைக் விரைவாக வணங்கினள் அது நூதனமாதலால் அவனுக்கு அச்சமுண்டாயிற்று—எ-று.

எம்மைப்புறத்தேபிரிந்தவாயினும் அகத்தேசிறிதும்பிரிந்தாயில்லையாதலால் ... அவ்வாறு இன்னைப்புறத்தேபிரிந்தேனாயினும்அகத்தேபிரியாதிருந்தேன் ...

எழுதருங்கொங்கைமேலனங்கனெய்தவம் ... ... *
புழுவெம்புண்களில்வளைக்கையொற்றினாள் ... ... *
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லினாள் ... ... *
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டுவாள் ... ... *

(இ-ள்) எழுதுதலரிய அழகமைந்த கொங்கைகள்மேல் காமனால் எய்யப்பட்ட அம்புகள்தைத்த வெவ்வியபுண்களில் வளையணிந்த கைகளை ஒற்றி அழுது சிரித்து ஒழிவாகிய சமயத்தைச்சொல்லி ஒருத்தியைத் தூதுவேண்டாநின்று தொழுதனள்—எ-று. (௫௧)

எழுதரிய கொங்கைகளினருமையையுங் கணவனது தோள்களைத் தழுவப் பெறாமையால் எய்தியவருத்தமும் தலியவழிவுற்றபடுமவருத்தப்பாட்டையுங்குறித்துவளைக்கையையொற்றிய தெனவாய்ந்த அற்றத்தைக்குறித்துக் களித்துச்சிரித்தனளென்பது கருத்து.

ஆர்கலியமுதன்றதுமறிஞர்க்கற்றந்தான் ... ... ... *
பாரிமைதவிர்ந்தவர்க்கலரிதன்றேமனம் ... ... *
சோர்தலைப்பிளவள்மெலிந்துசாய்ந்தனள் ... ... *
பார்த்தனளொருத்திதன்பாங்கருளோயே ... ... ... *

(இ-ள்) உயிர்வையும் அதனாலடைந்த வருத்தப்பாட்டையும் அறிந்தவர்களுக்கு ஒழிவாகிய சமயத்தை வார்த்தையால் தெரிவித்தல் அரிதன்றோ அறிவும் (ஆதலால்) ஒருத்தி உள்ளம்வேர்த்து வெதும்பி மெலிந்து (அணையில்) சாய்ந்து (தன்வருத்தத்தை வாயாற்கூறாது) தன்தோழியைப்பார்த்தாள்

தனங்களினிளையவர்தம்மின்மும்மடி ... ... ... *
கனங்கனமிடையிடைகளிக்குங்கள்வனாய் ... ... *
மனங்களினுழைந்தவர்மாந்துதேறலை ... ... ... *
அனங்கனுமருந்தினனாதல்வேண்டுமால் ... ... ... *

(இ-ள்) தனங்களையுடைய பருவமங்கையர்களினும் மூன்றுபங்குமிகவும் நிலையாக எல்லாவிடங்களினும் களியாநிற்கின்றான் (ஆதலால்) கள்வனாகி அவர்களுடைய மனங்களினுழைந்து அவர்கள் பருகுகின்ற மதுவை அனங்கனும் பருகினவனாதல்வேண்டும்—எ-று. (௫௨)

இடையிடையென்றது ஐந்தாவது செய்யுளிற்கூறிய தாளநீழல் முதலிய இடங்களை நீட்போர்த்தவடகமும் சரிந்தவீழ்ந்ததைக் கவிமயக்கா இணர்ந்திலரென்பார் தனங்களினி யையவென்றார்.

## வேறு.

நறைகமழலங்கன்மாலைநளிர்நறுங்குஞ்சிமைந்தர் ... ... *
துறையறிகலவிச்செவ்வித்தோகையர்தூசுவீசி ... ... *
நிறையயலகற்றப்புல்குங்கலன்கழிந்தகலநீத்தார் ... ... ... *
அறைபறையனையநீரார்மறைக்கவல்லரோதான் ... ... ... *

(இ-ள்) (அணிந்த) தேன்மணக்கின்ற மாலையினால் குளிர்ந்த நறுவிய சிகையையுடைய ஆடவர்கள் காமவகைகளையறிந்து புணர்ச்சிக்குப் பக்குவத்தையுடைய தோகையர்களது உத்தராசங்கத்தைவாங்கியெறிந்து நிறைந்த

அகன்ற அல்குலைச்சூழ்ந்த மேகலைமுதலிய அணிகளைவாங்கி அகலும்படிநீக்கினார்கள் (எவ்வெனின்) கொட்டியபறையையொத்ததன்மையையுடையார் அருமையாகிய இரகசியத்துக்கு ஆகுவரோ ஆகார்கள் ஆதலால்-எ-று. ()

இது, அறைபறையனையர்நீரா ரருமறைக்காகார்க ளென்னும்பொருளாற் கலவிச்செய்வித் தோகையர்நூகவீசி அல்குல்புல்கும் கலங்கழித்தகலநீத்தாரென்னும் புனைவுரியாகிய சிறப்புப்பொருள் நிலையுறுத்தப்பட்டமையின் வேற்றுப்பொருள்வைப்பணி. சூ-பொதுவினுஞ் சிறப்பினு மவைநிலையுறுத்தல் வேற்றுப்பொருள்வைப்பென வேண்டினர்புலவர். அ-ர்.

பொன்னருங்கலனுந் தூசும்புறத்துள தறத்தல்வம்பே... ...*
நன்னுதலொருத்திதன்பாலகத்துள் நாணுநீத்தாள்... ... ... *
உன்னருந்துறவுபூண்டவுணர்வுடையொருவனேபோற் ... *
றன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றன்றே. .. ... *

(இ-ள்.) புறத்திலுள்ளனவாகிய பொன்னாற்செய்த அருமையாகிய அணிகளையும் ஆடையையும் நீக்கல் வறிதினது நிலையில்லாமையேயாம் (ஆகலால் அவற்றைநீக்[illegible]மையையுடையாளாகிய ஒருத்தி, நினைத்தலரிய துறவைப்பூண்ட [illegible]தலையுடைய ஒருவனைப்போலத் தன்னிடத்தே அகத்துள்ள [illegible] நாணத்தை நீக்கினாள் (ஆதலால்) தன்னையுந்துறக்கின்ற தன்மை காமத்தின்கட் தங்கியது—எ-று. அஃது-ஓ-அசை. (ருஎ)

ஏகாரம் நாள்களுள் முன்னையது தேற்றம் பின்னையது பிரிநிலை எனையிரண்டும் அன்றும் அசை. துறத்தலாகிய காரியப்பெயர் [illegible] காரணத்திற் மேனின்றது.

பொருவருமதனன்போல்வாரொருவனும் பூவின்மேலத் ...*
திருவினுந்திருவமைந்தாளொருத்தியுஞ்சேக்கைப்போரில். .*
ஒருவருக்கொருவர்தோலாரொத்தனருயிருமொன்றே... ...*
இருவரதுணர்வுமொன்றேயென்றபோதியாவர்வெல்வார் ...*

(இ-ள்.) ஒப்பில்லாதமதனனை ஒத்தவனாகிய ஒருவனும் தாமரைமலரிலெழுந்தருளிய அத்திருமகளுக்கு ஒப்புமையுடையாளாகிய ஒருத்தியும் அணையினிடத்துண்டாகியபோரில் ஒருவருக்கொருவர் தோல்வியடையாராகி ஒத்தனர் அவ்விருவரது உயிருமொன்றே உணர்வுமொருமைப் பட்டதே என்றபோது யார்வெல்வார்கள்—எ-று. (ருஅ)

கொள்ளைப்போர்வாட்கணாளங்கொருத்திபோர்குமரனென்றான் *
வள்ளத்தாரகலந்தன்னைமலர்க்கையாற்புதைப்பத்தாக்கி... ..*
உள்ளத்தாருயிரன்னானேயுழைபடுமென்றுநீறின் ... ...*
கள்ளத்தாற்புதைத்தியென்றுமுன்னையிற்கனன்றுமிக்காள் ... *

(இ-ள்.) அவ்விடத்தே மிக்கபோரையுடைய வாள்போலுங் கண்களை யுடையாளாகிய ஒருத்தி, (ஊடற்சினத்தாலுதைக்கமுயல்வதையறிந்து அம்மெல்லியபாதங்களில் தன்மார்புரோமங்கள் தைக்குமென்றஞ்சி முருகனையொத்தானாகிய ஒருவன் வளமாகிய மலர்மாலையணிந்த மார்பை மலர்போலுங்கைகளால் மூடாநிற்கப்பார்த்து நின்னுள்ளத்தில் (வேற்றுப்பொருளு

ளையும் உடுத்தகலையையு நவித் தோன்றுகின்ற அல்குலையு முடையாளொரு த்தி கணவனைத்தழுவாநின்றாளாகிக்கல்வினது இனிமை யழியும்படி இணிந்த அவனதுமார்பின்மேல தனதுமுலைக ளுநவினவென்று முதுகை மேநாகின்று ள்—எ-று. (௯௨)

இது உருவலாகிய வினையில்லாதிருப்ப முலையுநவினவென அவ்வினையுடைத்தாக் கூறலால் அதிசயநவிற்சியணி, அ.ர்.

குங்குமமுதிர்ந்தனகோதைசோர்ந்தன... ... ... *
சங்கினமார்த்தனகலையுஞ்சாவின ... ... ... ...*
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன ... ... ... *
மங்கையரிளநலமைந்தருண்ணவே... ... ... ... *

(இ-ள்.) மங்கையர்களுடைய புதிய இன்பத்தை ஆடவர்க ளுண்டதினால் (தொய்யிலெழுதிய)குங்குமச்சந்தனம் உதிர்ந்தன கூந்தல் சோர்ந்தன கை வளைகள் ஆரவாரித்தன ஆடையும் நழுவின காற்சிலம்புகள் மிகுந்து ஒலி செய்தன—எ-று. (௯௩)

பகையின்மையாலொருகாலத்துக் கூடத்தக்க உதிர்தல் முதலிய பொருள்களுக்குக் கூட்டத்தைக்கூறினமையிற் கூட்டவணி. அ-ர்.

துனியறுபுலவியைக்காதல்சூழ்சுடர் ... ...... ... *
பனிவெனத்துடைத்தலும்பகைக்குஞ்சிந்தையாள்......*
புனையிழையொருமயிலபொய்யுறங்குவாள் ... ... *
கனவெனுநலத்துறற்கணவற்புல்லினாள் ... ... ...*

(இ-ள்.) காதலானது, துனியாகியபுலவியை,நிறைந்தகதிரையுடைய சூரியன் பனியைநீக்கல்போல நீக்கலும் (முன்னே ஊடலெதிர்க்கும்போது தா னிணங்காமற்போனதைக்குறித்து) பகைக்கின்ற சிந்தையையுடையளாய் அணிகளணிந்த மயிலையொத்த ஒருத்தி பொய்யுறக்கமுறங்குவளாகிக் கனவாகிய நல்லகுறிப்பினால் கணவனைத்தழுவினாள்—எ-று. (௯௪)

சூழ்சுடர்-அன்மொழித்தொகை.

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனும் ... ... ...*
கிட்டியபோதுடல்கிடக்கப்புல்லினார் ... ... ... *
விட்டிலர்கங்குலின்விடிவுகண்டிலர் ... ... ... ...*
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால்... ... ... *

(இ-ள்.) வட்டமாகிய ஒளியமைந்த முகத்தையுடைய மயிலையொத்த ஒருத்தியும் ஓரரசனும் ஒருவருக்கொருவர் கிடைக்கப்பெற்றபோது இரண்டுடலும் நெருங்கத்தழுவினார். பொருந்தச்செய்த உடலைப்பிரித்தலை நினையாமையால் தழுவுதலைவிட்டிலர் இராவினது விடிதலைப்பார்த்திலர்-எ-று.

பிரிவாலுளதாய வருத்தத்தின்றுமைதோன்றக் கிட்டியபோதென்றார்.

அருங்களிமால்களிறன்னவீரர்க்கும்... ... ... ...*
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்... ... ... *

நெருங்கியவணிமுலைசுமக்கநேர்கலா ... ... ... ...*
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே... ... *

(இ-ள்.) நெருக்குதலரிய மதமயக்கத்தையுடைய யானையையொத்த வீரர்க்கும் கருமையாகிய கூந்தலையுடைய மங்கையர்க்கும் அந்தமாலையாகிய இராவானது கலவிப்போரினால், நெருங்கிய தொய்யிலெழுதிய முலைகளைச் சுமப்பதற்கு ஆற்றலில்லாத (அம்மங்கையர்களது) இடையைப்போலத்தன் வலிகுறைந்தது—எ-று. (௬௬)

மேற்கூறிய வேட்கைப்பெருக்கச் செயல்களெல்லாம் நிகழ்தற்கிடனாய் நின்றபெருமைத்தாகலினம்மாலைக்கங்குலென்றார்.

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க் ... ... ... ...*
கிடையுறுதிருவெனவிந்துநந்தினான் .. ... ... ...*
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்... ... ... *
சுடர்மணிக்கரசெனவிரவிதோன்றினான் ... ... ... *

(இ-ள்.) நல்லொழுக்கமானது முடிவுபெறச்செய்யாதவர்களுக்கு இடையேசேர்ந்தசெல்வம் அழிவதுபோலச் சந்திரன் ஒளிகெட்டான்; படர்ந்த அலைகளையுடைய கருங்கடலாகிய பரமனது மார்பிலணிந்த ஒளியமைந்தமணிகளுக்கரசாகியகௌத்துவமணியைப்போலச் சூரியன் உதயமாயினான்.)

௰அ-வது. உண்டாட்டுப்படலமுற்றிற்று.

---

## ௰௯-வது-எதிர்கோட்படலம்.

அடாநெறியறைதல்செல்லாவருமறையறைந்தநீதி .. ... *
விடாநெறிப்புலமைச்செங்கோல்வெண்குடைவேந்தர்வேந்தன்.
படாமுகமுகிலிற்றோன்றுந்தும்பருவவொத்துருவிபல்கும்... ...*
கடாநிறையாறுபாயுங்கடலொடுகங்கைசேர்ந்தான் ... ... *

(இ-ள்.) (உயிர்களுக்கு) அடுக்காத ஒழுக்கங்களைச்சொன்னவழிச் செல்லாத பெருமையாகிய வேதஞ்சொல்லிய நீதிகளைவிட்டு ஒழுகாத ஒழுக்கத்தினறிவமைந்த செங்கோலையும் வெண்கொற்றக்குடையையுமுடைய அரசர்களுக்கரசனாகிய சக்கரவர்த்தியானவன், படமணிந்த முகத்தையுடைய யானைகளாகிய மேகங்களினிடத்தில் தன்னெல்லைகடவாது தோன்றுகின்றகாலத்தது அருவியாய்ப் பலவநதியைப்போலப் பெருகுகின்றமதமாகிய நிறைந்த ஆறுகள் பாய்கின்ற படைக்கடலோடு கங்கையைச்சேர்ந்தான்—எ-று. (௧)

கப்புடைநாவினாகருலகமுங்கண்ணிற்றோன்றத் ... ... .*
துப்புடையணைவிற்றாங்கிக்கங்கைநீர்சுருங்கக்காட்ட... ... *
அப்புடையனீகவெள்ளமகன்புனன்முகந்துமாந்த ... ... *
உப்புடைக்கடலுந்தெண்ணீருண்ணலையுற்றதன்றே... ... *

(இ-ள்.) பிளவாகிய நாவையுடைய நாகர்களது உலகமூன்றுக்குந் தோன்றும்படித் தூய்மையாகிய மணலையுடையதாகிக் கங்கையானது நீர்குறைந்து காட்டும்படி அம்புமுதலிய ஆயுதங்களையுடைய படைக்கடலானது விரிவாகிய அக்கங்கையினீரை மொண்டு பருகுதலினால் உப்புடையகடலும் தெளிவாகிய நீரை உண்ணும் விருப்பத்தையடைந்தது. எ-று. (௨)

மிகுதிபற்றி அப்படையை யணிகமென்றார். முகந்து மாந்தநீரொழுக்கமறவின் உப்புடைக் கடல்நீர் நசையுற்றதாயிற்று. நீர்நசைக்கு உப்புடைமை காரணமாகலின் உப்புடைக்கடலென்றது கருத்துடையடையணி-அ-ர்.

ஆண்டு நின்றெழுந்து போகியகன்பணைமிதிலையென்னும் ... *
ஈண்டுநீர்நகரின்பாங்கரிருநிலக்கிழவனெய்தத்... ... ... *
தூண்டுமாப்புரவித்தானைத்தண்ணளிச்சனகனென்னுந்... ... *
ஆண்டருவயிரத்தோளான்செய்ததுசொல்லலுற்றாம்... ... *

(இ-ள்.) அங்கிருந்து எழுந்துசென்று மிக்க வளத்தையுடைய நாடுசூழ்ந்த மிதிலையென்று சிறப்பித்துச்சொல்லப்படும் பெருகுகின்ற நீர்வளமமைந்த நகரினருகே பெரிய பூமிக்குரியோனாகிய சக்கரவர்த்தி வராநிற்கத் தாவுகின்ற மாவாகிய குதிரைச்சேனைகளையுடைய (உயிர்களிடத்து) தண்ணிய அருளை வைத்த சனகனென்று எடுத்துக்கூறும் எழுத்துணைப்போல் அழகைச் செய்கின்ற பூணணிந்த தோள்களுடையான் செய்ததைச் சொல்லத்தொடங்கினோம்—எ-று. (௩)

வந்தனனரசனென்னமனத்தெழுமுவகைபொங்கக்... ... *
கந்தடுகளிறுந்தேருங்கலினமாகடலுஞ்சூழச் ... ... ...*
சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைத்தாக ... ...*
இந்திரன்றன்னையெதிர்கொள்வானெழுந்துவந்தான் ...*

(இ-ள்.) சனகராசனானவன், சக்கரவர்த்தி வந்தனனென்று (ஒற்றர்) சொல்லத்தன்மனத்தில் எழுகின்ற களிப்பானது அதிகரியாநிற்பதினாலும், கம்பத்தை முறிக்கின்ற யானைகளும் தேர்களும் கடிவாளம்பூண்ட குதிரைக்கடலும் சூழ்ந்துவரும்படி, சந்திரனானவன் சூரியனைச்சேர்வதாகிய ஒருதன்மைத்தாகும்வண்ணம் இந்திரனது செல்வத்தையொத்த செல்வத்தையுடைய சக்கரவர்த்தியை எதிர்கொள்ளச் (சிங்காதனத்தினின்றும்) எழுந்துவந்தான்-எ-று

கங்கைநீர்நாடன்சேனைமற்றுளகடல்களெல்லாஞ் ... ... *
சங்கினமார்ப்பவந்துசார்வனபோலச்சாரப்... ... ... *
பங்கயத்தணங்கைத்தந்தபாற்கடலெதிர்வதேபோல்... ... *
மங்கையைப்பயந்தமன்னன்வளநகர்வந்ததன்றே ... ... *

(இ-ள்.) நீர்வளப்பத்தையுடைய கங்கையைச்சார்ந்த கோசலநாட்டுத்தலைவனாகிய சக்கரவர்த்தியினுடைய சேனைகள், ஒழிந்த கடல்களெல்லாம் சங்கின்கூட்டங்கள் ஆரவாரிக்கும்படிவந்து சேர்வனபோலச் சேராநிற்க, தாமரையிலெழுந்தருளிய திருமகளைத்தந்த பாற்கடலானது எதிர்வதுபோல சீதாபிராட்டியைத்தந்த மன்னனது வளமிக்க நகரமாக்கள் எதிர்கொள்ள வந்தனர்—எ-று. (௪)

இலைகுலாவயிலினொளிகமேமெழனவுலா ... ... *
நிலைகுலாமகரநீர்நெடியமாகடலெலாம் ... ... *
அலகின்மாகளிறுதேர்புரவியாளெனவிராய் ... ... *
உலகெலாநிமிர்வதேபொருவுமோருவமையே ... *

(இ-ள்.) வெள்ளிலையைப்போல விளங்குகின்ற வெற்றிவேலையுடையசக்கரவர்த்தியினது சேனையின்வருகையானது, எழுவகைமைந்த நிலைமையைப் பொருந்தியமகரமீன்கள்வாழ்கின்ற நீர்வளமிக்க பெரிய கடல்களெலாம் அளவில்லாத வலியமைந்த யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாள்களுமாகத் திரண்டு உலகமெங்கும் ஓங்கிச் செல்லுவதையே ஒக்கும் ஓருவமையது—எ-று. (௬)

நிமிர்வதே பொருவுமென்றமையிற் சேனையாகிய புனைவுளிக்கு வருகையென்னுஞ் சொல் தந்துரைக்கப்பட்டது.

தொங்கல்வெண்குடைதொகைப்பிச்சமூட்படவிராய் ... *
எங்கும்விண்புதைதரப்பகன்மறைந்திருளெழப் ... *
பங்கயஞ்செய்யவும்வெளியவும்பலபடத் ... ... *
தங்குதாமரையுடைத்தானமேபோலுமே ... ... *

(இ-ள்.) சேனையானது, பீலிக்குஞ்சங்களும் வெண்குடைகளும் கூட்டமாகியபீலிக்குடைகளும் உள்ளேநெருங்கக்கலந்து எங்கு மாகாய மறைதலினால் சூரியனொளிமறைபட இருளுண்டாக அதனால் செந்தாமரை மலர்களும் வெண்டாமரைமலர்களும் பலமலர்த்தங்கிய தடாகத்தைபொத்தது-எ-று.

தாமரையுடைத்தானமென்பது அடியளந்தானென்பதுபோல ஒருபெயராய்நின்றது.

கொடியுளாளோதனிக்குடையுளாளோகுலப் ... ... *
படியுளாளோகடற்படையுளாளோபகர் ... ... *
மடியிலாவரசிளங்குமாருளாளோவளர் ... ... ... *
முடியுளாளோதெரிந்துணர்கிலாமுளரியாள் ... ... *

(இ-ள்.) (இத்தன்மையளென்று) நூல்களாலாய்ந்து உணரக்கூடாத தாமரையில்வசிக்காநின்ற வெற்றித்திருவானவள், அறிவுடையோர் கூறுகின்ற சோம்பலில்லாத சக்கரவர்த்தியினது வெற்றிக்கொடியிலுள்ளாளோ ஒப்பற்ற வெற்றிக்குடையிலுள்ளாளோ (அவன்செல்லுகின்ற) சிறப்பாகிய நிலத்திலுள்ளாளோ கடலையொத்த படையிலுள்ளாளோ அவனதுமார்பிலுள்ளாளோ பெருகுமுடியிலுள்ளாளோ—எ-று. (௮)

வெற்றித்திருமகளுறையு மிடங்கொடிமுதலியனவாகலின் ஓகாரங்கள்எண்ணும்பொருளில் வந்தன. அன்றி ஐயப்பொருளவாக்கி உணர்கிலாமுளரியாளென்பதில் உணர்கிலாம் என உளப்பாட்டுத்தன்மைப்பன்மைமறைவினைமுற்றுச்சொல்பிரித்துப்பொருள்கூறினுமமையும்.

வார்முகக்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண் ... *
டார்முழங்காவமேழிசைமுழங்காவமே ... ... ... *
தேர்முழங்காவம்வெண்டிரைமுழங்காவமே ... ... *
கார்முழங்காவம்வெங்கரிமுழங்காவமே ... ... *

(இ-ள்.) அச்சேனைக்குள்பாழ்முழவியகருவிகளில்) குரல்முழவியவாழிசை கள் ஒலிக்கின்ற ஒலி,வாரின்கண்நிறைந்த கொங்கைகளையுடைய மங்கையர் களது கரியகுழலில் வண்டுகள் அழகிதாக ஒலிக்கின்றஒலியேயாம் தேர்கள் ஒலிக்கின்றஒலி,வெண்மையாகிய அலைகளையுடைய கடலொலிக்கும் ஒலியே யாம் சினவெம்மையையுடைய யானைகளொலிக்கின்றஒலி,மேகங்களொலிக் கும் ஒலியேயாம்—எ-று. (௯)

ஏகாரங்களைப்பிரித்து வண்டோர்முழவமே காரொழுங்கரவமே எனக்கூட்டுக.

சூழுமாகடல்களுந்திடர்படத்துகளெழ ... .. *
ஏழுபாரகமுமுற்றுளதெனற்கெளிதோ ... ... *
ஆழியானுலகளந்தன்றுதாள்சென்றவப் ... ... *
பூழைபுக்கொடித்தப்புறம்போயதே ... ... *

(இ-ள்.) உலகைச் சூழ்ந்திருக்கிற பெரியகடல்களுந் தூர்ந்து மேடாகும்படி (அச்சேனையாலுண்டாகிய) பராகம், உலகமேழுலோகங்களிலும் நிறைந்திருந்ததென்றுசொல்லுதலுக்கு எளியதோ அன்று (சுதரிசனமென்னும்) சக்கரத்தையுடைய இறைவன் உலகமெல்லாமளந்த அன்று உயர்ந்தவனது வலதுதிருவடி (வானத்தொளைத்துச்சென்ற அந்தத்தொளையினிடமாகச்சென்று அப்புறத்தே போனது—எ-று. (௰)

அரோவென்னு மசைச்சொல்லி னீற்றோகாரந் தொகுத்தலாய் எதிர்மறை யோகாரம் புணர்ந்தது. பின்னையது மிது.

மன்னெடுங்குடைமிடைந்தடையவானகமறைத் ... *
துன்னிநிற்றிழல்வழங்கிருளகற்றெளிதோ ... ... *
பொன்னினும்புவியினும்புனைமணிக்கலனெலா ... *
மின்னிடும்விலிடும்வெயிலிடும்நிலவிடும் ... ... *

(இ-ள்.) அரசர்களுடைய நெடியகுடைகள் ஆகாயமறையும்படி தம்முள் நெருங்கிவருவதினால் நிறைந்த நிழலான தருகின்ற இருளை (பகற்போன்றால்) நீக்குதல் எளியதோ எளியதன்று அழகையுடைய அச்சேனைசெல்லும் நிலத்தின்கணெல்லாம் சித்திய புனைவதற்குரிய நானமணியணிகளெல்லாம் மின்னலொளியைவீசும் வில்லென்றுபொளியைவீசும்வெயிலைவீசுப நிலவைவீசும் (இவற்றாலவ் விருளொழிந்தது—எ-று. (௰௧)

வில்லென்பது-இடையிட்டு ஒளிசெய்தல் ஈங்குந்தகத் துளையுநவெல்லாம் இசையெச்சம்.

தாவின்மன்னவர்பிரானரமுரட்சனகனும் .. *
ஏவருஞ்சிலையினானெதிர்வருந்நெறியெலாந் ... *
தூவுகண்சுண்ணமுங்கனகநுண்டூளியும் ... *
பூவின்மென்றாதுநும்பொடியுமேபொடியெலாம்.

(இ-ள்.) வலியமைந்த அரசர்களுக்கரசனுமாகிய (போரின்கண்) அம்புகள் வருகின்ற வில்லையுடையானுமாகிய சனகமகாராசன் எதிர்கொண்டு வரும்வழியெல்லாம் எழுகின்றபொடிகள்யாவும் தூவிய தன்மையாகிய க

தம்பரமம் நுண்மையாகிய பொற்றுகளும் பூவினதுமெல்லிய தாதுக்களி னின்றும் சிந்தியபொடியுமேயாம்—எ-று. (௰௨)

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச் ... ... *
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும் ... *
வெறியுடைக்கலவையும்விரவுசெஞ்சாந்தமும் ... *
செறிமதக்களிறுபாய்சேறுமேசேறெலாம். ... *

(இ-ள்.) அவன் செல்லுகின்ற வழியிலுள்ள சேறெல்லாம் (கூந்தலிலணிந் துமாலையிற்சிந்துகின்ற) நல்லமணமமைந்ததேனும் மயிர்ச்சாந்தும் நறுவி யருங்குங்குமத்திலும் மிக்க அகிலிலுமமைந்த சந்தனமும் கஸ்தூரியின் பெருக்கும் மணமுடைய கலவைச்சந்தனமும் கலத்தற்குரிய செஞ்சந்தன மும் அடர்ந்த மதவாறும் வீழ்வதிலுண்டாகிய சேறேயாம்—எ-று. ()

சேறுமென்னுமும்மையைக் கழியுமெனக்கூட்டுக,

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினுஞ்.. *
சென்றுவந்துலவுமச்சிகைதவிலாநிழலின்னர் ... *
வென்றிநீள்கொடியொடுநெற்றிதானமும்விராய்.
நின்றவெண்குடைகளினிழல்களே நிழலெலாம் ...*

(இ-ள்.) அவ்வழியிலுள்ள நிழல்களெல்லாம் இயற்கைமணமும் பொருந்தி ய கூந்தலையுடைய அரசமகளிர் மணிகளாற்செய்த ஊர்திகளிலும் பொன் னாற்செய்த ஊர்திகளிலும் சென்றுவந்து உலாவுதலாலுண்டாகியசிதைதலி லாமலடர்ந்த அந்நிழலோடு அழகியநீண்மையாகிய வெற்றிக்கொடிகளோ டு நெடியமேற்கட்டிகளும் தம்முள்கலந்து நின்றநிழல்களும் வெண்கொ ற்றக் குடைகளி னிழல்களுமேயாம்—எ-று. (௰௪)

நிழல்களே எல்பதை நில்றவெல்பதோடுங் கூட்டுக. சென்றுவந்துலவுமென்றவின் மணிபொன்னென்பன முதற்கருவியாகுபெயர்.

மாறிலாமதுகையான்வருபெருந்தானைமேல் ... *
ஊறுபேருவகையானனிகம்வந்துற்றபோ ... *
திறிலோதையிலெறிதிரைப்பரவைமேல் ... *
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே ... ... *

(இ-ள்.) (செருமுகத்தில்) மாறுதலில்லாத வலியையுடையானாகிய சக்கர வர்த்தியினது வருகின்ற பெருஞ்சேனைமேல் பெருகுகின்றமிக்க மகிழ்ச்சி யையுடையானாகிய சனகமகாராசனது சேனையானது வந்துசேர்ந்தபோது (உண்டாகிய ஓசையானது) எறிகின்ற அலைகளையுடையகடலின்பேல் இடை வீடில்லாத ஓசையோடு கங்கையாறுபாய்கின்றதிலுண்டாகிய ஓசைபோ லானது—எ-று. (௰௫)

தந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ ... *
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர் ... *
தந்தையேயனையவத்தகைவினன்முன்புதன் ... *
சிந்தையேபொருநெறிந்தேரின்வந்தெய்தினன்...*

(இ-ள்.) புகழ்தற்கரிதாகிய ஒப்பற்ற இயற்கைநற்குண நற்செய்கையால் உலகத்தாருக்குத் தந்தையையேயொத்த அப்பெருமையையுடைய சக்கரவர்த்திக்கு முன்புகரிலையையே பொருகின்ற யானைச்சேனையையுடைய சனகமகாராசனும் காதலாலே தன்னுடன்பட்டலால் தன் சிந்தையையேயொத்த நெடியதேரின்மீது வந்துசேர்ந்தான்—எ-று. (௰௬)

நாம்பன்னுள்பயிற்றனவாகவிற் கந்தையேயென்றது சிறப்பேகாரம். தன்குடிகளைத்தீயொழுக்கத்திலொழுகாமையொழுத்து நல்லொழுக்கத்திலொழுகச்செய்தலால் சக்கரவர்த்திக்குத் தந்தையும் அவனைக்காணுமாறு விரைகின்றதாகவிற்றேர்க்குச்சிந்தையும் முறையே பயனுவமையும் வினையுவமையுமாயின. ஏ இரண்டும்பிரிநிலை.

எய்தவத்திருநெடுந்தேரிழிந்திளையதன்.... ... *
மெய்கொடிஞ்சேனையின்னிற்கமுன்சேறலுங்...*
கையின்வந்தேகறெனக்கடிதின்வந்தேறினான் ... *
ஐயனும்முகமலர்ந்தகமுறத்தழுவினான் ... ...*

(இ-ள்) நெருங்கிவரலும் அந்தநெடியசிறந்ததேரினின்றும் இழிந்து இப்படிப்பட்ட மெய்த்துவருகின்றதின்னியதன் சேனையானது பின்னேநிற்கத்தான்முன்னேநடந்துசெல்லுதலும் (இத்தேரின்கண்) வந்தேறென்று கையாற்குறிப்பிக்க விரைவாகவந்து ஏறினான் ஐயனாகியசக்கரவர்த்தியும் முகமும் அகமும் மலர்ந்து மிகவுந்தழுவினான்—எ-று. (௰௭)

தழுவிநின்றவனிருங்கிளையயுர்தமனையும் .... *
வழுவிலசிந்தனையினுன்வரிசையின்னவனாய் ... *
எழுகமுந்துறவெனுமினிதுவந்தெய்தினான் ... *
உழுவைமுத்தரியனுமெனவரினுமுயரினான் ... *

(இ-ள்.) புலியையொத்த வீரர்களுக்குமுன் சிங்கத்தையொத்தவனும் எல்லா அரசர்களினுமுயர்ந்தவனுமாகிய சக்கரவர்த்தி, சனகமகாராசனைத்தழுவிநின்று அவனுடையபெருமையாகிய சுற்றத்தையும் கிளைகளையும் தவறுதலில்லாத உள்ளன்பினனாகி முறையாகவிசாரித்து முன்னே செல்லக்கடவாயென்று கூறி மிதிலையைநோக்கி இனிமையாகவந்து சேர்ந்தான்.எ-று ()

இன்னவாறிருவருமினியவாறேகவத் ... ... *
துன்னுமாநகரினின்றெதிரெரத்துன்னினான் ... *
றன்னையேயனையவன்றழலேயனையவன் ... *
பொன்னின்வார்சிலையிறப்புயநிமிர்த்தருளினான்...*

(இ-ள்) இன்னபடியாகச்சக்கரவர்த்தியும் சனகமகாராசனும் இனிய விதமாய்ச்செல்லாநிற்கையில் தீநிறத்தையொத்தநிறத்தையுடையசிவனதுபொன்னிறமமைந்தநீண்டவில்முறியும்படி தன்புயங்களை உயர்த்தவனாகிய தன்னைத்தானேயொத்தசிராமபிரான்வளப்பங்கள்நிறைந்த அந்தப்பெரிய மிதிலாநகரத்தினின்றும் எதிர்வரத்தொடங்கினான்—எ-று. (௰௯)

தம்பியுந்தானுமத்தானைமன்னவனகர்ப் ... *
பம்புதின்புரவியும்படைஞரும்புடைவரச் ... *

செம்பொனிற்பசுமணித்தேரின்வந்தெய்தினான் ... *
உம்பரும்இம்பரும்நாகருந்தொழவுளான் ... *

(இ-ள்.) விண்ணவர்களும் இவ்வுலகத்தவர்களும் நாகர்களும் வணங்கநின்றவனாகிய ஸ்ரீராமபிரான் தம்பியுந்தானும் சேனையையுடைய அந்தசனகமகாராசனது நகரினின்றும் நிறைந்ததிண்மையாகிய குதிரைப்படையும் யானைகளும்பக்கத்திலேசூழ்ந்துவரும்படி செம்பொன்னாற்செய்த மரகதமணியிழைத்ததேரின்மேலவந்துசேர்ந்தான்—எ-று. (௨௰)

யானையோவிரதமோவிவுளியோபிடிகளோ ... *
ஆனபேருறையிலாநிறைவையாரறிகுவார் ... ... *
தானையோர்சனகனேவலினெழுந்தந்தைமுன் ... *
போனபேரிருவர்தம்புடைவரும்படையினே ... *

(இ-ள்) பெருமையாகிய தந்தைக்கு முன்னே சென்ற பெருந்தன்மையமைந்த இராமலட்சுமணர்களுடைய பக்கத்தில் சேனைவளப்பத்தையுடைய சனகமகாராசனுடைய ஏவுதலினால், வரும்படைகளில் (சேனைகளில்) பெரிதாகிய உறையென்னுமளவையில்லாத நிறைவையாரறிகுவார் (ஆகலால் யானையோ இரதமோ குதிரையோ பெண்யானையோ (யாம்தாமிகுழ்புடையது).

காவியுங்குவளையுங்கடிகொள்காயாவுமொத் ... ... *
தோவியஞ்சுவைகெடப்பொலிவதோருருவொடே ... *
தேவருந்தொழுகழற்சிறுவன்முன்பிரிவதோர் ... *
ஆவிவந்தென்னவந்தரசன்மாடணுகினான் ... ... *

(இ-ள்.) காவிமலரையும் கருங்குவளைமலரையும் புதுமையாகிய காயாமலரையும் ஒத்து, சித்திரஞ்சுவைகெடும்படி விளங்குவதாகிய ஒப்பற்றதிருவுருவத்தோடு தேவர்களுந்தொழுகின்ற ஸ்ரீபாதங்களையுடைய ஸ்ரீராமபிரான் முன்பிரிந்ததாகிய ஒப்பற்ற உயிரானது வந்தாற்போலவந்து அரசனிடத்தில்சேர்ந்தான்—எ-று. (௨௨)

அவன்பக்கலீடுபடாதவர்களையு மீடுபடச்செய்யுஞ் சிறப்பிற்றாகலி னோருருவோடே [illegible]னத் திருவுருவத்தையெடுத்துக்கூறினார். ஒடு உருபு உருவொடணுகினானென வணுகலுக்கு அடைமொழிப்பொருளில்வந்தது.

அனிகம்வந்தடிதொழக்கடிதுசென்றரசர்கோன். ... *
இனியபைங்கழல்பணிந்தெழுதலுந்தழுவினான் ... *
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தனமலைத் .. ... *
தனிநெடுஞ்சிலையிறத்தவழ்தடங்கிரிகளே ... ... *

(இ-ள்.) (சக்கரவர்த்தியினுடைய) சேனைகள்வந்து தன் ஸ்ரீபாதங்களைத் தொழாநிற்க விரைந்துநடந்து அவனுடைய இனியபசும்பொன்னாற்செய்த வீரகண்டையணிந்தபாதங்களைப்பணிந்து எழுதலும்தழுவினான் மேருமலையையொத்த ஒப்பற்ற நெடிய திரியம்பகமென்னும் வில்லானது முறியும்படி அசைத்தபெருமையாகிய புயமலைகள், மனு இவனென்று (அறிவு

டையோரால்) சொல்லப்படும் தன்மையையுடைய சக்கரவர்த்தியினது மார்பிலே மறைந்தன—எ-று. (௨௩)

மலையென்பதற்கு மேருவென்றது மலையெனச்சிறப்பித்துக் கூறப்படுவது அதுவேயாதலின்.

இளையவைக்குரிசில்வந்தடிபணிந்தெழுதலுந் ... ...*
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினான் ... .... *
களைவருந்துயரறக்கனமெண்டிசையெலாம் ... ... *
விளைதரும்புகழினானெவரினும்மிகுதியான் ... ... ...*

(இ-ள்) (மற்றொன்றால்) ஒழித்தலருமையாகிய துயரம்நீங்கும்படி இவ்வுலகமுழுமையும் எண்டிக்குகள் முழுமையும் பெருகாநின்ற புகழையுடையானாகிய யாவரினும் மிக்கசெல்வமமைந்த சக்கரவர்த்தி, பசும்பொன்னிறம்வாய்ந்த இளையபெருமாள்வந்து தன்பாதங்களைப்பணிந்து எழுதலும் மலராற்றொடுத்தலமைந்த மாலையணிந்தமார்பிலேபொருந்தமிகத்தழுவினான்—எ-று. (௨௪)

குன்றனிக்கும் அமணித்தோட் சம்பரன்முதலானோரைக் குலத்தோடுந்தொலைத்த வெற்றியாளனாகிய விவன்புகழைத்திக்கனமெண்டிக்கிலுள்ளார்கூறுநிற்கையால் இவர்களைக்குறித்தவரு மசுரர்முதலிய தீயோர் அதுகேள்வியுற்று அஞ்சியொதுங்கவிற் றுயரற விளைதரும் புகழினானென்றார். துயரற—எ-து- காரியப்பொருட்டு.

கற்றவார்சடையினன்கைக்கொளுந்தனுவிறச் ... *
சொற்றநீள்புயநிமிர்த்தருளுமக்குரிசில்பின் ..... ...*
பெற்றதாயரையடிப்பெற்றியிற்றொழுதெழுந் ... ... *
துற்றபோதவர்மனத்துவகையாருரைசெய்வார் ... *

(இ-ள்) நீண்டசடைத்தொகுதியையுடைய சிவன்கையிற்றாங்கிய வில்லானது முறியும்படி வெற்றிவளர்கின்ற புயத்தை நிமிர்த்தருளிய அச்சீராமப்பிரான் தந்தையைத்தொழுதபின் தன்னைப் புத்திரனாகப்பெற்ற தாய்மார்களையும் (முன்தந்தையைப்பணிந்த) அம்முறைமைபோல பணிந்தெழுந்து நெருங்கியபோது அவர்களுடையமனக்களிப்பை (இவ்வளவிற்றென்று) சொல்லவல்லார்யார்—எ-று. (௨௫)

உன்னுபோன்புயிக்கொழுகியொத்தொண்கணீர் ... ...*
பன்னுதாரைகடாத்தொழுதெழும்பரதனைப் ... ... *
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினான் ... *
றன்னைத்தாதைமுன்றழுவிநுவென்னவே ... ... ... *

(இ-ள்.) எப்போதும் நினைக்கின்ற அன்பானது உள்ளத்தே யிருந்து புறத்தே ஒழுகியதையொத்து அழகியகண்கள் எடுத்துக்கூறப்பட்ட நீர்த்தாரைகளைத் தாரைநிற்கத்தொழுது எழுகின்றபரதனை, தன்னை அத்தந்தைமுன்னே தழுவினாற்போலத் திருமகள்வசிக்கின்ற மார்பில் உயிரைப்பொருந்தும்படி மிகுதியும் அணைத்துத்தழுவினான்—எ-று. (௨௬)

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற் ... ... ... ...*
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப் ... ...*

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினார் ... ... ...*
நீதிலாவுவமையுஞ்சிறிதோபெரிதோ ... ... ... *
கோதைசூழ்குஞ்சியக்குமாரர்வந்தெய்தலுந் ... ... ...*
தாதையாதாத்தத்தானையின்றல்லையே ... ... ... *

(இ-ள்.) அந்நால்வர்பால் யானைகளையொத்த சேனைவீரர்கள்வைத்த காதலையோ (இவ்வளவினதென்று) அறியோம் குறையில்லாத உவமையும் சிறியதோ பெரியதோ (அறியோம்) அச்சேனையின் தலைமையானது பாலைசூழ்ந் தகைமையையுடைய அவ்வரசிளங் குமாரர்கள் வந்துசேரலும் தாதையாகுமிலை யொத்தது—எ-று. (௩௰)

ஆதலொத்தது-எ-து- ஆதொத்ததெனத்தொகுத்தது இவ்வுவமைஏனைவுவமைபோலாது உயிர்க்குறுதியபயக்குநன்மையயத்தலிற் றீதிலாவுவமையென்றார். தானையின் றலைமைநாதையாதலொத்தலாவது இச்செல்வமித்தனையுமெய்த்தருகுறசுறுவர் நால்வருமொருசேரச் செல்வதைக் கண்ணுற்றதாதை அதுபோதுகொண்ட காதலையொத்தகாதலையுட் உவமையையொத்த உவமையையுமுடையதாதல். முன்னை ஓ சிறப்புயின்னை ஓ விரண்டும்-ஐயம். அரோவிரண்டனுவுந்தொகுத்தன.

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந் ... *
தழிவில்சிந்தையினுகந்தாடன்மாமிசைவரத் .. ... *
தழுவுசங்குடனெடும்பணைதழங்கிடவெழுந் ... ...*
*தெழுதருந்தகையதோர்தேரின்மேலேகினான் ... *

(இ-ள்.) இருபக்கங்களிலும்தொழுது அன்புடைய தம்பியர்கள்தொடர்ந்து இடையிட்டழிவிலாத உள்ளத்தி லுவகைகொள்ளாநின்றுவெற்றியுடையகுதிரைகளின்மீதுவாராநிற்கவும் ஒன்றை ஒன்றுதழுவி யொலிக்கின்ற சங்குடனே நெடியமுரசம் ஒலிக்கவும் செல்லலுற்று, எழுதுதற்கரிய தன்மையதாகிய ஒப்பற்றதேரின்மேலேறிச்சென்றான்—எ-று. (௩௧)

பஞ்சிசூழ்மெல்லடிப்பாவைமார்பண்ணைசூழ் ... .*
மஞ்சசூழ்நெடியமாளிகையின்வந்திடைவிராய் ... *
நஞ்சசூழ்விழிகள்பூமழையின்மேல்விழநடந் ... .*
திஞ்சிசூழ்மிதிலைமாவீதிசென்றெய்தினான்... ... ...*

(இ-ள்) செம்பஞ்சிசூழ்ந்தமெல்லியபாதங்களையுடைய மங்கையர்களது கூட்டங்கள் சூழ்ந்து, மேகங்கள்சூழ்கின்ற நெடியமாளிகையினின்றும் புறத்தேவந்து (வீதியின்) இடத்தில்நிறைய (அக்கூட்டத்தில்) விடம்நிறைந்த கண்ணின்பார்வைகள் (அந்தணர்கள் ஆசிகூறியிறைக்கும்) மலர்மாரியைப் போலத் தன்மேல்விழாநிற்கப்போய் மதில்சூழ்ந்த மிதிலாநகரத்தினாவீதியைச்சென்றுசேர்ந்தான்—எ-று. (௩௨)

பண்ணைசூழ் என்னு முதனிலைத் தனிவினை வினையெச்சமாய்நின்றது விராவ-எ-து-விராய் எனத்திரிந்தது.

சூடகத்துபல்வாக்கோதைசோர்தாமலர்ப் ... ... *
பாடகம்பாதநூல்பகாவெங்கடகரிக் ... ... ... *

கோடாங்கிடவெழுந்குவிதடங்கொங்கையார்,... ... *
ஆடரங்கல்லவேயணியரங்கமெல்லாம் ... ... *

(இ-ள்) அலங்கரித்தமாளிகைகளின் புறமெல்லாம், அங்குநிறைந்தமங்கையர்களது கைவளைகள் அசைதலாலும் கூந்தல் அவிழ்ந்துசரிவதினாலும் பாதமாகியமலரிலணிந்த அணிகள் பாதநூல்கூறும் நடனவிதியை ஒலித்துக் காட்டலாலும், வெம்மையாகிய மதத்தையுடைய யானையினது தந்தங்களை (இறுமாப்பு) கெடும்படி எழுந்த குவிந்தபெரியகொங்கைகளையுடைய வேசையர்கள் ஆடுகின்ற அரங்கமல்லவோ அரங்கேயாம்—எ-று. (கூகூ)

ஏகாரம்-எதிர்மறைப்பொருட்டு.

பேதைமார்முதல்கடைப்பேரிளம்பெண்கடாம் ... *
எதியார்மாரவேளேவவந்தெய்தினார் ... ... ... *
ஆதிவானவர்பிரானனுகலாலணிகொள்கார்... ... ...*
ஓதியார்வீதிவாய்புற்றவாறுரைசெய்வாம்... ... ... *

(இ-ள்) முதன்மையாகிய கடவுளருடைய தலைவன்சேர்தலாலே, குறைவில்லாத ஆயுதங்களையுடைய மாரவேள் ஏவாநிற்பப் பேதைப்பருவமுடையார்முதல் பேரிளம்பெண்கள் கடையாகவந்து சேர்ந்தவர்களாகிய அணிகளைக்கொண்ட மேகம்போன்ற கூந்தலையுடைய அம்மாதர்கள் வீதியினிடத்தில் அடைந்தவிதத்தைச்சொல்லத்தொடங்குவோம்—எ-று. (கூச)

பேதைமார்முதல்கடைப் பேரிளம்பெண்கள் மாரவேளேவ வந்தெய்தினரெனவே குலமங்கையர்க்கு வேற்றுநாயகனைக்கண்டு வேட்குதல் கற்பொழுக்கமன்றேயெனின் நற்றன்று ஓவிகடவுலகினிலும்பர்நாகரிற்பொலிவதுதன்பொற் பென்னுமாறுநின்ற இறையவனும் வேட்டு அகலகில்லே னிறையுமென் றுறைமார்பத்தையுடையசகலமோகனுகார ருகிய இறையவனது வடிவழகைக்கண்டு ஏனைமாதரெனப்படுவோர் வேட்காதிரா ரன்றேயன்றியு மவன்பக்கல்புரியும வேட்கையும் பக்தியேயாமெனத்தோலாநாவின்மேலோர்கூறலாமென்க,

மூகூ-வது- எதிர்கோட்படலமுற்றிற்று.

---

# உய-வது- உலாவியற்படலம்,

---

மானினம்வருவபோன்றுமயிலினந்திரிவபோன்று ...*
மீனினமிளிர்வபோன்றுமின்னினமிடைவபோன்றும்...*
தேனினஞ்சிலம்பியார்ப்பச்சிலம்பினம்புலம்பவெங்கும்.
புறனைகூந்தன்மாதர்பொம்மெனப்புகுந்துமொய்த்தார்*

(இ-ள்) மான்கூட்டங்கள் வருவனபோன்றும் மயிலினங்கள் திரிவனபோன்றும் விண்மீன்கள் விளங்குவனபோன்றும் மின்னினங்கள் நெருங்குவனபோன்றும், (கூந்தலில்மொய்த்த)வண்டுக்கூட்டங்கள் மிகுதியும் ஆரவாரிக்கவும் (காலில்) சிலம்பினங்கள் ஒலிக்காநிற்பவும் வீதியினிடமெங்கும் மன

லையணிந்த தண்ணிய கூந்தலையுடைய மாதர்கள் விரைந்து புகுந்துமொய்த்தார்கள்—எ-று. (௪)

பொம்மென-எ-து-விரைவுக்குறிப்புணர்த்திற்று.

விரிந்துவீழ்கூந்தல்பாரார்மேகலையற்றநோக்கார் ... *
சரிந்தபூந்துகில்கடாங்காரிடைதடுமாறக்காணார் ... *
நெருங்கினர்நெருக்கிப்புக்குநீங்குமினீங்குமினென்.. *
றருங்கலமனையமாதர்தேனுகரளியின்மொய்த்தார்......*

(இ-ள்) பெறுதற்கரிய அணியையொத்த சிறந்தமாதர் விரிந்து வீழ்கின்ற கூந்தலை பிடியாமலும் அற்றவாகிய மேகலையை எண்ணாமலும் சரிந்துவீழ்கின்ற பூந்தொழிலினையுடைய துகில்களைத்தாங்காமலும் மெல்லிய இடை தடுமாறுதற்க (அதனால்) தாயசஞ்செய்யாமலும்வந்து நெருங்கினார்கள் அவ்வாறு நெருங்கிப்புகுந்து (ஒருவரையொருவர்) நீங்குங்கோள் நீங்குங்கோளென்றுகூறித் தேனை உண்ணவருகின்ற வண்டுகளைப்போல (ஸ்ரீராமபிரானை) மொய்த்தார்கள்—எ-று. (௫)

கண்ணினாற்காதலென்னும்பொருளையேகாண்கின்றேமிப் .. *
பெண்ணினீர்மையினாலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்.
மண்ணினீருலர்ந்துவானமழையறவறந்தகாலத் ... ...*
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார் ... ...*

(இ-ள்) காதலென்னும் பொருளைக் கண்களால் (புறத்தே) காணுகின்றோம் (அதனால்) நாமடைந்திருக்கும் இப்பெண்தன்மையால் அடைதற்குரியபயனை இன்று பெறுவோமெனக் கருதுபவராய்ப் பூமியில் நீருலர மேகம்பெய்கின்றமழை சிறிதுமின்றி வறந்தகாலத்தில் உண்ணுதற்குரிய நீரை (ஒரிடத்தில்) கண்டுவீழ்கின்ற மான்கூட்டம் பலவற்றையும் ஒத்து மிக்க வேட்கையோடுமொய்த்தார்—எ-று. (௬)

பொருளையே' என்னும் பிரிநிலை ஏகாரத்தைக்காதலே எனக்கூட்டுக.

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானற்பூத்த ... ... *
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூத்... *
தள்ளதம்மிடைகணோவத்தமைவலித்தவன்பாற்செல்லும் ...*
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாரையொத்தார்... *

(இ-ள்) பள்ளமாகிய நிலத்தில் பாயாநின்ற தெளிந்தநீரை ஒத்தவர்களாகிய வெள்ளத்திலும் பெரியகண்களையுடையமங்கையர்கள், மெல்லிய தொழிலமைந்தசிலம்புகள் ஒலிக்கும்படி பாதமாகிய மெல்லியதாமரைமலர்கள் தள்ளாடவும் தம்மிடைகள்வருந்தவும் தம்மை வலித்துக்கொண்டு அச்ஸ்ரீராமபிரான்பால் செல்லுகின்ற தம்முள்ளத்தை நாம்பிடிப்போமென்று ஓடுகின்றாரும் ஒத்தார்—எ-று. (௭)

ஆரத்தமூண்டனையமேனியகலிலைகளித்ததானும் ... ...*
விரைக்கருங்குழலிக்காகவில்லிறுத்திமிர்த்துவீக்கும்... ... *

வரைத்தடந்தோளுங்காணமறுகினில்வீழுமாதர் ... ... *
இரைத்துவந்தமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார் ... *

(இ-ள்) செந்நிறத்தையுண்டாலொத்தமேனியையுடைய, அகலிகையென்பவள் கண்டுகளித்த சீர்பாதங்களையும் இயற்கைமணமமைந்த கருமையாகியகுழலையுடைய சீதாபிராட்டிக்காக வில்முறிய உயர்ந்து பூரித்த மலையையொத்த பெரியதோள்களையுங் காணும்படி வீதியில் மொய்க்கின்ற மாதர்கள் இரைத்துவந்து அமுதத்தைமொய்த்துக் கொள்ளும் ஈக்கூட்டமென்னலானார்—எ-று. (௫)

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற ... *
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான் ... ... *
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்குங்கண்ணனென்றே... *
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான் ... *

(இ-ள் ஸ்ரீராமபிரான் வீதியிற்செல்கின்றவன்போன்று இமையாமல்விழித்துநின்ற மாதர்களுடையகண்மலர்களுக்குள், தாவுகின்ற குதிரைகள் பூண்ட தேரின்மீது செல்கின்றவனாகி (வேதமுதலிய) எந்நூலினும் உயர்ந்த புலமையுடையோர், யாவர்களுக்குங் கண்ணனென்றழைக்கூறியபெயர்க்குத்தானேதக்கபொருளை உணர்த்திவிட்டான்—எ-று. (௬)

எண்கடந்தலகிலாதின்றேகுறுமிவன்றேரொன்று ... ... *
பெண்கடந்தம்மிற்றேர்ந்துபேதுறுகின்றகாலை... ... ...*
மண்கடந்தமரர்வைகும்வான்கடந்தானைத்தான்றன் ... .. *
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளேகாண் ... ... ... *

(இ-ள்) இவ்வரசிளங்குமாரனுடையதேர் உள்ளத்தின் வேகத்தைக்கடந்து (தன்வேகத்துக்கு) அளவில்லாமல் இன்றுசெல்லாநின்றதென்று பெண்கள் தங்கள்தங்களுக்குள்தேர்ந்து உன்மத்தராகுங்காலத்திலும் மண்ணுலகத்தைத்தாவித் தேவர்கள்வாழ்கின்ற விண்ணுலகத்தையும் தாவியளந்த பெரியோனைத் தான்தனது கண்மயலைக்கடக்காமல்காத்துக்கொண்ட சீதாபிராட்டியேபெரியள்—எ-று. (௭)

ஸ்ரீராமபிரான், தனதுவடிவழகைக்கண்டு அணையப்பெறுமல் மங்கையர்கள்வருந்தாநிற்கவும் அவர்களைச்சிறிதும்நோக்காமல் பிராட்டிபக்கலிலேயே கருத்துடையனாய்ச் சென்றானென்பதுகருத்து. சிறப்பும்மையு மிறந்ததுதழீஇயவெச்சவும்மையும்விகாரத்தாற்றொக்கன

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பறுநலனும்பண்பும் ... *
செயிரின்றியுலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும் ... *
வயிரஞ்செய்பூணுநாணும்மடனுந்தன்னிறையுமற்றும் ... ...*
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள் *

(இ-ள்.) அவர்களுள் ஒருபெண் தன்னுயிரொன்றுந்தவிரப் பயிர்போலப்பிரியாதுபொருந்தியசேலையையும்கைவளையையும்பழித்தலில்லாத பெண்ணலத்தையும் இயற்கைக்குணத்தையும் குற்றமில்லாமல் உண்டாகிய அழகையும் எண்ணத்தையும் அறிவையும் மாமைநிறத்தையும் வயிரத்தாற்

செய்தபூண்களையும் நாணத்தையும்மடமைக்குணத்தையும் தன்னிறையையும் மற்றையாவற்றையும் முழுமையுமிழந்துநின்றாள்—எ-று. (௮)

குழையுறாமிளிருங்கெண்டைகொண்டலினுமிழ்ந்த ... ...*
தழையுறாக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய ... *
இழையுறாப்புண்ணுறாதவிளமுலையொருத்திசோர்ந்து. ... *
மழையுறாமின்னின்மருங்குல்போனுடங்கிநின்றாள். ...*

(இ-ள்) (காதிலணிந்த) குழைகளில் பாய்ந்துவிளங்குகின்ற கண்களாகிய சேல்கள் மேகஞ்சிந்துவதுபோல நீர்த்துளிகளைச்சிந்தும்படி தழையையில்லாதகரும்பாகிய வில்லினின்று அநங்கனாகிய மன்மதனது அம்புகள்பாய்வதினால்புண்ணைநீங்காத நூலிழையிடையேசெல்லாதுபுடைத்த இளமையாகியமுலையையுடைய ஒருத்தி சோர்ந்து மேகத்திலில்லாத மின்னலையொத்த தன்னிடையைப்போலத் துவண்டுநின்றாள்—எ-று. (௯)

பஞ்சணிவிரலினார்தம்படைநெடுங்கண்களெல்லாம் ... ...*
செஞ்செவேயையன்மெய்யிற்கருமையைச்சேர்ந்தவோதா...*
மஞ்சனமேனியான்றன்மணிநிறமாதரார்தம்... ... ... *
அஞ்சனநோக்கம்பார்க்கவிருண்டதோவறிகிலேமால். ... ...*

(இ-ள்.) பஞ்சினது மென்மையையொத்த மெல்லிய அழகிய விரல்களையுடைய மாதர்களது வேற்படைபோன்றநெடியகண்களெல்லாம் ஐயனுடைய திருமேனியிலுள்ள கருமையை மிகுதியுநேர்மையாகச் சேர்ந்தனவோ (அன்றி) மேகத்தையொத்த திருமேனியையுடைய ஐயனது அழகியநிறமானது அம்மாதர்கள் தம்முடையகரியகண்களால்பார்க்கக்கறுத்ததோயாதோ தெளியோம்—எ-று. இது ஐயவணி. (௰)

மாந்தளிர்மேனியாளோர்வாணுதன்மதனனெங்கும் ... ... *
பூந்துணர்வாளிமாரிபொழிகின்றபூசனோக்கி ... ... ...*
வேந்தர்கோனாணைநோக்கான்வீரன்வில்லாண்மைபாரான் ...*
ஏந்திழையாரையெய்வானியாவனோவொருவனென்றாள் ... *

(இ-ள்.) மாந்தளிரையொத்தமேனியாளாகிய ஒளியமைந்த நெற்றியையுடைய ஒருத்தி, எல்லாமங்கையர்மேலும் மன்மதன் பொலிவாகியமலரம்பு மழையைப்பொழியாநின்ற போரைநோக்கி, சக்கரவர்த்தியினுடைய ஆணையை மதியாமலும் இவ்வீரனுடையவில்வளைத்தபராக்கிரமத்தை ஆலோசியாமலும் உயர்ந்த அணியணிந்தமாதர்களை எய்யாநின்றான் (அவன்) எத்தன்மையனோ என்றாள்—எ-று. (௰௧)

வேந்தர்கோனாணையைநோக்கி யச்சமும் வீரன்வில்லாண்மையைநோக்கி நாணமுமின்றி ஏந்திழையாரையெய்வதினால் இரக்கமுமில்லானாகவின் யாவனோவென்றாள்.

சொன்னலங்கடந்தகாமச்சுவையையோருருவமாக்கி ... ...*
இன்னலத்தெரியவல்லாரெழுதியதென்னநின்றாள் ... ... ...*
பொன்னையும்பொருவுநீராள்புனைந்தனவெல்லாம்போகத் ...*
தன்னையுந்தாங்கலாதாடுகிலொன்றுந்தாங்கிநின்றாள் ... ...*

(இ-ள்.) சொல்லுக்கும் மற்றெல்லா இன்பங்களுக்கும் மேற்பட்ட காமச்சுவையை ஒருருவமாகச்செய்து இப்பநயங்களை அறியவல்லவர்கள் எழுதியதுபோல அசைவற்றுநின்றாள் பொற்பாவையைப் ஒக்குஞ் சன்மையாள் (இவள்) அணிந்தனவெல்லாம் நீங்கத் தன்னையுந் தாங்கும் வலியில்லாளாகிச் சேலையொன்றையுந் தாங்கிநின்றாள்—எ-று. (௰௨)

அகத்தின்கணிகழ்ந்த காமச்சுவை பிறர்க்குப்புலப்படுமோவிற்றெனவாயாற் கூறவரியதாம் வையுலகவின்பங்களிற் சிறந்ததுமாகலிற் சொன்னலங்கடந்த காமச்சுவையென்றார். பொன் ஆகுபெயர்.

விற்றங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்மச் ... ...*
சுற்றெங்கும்பெரிட்டவுள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள் ...*
கொற்றஞ்செய்கொலைவேலெல்லெனக்கூற்றெனக்கொடியகண்ணு
மற்றொன்றாங்காண்கிலாதாடகியதுவள்ளலென்றாள் ...[ண்

(இ-ள்) பயிலையொத்த ஒருத்தி வில்லின் தழகுதங்கிய புருவத்திலும் நெற்றியிலும் வெயர்வை ஒழுகவும் பசலை உடல்முழுமையுமிக எழிப்பவும் மனநிலைதளரவும் நின்றாள் வெற்றியைத்தருகின்ற கொல்லுந் தொழிலையுடைய வேல்போலவும் கூற்றுவன்போலவும் கொடுமையுடையகண்களாகிய அவள், (தம்மனம்சிராமபிரான்பக்கலிலேசென்று பற்றியதாகையால)வேறொருபொருளைப்பார்க்காதனவாகி உள்ளல் தனியனே என்றாள்—எ-று. (௰௩)

தமியனே என்னும் ஏகாரம், நீயின்னோரெனின் பூங்கண்ணோ என்றாற்போல இரக்கக்குறிப்புணர்த்திற்று. யாதொருபயற்சியுமின்றி வாளாவிருப்பவும் தனதுதன்மைகருணைாற்றுமேனி வந்தவாய்வைந்துதன் வடிவழகினைபெருத்கையாவருங்கண்டுதாங்கண்டு பருகவவையாதுதவுகின்றமையின்வள்ளலென்றாம், இவ்வாறு வவையாதுதவுமியல்பிற்றபெருந்தன்மைத்தினன் யாதொருதுணையுமின்றிச் செல்கின்றனென்று மிரக்கத்தால் தமியனேயென்றாங்கூறினாள். பசலையென்பது விரும்பியகாதலனையணையப்பெருத்துன்பாலுளதாவதோர் நிறவேறுபாடு.

மைக்கருங்கூந்தற்செவ்வாய்வாணுதலொருத்தியுள்ள ... ... *
நெக்கனளுருகுகின்றநெஞ்சினிடைஞ்சனேற்றுத் ... ... *
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலன்கொள்வாயுஞ் ...*
சிக்கெனவடைத்தேன்றோழிசேருதும்பள்ளியென்றாள் ....... *

(இ-ள்) மையையொத்தகருமையாகியகூந்தலையும் சிவந்தவாயையும்ஒளியமைந்தநெற்றியையுமுடைய ஒருத்தி உள்ளம்தளர்ந்துஉருகாநின்றவளாய்த்தோழியே வஞ்சனானவன் என்னெஞ்சில் வந்து புகுந்தனன் இனிப் போகாதவகை கண்கள் என்னும் புலனாகிய வழியையும் விரைவாக அடைத்துவிட்டேன் சயனத்தைச்சேருவோமென்றாள்—எ-று. (௰௪)

தானே இங்குவந்து நம்மெல்லோருக்கும் வேட்கையைப்பெருக்கி அது பயன்படுமாறு தழுவலும், உள்ளத்தேவரல் மீண்டு புறத்தேசேரலாகு மென்றுமொரு நிலையினிற்றலுமில்லானென்னுங்கருத்தால் வஞ்சனெனன்றாம தன்போலவே தோழியும் வேட்கையுள்ளாகலானும் தான்கண்ணெனும் புலன்கொள்வாயைச்சிக்கெனவடைத்தலின் அவனைப்புடன்கொண்டு போகவேண்டுமாகலானும வனைத்தலன்றோவெனப்படுத்திசசேருதுமென்றுங்கூறினாள்.

தாக்கணங்கனையமேனிமைத்தடங்கண்சரங்கள்பாராள் ... *
நீக்கியகல்லுந்துரசும்வேறுவேறுணர்வோராள் ... ... ......*

இத்தனை என்பது இலக்கணையானே சிறிதுமெனப்பொருடந்தது. முற்றும்மைவிகாரத்தாற்றொக்கது, நாணித்தனையுமிலாதாய்நப்பின்னை காணினென்னும் விட்டுசித்தர் அருளிச்செயலிலும் இத்தனையுமென்பதற்குச் சிறிதுமெனப்பொருள்படல்காண்க அன்றியும் அதிசயியார்த்தியானத்தானுந்தெற்றெனவுணர்க.

வையம்பற்றியமங்கையரெண்ணிலர் ... ... ... ...*
ஐயன்பொற்புக்களவிலையாதலால் ... ... ... ...*
எய்யும்பொற்சிலைமாரனுமென்செய்வான் ... ... ...*
கையம்பற்றுடைவாளினுங்கைவைத்தான் ... ... ...*

(இ-ள்.) தேசைப்பற்றிச்செல்கின்ற மங்கையர்கள் அளவில்லார் ஐயனுடைய அழகுக்கு அளவில்லை அக்காரணத்தால் அம்மாதர்களை எய்யாநின்றஅழகியவில்லையுடைய மன்மதனும் என்னசெய்வான் தன்கையில் அம்புகளில்லாமல் உடைவாளினுங் கைவைத்தான்—எ-று. (௫௩)

நானவார்குழனாரியரோடலால் ... ... ... ... ...*
வேனில்வேளொடுமேலுறைவார்களோ ... ... *
டானபூசலறிந்திலமம்புபோய் ... ... ... ... *
வானநாடியர்மார்பினுந்தைத்தவே ... ... ... ...*

(இ-ள்) மணமமைந்த நீண்டகூந்தலையுடைய இம்மாதர்கள்பால் நடந்த போரையல்லாமல் வசந்தகாலத்திற்குரிய மன்மதனுக்கு, சுவர்க்கத்திலவசிக்கின்ற தெய்வப்பெண்கள்பால் நடந்தபோரை அறிந்தோமில்லை அவனுடைய அம்புகள்சென்று அவ்வானநாட்டுப் பெண்களுடைய கொங்கைகளிலுந்தைத்தன—எ-று. (௫௪)

வானநாடியரென்பது சுட்டின்பொருளதாய்நின்றபெயர். சீராமபிரானுடையவடிவழகைக்கண்டு மேலுறைவார்களும் நிறையழிந்தனரென்பதுகருத்து,

மருண்மயங்குமடந்தையர்மாட்டொரு ... ... ...*
பொருணயந்திலன்போகின்றதேயிவன் ... ... .. *
கருணையென்பதுகண்டறியான்பெரும் ... ... .. *
பரிணதன்கொல்படுகொலையானென்றாள் ... ... ...*

(இ-ள்.) மிகுதியுமயங்குகின்ற மங்கையர்களிடத்தில் ஒரு பொருளையும் விரும்பாதவனாய்ச் சும்மாபோகின்றதே இவனதுசெயல். ஆகலால் கருணையென்பதைக் கண்டறியான் (மங்கையர்பால்கருணையின்மையால்) பெருமையாகிய பக்குவப்பட்ட ஞானமுடையானோ இச் சீதாபிராட்டியை மணக்கச்செல்வதினால் அவனல்லன் மிக்ககொலைபுரிபவனென்றாள்—எ-று. (௫௫)

தம்மைக்கண்டோனுக்கவு மின்றிச்சேறலினோர் பொருணயந்திலனென்றாள். ஓர்பொருளென்பதில் இழிவுசிறப்போடு முற்றுப்பொருள்படநின்ற வும்மைவிகாரத்தாற்றொக்கது. இவனதுசெயல்-எ-று, அவாய் நிலையான்வந்தது. ஏகாரம் இசையெச்சம்.

தொய்யில்வெய்யமுலைத்துடிபோலிடை ... ... *
நையுநொய்யமருங்குலொர்நங்கைதான் ... ... ...*
கையுமெய்யுமறிந்திலள்கண்டவன் ... ... ... ...*
உய்யுமெய்யுணர்த்தளர்ந்தோய்வுற்றாள் ... ... ... *

ஆடன்மாமதயானைச்சனகர்கோ ... ... *
னாடெலாமொருநன்னகராயதே ... ... ... *

(இ-ள்) இருந்த நிலையினின்றுதப் [illegible] மிடமில்லாமல், ஒன்றும்படி பொங்குகின்ற பெருங்கடல்களைப் போன்ற படைகள் நிறைவதினாலே போரில்வல்ல குதிரைச்சேனையையும் மதத்தையுடைய யானைச்சேனையையுமுடைய சனகர்களுக்கு அரசனது தேசமெல்லாம் ஒப்பற்றசிறந்தநகரமாயது-எ-று.

இன்றியென்னும் வினையெச்சக்குறிப்பு நெருங்கவென்னுந் தொழிற்பெயரொடு முடிந்தது.

ஒளிர்ந்தவில்லன்னொளியொண்ணுதற்றந்தைதன் ... ... *
பொழிந்தகாதலொடரப்பொருளெலாம் ... ... *
அழிந்துவந்துகொண்டாடவினன்புதான் ... *
இழிந்துளார்க்குமிராமற்குமொத்ததே ... *

(இ-ள்) ஒளிதங்கிய நெற்றியையுடைய சானகிபிராட்டிக்குத் தந்தையாகிய சனகமகாராசனுக்கு, வரம்பில்லாத தன்காதலானது (அங்குவந்தோர்யாவரிடத்தும்) தொடர்தல் காரணமாகத் தம்பொருள்களெல்லாமழியும்படி உவந்து [illegible] பெருமையைப் பாராட்டலால் காதலானது, ஏவலாளர்களுக்கும் [illegible] க்ஷத்திரிய ஸ்ரீராமபிரானுக்கும் ஒத்திருந்தது இதுவும் [illegible] இனி சொல்ல [illegible] விட்டனயாவை—எ-று. (௫௭)

௨௰-வது-உலாவியற்படலமுற்றிற்று.



## ௨௧-வது-கோலங்காண்படலம்.



தேவியர்மருங்குசூழவிந்திரனிருக்கைசேர்ந்த ... ... *
ஓவியமுயிர்பெற்றென்னவுவந்தரசிருந்தகாலை ... *
தாவில்வெண்கவிகைச்செங்கோற்சனகனைமுனிவனோக்கி ... *
மாவியனோக்கினாளைக்கொணர்கெனவசிட்டன்சொன்னான் ... *

(இ-ள்) சிங்காதனத்திற்சேர்ந்த பிரதிமை உயிர்பெற்றாற்போல, தன்தேவியர் அனைவரும் பக்கத்திற் சூழ்ந்திருக்கும்படி சக்கரவர்த்தி உவந்து அடங்கி வீற்றிருந்தகாலத்தில் கெடுதலில்லாத வெண்கொற்றக் குடையையும் செங்கோலையுமுடைய சனகமகாராசனை வசிட்டமுனிவன் இனிதாகநோக்கித் திருமகளைப்போல அழகுமுதலியன அமைந்த அழகுடைய சீதையைக்கொண்டுவாவெனச் சொன்னான்—எ-று. (௧)

மாவியனோக்கினாளென்பதற்கு மானின்விழிபோலப் பொருந்திய கண்களையுடையாளெனினுமொக்கும். வசிட்டன் தேவிகளுடனிருந்த சக்கரவர்த்தி ஓவியமுயிர் பெற்றென்ன விருந்தானென்றுணர்க. இந்திரனிருக்கையென்பதற்கு அரசனிருக்கை யென்பதுபொருள். இவ்வாறே வடநூலாரும் இந்திரஸ்தானமென்ப.

உரைசெயத்தொழுதகையனுவந்தவுள்ளத்தன்பெண்ணுக் ... *
காரியைத்தருதியீண்டென்றாயிழையவளையேவ ... *

கரைசெயற்கரியகாதல்கடாவிடக்கடிதுசென்றார் ... *
பிரசமொத்தினியசொல்லார்பேதைதாதியரிற்சான்றார் ... *

(இ-ள்) வசிட்டமுனிவன் சொல்லாநிற்கையில் கொழுநகையனும் உலகத்து உள்ளதனுமாகிய சனகமகாராசன் இங்கே பெண்களுக்காகிய அழைத்துவாருங்கோளென்று கூறிச்செய்த ஆபரணம் அணிந்த மாதர்களை எவ்வளவுசெய்தற்கு அரிய அன்பானது நடத்துதலால் விரைந்துசென்று தேனைப்போன்று இனிமையாயுள்ள சொல்லாராகிய அம்பாதர்கள் சீதாபிராட்டியினுடையதாதிமார்களிடத்தில் இச்செய்தியைச்சொன்னார்கள்-எ-று.

அமிழ்தமைத்துணைகள்கண்ணுக்கணிசெயவமைக்குமாபோல். *
உமிழ்சுடர்க்கலன்கணங்கையுருவினைமறைப்பதோரார் ... *
அமிழ்துறைச்சுவைசெய்தன்னவழகினுக்கழகுசெய்தார் ... *
இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ ... *

(இ-ள்) இமைக்கின்ற இரண்டு இமைகள்கண்ணுக்கு அழகைச்செய்யப்படியதைப்போலஒளியைவீசுகின்ற அணிகளை, பெண்ணிற்சிறந்தாளுடைய திருவுருவத்தை மறைக்கும் என்று அறியாமல், இயற்கையாகிய மதுரமுள்ள அமுதத்துக்கு (வேறுபிறபொருள்களால்) மதுரம் உண்டாக்கல்போல அழகாகிய பொருளுக்கு அழகுசெய்தார்கள் (ஆதலால்) ஒலிக்கின்ற அலையையுடைய கடல்சூழ்ந்த உலகம் அறியாமையையுடையது—எ-று. (௬)

கண்ணன்றனிறந்தன்னுள்ளக்கருத்தினைநிறைத்துமீறிப் ... *
புண்ணியநிறைந்தகொடிகளோடியுலகெங்கும்பரந்தவென்ன ... *
வண்ணஞ்செய்கூந்தற்பாரவலயத்துமழையிற்றோன்றும் .. *
விண்ணின்றமதியின்மென்பூஞ்சிகழிகைக்கோதைவேய்ந்தார் *

(இ-ள் ஸ்ரீராமபிரானுடைய திருநிறமானது தனது உள்ளமாகிய நெஞ்சிடத்தைநிறைத்து மேலேவளர்ந்து அந்நெஞ்சினின்றும் ஓடி உலகமுழுமையும்படர்ந்தனவாகிய கொடிகளைப்போல அழகைச்செய்கின்ற கூந்தற்பாரமாகிய வட்டத்தில் பெய்யுமேகத்திற்றோன்றுகின்ற கிரணங்கள்விரிய நின்றசந்திரனைப்போலத்தோன்ற மெல்லியபூக்களாலதொடுத்த சிகழிகையாகியமாலையை அணிந்தார்கள்—எ-று. (௭)

விண்ணின்ற-என்பது-விண்ணினின்றவெனத்தொக்கது. கருத்து தொழிலாகுபெயர்.

விதியதுவகையால்வானமீனினம்பிறையைவந்து ... ... *
கதுவுறுகின்றதென்னக்கொழுந்தொளிக்குலத்தூக்கி ... *
மதியினைத்தந்தமேகமருங்குநாலளைப்பதென்னப் ... ... *
பொதியிருளகபத்திப்பூட்டியபூட்டுவிட்டார் ... ... ... *

(இ-ள்) (கூடுதற்கு ஏதுவாகிய) ஊழினதுவகையால் விண்மீன்கூட்டங்கள் பிறைச்சந்திரனிடத்துவந்து கூடுகின்றதுபோலச்சுட்டியென்னும் அணியை ஒளிநிரம்பத்தொங்கஅணிந்து பூரணசந்திரனைப்புறத்தேசெலவிட்

கோணிலா என்பதைக் கோண் இலாவெனப்பிரிக்க இலா-எ-து, தொகுந்தது, வானமீன்கள் கோணிலாயவியைவன என்றது திரட்சியாகி ஒன்றை ஒன்று ஒத்தவுருவினவும் நிலவெறிப்பனவுமாயினவற்றை. நாணென்றது பிராட்டி தாளிதுகாறுங் கன்னிமாடத் துறைந்து தாதியர் செவிலியர் தாயர் தவ்வையரெனப்படு மாதர்களோடு பயின்றவளாதலி னிது போது சக்கரவர்த்திமுதலிய அரசர்களும் வசிட்டர்முதலியமுனிவர்களும் தங்ளை மணம்புரியுமாறு வெருவிலைபுமுத்த ஈவீரனுமாகிய ஆண்மக்கள்நிறைந்த அவைக்களத்துச் சேறல்வேண்டுதலினுளதாவதோர் நாணத்தை அதுகாரணமாக நகைதோன்றல்மங்கையர்க்கியல்பு என்கோ எம்பதற்குத் தன்மையொருமை யெதிர்காலவினைமுற்றுப் பொருள்கோடலேயன்றி என்க வெனவியங்கோள் வினைமுற்றீற்றகரந்தொகுத்ததெனக்கொண்டு என்றுசொல்லக்கடவேனென்பொருள்கூறினு மிழுக்காது. ஓ-ஐயம்.

மொய்கொள் சீறடியைச் சேர்ந்து முளரிக்குஞ் செம்மையீந்த... *
கையலாளமுத மேனி தயங்கொளி தழுவிக்கொள்ள ... ... ... *
வெய்யபூண் முலையிற் சேர்ந்த வெண்மூத்தஞ் சிவந்தவென்றால் *
செய்யளைச் சேர்ந்துளாருஞ் செய்யராய்த் திகழ்வரன்றே ..... *

(இ-ள்) (புலவர்கூறு முவமைப்பொருள்களோடு ஒப்பாகுமொன்று) போனாக் காள்ளுகின்ற சிறியசீர்பாதங்களை அடைந்த செந்தாமரைமலருக்கும் செம்மையையீந்த சீதாபிராட்டியினது அமுதத்தி னினிமையை யொத்த இனிமையாகிய திருமேனியில்விளங்குகின்ற ஒளியினால் தழுவப்படுதலால், (ஸ்ரீராமபிரானுடைய திருத்தோள்களைத்தழுவும்) விருப்பத்தையுடைய பூணணிந்த கொங்கைகளிற்சேர்ந்த வெண்மையாகிய முத்துவடமுஞ் சிவந்தன என்று கூறின் ஞானவொழுக்க முதலியவற்றிற்சிறந்த அறிவுடையோனைச் சேர்ந்தவெள்ளறிவினருஞ் சிறந்த அறிவினராயே விளங்காநிற்பர்-எ-று ()

உவமைப்பொருள்களில் முளரிசிறந்ததாகவி னும்மைசிறப்பு. வெண்முத்தவுமெனச் சிறப்பும்மைவிகாரத்தாற்றொக்கது. சேர்ந்துளாரும் இழிவுசிறப்பு அன்றீற்றே தேற்றம். செய்யராய்த் திகழ்வரென்றதனால் சேர்ந்துளார் வெள்ளறிவினரென்பது பெறப்பட்டது.

கொமையுற வீங்குகின்ற குலிகச் செப்பனைய கொங்கை... ... *
சுமையுற நுடங்குகின்ற நுசுப்பினாள் பூண்செய் தோளுக் .. *
கிமையுற விமைக்குஞ் செங்கேழ் மணிமுத்தின் றேய் ... *
அமையிலை யமைவதுண்டா மாகி லொப்பாகுமன்றே... ... *

(இ-ள்) இங்குலிகத்தாலமைத்த கிண்ணத்தையொக்க, வட்டமுறப் பருக்குங் கொங்கைகளாகியசுமையினால் மிகத்துவளுகின்ற இடையையுடைய சீதாபிராட்டியினது பூணணிந்த தோளுக்கு, பார்ப்போருடைய கண்கள் கூசும்படி ஒளிர்கின்ற செவ்வொளியையுடைய ஒருசாதியாயுள்ள பதுமராகமணிகளை முத்துக்களோடு மூங்கிலானது தன்னிடத்தில்மிகுதியும்பொருந்தவுண்டானால் தேற்றமாய் ஒப்பாகும்—எ-று. (ம)

தளைபவிழ் கோதையோதிச் சானகி தளிர்க்கையென்னு .. *
முளரிகளிராமன் செங்கைமுறைமையிற் றீண்ட நோற்ற ... *
வளியன அங்குற் போதுங் குலியலவாகுமென்றால்... ... ...*
இளவெயி லெற்றியன்ன வெரிமணிக் கடகமிட்டார்... ... ...*

(இ-ள்) முறுக்கவிழ்ந்த மலர்மாலையணிந்த கூந்தலையுடைய சானகிபிராட்டியினுடைய தளிரினதுமென்மையையும் நிறமும்போன்ற மென்மையு நிறமு மமைந்த கைகளென்னும் தாமரைமலர்கள் ஸ்ரீராமபிரானுடைய செங்கைகளால் மேவதவிறப்படி நீண்டப்படத்தவம்புரிந்தனயாவரும் இரங்குந் தன்மையன இராக்காலத்தும் குவியாதன ஆகுமெனக்கருதி அக்கரங்களில்இளவெயிலைக்கற்றிற்றாற்போன்ற பதுமராகமணியாலமைத்தகடகத்தையணிந்தார்.

தளையவிழ்கோதை-எ-து- சினைவினைமுதன்மேனின்றது தளையவிழ்தற்குரியமலர் கோதைக்குச்சினையாகலின்.

சில்லியமேலோதிகொங்கைத்திரண்மணிக்கனகச்செப்பில் ... *
வல்லியுமநங்கவில்லுமான்மதச்சாந்திற்றீட்டி ... ... *
பல்லியநெறியிற்பார்க்கும்பரம்பொருளென்னயார்க்கும் .. *
இல்லையுண்டென்னநின்றவிடையினுக்கிடுக்கண்செய்தார்... *

(இ-ள்.) வட்டமாகப்பொருந்திய கூந்தலையுடைய ஸீதாபிராட்டியினது கொங்கைகளாகிய, நீலமணிபொன்றிழைத்த இரட்டைபொற்கிண்ணங்களில் கத்தூரிச்சந்தனத்தினால் பூங்கொடிகளையும் மன்மதனுடைய கருப்புவில்லையும் எழுதிப்பலவாகிய இயல்பமைந்த வழிகளினால்பார்க்கும் பரவஸ்துவாகிய இறைவனைப்போலக்கண்டோர்யாவர்க்கும் இல்லையெனவும் உண்டெனவும்நின்ற இடையினுக்குத் துன்பத்தைச்செய்தார்கள்—எ-று (௰௨)

பல்லியநெறி-எ-து-கருமஞானங்களைப்பற்றிப் பலவாய்விரிந்து கிடக்கின்றசமயவாதிசமயநெறியையுஞ் சூனியவாதருடைய நெறியையும் அந்நெறியிலேநின்றோர், உளனெனி னுளனவ னருவமிவ் வுருவுகளெனவும் உளனெனி னுளனவ னருவமிவ் வுருவுகளெனவுங் கூறுகின்றவாறே இலனென உளனென விவைகுணமுடையவனாய்நின்றுள்ள இறைவனைப்போல உலகர்கள்கண்ணுக்குப்புலப்படாமையி னில்லையெனவும தனபாரமுதலிய வுண்மையினுண்டெனவுநின்ற இடையென்றுராகவிற்பரமபொருள்பண்புவமம். சில்-தலையணியிலொன்றுமாம்

நிறஞ்செய்கோசிகநுல்சே நீவி நீவாதவல்குற் ... ... ... *
பறஞ்செய்மேகலையுந்தாழ்ந்தாரகைச்சும்மையும்பூட்டித் .... *
திறஞ்செய்வசிம்பற்சோதிமேனிசெயொளியிற்றீர்ந்த ... *
கறங்குபுதிரியயாருங்கண்விளக்குற்றுநின்றார் ... ... .. *

(இ-ள் ஒளிசெய்கின்ற பட்டாடையுந்நுண்ணிழையாடையாலாகிய கொய்சகமும் பிரியாத அல்குலின்புறத்தே யலங்கரித்த மேகலையும் உள்ளடங்கத்தாரகைச்சும்மையென்னுமணிவடத்தொகுதியைப்பூட்டி (அவ்வணிகளில் நானாவிதமாகியமணிகள் வீசுகின்ற ஒளிகள், ஸீதாபிராட்டியினுடைய திருமேனியின் செய்ய ஒளியால் தமதுநிறந்தீங்கினவாகி நாற்புறத்திலும் உலாவலினால் அங்குள்ளமங்கையர்யாவரும் கண்ணொளிமழுங்கிநின்றார்-எ-று ()

மேகலையுமென்பது கோசிகநுண்டுகி னீவிதாழ்தலன்றியெனப் பொருடாவின் இறந்ததழீஇய எச்சவும்மை தாரகைச்சும்மை உவமவாகுபெயர். கண்விளக்குறல்-தகுதியபற்றிய வழக்கு.

ஐயவாமணிச்சப்போதிணிகழுநொய்யவாடற் ... ... ... *
டையரவல்குலாடன்பஞ்சின்றிப்பழுத்தபாதந் ... ... ... *

அவ்வழகைக்காணுதற்குச் சீராமபிரானுடைய குலத்திற் (சிறந்தவனாகிய) சூரியன் ஆசைபோந்தான் அந்தமண்டலத்தினின்று இழிந்துவருவதுபோலவருவதாகிய ஒப்பற்ற விதானத்தினிழலில் வந்தாள் — எ-று. (உசு)

கற்றைவிரிபொற்கடைமயிர்த்தொகுகலாபஞ் ... ... *
சுற்றுமணிபுக்கவிழைமிக்கிடைதுவன்றி.... .... ...*
விற்றொழுவாவெயிலெறியமணிகண்மின்னச் .. ... ...*
சிற்றிடைநுடங்கவொளிர்சீறடிபெயர்த்தாள் .... ... *

(இ-ள்.) தொகுதியாகவிரிந்த (மேகலையினது) பொன்னிறம்பெற்ற கடைமயிர் அடர்ந்த இருபத்தொருவடமாகிய கலாபமும் அதன்மேற் சூழவணிந்த மணிகளமைந்த தாரகைக்கும்பையென்றும் அணியும் இடையின்கண் மிகுந்து நிறைவதுறுதல் வில்லென்றும் ஒளிபரவாநிற்கவும் மிகுதியாய் வெயிலெறியாநிற்கவும் திருமேனியிற்றரித்த மற்றை அணிகள் மின்னாநிற்கவும் சிறிய இடையானது துவளும்படி ஒளிர்கின்ற சிறிய சீர்பாதங்களைப் பெயர்த்து நடந்துவந்தாள் — எ-று. (உஎ)

பொன்னினொளிபூவின்வெறிசாந்துபொதிசீதம் ... ... *
மின்னினிழலன்னவடன்மேனியொளிமான ... ... *
அன்னமுமரம்பையருமாரமுதுநாண ... ... ...*
மன்னவையிருந்தமணிமண்டபமடைந்தாள் ... ... *

(இ-ள்.) அச்சீதாபிராட்டியினது திருமேனியினியல்பைப் பொன்னின்கணுள்ள ஒளியும் பூவின்கணுள்ள மணமும் மின்னின்கணுள்ள காந்தியும் சந்தனத்தின்கணுள்ள குளிர்ச்சியும் ஒத்திருக்கவும், நடையால் அன்னமும் அழகால் அரம்பையரும் சுவையால் அரிய அமுதமும் நாணவும் அரசரது சபை கூடியிருக்கப்பெற்ற மணிகளால நிருமித்தமண்டபத்தைச் சேர்ந்தாள்-எ-று. (உஅ)

பொன்னினொளிமுதலிய நான்கிற்கும் பிராட்டியின் திருமேனியியல்பை யுவமித்தமையின் அந்நான்கு மியைந்தது திருமேனிக்கியல்பாயுண்டெனவுணர்க. ஒளி தொழிலாகுபெயர்.

சமைத்தவரையின்மையமறைதானுமெனலாமச் ... .. *
சுமைத்திரள்முலைத்தெரிவைதூய்வடிவுகண்டார் ... .. *
அமைத்திரள்வேடோளியருமாடவருமெல்லாம் ... ...*
இமைத்திலருயிர்த்திலர்கள்சித்திரமெனத்தாம் .... .. *

(இ-ள்.) சிருட்டிக்கவல்லாரைத் தனக்கில்லாமையால் வேதமுமெனச் சொல்லாகிய இரண்டு தனபாரத்தையுடைய அப்பிராட்டியினது தூய்மையாகிய திருமேனியைக்கண்டாராகிய மூங்கிலைப்போலத்திரண்ட வடிவைக்கொண்ட தோள்களையுடைய எல்லாமங்கையர்களும் எல்லா ஆடவர்களும் அம்மண்டபத்திலமைத்த சித்திரங்களைப்போல இமைகொட்டிலர் மூச்சுவிட்டிலர்.

வினைவயத்தராய்த் தோன்றுவாரைப்போலாது தன்னிச்சையாய்த் தானே திருவுருக் கொண்டனளாதலிற் சுயம்புவாய் நிகழநின்ற வேதமெனலாமென்றார். வேதபுராதனச் சுயம்பு என்பதைச் செய்யாமொழிக்குந் திருவள்ளுவர் மொழிக்குமென்னுஞ் சப்தந்தார்பாடலாலுமுணர்க.

ன்றார்கள் முனிவர்கள் சென்றார்கள் விளங்குகின்ற சுடர்களுக்கு நாயகனாகி ய சூரியனும் மேருவில் மறைந்தான்—எ-று. (௬௩)

உக-வது - கோலங்காண்படலம் முற்றிற்று.

## உஉ-வது-கடிமணப்படலம்.

இடம்படுபுகழ்ச்சனகர்கோனினிதுபேணக் ... ... *
கடம்படுகளிற்றரசராதியிடைகண்டோர் ... ... *
தடம்படுபதத்திருதயப்பியர்கள்காறும் ... ... *
உடம்பொடுதுறக்கநகருற்றவரையொத்தார் ... .. *

(இ-ள்.) பொருட்செல்வமிகுந்த புகழுடைய சனகர்களுக்கு அரசனாகிய வன் இனிமையாக உபசரித்து முதலியவற்றால் உபசரிப்பதினால் மதயானை களையுடைய அரசர்கள் முதல் பெருமையாகிய பதவியையுடைய இ தியதம்பியர்கள்வரையும் இடையிலே தங்குதல் காணப்பட்டவர் யாவரும் உட லோடு சுவர்க்க நகரத்தைச் சேர்ந்தவரைப்போல இனிதுற்றனர்-எ-று. (௧)

இடைகண்டோர் - என்றது. அமைச்சர் சேனைத்தலைவர் முதலியோரை. உறவுமுறை முதலிய பொருந்தினராகிய முனிவரையொழிந்த அரசராதியென்றார்.

தேடருநலத்தபுனலாலைசெறலுற்றார் ... ... ... *
பாடோரிதடமுற்றகளைமெய்தும்வகைகாணார் ... *
கூடிவுறக்களாமொடேமுறுவரன்றே ... ... ... *
ஆடகவல்லாக்குயிலுமற்றிலையளானுள் ... ... ... *

(இ-ள்) தேட அருமையாகிய நலமுள்ள நீரினதாகையால் வருத்தமுற்றவ ராகி அரும்பெரு தடாகத்தைச் சேர்ந்து அங்கணிடத்திலே நின்ற அடையு டவகைகாண்பவர்கள் (தம்முடலின்) வழி அழியும்படி தளாசமியோடு உன் மத்தராவாகவன்றே பொன்வளையணிந்த குயிலாகிய பிராட்டியும் அதுதன் மையளானுள்—எ-று. (௨)

வேறு.

உரவேதுயிலாருயிரீறுமெனக் ... ... *
கரவேபுரிவாருளரோகதிரோன் ... ... *
வரமேவியவையாளுடையான்வருமே ... *
இரவேகொடியாய்விடியாயெனுமால் ...*

(இ-ள்.) வலிசிறிதுமில்லாத உயிரை ஈவோமெனக்கூறி ஈயாமல் இ லோபத்தைச்செய்வாருண்டோ இல்லை; நீ அவ்வாறு செய்யாதிருப்பாய்; சூரிய ன் உதிக்கலும் என்னை அடிமையாகவுடையான்வருவான் இரவே கொடுமை யுடையாய் நீங்காய் என்பாள்—எ-று. (௩)

சீராமபிரான் வில்லை முறித்தநாண் முதல் விவாகநாள் வரையில் உள்ளகாலம் பெரு கப்பொறுத்து நாளை தன்னைமணம்புணர்வனெனத் தலைவனைப் பிரிந்திருக்கமாட்டாத தலைவி யாக வினதுகோர இரவின்மேலேற்றியுரைத்தமையான் இதுகாமமிகுதியினாற் கூறப்பட்டதென்க.

தெருவேதிரிவாரொருசேவகனார் ... ...*
இருபோதும்விடாரிதுவென்னைகொலாம் ...*
கருமாமுகில்போல்பவர்கன்னியர்பால் ... *
வருவாருளரோகுலமன்னவரே ... .. *

(இ-ள்.) குலமன்னவர்களிலே கன்னியரிடத்தில் வருவாருண்டோ இல்லை (அப்படியிருக்க) பெருமையாகிய கரியமேகத்தை ஒத்தவராகிய ஒருவீரர் தெருவே திரிவாராய் இரவிலும் பகலிலும் என்னை விட்டுப்பிரியார் இது யாது—எ-று. (௮)

தெருளாவினைதீபவர்சேரலர்தோள் ... *
அருளாநெறியோரும்மைவாவதுவோ ... ...*
கருளார்கடலோகனகாணரிதால் ... *
இருளானதுதானெனையூழிகொலாம் ... *

(இ-ள்) (பிறரால்) அறியப்படாதசெயல் தீயராயினார் தழுவார் அவர் அருள்செய்யாதவழியினாலே அவருடைய தோள்களைத்தழுவ விரும்புவதோ கூடாது இருள்நிறைந்த இரவாகிய கடலோ கனகானுதல் அரிது எவ்வளவு ஊழிக்காலம் இராவாயினதோ அறியேன்—எ-று. (௯)

அருளல் புல்லுதலைப்பயக்குமாகலினது நிகழ்தலின்றாகவே அருளாநெறியென்றார். கருள்-இருளென்பன குணவாகுபெயர்.

பண்ணேறுமொழியாபகலோபுகுதா ... *
தெண்ணேறவிராவிரவோவிடியா ... *
உன்னேமொழியாவுயிரோவகலா ... *
கண்ணேறுதுயிலாவிதுவோகடனே ..... *

(இ-ள்) இசைகளோடொக்க பகற்பொழுதோவாராது எண்ணெண்ணங்களோ நீங்கா இராப்பொழுதோ விடியாது உள்ளத்திலிருந்தவைகளோ ஒழியா உயிரோ உடலைவிட்டுப்பிரியாது கண்களோ தூங்கா இவையோ என்கடன்மைகள்—எ-று. (௰)

துன்பம்பயப்பதிற் பண்முதலியன தனித்தனி யொன்றைக்கொன்று தோலாதுநிற்றற் சிறப்புப்பொருடரலின் ஓ சிறப்பு. இது-தொகுதியொருமை.

இடையேவளைசோரவெழுந்துவிழுந் ... *
தடமேலப்மதனன்சரமஞ்சினையோ ... ...*
உடலேசவுறநாளுமுறங்கலையால் ... *
கடலேயுமைநீயுமொர்கன்னிகொலாம் ... *

(இ-ள்.) போர்த்தொழிலை யுடையப்பெற்ற மன்மதனுடைய அம்புகளுக்குஅஞ்சினையோ (முன்னெல்லாமில்லாமல்) இடையானகாலத்திலே கைவளைகள் கழலும்படியிளைத்து ஓர்நிலையிலே நில்லாமல் எழுந்தும் விழுந்தும் உடல்தளர்தலினால் நாள்முழுமையும் தூங்கிலேன் (என்னைப்போலவே) கடலே போர்த்தொழிலையுடையப்பெற்ற மன்மதனுடைய அம்புகளுக்கு

அஞ்சினேயோ நின்னிடத்தினின்றும் சங்காகியவளைகள் புறத்தேவரும்படியெழுந்தும்விழுந்தும் உடல்தளரும்படி நாள்முழுமையும் தூங்கில ஆதலால் நீயும் ஒரு கன்னியோசொல்லாய்—எ-று. (௰௧)

வயிற்குரியவிரவிலிடையீடின்றிமிக்கொலித்தலினுறங்கலையென்றான்.

எனவின்னனையன்னியிருந்துழிவா ... .. *
முனியுன்னிறலங்கொடுசேர்வுறுகான் ... *
மனைதன்னினிவய்ங்குறும்லைவகிருள்வாய் ... *
அனகன்னினைகின்றனயாமுறைவாம் ... *

(இ-ள்.) என்று இவைபோல்வனவற்றைப் பலவாறாக எடுத்துக்கூறி (வேறு தன்னுலாகாமையால்) செயலற்றிருந்து வருந்துவளாகிய பிராட்டியானவள் தாம்படும் துயரத்தைக்கருதாநின்று பெண்ணலத்தால சோர்வடையுங் காலத்தில் யாளிகைகயிலேகல்விளங்காநின்ற கழிகின்ற இருளில் அநகனாகிய சிராமபிரான் நினைகின்றனவற்றையாட்கூறுவாம்—எ-று. (௰௨)

முன்கண்டுமுடிப்பருவேட்கையினால் ... *
என்கண்மிணைகொண்டிதயத்தெழுதிப் ... *
பின்கண்டபொர்பெண்களைகண்டிலனால் ...*
மின்கண்டவரெங்கறிவார்வினையே ... ... *

(இ-ள்.) மின்னலிற் சிறந்தாளைக்கண்டவர் காட்சித்தொழிலின் கலையை எவ்வாறு காண்பார் காணார் (ஆதலால் கன்னிமாடத்திலே) முன்னேகண்டு அளவிறந்தலரிய ஆசைப்பெருக்கால் என்னுடைய இரண்டுகண்களால் இதயத்திலேபதியஎழுதி (அரசாவுக்கண்) பின்னேகண்டும் ஓர் பெண்ணினுடைய அழகின்கலையைக்கண்டேனல்லேன்—எ-று. (௰௩)

திருவேயனையாள்முகமேதெரியின் ... *
கருவேகனியேவிளைகாமவிடைக் ... ...*
கெருவேமதியேயிதுவென்செய்தவா .. *
ஒருவேனொடுநீயுறலாகலையோ ... ... *

(இ-ள்.) சந்திரனே ஆராயுமிடத்து விளைகின்றகாமவித்துக்குக்காரணமும் (அதன்காரியமாகிய) கனியும் துணைக்காரணமாகிய எருவும் ஆயினை (ஆதலால், நீ திருமகளை ஒத்தவளது முகமேவேறன்று (அங்ஙனமானால்) என்னொருவனோடும் நீஉறவாகினையல்லை நீசெய்தவிதம் இத்தன்மையது என்ன காரணம்—எ-று. (௰௪)

அவள்முகமே நீயாயினையாதலால் அவள்முகத்துக்கினியானாகிய என்னோடுறவாகி நின்று தண்ணிலவெறித்து உள்ளங்குளிர்ப்பிக்காமல் உறவாகாது நின்று அழலெறித்துக் கொருந்தல் செய்கின்றனை அது கூறஎன்வாயும் நாணுகின்றதென்னுங் கருத்தால் இதுஎன்றான். ஆயினை என்பது சொல்லெச்சம்.

கழியாவுயிருந்தியகாரிகைதன் ... ... *
விழிபோலவளர்ந்ததுவீகிலதால் ... ...*
அழிபோரிறைவன்படவஞ்சியவன் ... *
பழிபோலவளர்ந்ததுபாயிருளே ... *

(இ-ள்.) எவ்விடத்தும்பரந்த விருளானது (என்னுடலினின்றும்) நீங்கா நிலைமைத்தாகிய உயிலாத்தன்னும்படி அப்பெண்ணினதுகண்களைப்போல் வளர்ந்துகுறையாமல்; அழிகின்ற போரிலே தலைவன் இறக்க அஞ்சினவீரனுடைய பழியைப்போல மேலும்வளர்ந்தது—எ-று. (௰௫)

நினையாவொருகாலென்றுமோதாநெறிதான் ... *
வினவாதவர்பால்விடைகொண்டிலையோ ...*
புனமானனையாளொடுபோயினவென் ... *
மனனேயெனைநீயுமறந்தனையே ... *

(இ-ள்:) புனத்தில்தங்கியமானையொத்தவரோடு போயின என்மனமே; ஒருகால் (என்பால்வர நினையாய் (வருதற்கு) வழிதூரமாயினதோ (நீயேன்வந்தாயென்று) கேளாதவரிடத்து விடைபெற்றிலையோ (அன்றி) (அவளைப்போல) நீயும்என்னை மறந்தாயோ—எ-று. (௰௬)

தன்னேக்கெரிகாற்கைவாளர்வின் ... ...*
பன்னேக்கினதென்பதுபண்டுகொலாம் ... *
என்னேக்கினுநெஞ்சினுமென்றுமுளார் ...*
மென்னேக்கினதேகடுவல்விடமே ... *

(இ-ள்.) கடுமையாகிய வலியவிடமானது; தன்கண்களில் தீயைக் கக்குகின்றதன்மையையுடைய ஒளியமைந்த அரவினதுபல்லை இடமாகக்குறித்ததென்பது முன்னம் (இப்போதெல்லாம்) என் பார்வையிலும் நெஞ்சிலும் என்றும் உள்ளாரது மெல்லிய பார்வையினிடத்ததேயாம்—எ-று. (௰௭)

பல்-காளி-கராளி-காளாந்திரி-யமதூதிஎன நான்காம்.

கல்லார்மலர்சூழ்கழிவார்பொழிலோ... ...*
டெல்லாமுளவாயினுமென்மனமோ... ... *
சொல்லாரமுதின்சுவையோடினிதாம் ... *
எல்லோதியர்தாம்விளையாடிடமே ... ... *

(இ ள்.) மலையும்தேன் நிரம்பியமலர்கள் நிறைந்தகழிக்கரையும்நீண்டசோலையும் மற்றுமெல்லாம் உள்ளனவாயினும் சொல் அரியஅமுதின் சுவையினும் இனிதாகிய அணியொளியமைந்த கூந்தலையுடையார் விளையாடுகின்றஇடம் (இப்போது) என்மனமோ அறியேன்—எ-று. (௰௮)

கல்லார்மலர்சூழ்கழி என்பதற்குக் கல்லாரமலர்சூழ்ந்த கழியெனினுமமையும். கல்லாரமென்னு நிறுத்தசொல்மகரம் மலவொன்னுங்குறித்து வருகிளவிநோக்கி, மகரவிறுதி வேற்றுமையாயிற்றுவரக்கெட்டு வல்லெழுத்து மிகுமேயென்னுஞ் சூத்திரத்தில் துவரவென்றதனுனியல்புக்கணத்துக்கட்கெட்டு அகரந்தொகுத்ததெனக்கொள்க

வேறு.

வானவர்பெருமானும்மனநினைவினனாத் ... *
தேனகுகுழலாடன்றிருமணவினைநாளை... ... ... *
பூநகுமணிவாசம்புனைநகரணிவீரொல்... ... ... *
ருனையின்மிசையானைரணிமுரசறைகென்றூன் ... *

(இ-ள்.) தேவரிறைவனாகிய சீராமபிரானும் மணத்தினெண்ணம் இத்தன்மையனென்று பிருக்கச்சனகமகாராசன், வள்ளுவனை மலர்த்தேன் விளங்குகின்ற கூந்தலையுடையாளது திருமணத்தொழில் நாளைத்தினமாகும் மலர்மாலைகளாலும் ஒளிர்கின்ற மணிவடங்களாலும், புனைதற்குரிய நகரத்தை அலங்கரியுங்கோமென்று யானையின்மேல்புதிதாகிய அழகிய மணமுரசைக்கொட்டுகவென்று சொன்னான்—எ-று. (௰௯)

பூ-மணி-வாசம்-ஆகுபெயர்கள்,

முரசறைதலுமானமுதியருமிளையோரும் ... *
விரைசெறிகுழலாரும்பிரவினர்விரைகின்றார் ... *
உரைசெறிகிளையோடுமுவகையினுயர்கின்றார் ... *
கரைசெறிவரிதாருமிரமவாருகரைகண்டார் ... ... *

(இ-ள்.) முரசுகொட்டி அவ்வாறுசொல்லுதலும் பெருமையுடைய முதியவர்களும் இளையவர்களும் மயிர்ச்சாந்தணிந்த கூந்தலையுடைய மங்கையர்களும் (ஆய்காங்கு) கூடினவர்களாய் அலங்கரிப்பதற்கு விரைகின்றாரும் உசாவுகின்ற சுற்றத்தோடு திருமணத்தைக்குறித்துக் களிப்பில் மிகுகின்றாருமாகிக் கரையையடைதலரிதாகிய இராவுக்கு ஒருகரையைக்கண்டார்கள்—எ-று. (௨௰)

நகரையணிதற்கும் திருமணத்தைக்காணற்கும் விரைகின்ற உவகையுடையார்க்கு அவ்விராப்போது எனையூழிகொலாமென்னுமபடி நீடியதாய்த் தோன்றினமையிற் கரைசெறிவரிதாகு மிரவென்றார்.

அஞ்சனவொளியானுமலர்மிசையுறைவாளும் ... *
எஞ்சலின்மணநாளைப்புணர்குவரெனமேலாம் ... *
செஞ்சுடரிருளகிறித்தினகரனொருதேர்மேல் ... *
மஞ்சனையணிகோலங்காணியவெனவந்தான் ... *

(இ-ள்.) மைபோலுந்திருநிறத்தையுடைய இறைவனும் செந்தாமரைமலரிலெழுந்தருளிய இலக்குமியும் நாளைத்தினம் திருமணம் புணர்வார்களெனச் சொல்லலும் தன்செஞ்சுடர்களால் இருளைப்பிளந்து சூரியனானவன் ஒற்றைவண்டியையுடைய தேரின்மேல் தன்மரபிலவதரித்த புத்திரனையணிகின்ற திருக்கோலத்தைக்காணவென வந்தான்—எ-று. (௨௧)

தோரணநடுவாருந்தூணுறைபொதிவாரும் ... *
பூரணகுடமெங்கும்புனைதுகில்புனைவாரும் ... ... *
காரணிநெடுமாடங்கதிர்மணியணிவாரும் ... *
ஆரணமறைவாணர்க்கின்னமுதடுவாரும் ... ... *

(இ-ள்.) (நகரமாக்களிற்சிலர்) தோரணங்களை நடுவாரும் தூண்களை (சித்திரித்த) உறைகளால்மூடுவாரும் (வைத்தற்குரிய) இடமெங்கும் வைத்த பூரணகலசங்களுக்குப் புனைவதற்குரிய ஆடையை அணிவாரும் மேகத்தைச்சிகரத்திற்பொருந்திய நெடியமாளிகைகளுக்குக் கதிர்களைவீசுகின்ற மணிமாலைகளை அணிவாரும் சாகைகளையுடைய வேதங்களை ஓதல் ஓதுவித்தலாகியவாழ்க்கையுடைய அந்தணர்களுக்கு இனியஉண்டிகளைச்சமைப்பாருமாயினார்...()

வயிரமிளிரொளியினும்மரகதமணிவேதிச் ... ... *
செயிரறுமொளிதீபகுஞ்சிலதியர்கொணர்வாரும்... *
வெயில்விரவியபொன்னின்மிடைகொடிமதிதோயும்
எயிலினிடுவாருமகிலெரியிடுவாரும் ... ... *

(இ-ள்) (ஓரத்தில்) வயிரமணிகள் இனிய ஒளியை வீசுகின்ற மரகதமணி யாலமைத்த ஓமகுண்டத்தின் பக்கலிற் குற்றமில்லாது ஒளிசெய்கின்ற தீபக் குடங்களைச் சிலதியர்கள் கொண்டுவந்துவைப்பாரும் அவருடையகணவர்க ள் வெயில்நிரம்பிய செம்பொன்னாற்செய்த நெருங்கியகொடிகளைச்சந்தி ரன் பொருந்துகின்ற மதில்களின்புறத்தேநடுவாரும் (தூபக்குடங்களிற் பெ ய்து) அகிற்கட்டைகளில் புகையுண்டாக எரியிடுவாருமாயினர்—எ-று (உஎ)

பண்டியினிறைவாசப்பனிமலர்கொணர்வாருந் ... *
தண்டலையிலையோடுகனிபலதருவாரும் ... ... *
குண்டலம்வெயில்வீசக்குரவைகள்புரிவாரும் ... *
உண்டைகொண்மதவேழத்தோடைகளணிவாரும்... *

(இ-ள்.) பண்டியில் நிறைத்து மணமமைந்த குளிர்ந்த மலர்களைக்கொண் டுவருவாரும் சோலையிலுள்ள (வாழைமாமரங்களின்) இலையோடு பலவகைக் கனிகளைக்கொய்துவந்து தருவாரும் காதிலணிந்தகுண்டலங்கள் வெயில்வீசு ம்படிகுரவைக்கூத்தாடுவாரும்வில்லாலெறிகின்றஉண்டையடியைக்கொண்ட (நீராட்டிய) மதத்தையுடையயானைகளுக்குப்பட்டங்களை அணிவாருமாயினர்

உண்டைகொள் வேழமென்றமையி னீராட்டிய வேழமென்பது பெறப்பட்டது இவை வெள்ளிலையெனினுமொக்கும்.

கலவைகள்புனைவாருங்கலைநலந்தெரிவாரும் ... .. *
மலர்குழன்மலைவாருமதிமுகமணியாடித் ... ... *
திலகமுனிடுவாருஞ்சிகழிகையணிவாரும் ... ...*
இலவிதழ்பொலிகோலமெழில்பெறவிடுவாரும்... *

(இ-ள்)கலவைச்சந்தனங்களைப்பூசுவாரும் நல்லஆடைகளை ஆய்ந்தெடுப்பா ரும் மலர்களைக்கூந்தலின் அணிவாரும் சந்திரன்போன்றமுகத்தில்அழகிய க ண்ணாடியின்முன் திலகமிடுவாரும் மணிமாலைகளைப்புனைவாரும் இலவமலரா யொத்த இதழில்பொலிகின்ற கோலத்தை அழகுபெற இடுவாருமாயினர்.()

தப்பினமணிகாசுஞ்சங்கமுமயிலன்னார் ... ... *
ஒப்பனைபுரிபோதுமுடலிறுமுபோதுந் ... *
துப்புறழிளவாசச்சுண்ணமுமுதிர்தாதுங் ... ...*
குப்பைகளெனவாரிக்கொண்டனர்களைவாரும் ... *

(இ-ள்.) தெரியாது சிந்தியமுத்துகளையும் இரத்தினங்களையும் கைவளை க ளையும் மயிலையொத்தமங்கையர்கள் அலங்காரம்செய்வதிலுதிர்ந்த மலர்களை யும் ஊடியபோதுதிர்ந்த மலர்களையும் பவளத்தை ஒத்த செம்மையாகிய மெல்லியபரிமளப்பொடியையும் உதிர்ந்தபொற்பொடியையும் குப்பைக ளென்று வாரிக்கொண்டனராகி மனையினின்று நீக்குவாருமாயினர்.எ-று. ()

முன்னவர்வருவாருமறையவர்நிறைவாரும் ... *
இன்னிசைமணியாழினிசைமதுநுகர்வாருஞ் ... *
சென்னியர்திரிவாருஞ்சிலதியர்செறிவாரும் .... ...*
கன்னலின்மணவேலைக்கடிகைகடெரிவாரும் ... *

(இ-ள்) அரசர்கள் வருவாரும் அந்தணர்கள் நிறைவாரும் இனியபாட்டிசையும் அழகிய யாழினிசையுமாகிய நறவைச்செவிவாயாலுண்பாரும் பாணர்கள் உலாவுவாரும் சிலதியர்கள்கூடுவாரும் நாழிகைவட்டிலால்திருமணத்துக்காலநாழிகைகளை ஆராய்வாருமாயினார் — எ-று. (கக)

கணிகையர்தொகுவாருங்கலைபலபயில்வாரும் ... *
பணிபணியினமுத்தம்பலவிதநிலமன்னர் ... *
அணிநெடுமுடியொன்றொன்றுறைதவிழுங்குமம்பொ
மணிமலைதொகுமன்னன்வாயிலினெளிடைவாரும்...[ன்

(இ-ள்.) நிருத்தமாதர்கள் நிறைவாரும் பரதநூல்கள் பலவற்றையும்பலகாலாராய்வாரும் வடங்களிற்கோத்த ஒரினமாகிய முத்துங்களினுதிர்ந்தவையும் தமதலங்கரித்த நெடியமுடிகள் ஒன்றோடொன்றுதாக்குதலால் உதிர்ந்தஅழகிய பொன்னும் மணிகளும் மலையைப்போலக்குவியலாக்கிடக்கின்றசக்கரவர்த்திவீற்றிருக்கும்மனைவாயிலில்பலவிதநிலமன்னவர் நெருங்குவாருமாயினார்

கேடகம்வெயில்வீசக்கிளரயினிலவீனக் ...... ...*
கோடியர்நெடுவிருஞ்சைக்குஞ்சரமதுபோல ... *
ஆடவர்திரிவாருமரிவையர்களிகூரு ... ... *
நாடகநவில்வாருநகையுயிர்கவர்வாரும் ... ... *

(இ ள்.) (இடக்கையிற்பிடித்த) கேடகமானது வெயிலெறிப்பவும் (வலக்கையிற்றாங்கிய பிரகாசிக்கின்ற வாளானது நிலவைவீசவும் தந்தங்களுயர்ந்த போர்க்கல்வியிற்றேர்ச்சியையுடைய நெடியயானையைப்போல ஆடவர்கள்திரிவாரும் கணிகைமாதர்கள், கண்டோர்மிகுதியுங் களிக்கின்றநாடகத்தைச் செய்வாரும் நகையால் அவ்வாடவருடைய உயிரைக்கவர்வாருமாயினார் — எ-று. )

அயிலென்னும்பலபொருளொருசொல் குணவாகுபெயராய்க்கேடகத் துக்கினமாகிய வாளின்மேனின்றது.

கதிர்மணியொளிகாலக்கவர்பொருடெரியாவா ... *
றெதிர்சுடர்தரமின்னுற்றெழுதவினிமையோரு... *
மதுவிரிகுழலாருமதிலுடைநெடுவானம் ... ... *
அதுவிதுவெனவோராதலமரலுறுவாரும்... ...*

(இ-ள்.) கிரணங்களையுடையமணிகள் ஒளியெறித்தலால் விரும்புதற்குரிய பொருள்கள் இத்தன்மையனவென்று தம்மைக்காண்போர்க்குத்தோன்றுதவகை எதிரொளி வீசும்படி (அம்மணிகளினது) ஒளியைப்பெற்றுத் தம்மியற்கை மாறவினால், தேவர்களும் தேவருழைநின்ற கூந்தலையுடைய தெய்வமகளிரும் மதிலையுடைய நெடியசுவர்க்கம் ( தாமிருந்த ) அந்நகரமென்றும் ( தாம்வந்த ) இந்நகரமென்றும் உணராமல் மயங்குவாருமாயினார் — எ-று.()

[இய ஓ]

தேர்மிசைவருவாருஞ்சிவிகையில்வருவாரும் ... *
ஊர்தியில்வருவாரும்மொளிமணிநிரையோடைக் ... *
கார்மிசைவருவாருங்கரிணியில்வருவாரும் ... ... *
பார்மிசைவருவாரும்பண்டியில்வருவாரும் ... ... *

(இ-ள்.) தேரின்மேல்வருவாரும் சிவிகையின்மேல்வருவாரும் குதிரையின் மேல்வருவாரும் ஒளிர்கின்ற மணிகள்முறையே பதித்த பட்டமணிந்த யானையின்மேல்வருவாரும் பிடியின்மேல்வருவாரும் தரையின்மேல் நடந்துவருவாரும் பண்டியின்மேல்வருவாருமாயினார் — எ-று. (௧௫)

ஊர்தியென்பது இங்குப் பரிமாவென்பது பாரிசேடத்தாற் பெறப்பட்டது. எண்டுக்கூறு தொழிந்ததுவேயாகலின்.

முத்தணிபணிவாருமணியணிமுனிவாரும் ... ... *
பத்தியில்வயிர்செய்பொற்பலகலன்புனைவாருந் ... *
தொத்துறுதொழின்மாலைசூழ்குழலணிவாருஞ் ... *
சித்திரநிரைதோயுஞ்செந்துகிலுடுப்பாரும் .... *

(இ-ள்.) முத்தாற்சமைத்த அணிகளையணிவாரும் (முன்னணிந்திருந்த) மற்றைமணியணிகளை வெறுத்து நீக்குவாரும் உயர்ந்த செம்பொன்னால் நிரைபதித்த பல அணிகளை முறைப்படமகிழ்ந்தணிவாரும் பூங்கொத்துகள்தங்கிய தொழில் குறைவின்றிமுடிந்த மாலையைச்சூழ்ந்த கொண்டையிலணிவாரும் சித்திரத்தொழில் முறைமைபாயமைந்த சிவந்த ஆடையை உடுப்பாருமாயினார்-எ-று.

விடநிகர்விழியாருமமுதெளிமொழியாருந் ... *
இடைபுரையிதழாருங்கிளர்நகைவெளியாருந் ... *
தடமுலைபெரியாருந்தனியிடைசிறியாரும் ... ... *
பெடையெனநடையாரும்பிடியெனவருவாரும் ... *

(இ-ள்.) விடத்தைநிகர்த்த கண்களையுடையாரும் அமுதமென்னும் சொற்களையுடையாரும் செங்கிடையை ஒத்த இதழையுடையாரும் விளங்குகின்ற நகைவெண்மையாரும் மலையையொத்த முலைகள்பெரியாரும் (தண்மைப்) பொருள்களில் ஒப்பற்றஇடைசிறியாரும் பெண்ணன்னம்போலும்நடையையுடையாரும் பெண்யானைபோல வருவாருமாயினார் — எ-று. (௧௭)

உண்ணிறைநிமிர்செல்வமொருவுதலறைசெலவென்றுங்
கண்ணுறலரிதென்றுங்கருதலரிதம்மா ... ... *
எண்ணுறுசுடர்வானத்திந்திரன்முடிசூடு ... ... *
மண்ணுறுதிருநாளேயொத்ததுமணநாளே ... ... *

(இ-ள்.) மிதிலாநகரத்திலுள் இவ்வாறு நிறைந்தவையத்தை ஒருவரும் முழுமையுஞ்செல்ல என்றும் பார்த்தளவிடலும் அரிது கருதியளவிடலும் அரிது இதுவி பக்கத்தக்கது யாவரும்மதிக்கின்ற ஒளியமைந்த சுவர்க்கத்தில் இந்திரனுனவன் முடிசூடும் அலங்கரித்த திருநாளையே அத்திருக்கலியாணநாள் ஒத்திருந்தது — எ-று. (௧௮)

வேறு.

கனைதெரிவரியதுகனகம்வேய்ந்தது ... *
வனையெனவுயர்ந்ததுமணியிற்செய்தது ... *

நினைவளாமணவினைநிரப்புமண்டபம் ... *
அனைசர்தமரசனுமனுகனேயினான் ... *

(இ-ள்.) பரப்பினது எல்லை அறிதலரியதும் பொற்றகட்டால் மூடப்பேழ்டியதும் மலையைப்போல உயர்ந்ததும் (சுவர் தூண் முதலியன) மணிகளாற் செய்ததுமாகிய முறைப்படவணிந்த வளையலையுடையாளாகிய பிராட்டியினது திருமணத்துக்குரிய காரியங்களைக் குறைவின்றி முடித்துவைத்தமண்டபத்தில் சக்கரவர்த்தியும் சேர்தலைப்பொருந்தினான்—எ-று (௩௯)

வெண்குடையினநிலாவிரிக்கமின்னெனக் ... *
கண்குடையினமணிவெயிலுங்கான்றிடப் ... *
பண்குடைவண்டினம்பாடவாடன்மா ... *
மண்குடைதூளிவிண்மறைப்பவேகினான் ... *

(இ-ள்.) தனது வெண்கொற்றக்குடை புதுநிலாவெறிப்பவும் மின்னலைப் போலக் கண்களை உருவுகின்ற, கூட்டமாகிய பலமணியணிகள் (நிலாவையன்றி வெயிலையும் வீசவும் (தோண்மாலையில்) மூழ்கிவண்டினங்கள் பண்ணைப் பாடவும் வெற்றியையுடைய குதிரையானது தரையை (காலால்) கிளைத்தலா லெழாநிற்குந்தூளி ஆகாயத்தை மறைக்கவும் செல்கின்றான்—எ-று. (௪௰)

மங்கலமுரசினமழையினார்த்தன ... ... *
சங்குகண்முரன்றன தாரைபோரெனப் ... *
பொங்கினமறையவர்புகலுநான்மறை ... ...*
கங்குலின்முழங்குமாகடலும்போன்றவே ... *

(இ-ள்) மங்கலமுரசின் கூட்டம் மேகத்தைப்போல ஒலித்தன சங்கங்கள் ஒலித்தன தாரைகள் போரென்றுமிக்கொலித்தன அந்தணர்கள் கூறும் நான்மறையோசைகள் இராவில்மிகுதியும் ஒலிக்கும் பெரியகடலோசையையும் போன்றன—எ-று. உம்மை-சிறப்பு. (௪௧)

பரந்ததேர்களிறுபாய்புரவிபண்ணையில் ... *
தரந்தர நடந்தனதானைவேந்தனை ... ... *
நிரந்தரந்தொழுதெழுநேயமன்னவர் ... *
புரந்தரன்புடைவருமமரர்போன்றனர் ... *

(இ-ள்) தேர்களும், யானைகளும், பாய்கின்ற குதிரைகளும், வரிசையாகப் பரவிச்செல்கின்றன, இனமினமாகப் பதாதிப்படைகள் நடந்தன, சக்கரவர்த்தியை நிரந்தரம்தொழுது எழுகின்ற பூமியரசர்கள் இந்திரனுக்கு அயலில் வருகின்ற தேவர்களைப்போலச்சென்றனர்—எ-று. (௪௨)

அனையவன்மண்டபமணுகியப்பொனின் ... *
புனைமணியாதனம்பொலியத்தோன்றினான் ... *
முனைவருமன்னருமுறையின்மேவினர் ... *
சனகனுந்தன்கிளைதழுவமேவினான் ... *

(இ-ள்.) அத்தன்மையனாய்வந்த சக்கரவர்த்திமண்டபத்தைச்சேர்ந்து அழகியபொன்னாலலங்கரித்தமணிகள்பதித்த ஆதனத்தினிடத்தில் அது பொலிவை

யடைய்ம்படி வீற்றிருந்தான் முனிவர்களும் அரசர்களுந் தக்கமுறைமையாக ஆதனங்களின்மேலேறி யிருந்தார்கள் சனகமகாராசனும் தன்சுற்றத்தார் சூழும்படி ஆதனத்திலேறியிருந்தான்—எ-று. (௪௩)

மன்னருமுனிவரும்வானுளோர்களும் ... *
அன்னமென்னடையணங்கனையமாதருந் ... *
துன்னினர்துவன்றினர்சுடர்கள்சூழ்வரும் ... *
பொன்மலையொத்ததப்பொருவில்கூடமே ... *

(இ-ள்,) சூரியன்முதலிய சுடர்கள்சூழ்கின்ற மேருமலையை யொத்ததாகிய மற்றொப்பில்லாதமண்டபத்தில் அரசர்களும், முனிவர்களும், தேவர்களும், அன்னத்தைப்போலு மெல்லியநடையையுடைய தெய்வத்தை யொத்தமங்கையர்களும் நெருங்கிநிறைந்தனர்—எ-று. (௪௪)

புயலுளமின்னுளபொருவின்மீனுள ... *
இயல்மணியினமுளசுடரிரண்டுள ... *
மயன்முதற்றிருத்தியமணிசெய்மண்டபம் *
அயன்முதற்றிருத்தியவண்டமொத்ததே ... *

(இ-ள்.) மயனென்னுந் தெய்வத்தச்சன் ஆதியில் குற்றமறச்செய்த மணிகளால் தொழிலமைத்த மண்டபமானது, தன்னுள்) மேகங்களுள்ளன மின்னல்களுள்ளன ஒப்பில்லாதவிண்மீன்களுள்ளன ஒளியாகிய இயல்பைப்பொருந்திய மணிசாலங்களுள்ளன இரண்டுசுடர்களுமுள்ளன (அதனால்) பிரமன்முன்னாளில் சிருட்டித்த அண்டத்தை ஒத்தது—எ-று. (௪௫)

உலகத்துக்கு மழையின்றியமையாத் துணைக்காரணமாகலிற் புயலையும் அதற்குற்பாதமாய் முன்னிகழ்வதாகலின் மின்னையுமிரவிலொளிர்ந்து அண்டத்தை யழகுபெறச்செய்தலின் மீனையும் மக்கண்முதலியோரவாக்கொள்ளும் பொருள்களிற்சிறந்தனவாகலின் மணியினத்தையும் கிரகபதிசூரியனு முடுபதிசந்திரனுமாகலின் தலைமைபற்றிச்சுடரிரண்டையுமெடுத்துக்கூறினர். இங்ஙனங்கூறவே மண்டபம்வானந்தன்னுட்படவுயர்ந்தோங்கியதென்பது கருத்து. இவ்வாறன்றிப்புயன்முதல் மணிகாறும் மண்டபத்திலுள்ளமகளிர்களுடைய கூந்தலிடைவிழியணிகலன்கண்மேலேற்றிப்பொருள்கூறுவாருமுளர்.

எண்டவமுனிவருமிறைவர்யாவரும் ... *
அண்டரும்பிறரும்புக்கடங்கிற்றலான் ... *
மண்டபம்வையமும்வானும்வாய்மடுத் ... *
துண்டவன்மணியணியுதரமொத்ததே ... *

(இ-ள்) வரம்பில்லாமல் முனிவர்களும் எல்லாவிறைவர்களும் தேவர்களும் மற்றவர்களும் புகுந்து அடங்கியது ஆதலால் அம்மண்டபம் பூமியையும் ஆகாயத்தையும் திருவாயாலுண்ட இறைவனது கௌத்துவமணிவடமழகைச் வயிற்றை ஒத்தது—எ-று. (௪௬)

இறைவரென்பதை மணியணியுதரத்தின்மேலேற்றிக்கூறும்போது விதிசிவாதியரெனவும் மண்டபத்தின்மேலேற்றிக்கூறும்போது அரசரெனவும்பொருள்கொள்க. அண்டங்களையாவும்வாய்மடுத்துண்டவனென்பார் அவற்றிற்கு முதற்காரணமாகிய பூதங்களைந்தனுள், வையமும்வானுமெனக்கடையுமுதலுமெடுத்துக்கூறினர்.

நிராதலமுதலுலகனைத்துநர்தன்னுற ... ... *
விராவினருவிந்தனவிளம்பவேண்டுமோ ... *
அராவணைதுறந்துபோந்தயோத்தியெய்திய ..*
இராகவன்செய்கையையியம்புவாமரோ... *

(இ-ள்) பூமிமுதலிய உலகங்களிலுள்ளார் யாவரும் (திருமணக்கோலத்தைக்காண வேண்டுமென்னும் விருப்பத்தாலே) தன்னுருப்படலால் நெருங்கினவர்களாகி அங்குக்கூடினார்கள் (அதையான்) சொல்லவேண்டுமோவேண்டியதில்லை. பாம்பணையைநீக்கிவந்து அயோத்தியிலவதரித்தஸ்ரீராமபிரானுடைய செய்தியைச்சொல்லுவாம்—எ-று. (சஎ)

சங்கினந்தவழ்கடலேபிறந்தன ... ... *
சிங்கலிலருமறைதெரிந்ததீர்த்தங்கள் ... *
கங்கைமேமுதலியகலந்தநீரினுன் ... ...*
மங்கலமஞ்சனமரபினாடியே... ... .. ...*

(இ-ள்.) சங்கின்கூட்டங்கள் உலவுகின்ற எழுகடலினின்றுங் கொண்டுவரப்பட்டவற்றையும் அழிவில்லாத அரியவேதங்களால் அறியப்பட்ட தீர்த்தங்களாகிய கங்கைமுதலியவற்றையும் ஒருசேரக்கலந்தநீரினால் முறைமைப்படி மங்கலமாகிய திருமஞ்சனமாடி—எ-று. (சஅ)

என்றுநான்முகன்முதல்யாருமியாவையு ... *
நின்றபேரிருளினைநீக்கிநீணெறி ... ... *
சென்றுமீளாக்குறிச்சேரச்சேர்த்திடு ... ... *
தன்றிருநாமத்தைத்தானுஞ்சாத்தியே ... *

(இ-ள்.) பிரமன்முதலிய இறைவர்கள்யாவரும் மற்றெல்லாவுயிர்களுந்தம்மைவிட்டுநீங்காது நிலைத்த பெரிய (அவித்தையென்னுமிருளை நீக்கி) பிரயத்திநிட்டையென்னும்பெருவழியில் (வேண்டல்வேண்டாமையில்லாமல்) ஒழுகிப் பரமபதத்தில் சேரும்படி (நாள்தோறும்நெற்றிமுதலியதானங்களில்) தரிக்கிறதனது திருமட்குறியைத் தானுந்தரித்து—எ-று. (சகூ)

நின்றபேரிருளினைநீக்கி நீணெறிசென்று என்பதற்கு நீணெறிசென்று நின்றபேரிருளினைநீக்கியெனக்கொண்டுகூட்டி நெடிய அர்ச்சிராதிமார்க்கத்திற்சென்று நிரதிசயமாகியமூலப்பிரகிருதியைக்கடந்து எனப்பொருள்கொள்ளினுமமையும். நான்முகன் முதலிய அமரர்களுக்கு மேனையோருக்கும் வேற்றுமைதோன்ற யாருமியாவையுமெனவும் அடைந்தோர் மீண்டும் பிறவாவியல்பிற்றாய் வேதபுருஷன்முதலியோரால் உயர்வாகக்கருதிக் கூறப்படுவதுவீடொன்றுமேயாகலின் அதனைமீளாக்குறியெனவும் அக்குறியைச்சேரக் கருதுவோர்க்கின்றியமையாவங்கம்பலவற்றுள்ளும் இதுமுதன்மைத்தாகலிற்சேரச்சேர்த்திடுமெனவுந்தன்றிருவடியாகிருதியாயிடப்படுவதாகலிற் றன்றிருநாமமெனவு மநுதாமங்கொண்ட அவதாரத்திற்கேற்ப இட்டாருகலிற்சிறப்புமைகொடுத்துத் தானுஞ்சாத்தியெனவுங்கூறினர்.

கோதறுதவத்துத்தங்குலத்துளோர்தொழும் ..*
ஆதியஞ்சோதியையடிவணங்கிறைன் ... *
காதியல்கயல்விழிக்கன்னிமார்களோ ... *
வேதியர்க்கருமறவிதியினல்கியே ... *

சக்கரத்தயல்வருஞ்சங்கமாமென ... ...*
மிக்கவிர்முத்தணிதரளவெண்கொடி ... *
மொய்க்குமென்குழலினாண்முறுவலுள்ளுறப்
புக்கனநிறைத்துமெய்ப்பொதிந்தபோன்றவே

(இ-ள். சக்கரத்துக்கு அயலில்வரும் சங்கமென்னும்படி கண்டத்தில் விளங்கிய செம்மணிபணிக்கு அயலிலணிந்த வெண்முத்துவடங்கள், மெல்லிய மொய்த்தகுழலையுடைய சீதாபிராட்டியினது நகைகள், உள்ளத்தை மிகப் புகுந்தனவாகி நிறைத்துமெய்யில் அரும்பியன போன்றன—எ-று. (ருரு)

கொடி-உவமவாகுபெயர். மெய்யென்பதற்குமார்பென்றது உள்ளத்துக்கிடமாதலினென்க.

பந்திசெய்வயிரங்கள்பொறியிற்பாற... *
அந்தமில்சுடர்மணியழலிற்றோன்றலாற் ...*
சுந்தரத்தோளணிவலயந்தொடிநாண் ... *
மந்தரஞ்சுற்றியவரவைமானுமே... ... *

(இ-ள்.) முறையாகப்பதித்தவயிரங்கள் புள்ளிகளைப்போலப் பெருமையாய்ப்பொருந்தவரம்பில்லாதசுடரையுடைய செம்மணிகள் தீயைப்போலத் தோன்றலால், சுந்தரமாகியதோளிலணிந்த வலயமென்னும் அணியானது முன்னாளில மந்தரமலையைச்சுற்றிய பாம்பையொத்தது—எ-று. (ருசா)

அழலென்றது மந்தரத்தைச்சுற்றிக்கடையாநிற்புழி வாசுகி, உடல்வருத்தத்தாற்சீறிக் கண்ணுமிழ்ந்ததீயை.

கோவையின்பெருவடமுத்தங்கோத்தன....*
காவல்செய்தடக்கையின்மெட்கார்ந்துவ ..*
மூவகையுலகிற்குமுதல்வனுமென... ... *
எவரும்பெருங்குறியிட்டபோன்றவே ... *

(இ-ள்.) பெரியமுத்துக்களால் கோக்கப்பட்டனவாகிய கோவைவடங்கள் (எல்லாவுயிர்களையும்) காக்கின்ற பெருமையாகிய கையினருகில் விளங்குவன (அவை) மூவகையாகிய உலகங்களுக்குங்காரணன் இவனென்று யாவருமுணரும்படி நீக்குதலரியபெருங்குறியிட்டபோன்றன—எ-று. (ருஎ)

மாண்டபொன்மணியணிவலயம்வந்தெதிர் *
வேண்டினர்க்குதவுவான்விரும்பிக்கற்பகம். *
ஈண்டுதன்கொம்பிடையீன்றதாமெனக். ... *
காண்டகுதடக்கையிற்கடகமின்னுமே ... ...*

(இ-ள்.) மாட்சிமைப்பட்ட பொன்னாலும் மணிகளாலுமமைத்த வாகுவலயமானது, தன்னெதிரேவந்து வேண்டினவர்க்கு (விரும்பியபொருளைக் காலவிளம்பஞ்செய்யாமல்) உதவும்படி விரும்பிக் கற்பகதருவானது வளர்கின்றதன்கொம்பை இடையேயீன்றாற்போல விளங்குகின்ற பெருமையாகிய கைகளில் கடகங்கள்மின்னவணிந்து—எ-று. (ருஅ)

# கடிமணப்படலம்.

(இ-ள்) அத்தன்மையதாகிய ஒப்பற்றதேரில் அருணனின்றாற்போலக்குளிர்ச்சியமைந்த தாமரைமலர்போன்ற கண்களையுடையபரதன் கோலைக் கொள்ளவும் வளைதற்குரிய வில்லைத்தாங்கிய இளையபெருமான் பின்னேகாத்து நிற்கவும் சத்துருக்கன்பொன்றாற்செய்த காம்புடைய சாமரையை இனிய காற்றுண்டாக அசைக்கவும் சென்றான் —எ-று. (௭௧)

அமைவருமேனியானழகினாலதோ ... ... *
கமையுறுமனத்தினாற்றருதவந்ததோ ... ... *
சமைவுறவறிந்திலந்தக்கதாகுக ... ... *
இமையவராயினாரிங்குளாருமே ... ... *

(இ-ள்.) அமைதல் அருமையாகிய திருமேனியையுடைய சீராமபிரானது அழகினால் ஆனதோ பொறுமைதங்கிய நப்பனத்தினால் அவ்வழகுகொண்டிறையே நினைக்கவந்ததோ ஐயப்பாடின்றித் தெளிவுற அறிந்தோமிலை தகுதியானது காரணமாகக்கடவது இவ்வுலகத்தின்கணுள்ளாரும் தேவர்களைப் போலாயினார்கள்—எ-று. (௭௩)

நஞ்சித்தையிற்செய்கையாற் சீற்றமிலராகியகோசலைநாட்டாரை இம்மிதிலாபுரியார் போல்வாராகலிற் கமையுறுமனமென்றார்.

வரம்பறுமுலகினைவலிந்துமாய்வின்றித் ... *
திரம்பயிலரக்கர்தங்குழுக்கநத்தெய்வமற்று ... *
நிரம்பியதெனக்கொடுநிறைந்ததேவரும் ... *
அரம்பையர்குழாத்தொடுமுடன்பயின்றார் ... *

(இ-ள்-) முடிவில்லாத பெரியஉலகினுள்ளாரைவருத்தப்படுத்தி அழியாமல் உறுதியைப்பெற்ற அரக்கர்களது கூட்டமானது நசித்தலின் அங்குமுடிந்ததெனக்கருதி வந்துநிரம்பிய தேவர்களும் தெய்வமகளிர் கூட்டத்தோடு ஆடுதலில் அமைந்தார்கள்—எ-று. (௭௫)

தேவருமென்னும் உம்மைஇறந்தது தழீஇயதனோடு சிறப்புப்பொருளும்படநின்றது.

சொரிந்தனர்பூமழைசுண்ணந்தூவினர் ... *
விரிந்தொளிர்காசுபொன்றூசுவீசினர் ... *
பரிந்தனரழகினைப்பருகினார்சொலாத் ... *
தெரிந்திலந்திருநகர்மகளிர்செய்கையே ... *

(இ-ள்) பூமழையைச்சொரிந்தார்கள் பரிமளப்பொடிகளைத்தூவினார்கள் கிரணங்கள் விரிந்தொளிர்கின்ற நவமணிகளையும் பொன்னையும் ஆடைகளையும் (இரப்போர்க்கு) ஈந்தார்கள் ஆதலால்விரும்பினவர்களாகி சீராமபிரானுடைய அழகாகியமதுவை உண்டார்கள் (அஃதல்லாமலிடின்) அத்திருநகரத்தின்கணுள்ள மகளிர்களது அச்செய்கைக்குக்காரணம்வேறு அறியோம்—எ-று.

வள்ளலைநோக்கியமகளிர்மேனியின் ... *
எள்ளரும்பூணெலாமிரியநிற்கின்றார் ... *
உள்ளனயாவையுமுதவிப்பூண்டவுங் ... *
கொள்ளையிற்கொண்மெனக்கொடுக்கின்றாரினே.

(இ-ள்.) தம்பாலுள்ளன வெல்லாவற்றையும் (இரப்போர்க்கு) உபகரித்துத் தாம்பூண்டவற்றையும் களிப்பினால் கொள்ளக்கடவீரெனக் கொடுக்கின்றதன்மையைப்போல வள்ளலாகிய சீராமபிரானை நோக்கியமகளிர்கள் தம்முடம்பிலணிந்த பழிப்பில்லாத தொழிலமைந்த பூண்களெலாம் கழலும்படி. நிற்கின்றார்கள்—எ-று. (௭௭)

தன் திருநாமத்தை ஒருகாற்கூறிய மாத்திரையி னன்னோர்க்குவீட்டுப்பெறுமுதலியவற்றை யெண்ணியாங்கு வரையாதுபயத்தலின் வள்ளலென்றார்.

வேறு.

எஞ்சலிலுலகத்துள்ளவெறிபடைப்பரசவெள்ளங் ... ... *
குஞ்சரக்குழாத்திற்சுற்றநம்பொற்றவனிருந்தகூடம் ... *
வெஞ்சினத்தனுவலானுமேருமால்வரையிற்சேருஞ் ... *
செஞ்சுடர்க்கடவுளென்னத்தேரிடைச்சென்றுசேர்ந்தான்.*

(இ-ள்) (ஆற்றலில்) குறைவில்லாத உலகத்திலுள்ள (பகைவர்மேல்) எறிதற்குரிய படைக்கலத்தையுடைய அரசர்களுக்கூட்டம் யானைத்திரள்போலச் சுற்றியிருப்ப, வெவ்விய சினமமைந்தவிற்றொழிலில்வல்ல சீராமபிரானும்பெருமையாகிய மேருமலையிற்சேருகின்ற சிவந்த கிரணங்களையுடைய சூரியனைப்போலத் தேர்மீதுசென்றுசேர்ந்தான்—எ-று. (௭௮)

தேரை-ஒற்றையாழிக் கதிர் நதேரோடொந்ததென்றதற்கேற்பத் தேர்ப்பாகனுய்நின்றபரதனுக்கு அருணனையும் மண்டபத்திற்கு மேருமால்வரையையும சீராமபிரானுக்குச்செஞ்சுடர்க்கடவுளையுமுவமைகூறினார்.

இரதமாண்டிழிந்தபின்னரிருமருங்கிரண்டுகையும் ... *
பரதனுமிளையகோவும்பரிந்தனரேந்தப்பைந்தார் ... *
வரதனுமெய்த்திமைதீர்மாதவர்த்தொழுதுநீதி ... ... *
விரதமெய்த்தாதைபாதம்வணங்கியாங்கிருந்தவேலை ... *

(இ-ள்.) அவ்விடத்தில் தேரினின்றுமிழிந்தபின்பு இருபக்கங்களிலும் இரண்டுதிருக்கரங்களைப் பரதனும் இளையபெருமானும் அன்புடையராய்த் தம்கைகளால் ஏந்தாநிற்க, புதியமலர்மாலையணிந்த சீராமபிரானும்சென்று (விழைவுவெறுப்பு அவிச்சைகளாகிய) குற்றம்நீங்கிய பெருந்தவத்திற்சிறந்தமுனிவர்களைத்தொழுது நீதியையும் உண்மையையும் விரதமாகக்கொண்ட தந்தையாகிய சக்கரவர்த்தியினது பாதங்களைவணங்கி அவன்பக்கல் இருந்தகாலத்தில்—எ-று. (௭௯)

சிலைபுடைக்கயல்வாட்டிங்களேந்தியோர்செம்பொற்கொம்பர்
முலையிடைமுகிழ்ப்பத்தேர்மேன் முன்றிசைமுளைத்ததன்
அலைகடற்பிறந்துபின்னையவனியிற்றோன்றிமீள ... [றாள்.
மலையிடையுதிக்கின்றாள்போல் மண்டபமதனில்வந்தாள் ..*

(இ-ள்.) வில்லை மேற்புறத்திலுடைய இரண்டுகயல்மீன்களை இடையேபெற்ற ஒளிநிறைந்த சந்திரனைச்சுமந்து ஒருசெய்பொற்கொம்பானது முலைகளாகிய அரும்புகள் தன்னிடையிலேஅரும்ப தேரின்மேல்கிழக்குதிசையின்முளைத்ததையொத்த பிராட்டியானவள் அலைகின்ற பாற்கடலில அவதரித்துப்பி

ம் முப்புரிநூல்விளங்கிய மார்பையுடையாருமாகிய அந்தணர்கள் சூழ்ந்துவர (வேதத்திற்கூறிய) பழையநெறியில்வாய்ந்த நல்லதிருமண வேள்வியைச்செய்தற்பொருட்டு வசிட்டமுனிவன் சுற்றுமறவடைத்த நுனித்தருப்பைகையிற் கொண்டு இனிமையாகவந்துசேர்ந்தான்—எ-று. (௮௪)

நற்றருப்பையென்றமையால் நுனித்தருப்பையெனப்பொருள் கூறப்பட்டது.

தண்டிலம்விரித்துநற்றருப்பைசாத்தியே ... *
மண்டலம்விதிமுறைவகுத்துமென்மலர் ... *
கொண்டவைசொரிந்தெரிகுழுமமூட்டினன். *
பண்டுளமறைநெறிபரவச்செய்தனன் ... *

(இ-ள்.) அரிசியைப்பரப்பி நல்லதருப்பையைச்சாத்தி மண்டலத்தைவேதவிதியின்படி முறையாகவகுத்து மெல்லிய மலர்களை எடுத்து அவற்றின்மேல்சொரிந்து எரியைத்திரளமூட்டினவனாகித்தொன்றுதொட்டுள்ளனவாகிய வேதமந்திரங்களால் முறைமையில்துதித்து அத்திருமணவேள்வியைச்செய்தான்—எ-று. (௮௫)

வேறு.

மன்றலின்வந்துமணத்தவிசேறி ... *
வென்றிநெடுந்தகைவீரனுமார்வத் ... *
துன்றுணைபன்னருமெய்த்தியிருந்தார் .. *
ஒன்றியபோகமும்யோகமுமொத்தார். *

(இ-ள்.) திருமணப்பூரியுமிடத்தில்வந்து திருமணத்தவிசிலேறிவெற்றியையும் பெருங்குணத்தையுமுடைய சிராமபிரானும் அன்புடைய இனியதுணையாகிய பிராட்டியும் நெருங்கிவீற்றிருந்தார்கள் (அவ்விருவரும்) சாத்தியமாகப்பொருந்திய பேரின்பச்சுகத்தையும் சாதனமாகிய தியானத்தையும்முறையே ஒத்திருந்தார்கள்—எ-று. (௮௬)

இறைவியை முன்னிட்டுக்கொண்டு இறையவனை யடைதலின் வீரனுக்குப் போகத்தையும் சீதாபிராட்டிக்கு யோகத்தையும் உவமையாக்கினர்.

கோமகன்முன்சனகன்குளிர்நன்னீர் ... *
பூமகளும்பொருளும்மெனநீயென் .. *
மாமகடன்னொடுமன்னுதியென்றுத் ...*
தாமரையன்னதடக்கையினீந்தான் ... *

(இ-ள்.) கோமகனாகிய சிராமபிரானுக்கெதிரே நின்று சனகமகாராசன்குளிர்ந்த நல்லநீரைத் திருமகளும் செல்வப்பொருளும்போல நீ என்னுடைய பெருமைதங்கிய மகளுடன் நிலைபெற்றிருவென்றுகூறித்தாமரைமலரையொத்த பெரியவலக்கையில வார்த்தான்—எ-று. (௮௭)

அந்தணராசியருங்கலபன்றூர் ... *
தந்தபல்லாண்டிசைதார்முடிமன்னர் ... *
வந்தனைவானவர்வாழ்த்தொலிபோல .. *
முந்தியசங்குமுழங்ினமாதோ ... *

(இ-ள்.) அந்தணர்களுடைய ஆசீர்வதித்தலின் ஓசையும் அருமையாகிய அணிகலத்தையொத்த அவர்கள் தேவிமார்கள் கூறிய பல்லாண்டின் ஓசையும், மாலைபணிந்த முடிமன்னர்களும், வணங்குதற்குரிய தேவர்களும் வாழ்த்திய ஓசையும்போல வாச்சியங்களுள் முதன்மையாகிய சங்கங்கள் ஒலித்தன.—எ-று.

வானவர்பூமழைமன்னவர்பொற்பூ ... *
ஏனையர்தூவுமிலங்கொளிமுத்தந் ... *
தானகுநாண்மலரொன்றிவைதம்மால் ... *
மீனகுவானின்விளங்கியதப்பார். ... *

(இ-ள்.) தேவர்கள்சொரிந்த கற்பகப்பூமழையும் அரசர்கள்சொரிந்த பொன்னாற்செய்த மலர்மழையும் மற்றையோர்சொரிந்த விளங்குகின்ற ஒளியினையுடைய முத்துமழையும் பொலிகின்ற புதியமலர்மழையும் ஆகிய இவைகளால் இத்தரையானது விண்மீன் ஒளிசெய்கின்ற ஆகாயத்தைப்போலவிளங்கியது.

வெய்யகனற்றலைவீரனுமந்நாண் ... *
மையறுமந்திரமுற்றுவழங்கா ... *
நெய்யமையாகுதியாவையுநேர்ந்தான். *
தையறளிர்க்கைதடக்கைபிடித்தான் ... *

(இ-ள்.) வெவ்வியகனலையுடைய வேள்வியில் ஸ்ரீராமபிரானும் அந்தநாளில் குற்றம்நீங்கிய மந்திரங்களை முழுமையுங்கூறி நெய்யாலமைத்த ஆகுதிகளெல்லாவற்றையும் இசையச்செய்தானாகிப் பிராட்டியினுடைய தளிர்போலும் மெல்லியதிருக்கரத்தைத் தனதுபெருமையாகிய திருக்கரத்தால் பிடித்தான்.

இடம்படுதோளவனோடுமைவேள்வி ... *
தொடங்கியவெங்கனல்சூழ்வருபோதின் *
மடம்படுசிந்தையண்மாதுபிறப்பின் ... [ள்
உடம்புயிரைத்தொடர்கின்றதையொத்தா

(இ-ள்.) செய்யவேண்டிய யாவுஞ்செய்துமுடிந்த வேள்வியின்கண் (சங்கற்பித்துக்கொண்டுசெய்யத்) தொடங்கிய வெவ்வியதீயை, விசாலமாயமைந்த சுந்தரத்தோள்களையுடைய ஸ்ரீராமபிரானோடு மடமைக்குணமமைந்த சிந்தையையுடைய சீதாபிராட்டியானவள் பின்தொடர்ந்து சூழ்ந்துவருகின்றகாலையில் உடம்பானது உயிரைப்பின்சென்று தொடர்கின்றதை ஒத்தாள்.—எ-று.

வலங்கொடுதீயைவணங்கினர்வந்து ... *
பொலங்பொரிசெய்வனசெய்பொருண்முற்றி.
இலங்கொளியம்மிமிதித்தெதிர்நின்ற ... . *
கலங்கலில்கற்பினருந்ததிகண்டார். ... *

(இ-ள்.) வேள்வித்தீயைப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கி அருகேவந்து அழகியபொரியாற்செய்வனவற்றையும் அங்குச்செய்யவேண்டியமற்றைப்பொருள்களையும் செய்துமுடித்து இலங்குகின்ற ஒளியையுடைய அம்மியைமிதித்து எதிர்நின்றகலங்குதலில்லாதகற்பையுடையஅருந்ததியைக்கண்டார்-எ-று

(இ-ள்.) சானகிபிராட்டியாகிய அன்னம் அம்மூவர்களுடைய அழகிய பொலிவமைந்த தாமரைமலர்போன்ற பாதங்களைத் தன்சென்னியிற் சூடினள்- அவர்கள் மனங்களித்தவராகிக கற்பழிவில்லாத அருந்ததியாகிய பெண் (கற்புக்கிலக்காக) பார்க்கும்படி நம்முடையநல்லபுத்திரனுக்கு இவள் நல்ல அணியாவாளென்றுசொன்னார்கள்---எ-று. (கூசா)

சங்கவளைக்குயிலைத்தழீஇநின்றார் ... ...*
அங்கணனுக்குரியாருளராமார் ... ...*
பெண்களினிப்பிறரெங்குளரென்றார். *
கண்கள்களிப்பமனங்கள்களிப்பார் ... *

(இ-ள்.) சங்கமாகிய வளையணிந்த குயிலையொத்த சீதாபிராட்டியைத்தனித்தழுவி நின்றவர்களாகிய அழகிய அருளுடையஸ்ரீராமபிரானுக்குமனைவியாவார் (இவளையல்லாமல்) பெண்களில்லை இனிப்பிறர் எவ்வுலகத்தினுளரென்றுகூறித் தம்முடையகண்கள் களிப்படையாநிற்க மனங்கள் களிப்பார்கள்—எ-று. (சாஎ)

எண்ணரிலகோடிபொனெல்லையில்கோடி
வண்ணவருங்கலமங்கையர்வெள்ளந்...*
கண்ணகனாடொடுகாருயர்நாகம் ... *
பெண்ணினணங்கனையாள்பெறுகென்றார்

(இ-ள்.) கணக்கில்லாதனவாகிய பலகோடி பொற்காசையும் அழகிய அணியணிந்த மங்கையர்களது எல்லையில்லாத கோடிவெள்ளத்தையும் இடமகன்ற நாடுகளையும் மணிகளையும் உயர்ந்த விலையுள்ள ஆடைகளையும் பெண்களில் தெய்வத்தையொத்த சீதையே (யாபளிக்கப்) பெறக்கடவாளென்று சொன்னார்கள்—எ-று. (கூஅ)

நூற்கடலன்னவர்சொற்கடனோக்கி ... *
மாற்கடலன்னமனத்தவளோடும்... ...*
கார்க்கடல்போற்கருணைக்கடல்பண்டைப்
பாற்கடலன்னதொர்பாயலணைந்தான் *

(இ-ள்.) நூற்கேள்வி கடலையொத்தாராகிய முனிவர்களது சொல்லின் கடன்மையை நோக்கிக் காதலானது கடலையொத்த மனத்தையுடையபிராட்டியோடும் காற்றினால்வீசப்பட்டுப் பொங்கியகடல்போலக்(களிப்புமிகுந்து) கருணைக்கடலாகிய ஸ்ரீராமபிரான் தாமுன் பள்ளிகொண்ட திருப்பாற்கடலையொத்ததாகிய வேறொப்பில்லாத சயனத்திற்சேர்ந்தான்-எ-று (எய)

பங்குனியுத்தரமானபகற்போ ... *
தங்கணிருக்கினிலாயிரநாமச் ... ... *
சிங்கமனைத்தொழிற்செய்துநிறத்தான்..*
மங்கலவங்கிவதிட்டன்வளர்த்தான் ... *

(இ-ள்) பங்குனிமாதத்திலே உத்திரநட்சத்திரமாகியநாளில் அம்மிதிலாநகரத்திற்கண்ட வேதங்களில் ஆயிரந்திருநாமங்களையுடைய(போர்த்தொழில்

ல்)சிங்கமாகிய ஸ்ரீராமபிரானுடைய திருமணத்தொழிலைச் செய்தவகையால் மங்கலத்திலை' வசிட்டமுனிவன் வளர்த்தான்—எ-று. (௱)

வள்ளறனக்கிளையோர்கடமக்கும் ..... *
எள்ளலில்கொற்றவன்யாவினளித்த .. *
வள்ளன்மலர்த்திருவன்னவர்கள்மைக் .. *
கொள்ளுமெனத்தமரோடுறுவித்தான்... *

(இ-ள்.) நிந்தையில்லாத புகழையுடைய சனகமகாராசன் (சக்கரவர்த்தியைநோக்கி, நீர் இவைக்குப், பின் யான்பெற்ற சேற்றிலே விளைகின்ற தாமரைமலரிலெழுந்தருளிய திருமகளை யொத்தமங்கையர்களைச் ஸ்ரீராமபிரானுக்கிளையவர்களுக்கும் கொள்ளுமென்று தன் சுற்றத்தாரோடு சென்றுபேசிநிச்சயித்தானே—எ-று. (௱௧)

தன்னிளையான் பிறவியராயினும் அவர்க்குந்தான் பிதாவென்னு முறைநோக்கி யான்மிளைளித்த திருவன்னவரொன்றுன்.

கொய்திறைகாரவிகுசத்துவசப்பேர்.. *
நெய்திறைவேலவன்மங்கையர் நேர்ந்தார்
மைநிறைகண்ணியர் வானுறைநீரார்... *
மெய்நிறைமூவரைமூவரும்வேட்டார் *

(இ-ள்) மையிட்டகண்களையுடையாரும் சுவர்க்கத்தில்வசித்தற்குரிய அழகின்தன்மை யுடையாரும் ஆகிய,கொய்து குறைவறத்தொடுத்தமலர்மாலையையுடைய குசத்துவசனென்னும்பெயரைப்பெற்ற நெய்யைமுற்றத்தடவிய வேலைத்தாங்கிய அரசனது பெண்கள் இசைந்தார்கள். உண்மையொழுக்கமூ நிறைக்குணமுமமைந்த அம்மூன்றுமங்கையர்களையும் பரதலட்சுமண சத்துருக்கர்களாகிய மூவரும் திருமணம்புரிந்தார்கள்—எ-று. (௱௨)

வேட்டவர்வேட்டபின்வேந்தனுமேனாள்
கூட்டியசீர்த்திகொடுத்திலனல்லால்... *
ஈட்டியமெய்ப்பொருளியாவுளவெல்லாம்
வேட்டவர்வேட்டவைவேண்டவளித்தான்

(இ-ள்.) அவர்கள் (ஒருவரையொருவர்) விரும்பி மணந்தபின் சக்கரவர்த்தியும் தொன்றுதொட்டுக்கூட்டிய கீர்த்தியைக் கொடுத்திலனல்லாமல் உண்மைவழியிலதேடிய பொருள்கள் எவையுள்ளன அவை எல்லாவற்றிலும் விரும்பி இரந்தோர்விரும்பியவற்றை, அவர்கள் வேண்டியமட்டும் கொடுத்தான்—எ-று. (௱௩)

ஈந்தளவில்லதொரின்பநுகர்ந்தே..... *
ஆய்ந்துணர்கேள்வியருந்தவரோடும் . *
வேந்தனுமந்நகர்வைகினன்மெள்ளத் *
தேர்ந்தனநாள்சிலசெய்ததுரைப்பாம் *

(இ-ள்.) சக்கரவர்த்தியும் அவ்வாறுகொடுத்து வரம்பில்லாததாகிய ஒப்பற்றசுகத்தை அனுபவியாநின்று வைதிகநூல்களை ஆராய்ந்துஉண்டை

(இ-ள்.) வலியுடையானும் பராக்கிரமசாலியுமான உன்னாலே தோற்ற வில்லினது சிறப்பைத் தான் அறியேன் இனி உன்னுடைய தோள்களினது வலியினிருப்பைச் சோதனை செய்ய விருப்பமுடையேன் அரசர்களை வென்று விட்ட இரண்டு தோளிற் பொருந்திய சிறிதும் அழிவு முடையன் இங்கே எனது வரவு இதுவேயாம் வேறொரு பொருளில்லையென்றான்—எ-று. (௧௯)

அவனன்னது பகரும்மளவையின் மன்னவனுயர்வான் ... ✱
புவனமுழுவதும் வென்றொரு முனிவற்கருள் புரிவாய் ... ✱
சிவனும் மயனரியும் மலர் சிறுபாணிடை பொருளோ ... ✱
இவனும்மெனதுயிரும் முனதபயம் இனியென்றான் ... ✱

(இ-ள்.) அவன் அப்பொருளைச் சொல்லுகின்ற அளவிலே சக்கரவர்த்தி, பூமிமுழுமையும் வென்று காசிபமுனிவனுக்குத் தத்தஞ் செய்தவனே சிவனும் பிரமனும் இந்திரனும் அல்லாராகிய சிறிய மனிதர்கள் உனக்கொரு பொருளோ இனி இச்சிறுவனும் என்னுடைய உயிரும் உன்னுடைய அபயமென்றான்—எ-று. மீ

இச்சிராமபிரான் தன்னுயிரினுஞ் சிறந்தானெனப்பான் முற்படவெண்ணி இவனுமெனவும் இவனுக்கேரிடுக்கண்வரின் உய்யேனென்பான் பிற்பட வெனதுயிருமெனவும் நின்னுடைமையாய் நின்றவெம்மை நீயாதுபுரியினு மெதிர்க்குமாற்றிலில்லேமென்பானுனதபயமெனவுங்கூறினான்.

விளியார்விளிவது தீவினை விளைவாருழையன்றே ... ... ✱
களியாவிவனயர்கின்றனவுளவோ கனலுமிழும் ... ... ... ✱
ஒளிவாய்மழுவுடையாய்பொரவுரியாரிடையல்லால் ... ✱
எளியாரிடைவலியார்வலியென்னாவதென்றான் ... ... ✱

(இ-ள்.) கொலையுண்பார் கொலையுண்பது தீயவினைகளை விரும்பிச் செய்யுந் தொழிலவரிடத்திலன்றோ (நல்வினைவிளைவுமுள்ளவிடத்தன்று) செருக்காலே இச்சிறுவன் (உனக்குச் செய்யும்வணக்கங்களில்) மறந்தவையுண்டோ நெருப்பை உமிழ்கின்ற ஒளிபொருந்திய வாயமைந்த மழுப்படையையுடையானே வல்லவருடைய வலியானது போர்செய்தற்குரியாரிடத்தன்றி வலியில்லாரிடத்து என்னபயன் பயமென்றான்—எ-று. (௨௰)

நனிமாதவமுடையாயிதுபிடி நீயெனநல்கும் ... ... ... ✱
தனிநாயகமுலகேழுமுடையாயிதுதவிராய் ... ... ✱
பனிவார்கடல்புடைசூழ்படிநரபாலரையருளா ... ... ✱
முனிவாறினை முனிகின்றதுமுறையோவெனமொழிவான் ... ✱

(இ-ள்.) மிகுதியும் பெருந்தவத்தையுடைய காசிபமுனிவனே நீ இதைத் தக்கணையாகப்பெற்றுக்கொள்ளெனக் கொடுத்த உலகேழிற்கும் தனிமையாகிய தலைமையையுடையாய் (எம்மேற் கோபித்தலாகிய) இதைத் தவிர்ந்தருள் செய்யெனவும், குளிர்ச்சியாகி நீண்ட கடல் புறத்தே சூழ்ந்த உலகத்திலுள்ள அரசர்களுக்கு கருணைபுரிந்து (அவர்கள் குலத்தின் மேற்கொண்ட) கோபத்தின் னம்ம தணிந்தாய் (இப்போது) கோபிப்பது நீதியோவெனவுஞ் சொல்வான்.

புறனின்றவரிகழும்படி நடுவின்றலைப்புணராத் ... *
திறனின்றுயர்வலியென்னதொரறனின்றருசெயலோ ... *
வறனின்றதனிலைநின்றுயர்புகழொன்றுவதன்றோ ... *
மறனென்பதுமறவோயிதுவலியென்பதுவலியோ ... *

(இ-ள்.) அறநிலையையுடையானே, நடுநிலையையில்நின்ற அறிவுடையோர் இகழும்படி நடுநிலைமையைப்பொருந்தாத மூயற்சிவகையினின்று வெற்றியின் உயர்கின்ற வலியானதுயாதாகும் அதுவொப்பிலலாத அறத்துவழியால் தரப்படும் முயற்சியோ! வீரமென்பதும் அறம் தன்னிடத்தே நிற்கப்படி அதனிலையிலே நின்று (பகைவரைவென்று உயர்கின்றபுகழை அடைவதன்றோ! (அங்ஙனமன்றி எம்மைவெற்றிகொள்ளும்) இது வலியென்று சிறப்பித்துச் சொலப்படுவதாகிய வலியோ—எ-று. (உஉ)

நடுவின்றலைபுணராந்திறனெனப்பின்னர்க்கூறினமையிற்புறனென்றதற்கு நடுநிலைமையெனப்பொருள்கொள்ளப்பட்டது.

சலத்தோடியைவிலனென்மகனனையானுயிர்தபுமேல் ... *
உலத்தோமிட்டிரிதோளாயெனதுறம்வாடியிருக்குமேல் ... *
நிலத்தோடுயர்கதிவானுறநெடியாயெனதடியேன் ... *
குலத்தோடறமுடியேயிதுகுறைகொண்டனெனென்றான் *

(இ-ள்.) என்மகன் உன்னிடத்தில் எங்குலத்தார்க்கு! தொன்று தொட்டுவந்தபகைமேயாடு பொருந்தினனல்லன் அத்தன்மையானுடைய உயிர் நீங்குமானால் திரண்டகல்லோடு ஒப்பாகாவென்று) எதிர்க்கின்றதோள் களையுடையவனே சுற்றத்தோடும் என்னுட்டாரோடும் உயர்ந்தகதியாகிய விண்ணுலகத்தை யடையும்படி உயிர்நீங்குவன் பெரியோனே உன்னுடைய அடியனேக்குலத்துடனே அற்றுப்போகமுடியாதை இது உன்பால்யாசித்தேனென்றான் எ-று

என்றுவடி விழுவானையுமிகழாவெரிவிழியாய் ... ... *
பொன்றூர்கலையணிவானெதிர்புருவானிலையுணராத் ... *
தன்றொருசெயலின்மையைநினையாவுயிர்தளரா ... *
மின்றலையர்வுறும்வாளரவெனவெய்துறவுற்றான் ... *

(இ-ள்) என்றுசொல்லித் தன்பாதங்களில் விழாநின்ற சக்கரவர்த்தியையும் அவமதித்துத் தீயைப்போலவிழித்துப்பார்த்துப் பொன்னுலாகிய அரிய ஆடையை யணிந்த ஸ்ரீராமபிரானுக்கு எதிரேபோனால் அவனுடைய கருத்தினிலையை (சக்கரவர்த்தி) தெரிந்துகொண்டு இனித் தன்னாற்செய்யும் ஒருசெயலுமில்லாமையைக்கருதி உயிரோய்ந்து மின்னலால் சோர்வடைந்த ஒளியையுடைய பாம்புபோல வருத்தத்தை அடைந்தான்—எ-று. (உ௩)

மானம்முடைமுடிமன்னவன்மதிசோர்வுறன்மதியான் ... *
றானந்நிலையுறுவானுறுவினையுண்டதுதவிரான் ... ... *
ஆனம்முடையுமையுண்ணலைபந்நானுறுசிலைதான் ... *
ஊனம்முளததன்மேனிலைகேண்மெனவுரைப்பான் ... *

(இ-ள்) மானத்தையுடைய முடியணிந்த சக்கரவர்த்தி அறிவுசோர்தலை எண்ணிலன் தான் அவ்வரசனுடைய நிலையை அடைதற்குக் காரணமாகப்பொ

ருத்தியவினையுள்ளது (ஆதலால்) அக்கோபந்தணியான், இடக்கையென்றும்வச்சிரத்தைத்தாங்கிய உமாநாயகனிடத்தில் அந்தநாளிலசேர்ந்த திரியம்பகமென்னும் விலலானது ஊனமுடையது அதனுடைய பழையநிலைமையையேயென்று (சக்கரவர்த்தித்திருமகனைநோக்கிச்) சொல்லுவான்—எ-று.

ஒருகால்வருகதிராமெனவொளிகால்வனவுலையா ... *
வருகார்தவழ்வட மேருவின்வலிசால்வனவையம் ... *
அருகாவினைபுரிவாருளனவனலைமவைதாம் ... ... *
இருகார்முகமுளயாவையுமேலாதனமேனுள் ... ... *

(இ-ள்) முன்னாளில ஒற்றைச்சக்கரத்தையுடையதேரின்மேல் உலகத்தைச் சூழ்ந்துவருகின்றசூரியனைப்போல ஒளிவீசுவனவும் அழியாமல், நீருண்டுவருகின்றமேகங்கள்தவழாநின்ற வடக்கண்கணுள்ள மேருமலையைப்போல வலிநிறைந்தனவும், உலகம்வளங்குறையாமல் மனத்தொழில்புரியும் மயனென்பவனுளன் அவனால செய்யப்படுவனவுமாகிய இரண்டுவில்லுகளுண்டு அவை தமக்கொப்பாக எவற்றையும் ஏற்காதனவாகும்—எ-று. (௨௬)

வேறு

ஒன்றினையுமையாள்கேள்வனுவந்தனன்மற்றையொன்றை ... *
நின்றுலகளந்தநேமிநெடியமாலினிதிற்கொண்டான் ... *
என்றிவையுணர்ந்தவிண்ணோரிரண்டினும்வன்மையெய்தும் ... *
வென்றியதியாவதென்றுவிரிஞ்சனைவினவவந்தான் ... ... *

(இ-ள்) (அவ்விரண்டினுள்) ஒன்றை உமாநாயகன் மகிழ்ந்துதாங்கினான் மற்றையொன்றை (வாமனவடிவாய்) நின்றுஉலகங்களைஅளந்தசக்கரத்தையுடையநெடிய இறையவன்முறைமையாகத் தாங்கினனென்று இச்செய்தியையறிந்த தேவர்கள் விலலிரண்டனுள் எதுவலியால் அடைதற்குரிய வெற்றியுள்ளதென்று பிரமனைவினவ அந்நாளில்—எ-று. (௨௭)

சீரிதுதேவர்தங்கள்சிந்தனையென்பதுன்னி ... ... ... *
வேரியங்கமலத்தோனுமியைவதோர்விநயந்தன்னால் ... *
யாரினுமுயர்ந்தமூலத்தொருவராமிருவர்தம்மை ... ... *
மூரிவெஞ்சிலைமேலிட்டுமொய்யமர்மூட்டிவிட்டான் ... *

(இ-ள்) தேவர்களுடைய கருத்துநன்மையுள்ளதென்பதைஎண்ணி, தேனமைந்த தாமரைமலர்வசிக்கும்பிரமனும் அதற்கியைந்ததாகிய தந்திரவணக்கத்தால் யாவர்களிலும் உயர்ந்தகாரணதசையில் ஒருவராகிய இருவரையும்வலியமைந்தவெவ்விய விலலின்மேல்சாத்துவலியயுத்தத்தை மூட்டிவிட்டான்

மூலத்தொருவராமிருவரென்றதை, கடிமணப்படலத்தில். ௬௬-வது திருவிருத்தத்தில்-உய்த்துணர்ந்துகொள்க.

இருவருமிரண்டுவில்லுமேற்றினருலகமேழும் ... ... *
வெருவரதிசைகள்பேரவெங்கனல்பொங்கமேன்மேல் ... *
செருமலைகின்றபோழ்திற்றிரிபுரமெரித்ததேவன் ... ... *
வரிசிலையிற்றதாகமற்றவன்முனிந்துமன்றே ... ... ... *

